உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அகத்தியர் தேவாரத்திரட்டாதி

# பன்னிரு திருமுறைத் திரட்டு.

குறிப்புரையும் விஷய சூசனமும்.

உருய - வேதப்பிரமாணங்களுடன்

இஃது

சித்தாந்த சைவ சரபம்

சோளங்கிபுரம்

ஸ்ரீலஸ்ரீ சிவஅருணகிரி முதலியாரவர்களால்

பாசுரங்களின் தளைகள் பிரித்துப்

பரிசோதிக்கப்பட்டு

ஷை உரையும் சூசனமும் இயற்றப்பெற்று

இராமநாதபுரம் ஜில்லா - கண்டமாணிக்கம்

ஸ்ரீமாந். நா. பிச்சகுட்டி செட்டியாரவர்கள்

நல்லுதவியால்

சென்னை திருவல்லிக்கேணி

நோபில் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

(இரண்டாம் பதிப்பு.)

பிரபவஸு சித்திரைமீ

1927

 [விலை ரூ. 2-12-0

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பொருளடக்கம்.



எண் | பக்கம்

---

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# பன்னிரு திருமுறைக ளிவையெனல்.



| | திருமுறை |
|---|---|
| திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | முதல் இரண்டு மூன்று |
| திருநாவுக்கரசு மூர்த்தி சுவாமிகள் தேவாரம் | நான்கு ஐந்து ஆறு |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் | ஏழு |
| திருவாசகமும், திருக்கோவையாரும் | எட்டு |
| திருவிசைப்பாவும், திருப்பல்லாண்டும் | ஒன்பது |
| திருமூல நாயனுர் திருமந்திரம் | பத்து |
| திருவாலவாயுடையார் முதலிய பன்னிருவர் அருளிச்செய்த நாற்பது பிரபந்தங்கள் | பதினொன்று |
| திருத்தொண்டர் புராணம் என்னும் பெரியபுராணம் | பன்னிரண்டு |

திருச்சிற்றம்பலம்



சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# இந்தத் திரட்டில் அடங்கிய திருமுறைகள்.





திருச்சிற்றம்பலம்



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

சுத்தாத்வைத சித்தாந்த சைவ சிகாமணிகாள்!

அன்பே ஓர் வடிவமாகத் திரண்டுவந்த நஞ்சைவ சமயத்துக்கு நேத்திரம்போல் விளங்குந் தெய்வ வருணூல் **பன்னிரு திருமுறை**களே. இவை பன்னிரு பகுதிகளாக மிகவும் விரிந்து கிடக்கின்றமையின், சிவபூசைக்கும், சிவாலய தரிசனத்துக்கும், நித்திய நைமித்திகங்களுக்கும், அடியவர் பூசைக்கும் மிக்க உபயோகமாமாறு **"அகத்தியர் தேவாரத் திரட்டாதி பன்னிரு திருமுறைத்திரட்டு"** என நாமம் புனைந்து இத்திருமுறைத் திரட்டை இரண்டாம் முறை அச்சிற் பதிப்பித்தேன். முதற் பதிப்பிலுள்ளவற்றைப் பார்க்கிலும் இதில் குறிப்புரையும் விஷய சூசனங்களுஞ் சேர்ந்திருப்பதுமல்லாமல் சைவர்களுக்கு வேண்டிய வேறு சில முக்கிய விஷயங்களும், பத்தாந் திருமுறை என்னும் **திருமந்திரத் திரட்டுப் பகுதியில்** அதிகமாக **நானூற்றைம்பத்தைந்து** செய்யுட்களும், பதினோராம் பன்னிரண்டாந் திருமுறைத் திரட்டு என்னும் பகுதிகளில் இன்னுஞ் சில செய்யுட்களும் சேர்த்துப் பதிக்கப்பட்டுள்ளன. இவை யாவும் நம்மவர்களுக்கு அதிக அன்பையும் ஆராமையும் ஊட்டுவதோடு இந்நூல் எடுக்கவும் வைக்கவும், பூசையின்நிமித்தம் பலவிடங்களுக்கு எடுத்துக்கொண்டு போகவுங் கைக்கடக்கமா யநுகூலமாயுள்ளது.

இதிலுள்ள விஷய சூசனத்தில் சிவபரத்துவமும், சிவாதிக்யமும், சிவபாரம்யமும் (உருவ) வேதப் பிரமணங்களோடு தெளிவாய் நிரூபிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு வேத வாக்கியத்துக்குந் தெளிபொருள் விளக்கியிருப்பதால் உண்மையறிய விரும்புவோ ரனைவருக்கும் இத்திரட்டு பெரும் பயனைத்தந்து, சிவபக்தி சிவனடியார் பக்தி மேலிடச்செய்ய யாதொரு தடையுமின்று.

இப்பன்னிரு திருமுறைத் திரட்டிலுள்ள பாசுரங்களில் புதைந்து கிடக்கும் அநுபவ வேத்யமாயுள்ள பொருட்டிறங்கள் சுத்த ஞானாநந்தாநுபவிக்கே புலப்படுவதன்றி ஏனையோர்க்கு எட்டுணையும் புலப்படுமாறில்லை யென்பது யாவரும் நன்குணர்ந்த விஷயம். ஆயினும், சாதாரண சொற்களுக்கும் சொற்றொடர்களுக்கும் பொருள்தெரியாமல் பலர் பிழைபட வோதுகின்றமையால் அவர்கள் அங்ஙனமோதாது சப்தார்த்த ஞானமாவது தெரிந்து கொண் டோதினால் அன்பும் இன்பும் அதிகரித்துத் தம்மை மறந்து பரவசப்பட்டிருப்பார்க ளென்றெண்ணியே போதிய ஆற்றலும், அறிவும், காதலுமில்லா வடியேன் சிற்சில சொற்களுக்கு மாத்திரம் குறிப்புரையும் சூசனமும் வரைந்துள்ளேன். அவ்வாறு வரைந்ததும் சைவ பரிபாலனம் செய்து போதருமுறையை முன்னிட்டே யன்றி வேறன்று. கருதல்களாயுள்ள சொற் பிரயோகங்களுக்குப் பொருளும், அநுபவ ரஹஸியங்களும் விளங்காமையால் உரையெழுதாது விடப்பட்டன. ஆதலால் இத்திரட்டிலுள்ள எனது உரையும், சூசனமும் இறைவன்றிருவடி நிழலையடையக் காதல்கொண்டிருப் பவருக்கன்றி நிறைந்த கல்வியும் ஞானமுமுடையார்க்குப் பயன்றரா திருக்கலாம். அப்பெரியார் என்னை யுடையாராதலின் அருட்களிப் பின் மிகுதியால் யானெழுதிய விவற்றை இகழ்தல் செய்யார்.

அன்றியும், வடமொழியில் "ஸ்ரீமந்த்ர மாலிகா" என்று பெயர் பெற்று விளங்குகின்ற திருமூலத்தேவர் திருமந்திரமாலையி லுள்ள அனேக செய்யுட்களின் ஆழ்ந்த ரஹஸியங்களும், பரிபாஷா சொற்களின் விளக்கங்களும், பிறர் துயராற்றாது கருணையினலாட் கொள்ளும் ஞான வைராக்கிய பரிபூரண குருமூர்த்தியின் சந்நிதியில் முறைப்படி வழிபட்டுக் கேட்ட சற்சீடருக்கே அவரது கருணா கடாக்ஷ வீக்ஷண்யத்தால் கிடைக்கப் பெறுவனவாம். ஏனையோர் அவற்றை அறியக்கூடாமை. "தொட்டுக்காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வாராது" என்பது யாவருமறிந்த விஷயமே.

இந்தத் திருமுறைத் திரட்டிலடங்கிய பாசுரங்களை யாவரு மெளிதிலுணர்ந் தோதுமாறு தளைகள் பிரித்தும், வேண்டியவிடங்களில் இலக்கண வழுக்களுண்டாகாதபடி ஒவ்வோரடியின் இறுதிச்

சீரில் சந்திகள் பிரித்தும் பதித்திருப்பதால் இலக்கணம் பயிலாதவர்கள் கூட இதை யெளிதிலோதி உளங்கசிந்துருகி நிற்கலாம்.

இத்திரட்டை விரைவில் அச்சிற் பதிப்பித்துத் தரவேண்டுமென்று யான் கேட்டுக்கொண்டபோது அப்படியே செய்து தருகிறேமென்று உறுதி வாக்களித்து, அவ்வார்த்தையின்படி விடாமுயற்சியோடு முடித்துத் தந்த நோபில் அச்சியந்திரசாலைத் தலைவர் ஸ்ரீமாந். கு. கதிர்வேலு முதலியாரவர்களுக்கும் ஷை அச்சுக்கூடத் தலைவர் ஸ்ரீமாந். சே. ஜயசந்த்ர முதலியாரவர்களுக்கும் எனது மனமார்ந்த விநய வந்தனத்தைப் பன்முறையுஞ் செலுத்துகின்றேன்.

**சோளங்கிபுரம்.**
பிரபவஹூ சித்திரைமீ.

இங்ஙனம்
**சோ. சிவ அருணகிரி முதலியார்.**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உரிமையுரை.

---

எந்நாட்டினுஞ் சிறந்து விளங்காநின்ற நம் தென்னாட்டிலே பாண்டி வளநாட்டில் இராமநாதபுரம் ஜில்லாவைச்சேர்ந்த கண்டமாணிக்கம் என்னுந் திருப்பதியில் நாட்டுக்கோட்டை நகரத்தாரென்னும் வைசிய மரபிலே சிவபக்தி சிவனடியார் பக்தியிற் சிறந்த திருவாளர் கும. நாராயணன் செட்டியாரவர்கள் இருந்தனர். அவரும் அவர் மனைவியாரும் விளையாட்டுக்கேனும் அசத்தியங்கூற அஞ்சி இல்வாழ்க்கையை நடத்தி வந்தவர்கள். அத்தகைய மாதா பிதாக்களுக்கு அருந்தவப் புதல்வராய்த் தோன்றி இளமைதொட்டு அன்பு, அருள், ஆசாரத்தோடு வாழ்ந்து வருகின்றவர் **ஸ்ரீமாந். நா. பிச்சகுட்டி செட்டியாரவர்கள்.** இவர் நாடோறுஞ் சைவத்திருமுறைகளைப் பாராயணஞ் செய்யும் நியமம் பூண்டவர். ஒழுக்கம் நிறைந்த பரிசுத்தவுள்ளமுடைய பெரியோர்களிடத்திற்றான் அன்பும் அபிமானமுமுடையவர். அவர்களையன்றி யேனையரோடு நட்புரிமை கொள்ள விரும்பாதவர். எல்லினும் பகலினும் ஸ்ரீசிற்சபேசப் பெருமானுடைய குஞ்சித பாதத்தையே தாரகமாகப் பற்றியிருப்பவர். **"எப்பர்லவர்க்கு மப்பாலாம் என்னாரமுதேயோ - அப்பாகாணவாசைப்பட்டேன் கண்டாயம்மானே"** என்னும் மதுரவாசகத்தின்படி அவ்வெம்பாருமானையே சந்ததமும் **அப்பா** வென்றழைக்கும் ஆராமையுடையவர். யாவராயினும் **ஸ்ரீ**சிற்சபேசப் பெருமானைப் பற்றிப்பேசின் அப்போதே இவர்வதனம் மலர்ந்தவண்ணமாகவேயிருக்கும். இவர் எப்பொழுதும் அந்தர்முக நாட்டத்தில் சாலவழுத்தமுடையவர். ஆத்மாவின் ஸ்வதந்தர ஹீனத்தை நன்குணர்ந்தவர். யாது காரணமோ அடியேன்பால் ஆராவன்புடையவர்.

அத்தகைய பெருந்தகையாளர் அகத்தியர் தேவாரத்திரட்டாதி பன்னிரு திருமுறைத்திரட்டை நான் இரண்டாம் முறை அச்சிற் பதிப்பிக்க எண்ணியதை யுணர்ந்து, அதற்குவேண்டும் பொருளுதவி செய்வதாக வாக்களித்து, அவ்வாறு உதவிபுரிந்ததோடு திருமூலத் தேவர் திருமந்திரங்கள் இப்பதிப்பில் அதிகமாகச் சேர்க்கின் பலருக் கும் பிரயோசனமாயிருக்குமென்று தெரிவித்து, அவ்வாறே அம்மந் திரச் செய்யுட்களனைத்தையுந் தாமே திரட்டித்தந்தனர். இதனல் இவரது ஆராய்ச்சியும் அநுபவமும் எத்திறத்ததென்று யாவரும் நன்குணரலாம். இவர் திருமந்திரத்திருமுறையை ஞானக்களஞ்சி யம் என்றும், எவ்விஷயத்திற்கும் ஞானக்கருவூலம் என்றும் பலரு முணர எடுத்திசைப்பர்.

இவ்வரியதிருமுறைத்திரட்டின்இரண்டாம்பதிப்பு,குறிப்புரை யோடும் விஷய சூசனத்தோடும் வெளியிடுவதற்கு இவரே முக்கிய காரணரா யிருந்தமையின் எல்லாக்கடவுளருந் தாமாக விருக்கும் ஸ்ரீசிற்சபேசப்பெருமான் இவருக்கு நோயற்ற வாழ்வையும், குறை வற்ற செல்வத்தையும், பூரணாயுசையும், இஷ்டகாமியார்த்தங்களை யும் கடைக்கணித்தருளுமாறு அவரது பெருங்கருணைத் தடங்கட லைச் சந்ததமும் பிரார்த்திக்கின்றேன். சுபம்! சுபம்!! சுபம்!!!

சோ - சிவ அருணகிரி முதலியார்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அகத்தியர் தேவாரத்திரட்டின்

# திருப்பதிக அட்டவணை.

## திருஞான சம்பந்த சுவாமிகள்.



ஆகத்திருப்பதிகம்-ய.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.



ஆகத்திருப்பதிகம்-அ.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.



ஆகத்திருப்பதிகம்-எ.

## மொத்தம் திருப்பதிகங்கள்-உரு.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவாசகத் திருப்பதிக அட்டவணை.



**ஆகத் திருப்பதிகங்கள் ௫௧.** அகவலோடு செய்யுள் ௬௫௮.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## திருவிசைப்பா திருப்பல்லாண்டின்

# திருப்பதிக அட்டவணை.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அகத்தியர் தேவாரத்திரட்டில் அடங்கிய திருமுறைகள்.



| | | |
|---|---|---|
| முதற் றிருமுறை | பதிகம் | ௩ |
| இரண்டாந் திருமுறை | ,, | ௪ |
| மூன்றாந் திருமுறை | ,, | ௩ |
| நான்காந் திருமுறை | ,, | ௪ |
| ஆறாந் திருமுறை | ,, | ௪ |
| ஏழாந் திருமுறை | ,, | ௭ |
| ஆகப் பதிகங்கள் | | ௨௫ |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அகத்தியர் தேவாரத்திரட்டின்

# வ ர லா று.

---

அநாதி மலமுத்த சுத்தஷாட்குண்ணிய பரிபூரணராயும், ஆதிமத்யாந்த சமானுதிக நாமரூப குணரகிதராயும் விளங்காநின்ற முழுமுதற்கடவுள் சிவபெருமானே என்று ஆன்மாக்களனைவருந் துணிந்து, வழிபட்டு உய்யும் பொருட்டுப் பற்பல திவ்விய அற்புதங் களினலே சகல சமயாதீத சுத்தாத்வைத சைவசித்தாந்த நன் னெறியை ஸ்தாபித்தருளிய பரமாசாரிய மூர்த்திகள் நால்வர் எனப் படுவர். அவருள் **திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள்** சிவகுரு வாகிய முருகக்கடவுள் அவதாரமும், **திருநாவுக்கரசு சுவாமிகள்** வாகீசத்திருமுனிகள் அவதாரமும், **சுந்தரமூர்த்தி சுவாமிகள்** சிவ பெருமானுடைய திருவுருவே வெளிப்பட்டு வந்த ஆலாலசுந்தரர் அவதாரமும், **மாணிக்கவாசக சுவாமிகள்** திருநந்திகணத்தலைவர் அவதாரமுமாயுள்ளார்கள். இவர்களது சரித்திரப்பிரபாவம் உபமந்யு பக்தவிலாசம், அகஸ்திய பக்தவிலாசம், சிவரஹசியம், ஹாலாஸ்ய மஹாத்மியம், காஞ்சிமஹாத்மியம் முதலிய நூல்களிலே கூறப்பட் டுள்ளது. இவர்கள் சைவ சமயமரபு மயங்காமல் என்றும் நிலைபெற் றிருக்கவேண்டி சகல வேதவேதாந்த ரகசியங்களை உலகுய்யத் தேவார திருவாசகம் என்னும் மந்திரமொழிகளாக அனுக்கிரகித்த வர்கள். ஆயினும் சிறப்புவகையால் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் ருக்வேதசாரமாயும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் மிகுதி யாய் யஜுர்வேதசாரமாயும், சுந்தரமூர்த்திசுவாமிகள் அருளிச் செய்த திருப்பதிகங்கள் அனேகமாய் சாமவேதசாரமாயும், மாணிக்க

வாசக சுவாமிகள் அருளிச்செய்த திருப்பதிகங்கள் பெரும்பான்மை அதர்வணவேதசாரமாயும் விளங்கிக்கொண்டிருக்கின்றன. இந்தத் திருப்பதிகங்களைத் தனித்தனியே கூறுமிடத்து முறையே "**திருக்கடைக்காப்பு**" எனவும், "**தேவாரம்**" எனவும், "**திருப்பாட்டு**" எனவும் "**திருவாசகம்**" எனவும் ஆன்றோர் வழங்குவர். இவைகளை கேட்போர் மனத்துக்கு ஆனந்தத்தை உண்டுபண்ணி அயரா அன்பு விளைவிப்பதும், கேட்போர்க்கினிய சற்சரித்திரங்கள் நிறைந்தனவும், சொல்வன்மையிற் சிறிதுங் குறைவில்லாததும், அகில வேதாந்த ரகசியம் நிறைந்ததும், சிவம் பழுத்தவுள்ளத்துப் பத்தி வடிவினருக்குச் சர்வ சிரவணாதிகாரம் பெற்றதும், "**திருமுறைகள்**" என மங்கலப்பட்டம் பெற்றதுமா யுள்ளன. அன்றியும் பதிவாக்கென்றுந் தெள்ளிதிற்றுணியப்பட்டும் இருக்கின்றன. இவைகளுக்கே திருமறைத்தமிழ், திராவிடவேதம், திருநெறித்தமிழ், குற்றமில்தமிழ், ஞானத்தமிழ், சொன்மாலை, உரைமாலை, அருணூல், ஞானப்பாடல் என்பனவாதி பல சிறப்புப்பெயர்களுண்டு.

பரமாசாரிய மூர்த்திகள் நால்வரும் வேதாகமங்களிலே கூறியுள்ள தெய்வவழிபாடாகிய சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு சன்மார்க்கங்களையும், குருலிங்க சங்கமபத்திகளையும், அப்பத்திசெய்தார்க்குச் சிவபெருமான் செய்யும் அருட்டிறத்தினையும் சர்வான்மாக்களும் உணர்ந்து உய்யும் வண்ணம் கண்ணுதல் கருணையால் திருமேனிதாங்கி தாமே நடாத்திக் காட்டியருளிய குருமூர்த்தங்களாதலானும், சாதாரணமாகத் தத்தம் பிறவி நோய் நீக்கவந்து தவம்புரிந்தவர்களல்ல ராதலானும், இவர்கள் முறையே "**ஆளுடையபிள்ளையார்**" எனவும், "**ஆளுடையவரசுகள்**" எனவும், "**ஆளுடையநம்பிகள்**" எனவும், "**ஆளுடைய வடிகள்**" எனவுந் துதிக்கப்படுகின்றனர். இவர்களுள் ஆளுடையபிள்ளையார் சிவபெருமானை முதலிலும், ஆளுடையவடிகள் இறுதியிலும், மற்றிருமூர்த்திகள் ஆங்காங்கு இடையிலுஞ் சுட்டிக்காட்டினார்கள். இவர்கள் பதிப்பொருளான பரசிவப்பரம்பொருளுக்கு உண்மைச் சிவனடியவர்களாய்ச் சிவமேயானவர்களாதலின் சைவத்திருவாளரெல்லாரும் இவர்களைத் தெய்வமாக வழிபட்டு வருகின்றார்கள். இவர்கள்

உள்ளும்புறமும் சிவத்தைக்கண்டு ஆனந்தித்தவர்கள். அன்பே சிவம் என்று போதித்து அவ்வழியில் நின்று உண்மை நிறுவின வர்கள். அளவில்லாத பெருமையுடையவர்கள். இவர்களே பாரார், விசும்புளார், பாதலத்தார், புறத்தார் யாராலும் சிறப்பித்துரைக்கப் பட்டவர்கள். இவர்கள் அருளிச்செய்து வைத்த தேவார திருவாச கப்பதிகங்களைச் சிரத்தாபக்தியோடு ஓதிப்பிழைத்தார் கோடிகோடி. பிழைக்கின்றார் கோடிகோடி. பிழைப்பார் பல்லாயிரகோடி. இது உலகப்பிரசித்தம்.

இவர்களுள் மாணிக்கவாசக சுவாமிகள் நீங்கலாக திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் "தோடுடையசெவியன்" என்பதுமுதல் "கல்லூர்" என்பதீறாக பதினாறாயிரந் திருப்பதிகங்களையும், திரு நாவுக்கரசு சுவாமிகள் "கூற்றாயினவாறு" என்பதுமுதல் "ஒரு வனையும்" என்பதீறாக நாற்பத்தொன்பதினாயிரந் திருப்பதிகங்களை யும், சுந்தரமூர்த்திசுவாமிகள் "பித்தாபிறைசூடீ" என்பதுமுதல் "ஊழிதோறும்" என்பதீறாக முப்பத்தெண்ணாயிரந் திருப்பதிகங் களையும் ஆக ஒருலக்ஷத்து மூவாயிரந் திருப்பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளினார்கள். இவைகளே தமிழ்வேதமாகிய தேவாரமாம். இவைகளுள் எழுநூற்றுத் தொண்ணூற்றேழு திருப்பதிகங்கள் நிற்க மற்றவை மறைந்து போயின. எஞ்சிநின்ற அவ்வெழுநூற் றுத் தொண்ணூற்றேழு திருப்பதிகங்களையும் திருவாரூர் அபய குலசேகர சோழமகாராஜாவுடைய வேண்டுகோளின்படி திருநாரை யூர்ப் பொல்லாப்பிள்ளையாருடைய மாணாக்கராகிய நம்பியாண்டார் நம்பி என்பவர் எழுதிருமுறைகளாக வகுத்தருளினார். அவ்வேழும் அடங்கிய திருமுறை அடங்கன்முறை எனப்படும்.

கல்வி, அறிவு, ஒழுக்கங்களாற் சிறப்புற்று விளங்கிய சிவாலய முனிவர் அவ்வடங்கன் முறையினது மகிமையையும், அதனை நாடோறும் விதிப்படி சிரத்தையோடு பாராயணஞ்செய்யின் முத்தி சித்திக்குமென்பதனையும் அறிந்து, தாம் அப்படிப் பாராயணஞ்செய்ய ஆசைகொண்டார். அது நிறைவேறுதல் கூடாமையால் வருத்த முற்று, ஸ்ரீசிதம்பரத்தை அடைந்து கனகசபையின்கண்ணே பஞ்ச கிருத்தியத்தாண்டவஞ் செய்தருளும் சபாநாதரைவணங்கி, தமது

கருத்துமுற்றும் பொருட்டு நெடுங்காலம் அருந்தவஞ்செய்தார். அப்பொழுது சபாநாதருடைய திருவருளினலே, "சிவாலயமுனிவனே! நீ பொதிய மலையிலிருக்கின்ற அகத்தியமுனிவனிடத்தே போவாயாயின் உன்கருத்து நிறைவேறும்" என்று ஓரசரீரிவாக்குத் தோன்றிற்று. அதுகேட்ட சிவாலயமுனிவர் மனமகிழ்ந்து, சபாநாதரை வணங்கி, விடைபெற்றுக்கொண்டு சென்று, பொதியமலையை அடைந்து, அகத்திய மகா முனிவரைச் சிந்தித்து, மூன்று வருடகாலம் அருந்தவஞ் செய்தனர். ஸ்ரீ அகத்திய மாமுனிவர் அவருக்கு வெளிப்பட்டு, அடங்கன்முறை முழுமையும் அவருக்கு உபதேசித்து, அதினின்றும் குருவருள், திருநீறு, பஞ்சாக்கரம், கோயிற்றிறம், சிவனுருவம், திருவடி, அருச்சனை, அடிமை என்பவைகளின் உண்மைகளைத் தெரிக்காநிற்கும் இருபத்தைந்து திருப்பதிகங்களை எடுத்துத்திரட்டி, "இவைகளை நாடோறும் பாராயணஞ் செய்பவர்கள் அடங்கன்முறை முழுமையும் பாராயணஞ் செய்பவர்களாவார்கள்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர். சிவாலயமுனிவர் அப்படியே இவ்விருபத்தைந்து திருப்பதிகங்களையும் நெடுங்காலம் பாராயணஞ் செய்து சிவபெருமானுடைய திருவருளைப்பெற்றுப் பரமுத்தியெய்தினர்.

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனும்
ஏராரு மிறைவனையு மெழிலாரு நம்பியையும்
ஆராத வன்பினுட னடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதன்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம்.

திருச்சிற்றம்பலம்.

# பரமாசாரியர் மூவர் சரித்திரச் சுருக்க விஷயக் குறிப்பு.



## திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்.

ஞான சம்பந்தர் ஞால மடைதல்
தந்தையோடு தடாகஞ் செல்லல்
நாத னளித்த ஞானப்பா லுண்ணல்
தோணி யப்பரைச் சுட்டிக் காட்டல்
ஞால முய்ய நற்றமிழ் பாடுதல்
கோலக் காவில் தாளம் பெறுதல்
பாண ரைப் பரிவுட னேற்றல்
மாறன் பாடியில் சிவிகை யூர்தல்
உலக முய்ய உபவீத மணிதல்
ஆண்ட வரசருக் கன்ப ராதல்
மழவன் மகளின் முயலக னகற்றல்
அடியவர் நோயை யகற்றி யருளல்
பட்டீச ரருளாற் பந்தரைப் பெறுதல்
ஆவடு துறையில் அரதனம் பெறுதல்
இசையின் பெருமையை எவர்க்கு முணர்த்தல்
அரவா விறந்த வணிகனை எழுப்புதல்
திருநா வரசரைத் திரும்பவு மெதிர்கொளல்
வீழி மிழலையில் படிக்காசு பெறுதல்
மறைக்கா டதனில் கதவம் பிணித்தல்
மானியார் வேண்ட மதுரையை யடைதல்
மடத்தின் வன்னி மன்னனைப் பொருந்துதல்
பாண்டியன் சுரநோய் பற்பத்தால் தீர்த்தல்
எரியிட்ட எட்டை எடுத்துக் காட்டல்
ஆற்றி விட்ட எடெதிர் செல்லல்
மன்னன் கூன்போய் மாசில ஞதல்

ஆற்றி லோடம் அக்கரை செலுத்துதல்
பூதியைப் புத்தர் பொலிவுறப் பூசல்
அப்பர் சுமக்க அஞ்சிப் பதைத்தல்
காயாப் பனையைக் காய்பனை யாக்கல்
எலும்பைப் பெண்ணாய் எழுப்பித் தருதல்
திருமணஞ் செய்து சிவனடி சேர்தல்
சைவ நற்றுறை தழைத்து வாழ்தல்.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

நாவுக் கரசர் ஞால மடைதல்
அறம்பல செய்து அமண்மதஞ் சேர்தல்
தரும சேனராய்த் தலைமை வகித்தல்
சூலி யருளால் சூலைநோ யடைதல்
அதிகை யடைந்து அரன்பொடி பூசல்
கூற்றுப் பாடி குடர்நோ யொழித்தல்
உழ வாரங்கொண் டுறுபணி செய்தல்
பல்லவன் சமுகம் பயமின்றிச் செல்லல்
நீற்றறை யதனில் துன்பமற் றிருத்தல்
விடத்தை யருந்தி வெறுப்பற் றிருத்தல்
யானையும் பணியப் பதிக மோதல்
கல்லே மிதப்பாய்க் கடற்கரை யணைதல்
பல்லவன் பரமனுக் கடிமை யாக்கல்
இணையார் தோளில் இலச்சினை ஏற்றல்
சம்பந்த முனியொடு சம்பந்தம் பெறல்
திருவடி முடிமேல் தீட்டப் பெறுதல்
அப்பூதி மைந்தனுக் காருயி ரளித்தல்
கழுமல வேந்தரைக் கலந்தினி திருத்தல்
பொற்பார் மிழலையில் பொற்காசு பெறுதல்
மறைக்கா டதனில் கதவந் திறத்தல்
வாய்மூர் தன்னில் வரதனைக் காணல்
சம்பந்த ரேகுதல் தடுத்துக் கூறல்

பழையா றதனில் பரமனைக் காண்டல்
பைஞ்ஞீலி யப்பர் பசிநோய் தீர்த்தல்
காளத்தி கண்டு கயிலைக் கேகுதல்
கைகால் தேய்ந்தும் கவலைகொண் டிருத்தல்
குளத்தில் மூழ்கி ஐயா றடைதல்
கயிலைக் கோலங் கண்டு களித்தல்
சீகாழி யண்ணலின் சிவிகை தாங்குதல்
சோதனை கடந்து துதிபெற் றிருத்தல்
புகலூர் தன்னில் பொன்னடி சேர்தல்
சைவ நற்றுறை தழைத்து வாழ்தல்.

---

## சுந்தர மூர்த்தி சுவாமிகள்.

ஆலால சுந்தரர் அவனியில் வருதல்
பித்த ரோலையைப் பிடுங்கிக் கிழித்தல்
தம்பிரான் றானே தடுத்தாட் கொள்ளல்
வன்றொண்ட னமம் வாதுபேசிப் பெறல்
அதிகையில் முடிமிசை அரனடி சூட்டல்
அரனு ராணையால் ஆரூர் செல்லல்
தம்பிரான் றோழராய்த் தரணியி லுலாவல்
பரம னருளால் பரவைதோள் சேரல்
தொண்டர்தம் பெருமை விரன்மிண்ட ராற்றெளிதல்
திருத் தொண்டத்தொகை சிறப்புட னோதல்
குண்டையூ ரன்பர் நென்மலை கொடுத்தல்
அந்நெல் முழுதும் ஆரூர் வருதல்
வனப்பகை சிங்கடிக் கப்ப னாதல்
தழுவணை செங்கல் தகுபொன் னாதல்
பொன்னைப் பரவைக் கீந்து மகிழ்தல்
பாச்சிலாச் சிரமத்து பசும்பொன் பெறுதல்
முதுகுன் றத்தில் முழுகன கம்பெறல்
ஆற்றி லிட்டுக் குளத்தி லெடுத்தல்
பசிப்பிணி தீரப் பொதிசோ றுபெறல்

அரனுர் மகிழ்வொடு அமுதிரந் தளித்தல்
சங்கர னருளால் சங்கிலியைப் பெறல்
மகிழ்க்கீழ் நின்று மாசப தஞ்செயல்
தொண்டர் கூடித் திருமண முடித்தல்
அன்பி னீட்டத்தால் ஆரூர்ச் சேகுதல்
கண்க ளிழந்து கலங்கி நிற்றல்
வெண்பாக் கத்தில் ஊன்றுகோல் பெறுதல்
கண்ணொன்று பெற்றுக் கச்சியி லமர்தல்
உத்தம ரருளால் உடற்பிணி யொழித்தல்
வலக்கண் பெற்று மனமகிழ்ந் திருத்தல்
பரமனைத் தூது பரவைபால் செலுத்துதல்
எயர்கோன் சூலையை எய்தித் தீர்த்தல்
சேரர் பெருமான் தோழ ராதல்
முருகன் பூண்டியில் செல்வ மிழத்தல்
முதலை யுண்ட மதலையை யழைத்தல்
வெண்களி றேறி வியன்கயி லைச்செலல்
சைவ நற்றுறை தழைத்து வாழ்தல்

திருச்சிற்றம்பலம்.

---

# மூவர் புராணசாரம்.



## திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள்.

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
கவுணியர்கோ னமுதுமையாள் கருதியூட்டும்
எழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
இலங்கியநித் திலச்சிவிகை யிசைய வேறி
வாழுமுய லகனகற்றிப் பந்த ரேய்ந்து
வளர்கிழிபெற் றரவின்விட மருக நீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே. (க)

ஆரெரியிட் டெடுத்தவே டவைமுன் னேற்றி
ஆற்றிலிடு மேடெதிர்போ யணைய வேற்றி
ஓரமண ரொழியாமே கழுவி லேற்றி
ஓதுதிருப் பதிகத்தா லோட மேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றிக்
காயாத பனையின்முது கனிக ளேற்றி
ஈரமிலா வங்கமுயி ரெய்த வேற்றி
இலங்குபெரு மணத்தரனை யெய்தி னாரே. (உ)

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

போற்றுதிரு வாமூரில் வேளாண் மைப்
பொருவில்கொறுக் கையரதிபர் புகழ னார்பால்
மாற்றருமன் பினிற்றிலத வதியா மாது
வந்துதித்த பின்புமரு ணீக்கி யாரும்
தோற்றியமண் சமயமுறு துயர நீங்கத்
துணைவரரு டாவந்த சூலை நோயால்
பாற்றருநீ ளிடரெய்திப் பாடலிபுத் திரத்தில்
பாழியொழித் தரனதிகைப் பதியில் வந்தார். (க)

வந்துதமக் கையரருளா னீறு சாத்தி
 வண்டமிழா னேய்தீர்ந்து வாக்கின் மன்னாய்
வெந்தபொடி விடம்வேழம் வேலை நீந்தி
 வியன்சூலங் கொடியிடபம் விளங்கச் சாத்தி
அந்தமிலப் பூதிமக னரவு மாற்றி
 அருட்காசு பெற்றுமறை யடைப்பு நீக்கிப்
புந்திமகிழ்ந் தையாற்றிற் கயிலை கண்டு
 பூம்புகலூ ரரன்பாதம் பொருந்தி னாரே. (உ)

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

தண்கயிலை யதுநீங்கி நாவ லூர்வாழ்
 சைவனார் சடையனார் தனயனாராய்
மண்புகழ வருட்டுறையா னோலை காட்டி
 மணம்விலக்க வன்றொண்டா யதிகை சேர்ந்து
நண்பினுட னருள்புரிய வாரூர் மேவி
 நலங்கிளரும் பரவைதோ ணயந்து வைகித்
திண்குலவும் விறன்மிண்டர் திறல்கண் டேத்துந்
 திருத்தொண்டத் தொகையருளாற் செப்பி னாரே. (௧)

செப்பலருங் குண்டையூர் நெல்லழைத்துத்
 திருப்புகலூர்ச் செங்கல் செழும் பொன்னாச் செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருளாற் றிட்டுத்
 தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்து நாதன்
ஒப்பிறனித் தூதுவந்தா றாடு கீறி
 வுறுமுதலை சிறுமதலை யுமிழ நல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற் சேர
 வேந்தருடன் வடகயிலை மேவி னாரே. (உ)

---

# மூவர் தோத்திரம்.



## திருஞானசம்பந்த சுவாமிகள்.

கடியவிழ் சடுக்கைவேணித் தாதைபோற் கனற்கண்மீனக்
கொடியனை வேவநோக்கிக் குறையிரந் தனையான்கற்பின்
பிடியன நடையாள்வேண்டப் பின்னுயி ரளித்துக்காத்த
முடியணி மாடக்காழி முனிவனை வணக்கஞ் செய்வாம். (க)

பரசமய கோளரியைப் பாலரு வாயனைப்பூம்
பழனஞ் சூழ்ந்த
சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத்
தேய மெல்லாம்
குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளுங் கவுணியர்தங்
குல தீபத்தை
விரவியெமை யாளுடைய வென்றிமழ விளங்களிற்றை
விரும்பி வாழ்வாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

அறப்பெருஞ் செல்விபாகத் தண்ணலஞ் செழுத்தாலஞ்சா
மறப்பெருஞ் செய்கைமாறு வஞ்சக ரிட்டநீல
நிறப்பெருங் கடலும்யார்க்கு நீந்துதற் கரியவேழு
பிறப்பெனுங் கடலுநீத்த பிரானடி வணக்கஞ்செய்வாம். (க)

இடையறாப் பேரன்பு மழைவாரு மிணைவிழியு
முழவா ரத்திண்
படையறாத் திருக்கரமுஞ் சிவபெருமான் றிருவடிக்கே
பதித்த நெஞ்சும்
நடையறாப் பெருந்துறவும் வாகீசப் பெருந்தகைதன்
ஞானப் பாடல்
தொடையறாச் செவ்வாயுஞ் சிவவேடப் பொலிவழகுந்
துதித்து வாழ்வாம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

அரவக லல்குலார்பா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானாள்
இரவினிற் றூதுகொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்.

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வல்வழக்கிட் டாட்கொண்ட
வுவனைக் கொண்டே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட வல்லாள
னெல்லா முய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரித்த பேரருளின்
பெருமா னென்றும்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமா னெமதுகுல
தெய்வ மாமால். (உ)

### மூவர் சிறப்பு.

பாலை நெய்தல் பாடியதும் பாம்பொழியப் பாடியதும்
காலனை யன்றேவிக் காரங்கொண்ட—பாலன்
மரணந் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நந்தஞ்
சரணம்போ லல்லாமை காண். (க)

என்பைப்பெண் ணாக்கி யிரும்பாலை நெய்தலாய்
உம்பர் மகிழ்ந்திடவன் றோதியதும்—தம்பிரான்
கதவ மடைக்கக் கழறியது மெல்லாம்
பதிகாண மென்றுணரப் பா. (உ)

அரவங் கடித்திறந்தா னுருயிரை மீட்டுந்
திருமறைக்காட் டிற்பின் றிறந்தும்—கரமலையை
நீற்றறையை வேகமற நீராகப் பாடியதுங்
கூற்றுதைத்தான் போதமெனக் கொள். (ங)

கல்லைப்பொன் னாக்கிக் கடுமுதலை வாய்ப்பிள்ளை
மெல்ல வழைத்து வெறுக்கையினைச்—செல்லுகின்ற
ஆற்றிலிட்டு மீட்டு மருங்குளத்திற் கண்டதுவும்
சாற்றிற் சிவகாணந் தான். (ச)

## நால்வர் சிறப்பு.

சொற்கோவுந் தோணிபுரத் தோன்றலுமென் சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்—முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூ லெங்கே
யெந்தைபிரா னைந்தெழுத்தெங் கே.

## நால்வர் வயதும் திருநட்சத்திரமும்.

அப்பருக் கெண்பத்தொன் றருள்வாத வூரருக்குச்
செப்பிய நாலெட்டிற் றெய்வீகம்—இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினா றறி.

சித்திரைச் சதய மப்பர் சிறந்தவை காசிமூலம்
அத்தரைப் பணிசம் பந்த ராணிமா மகத்தி லந்த
முத்தமிழ் வாத வூரர் முதியநல் லாடி தன்னில்
சுத்தமாஞ் சோதி நாளிற் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

## நால்வர் தோத்திரம்.

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

## தேவார மகிமை.

அருமறையைச் சிச்சிலிப்பண் டருந்தத்தேடும்
அதுபோலன் றிதுவென்று முளதாமுண்மைப்
பரபதமுந் தற்பரமும் பரனேயன்றிப்
பலரில்லை யென்றெழுதும் பனுவல்பாரில்
எரியினிடை வேவாதாற் றெதிரேயோடும்
என்புக்கு முயிர்கொடுக்கு மிடுநஞ்சாற்றும்
கரியைவளை விக்குங்கன் மிதக்கப்பண்ணும்
சராமதலை கரையிலுறக் காற்றுங்காணே.

## தேவாரப் பண்.

நட்டபாடை, இந்தளம், காந்தாரம், காந்தாரபஞ்சமம், கௌசிகம், பழம்பஞ்சுரம், தக்கேசி, பியந்தைக்காந்தாரம், சாதாரி, புறநீர்மை, நட்டராகம், பஞ்சமம், ஆகியபன்னிரண்டு பண்கள் பகலினும்,

கொல்லி, தக்கராகம், கொல்லிக்கௌவாணம், பழந்தக்கராகம், குறிஞ்சிசீகாமரம், வியாழக்குறிஞ்சி, மேகராகக்குறிஞ்சி, அந்தாளிக்குறிஞ்சி ஆகிய ஒன்பது பண்கள் இரவினும்,

திருத்தாண்டகம், செவ்வழி, செந்துருதி ஆகியமூன்று பண்கள் எக்காலத்தும் ஓதற்குரியவைகளாம்.

## தேவார இராகம்.

தேவராகம் முப்பத்திரண்டாவன :—பைரவி, தேவக்கிரியை, மேகரஞ்சி, குறிஞ்சி, பூபாளம், வேளாவளி, மலகரி, பௌளி, சீராகம், இந்தோளம், பல்லதி, சாவேரி, படமஞ்சரி, லலிதை, தோடி, தேசி, வசந்தம், இராமக்கிரியை, குண்டக்கிரியை, கூர்ச்சரி, வராளி, கைசிகம், மாளவி, நாராயணி, பங்காளம், தந்நியாசி, காம்போதி, கௌளி, நாட்டை, தேசாக்கரி, காந்தாரி, சாரங்கம் என்பனவாம்.

## தேவாரம் என்னுஞ் சொற்குப் பொருள்.

க. தே - தேவன்; வாரம் - அன்பு. அதாவது தேவ தேவனாகிய மஹாதேவனிடத்து ஓதுவோர்க்கும் கேட்போர்க்கும் அன்பையுண்டுபண்ணுவது.

உ. தே - தேவன்; ஆரம் - மாலை - அதாவது மஹாதேவனாகிய சிவபிரானுக்கு ஆரம்போல் அலங்கரிப்பது.

௩. தேவ - தெய்வத்தன்மை பொருந்திய; ஆரம் - பாமாலை.

ச. தே - தேவன்; வாரம் - உரிமை. அதாவது மஹாதேவனாகிய சிவபெருமானுக்கே உரிமை யுடையது.

இன்னும் உள.

---

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# அகத்தியமகாமுனிவர்

திரட்டியருளிய

# தேவாரத்திரட்டு.



## தேவாரமுதலியபொருள்.

### நேரிசை வெண்பா.

குருவருளும் வெண்ணீ றெழுத்தஞ்சுங் கோயில்
அரனுருவ மென்றலைமே லாக்குந்—திருவடியும்
சிட்டான வர்ச்சனையந் தொண்டுஞ் சிவாலயர்க்கென்
றிட்டா ரகத்தியனா ரெட்டு.

## திருப்பதிகக்கருத்துரை.



### நிலைமண்டிலவாசிரியப்பா.

தோடு கூற்றுப் பித்தா மூன்றும்
பீடுடைத் தேசிகன் பேரரு ளாகும்
நீற்றுப் பதிக நிகழ்த்துங் காலை
மாற்றுப் பரையின் வரலா றாகும்
துஞ்சல் காதல் சொற்றுணை மற்றும்
அஞ்செழுத் துண்மை யருளிய தாகும்
ஆரூர் தில்லை காட்டூர் மூன்றும்
சீரார் கோயிற் றிறமைய தாகும்

ஒருரு வரிய பாலை வடிவே
மருவா ரென்ற வண்டமி ழைந்தும்
திருவார் மேனிச் செய்திய தாகும்
பொடியுடை யரவணை யந்த ணாளன்
அடியிணை தந்த வருளே யாகும்
பந்து வேற்று சொன்றிவை மூன்றும்
நந்தலி லருச்சனை நாட்டிய தாகும்
வேய்குலந் தில்லை யெனுமிவை மூன்றும்
நாயனு மடிமையு நாட்டிய தாகும்
இப்பரி சகத்திய முனிவ னிருநிலத்
தொப்பரு மூவ ரோதுதே வார
முழுதையுஞ் சிவாலய முனிக்கறி வித்துப்
பழுதிலா வவையுட் பரிந்தெடுத் திருபத்
தைந்துயர் பதிகமு மறிவுறத் திரட்டி
எண்ணரு மடங்க லியாவையு முணரும்
புண்ணிய மிவைகொடு பொருந்து மென்றவன்
தனக்கருள் செய்தனன் றகவுற வதனால்
தீதிலா வகத்தியத் திரட்டினை யுலகில்
ஓதின ரடங்கலு மோதின ராவரே.

திருச்சிற்றம்பலம்.

---

## தேவாரத்திரட்டின் திருவுள்ளக்கிடை.

வேதமுதலிய பதினெண் வித்தைகளையு மொருங்குணர்ந்தவரும், இயல்,இசை, நாடகமென்னும் முத்தமிழையும் வளர்த்தவரும், முனிவேந்தரும், சிவஞானப் பெருஞ்செல்வருமாகிய ஸ்ரீ அகத்திய மாமுனிவர் மேற்குறித்த இருபத்தைந்து தேவாரத்திருப்பதிகங்களை எடுத்துத்தொகுக்கும்போது மிக்க ஆராய்ச்சியோடு அவற்றின் மெய்ப்பொருள் தோன்றத் திரட்டியருளினரென்பது அப்பதிகங்களின் கோவைப்பாட்டை நுனித்த மதிகொண்டு உற்றுநோக்குவார்க்கு உண்மை வெளிப்படாநிற்கும்.

**சிவஞானபோதம், சிவஞான சித்தியார்** முதலிய அரிய பெரிய ஒப்பில் சாஸ்திரங்கள் முப்பொருளின் உண்மைப்பொருளை உள்ள உள்ளவாறு உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளக்கி ஜீவன்முத்தனது சுவாநுபவநிலை கைவரும்படி போதிக்கும் உண்மை நூல்களாம்.

**தேவாரத் திருப்பதிகங்கள்,** அந்நூல்களின் பயனும், முத்தி முடிவாயுமுள்ள வேதாந்த சித்தாந்தமாகிய சிவானந்தாநுபவமென்னுஞ் சொரூப சாக்ஷாத்காரம் எய்தப்பெற்ற சிற்பரச்செல்வர்களாகிய சிவஞானிகள்கூடத் தெரித்துணர்த்த முடியாமல் அவ்வப்போது எல்லைமருவாது நீண்டு நிகழும் ஆனந்தாநுபவத்தை விளக்கிக்காட்டுந் தோத்திரங்களாம்.

இவ்வுண்மை குருவருள், பரையின் வரலாறு (அதாவது திருவெண்ணீறு), அஞ்செழுத்துண்மை, கோயிற்றிறம், சிவனுருவம், திருவடி, அர்ச்சனை, அடிமை என்னும் எட்டுநிலைகள் ஒருவருக்கு ஜீவன்முத்தி தசையில் நிகழ்வனவாதலின் அவற்றைத் தெளிவுபெற இப்பதிகங்களிலே விளக்கிக்காட்டி வற்புறுத்தியிருத்தல் சிந்திக்கத்தக்கது.

க - வது. **குருவருள்.** முத்திவிருப்பத்தையுடைய ஒருவன் நித்தியமாகிய பேரின்பப் பெருவாழ்வை அடைய விரும்பின் முதற்கண்ணே இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் என்னுமிவை வேண்டப்படுவன். படவே, இவற்றின் விளைவே பரிபக்குவமாம். இப்பக்குவம் சிவபுண்ணிய வினையால் வரத்தக்கது. இச்சிவ புண்ணியமோ புண்ணிய தீர்த்தங்கடோறுஞ்சென்று படிந்து, ஸ்தலங்கடோறுஞ் சென்று, மூர்த்திகளை வழிபட்டு, உளங்கசிந்துருகுவதால் எய்தப்பெறுவது. அவ்வாறு எய்தப்பெற்ற பக்குவானமாவுக்கு அதுகாறும் அறிவுக்கறிவாய் உண்ணின்றுணர்த்திய முழுமுதற்பொருளே ஆசாரியமூர்த்தியாய் வெளிப்பட்டு வந்து அருள்நோக்கஞ் செய்து அந்தகாரத்தை ஒருங்கே ஒழிக்கும் ஆதித்தனைப்போல சித்தாந்த மஹாவாக்கியமென்னும் ஒப்பற்ற ஓர்மொழியை உபதேசஞ்செய்து முத்திப்பேற்றை அடையும்படி அருள்செய்வன். அவ்வாறருளும் அருளே குருவருளாம்.

உ - வது. **பரையின் வரலாறு.** அங்ஙனம் குருவருள்பெற்ற ஆன்மாவுக்கு ஆன்மவியாபக முழுதும் நின்று விளக்குவதாகிய முதல்வனது பராசத்தியின் விளக்கம் விளங்கித்தோன்ற அக்கணமே அப்பராசத்தியிலே வியாபகமுற்று, அதனோடு அநந்நியமாய் நின்று, எங்கணும் அப்பராசத்தி சொரூபமே காணப்பெற்று, பூரண நிஷ்டையில் அழுந்தி நிற்கும் நிலையே பரையின் வரலாறும். (திருவெண்ணீறு - பராசத்தியின் சொரூபமாகும்).

ங - வது. **அஞ்செழுத்துண்மை.** அவ்வாறு பரை வியாபகத்தில் அழுந்தி பூரணநிஷ்டை கூடியிருக்கும் நிலையில் பண்டைப் பயிற்சி வசத்தால் பிரபஞ்சவாசனைபற்றி சலிப்பு உண்டாமாயின் அச்சலிப்புநீங்கி அந்நிலை தலைகூடுதற் பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை உச்சரிக்கவேண்டியிருத்தலின் அதனை ஓது முறையிலோதி, உணருமுறையிலுணர்ந்து, நிற்குமுறையில் நின்று சிவோஹம்பாவனை பண்ணும் அநுபூதிநிலையே அஞ்செழுத்துண்மையாம்.

ச - வது. **கோயிற்றிறம்.** அவ்வாறு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை அநுசந்தானஞ் செய்து பூரணநிஷ்டையில் அழுந்தும் ஆன்மா ஒரோவழி தன்னறிவு புறத்தே சென்று தொழிற்படுமாயின் அதனைத் தன் வசப்படுத்துங்காரணமாக ஆலயங்டோறுஞ் சென்று முழுமுதற்பொருளாகிய இறைவனை இலிங்கமுதலிய திருமேனிகளில் விளக்கமாகக்கண்டு திரிகரணங்களையும் ஒருவழிப்படுத்திக்கொண்டு சிவத்தின் பாலாக்கும் நிலையே கோயிற்றிறமாம்.

ரு - வது. **சிவனுருவம்** பரையின் வியாபகத்தில் அழுந்தி ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை அநுசந்தித்து ஆலயவழிப்பாட்டில் தலைப்பட்டு நிற்கையில் அகக்கண்ணினாலே சிவத்தின் தடஸ்த லக்ஷணத்தையே தரிசித்துப் பரவசப்பட்டு நிற்கும் அநுபூதி நிலையே சிவனுருவமாம்.

சு - வது. **திருவடி.** அவ்வாறு சிவசொரூபத்தைத் தரிசித்து அச்சிவத்தின் திருவடிகளில், அதாவது அருள்நிறைவில், தலைப்பட்டு ஆண்டு கரைகடந்தெழும் பேரானந்தப் பெருவெள்ளத்தி

லழுந்தி **நான்** என்னும் ஆன்ம அறிவுகெட்டு (மாண்டு), முதல்வனறிவு மாத்திரையாய்த் **தான்** என நிற்கும் நிலையே திருவடியாம். இதுவே அத்வைதாநந்த முத்தியாம். (இவ்வுண்மை பதமுத்தியைப் பரமுத்தியாகக் கொண்ட சமயிகளுக்கு விளங்காது. சொல்லினும் வெகு தர்க்கமாம்.)

எ - வது. **அருச்சனை.** "அருச்சனை பாட்டேயாகும்" என்று சிவபிரான் கட்டளையிட்டருளியபடி திருவடிப்பேறு பெற்று எல்லையில்லாத பேரின்பப் பெருவெள்ளத்தில் திளைத்திருக்கும்படிச் செய்த சிவத்தினது பேருபகாரத்தைச் சாக்கிரத்தில் நினைத்து நினைத்து, அயராவன்பினாலே ஆவியோடாக்கை ஆனந்தமாய்க் கசிந்துருகும்படி போற்றுதலாகிய பாடும் நிலையே அருச்சனையாம்.

அ - வது. **அடிமை.** குருவருள் பெற்று, பரைவியாபகத்திலழுந்தி, ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை அநுசந்தித்து, ஆலயங்கடோறுஞ் சென்று வழிபட்டு, வாசனைமலத்தைப் பற்றறக்கழித்துச் சிவத்தை அருட்கண்ணாற்கண்டு, அச்சிவத்தின் திருவருளாகிய திருவடியிற் றிளைத்து, மலவலியையும் வினைவலியையும் வென்று, உற்பாதங்களுக்குச் சிறிதும் அஞ்சாது தம்மிச்சையின்படி உலாவும் மெய்ஞ்ஞானிகளென்னுந் திருத்தொண்டர்களோடு கூடியிருக்கும் நிலையே அடிமையாம்.

ஆயின், ஆன்மா, **சிவனுக்கடிமை** என்பதின் தாற்பரியம் யாதோவெனின், ஆன்மா மலமுழுதும் நீங்கப்பெற்று தன்னறிவு வியாபகமாய் விளங்கிய வழியும் தன்னாற்சாரப்பட்ட சிவத்தை மாத்திரம் அறிதலன்றி மற்றொன்றையும் அறிதல் செல்லாமையின் ஆன்மா சிவனுக்கடிமை எனக்கூறப்பட்டது. இவ்வுண்மை "அம்மா பொருளொன்று மறிந்திலனே" என்னும் திருவாக்கானுமறிக.

இவ்வாறு **குருவருள்** முதல் **அடிமை** ஈறாகக்கூறப்பட்ட எட்டு நிலைகள் சிற்பரச்செல்வர்களாகிய ஜீவன் முத்தர்களது நிலையாதலின் அவற்றைப் பிரதிபாதிக்குந் திருப்பதிகங்களை ஸ்ரீ அகஸ்தியமாமுனிவர் தொகுத்துத்திரட்டிச் சிவாலய முனிவருக்குத் தந்தருளினார். ஆதலின் இந்தத்திரட்டு சைவ சமயத்தவர்க்கு நாடோறும் நியம மந்திரமா யிருந்து வருகின்றது.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருஞான சம்பந்த சுவாமிகள்.

## திருப்பிரமபுரம்.

## முதற்றிருமுறை-பண்-நட்டபாடை.

### குருவருள்.

திருச்சிற்றம்பலம்.

தோடு டையசெவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடு டையசுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன்
ஏடு டையமல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த
பீடு டைய பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (௧)

முற்ற லாமையிள நாகமோ டேன முளைக்கொம் பவைபூண்டு
வற்ற லோடுகல னப்பலி தேர்ந்தென துள்ளங் கவர்கள்வன்
கற்றல் கேட்டலுடை யார்பெரி யார்கழல் கையாற் றொழுதேத்தப்
பெற்ற மூர்ந்தபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (௨)

நீர்ப ரந்தநிமிர் புன்சடை மேலோர் நிலாவெண் மதிசூடி
ஏர்ப ரந்தவின வெள்வளை சோரவென் னுள்ளங் கவர்கள்வன்
ஊர்ப ரந்தவுல கின்முத லாகிய வோரூ ரிதுவென்னப்
பேர்ப ரந்தபிர மாபுர மேவிய பெம்மா னிவன்றே. (௩)

---

(அரும்பத விளக்கம்) ௧. சுடலைக்காடு-சுடுகாடு; அதாவது ஸர்வ ஸம்ஹாரமயானம்; பொடி - பெருந்தேவர்கள் வீந்த சுடலை விபூதி; கள்வன் - ஆன்மாக்களுக்குத் தோன்றுவண்ணம் மறைந்திருப்பவன்; ஏடு - இதழ்; பீடு-பெருமை; இவன்-இதோ என் கண் முன் தோன்றும் முதல்வன். (௨) முற்றல் - முதிர்ந்த; ஏனம் - பன்றி; வற்றல் ஓடு - தசை யற்றதலை; கலன் - பாத்திரம்; பெற்றம் - இடபம். (௩) இனம் - கூட்டம்.

விண்மகிழ்ந்தமதி லெய்ததுமன்றிவி ளங்குதலையோட்டில்
உண்மகிழ்ந்துபலி தேரியவந்தென துள்ளங் கவர்கள்வன்
மண்மகிழ்ந்தவர வம்மலர்க்கொன்றை மலிந்தவரைமார்பில்
பெண்மகிழ்ந்தபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (ச)

ஒருமை பெண்மையுடை யன்சடை யன்விடை யூரும்மிவனென்ன
அருமை யாகவுரை செய்ய வமர்ந்தென துள்ளங் கவர்கள்வன்
கருமை பெற்றகடல் கொள்ளமி தந்ததோர் காலம்மிதுவென்னப்
பெருமை பெற்றபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (ரு)

மறைகலந்தவொலி பாடலோ டாடல ராகி மழுவேந்தி
இறைகலந்தவின வெள்வளை சோரவென் னுள்ளங் கவர்கள்வன்
கறைகலந்தகடி யார்பொழி னீடுயர் சோலைக் கதிர்சிந்தப்
பிறைகலந்த பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (சு)

சடைமுயங்குபுன லன்னன லன்னெரி வீசிச் சதிர்வெய்த
உடைமுயங்குமர வோடுழி தந்தென துள்ளங் கவர்கள்வன்
கடன்முயங்குகழி சூழ்குளிர் கானலம் பொன்னஞ் சிறகன்னம்
பெடைமுயங்குபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (எ)

வியரிலங்குவரை யுந்திய தோள்களை வீரம் விளைவித்த
உயரிலங்கையரை யன்வலி செற்றென துள்ளங் கவர்கள்வன்
துயரிலங்கும்முல கிற்பல வூழிக டோன்றும் பொழுதெல்லாம்
பெயரிலங்குபிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (அ)

தாணுதல்செய்திறை காணிய மாலொடு தண்டா மரையானும்
நீணுதல்செய்தொழி யந்நிமிர்ந் தானென துள்ளங் கவர்கள்வன்
வாணுதல்செய்மக ளீர்முத லாகிய வையத் தவரேத்தப்
பேணுதல்செய்பிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (கூ)

புத்தரோடுபொறி யில்சம ணும்புறங் கூற நெறிநில்லா
ஒத்தசொல்லவுல கம்பலி தேர்ந்தென துள்ளங் கவர்கள்வன்

---

(ரு) ஒருமை - ஓர்பாகம். (சு) இறை - கைத்தலம். (எ) சதிர்வு-அழகு; உழிதந்து - திரிந்துவந்து. (அ) வியர் - வியர்வு. (கூ) தாணுதல் - தாள் நுதல், அதாவது அடிமுடி; இறைகாணிய - இறைவனைக் காணும்பொருட்டு. (ய) நெறி - சைவநன்னெறி.

மத்த யானைமறு கவ்வுரி போர்த்ததோர் மாயம் மிதுவென்னப்
பித்தர் போலும்பிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே. (௰)

அருநெ றியமறை வல்ல முனியகன் பொய்கை யலர்மேய
பெருநெ றியபிர மாபுர மேவிய பெம்மா னிவன்றன்னை
ஒருநெ றியமனம் வைத்துணர் ஞானசம் பந்தன் னுரைசெய்த
திருநெ றியதமிழ் வல்லவர் தொல்வினை தீர்த லெளிதாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் - சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பிரமபுரீசர், தேவியார்-திருநிலைநாயகியம்மை.

திருத்தோணியில் வீற்றிருப்பவர்—தோணியப்பர்.

**இந்தத் திருப்பதிகம்,** பூவாரும் சீகாழிப் பொய்கைக்கரையிலே பிரமவித்தியா தேவியாராய உமாபிராட்டியாரது சிவஞானப்பாலை யுண்டருளிய ஆளுடைய பிள்ளையாராகிய திருஞானசம்பந்த சுவாமிகளை அவர் தந்தையாரான சிவபாதவிருதயர் "எச்சில்பொருந்த இப் பாலூட்டினரைக்காட்டுக" என்று கோபித்து மாறுகொண்டோச்சியபோது, பிள்ளையார் கண்களினின்றும் நீர்பெருகத் தம்மை ஆட்கொண்டு எதிர்நிற்கும் பெருமானாகிய தோணியப்பரைத் தமது வலத் திருக்கரவிரலாற் சுட்டிக்காட்டி ஓதியருளியது.

மன்னுயிர்களின் மாதவப்பயனாய்த் தோன்றிய நம்காழிப் பிரானார் தாமோதியருளிய இந்தத்திருப்பதிகத்தின் முதலடியின் முதன்மொழியின் முதலெழுத்து **தோ** என்று அமைத்ததின் திருவுள்ளக்கிடை பலவாயிருப்பினும் அவற்றுள் சில வருமாறு:—

௧. வேண்டுதல் வேண்டாமை யிலானாகிய பரன் தெய்வத் **தமிழ்**மொழியில் மிக்க இனித்தனாயிருத்தலினாலே தமிழ்ச்சொற்களினாலே ஆக்கப்பட்ட தமிழ்வேதம் மிகச்சிறப்புடைத்து எனவும், ௨. ஐந்தெழுத்தோடுகூடிய **தமிழ்** என்னுந் தனிமொழி அன்பருள்

யானை - கயாசுரன். (௧௧) அருநெறிய - அரிய மார்க்கங்களை யுடைய; முனி-நான்முகமுனி; பெருநெறி - முத்திநெறி; உணர் - ஓதாதுணர்ந்த.

ளத்தை எளிதிலே உருகச்செய்து இறைவன் றிருவடிக்கண்படுத்தும் பேராற்றலுடைத்து எனவும் விளக்க முதலில் **த** எனவும், ரு. மஹா மந்திரமாகிய உயர் காயத்திரியின் அரும்பொருளாயுள்ளவர் **பர்க்கன்** என்னுஞ் சப்தத்துக்குரிய சூரிய மண்டல அந்தர்யாமியாகிய ஸர்வகர்மபலதாதா வென்னும் சிவபிரானாதலின் அக்காயத்திரியின் முதலெழுத்து **த** எனவும், ச. சகல வித்தைகளிலுஞ் சிறந்த **தகர வித்தை**யில் உபாசிக்கப்படும் பரம்பொருள் சிவனேயாதலின் அவ்வித்தையின் முதலெழுத்து **த** எனவும் யாவருந்தெளிந்து உண்மையுணர்ந்து உய்யும் வண்ணம் முதற்கண் **தகரத்தை** எடுத்து ஓதியருளினார். [ரு-ச.] இதனால் ஆதித்தனிலும் புருஷனிலும் உள்ளவனொருவனே.

பின்னர், க. சகல சப்தமய அர்த்தமயப் பிரபஞ்சங்களுக்கும் மூலகாரணமாய் ஸர்வமந்திர ஸாரபூதமாயுள்ளது ஓங்காரம் எனவும், உ. ஆரியவேதம் ஆரம்பமாகும் போதே **ஓம்** என்று தொடங்கிச் சென்றமையால் தமிழ்வேதமும் ஆரிய வேதம்போல எத்தகையோராலும் பாராட்டப்படத்தக்கது எனவும் வற்புறுத்தும் பொருட்டுப் பிரணவத்தின் பிரதமாட்சரத்தைத் தகரத்தோடு புணர்த்தித் திருமுறையை ஆரம்பித்தனர்,

அன்றியும், நம் காழிச்செல்வரது முதற்றிருமுறையின் முதலடியின் முதன் மொழியின் முதலெழுத்தாய இவ்வோங்காரம் பின்னர் சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த பன்னிரண்டாந்திருமுறையான திருத்தொண்டர் புராணத்தின் இறுதிச்சருக்கத்தின் இறுதிச்செய்யுளின் இறுதி அடியின் இறுதிச்சொல்லின் இறுதியெழுத்தாகிய **மகரத்**தோடு புணர்ந்து **ஓம்** எனமுடிய வேண்டியிருத்தலின் தமிழ்வேதமாகிய பன்னிருதிருமுறைகளும் பிரணவத்திற்றோன்றிப் பிரணவத்தில் ஒடுங்குமெனவும், பிரணவவாச்சியர் சிவபெருமான் எனவும் அறிவுறுத்தியவாறுயிற்று.

அல்லாமலும், மக்களது செவியின் அமைப்பை உற்று நோக்கி பண்டைத்தமிழர் ஓங்காரத்துக்கு **வரிவடிவு** கண்டறிந்தமையானும், தாம் இனி ஓதப்போகும் வேதவோசையைக் கவர்வது செவியேயாதலானும், ஓங்காரத்துக்கும் செவிக்கும் உள்ள ஒற்றுமையை நோக்கித் **தோடுடைய சேவியன்** என்று திருவாய்மலர்ந்தருளினார்.

அல்லதூஉம், சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமைத் தாய அந்தமிலின்பத்தழிவில் வீடு எய்துதற்கு அவனருள் உபகரிப் பினல்லது அடையப் பெருமையின் அவ்வருளே திருமேனியாக வுடைய அம்பிகையின் ஆபரணமாகிய தோட்டினை முதற்கண் ணெடுத்து வியந்தருளினர்.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

### திருவதிகை வீரட்டானம்.

நான்காந்திருமுறை-பண்-கொல்லி.

### தருவருள்.

திருச்சிற்றம்பலம்.

கூற்ரு யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியேன்
எற்ரு யடிக்கே யிரவும் பகலும்
பிரியா துவணங் குவனெப் பொழுதும்
தோற்ரு தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதுடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (க)

நெஞ்சம் முமக்கே யிடமா கவைத்தேன்
நினையா தொருபோ துமிருந் தறியேன்
வஞ்சம் மிதுவொப் பதுகண் டறியேன்
வயிற்ரோ டுதுடக் கிமுடக் கியிட
நஞ்சா கிவந்தென் னைநலி வதனை
நணுகா மற்றுரந் துகரந் துமிடர்
அஞ்சே லுமென்னீ ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (உ)

---

(க) கூற்று - இயமன், இராவணனுக்கு உபாயங்கூறிய சொல்; அகம்படி - உள்ளிடம். (உ.) துரந்து - அகற்றி; கரந்தும் இடர்-ஒழித் தீருமில்லை.

பணிந்தா ரனபா வங்கள்பாற் றவல்லீர்
படுவெண் டலையிற் பலிகொண் டுழல்வீர்
துணிந்தே யுமக்காட் செய்துவா ழலுற்றால்
சுடுகின் றதுசூ லைதவிர்த் தருளீர்
பிணிந்தார் பொடிகொண் டுமெய்பூ சவல்லீர்
பெற்றமேற் றுகந்தீர் சுற்றும்வெண் டலைகொண்
டணிந்தீ ரடிகே ளதிகைக் கெடில
வீரட் டானத் துறையம்மானே. (௩)

முன்னம் மடியே னறியா மையினால்
முனிந்தென் னைநலிந் துமுடக் கியிடப்
பின்னை யடியே னுமக்கா ளும்பட்டேன்
சுடுகின் றதுசூ லைதவிர்த் தருளீர்
தன்னை யடைந்தார் வினைதீர்ப் பதன்றோ
தலையா யவர்தங் கடனா வதுதான்
அன்ன நடையா ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (௪)

காத்தாள் பவர்கா வலிகழ்ந் தமையால்
கரைநின் றவர்கண் டுகொளென் றுசொல்லி
நீத்தா யகயம் புகநூக் கியிட
நிலைக்கொள் ளும்வழித் துறையொன் றறியேன்
வார்த்தை யிதுவொப் பதுகேட் டறியேன்
வயிற்றோ டுதுடக் கிமுடக் கியிட
ஆர்த்தார் புனலா ரதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (௫)

சலம்பூ வொடுதூ பமறந் தறியேன்
தமிழோ டிசைபா டன்மறந் தறியேன்
நலந்தீங் கிலுமுன் னைமறந் தறியேன்
உன்னா மமென்னா வின்மறந் தறியேன்

---

(௩) பிணிந்தார் - இறந்தவர்கள். (௫) நீத்தாய - நிலைத்தவில்லாத; கயம் - குளம்; நூக்கியிட - தள்ளிவிட.

உலந்தார் தலையிற் பலிகொண் டுழல்வாய்
 உடலுள் ளுறுசூ லைதவிர்த் தருளாய்
அலந்தே னடியே னதிகைக் கெடில
 வீரட் டானத் துறையம் மானே. (சு)

உயர்ந்தேன் மனைவாழ்க் கையுமொண் பொருளும்
 ஒருவர் தலைகா வலிலா மையினால்
வயந்தே யுமக்காட் செய்துவா ழலுற்றால்
 வலிக்கின் றதுசூ லைதவிர்த் தருளீர்
பயந்தே யென்வயிற் றினகம் படியே
 பறித்துப் புரட்டி யறுத்தீர்த் திடநான்
அயர்ந்தே னடியே னதிகைக் கெடில
 வீரட் டானத் துறையம் மானே. (எ)

வலித்தேன் மனைவாழ்க் கைமகிழ்ந் தடியேன்
 வஞ்சம் மனமொன் றுமிலா மையினால்
சலித்தா லொருவர் துணையா ருமில்லைச்
 சங்கவெண் குழைக்கா துடையெம் பெருமான்
கலித்தே யென்வயிற் றினகம் படியே
 கலக்கி மலக்கிட் டுக்கவர்ந் துதின்ன
அலுத்தே னடியே னதிகைக் கெடில
 வீரட்டானத் துறையம் மானே. (அ)

பொன்போ லமிளிர் வதோர்மே னியினீர்
 புரிபுன் சடையீர் மெலியும் பிறையீர்
துன்பே கவலை பிணியென் றிவற்றை
 நணுகா மற்றுரந் துகரந் துமிடீர்
என்போ லிகளும் மையினித் தெளியார்
 அடியார் படுவ திதுவே யாகில்
அன்பே யமையும் மதிகைக் கெடில
 வீரட் டானத் துறையம் மானே. (கூ)

---

(எ) வயந்து - வசப்பட்டு. (அ) மலக்கிட்டு - முறுக்கி.

போர்த்தா யங்கொரா னையினீ ருரிதோல்
புறங்கா டரங்கா நடமா டவல்லாய்
ஆர்த்தா னரக்கன் றனைமால் வரைக்கிழ்
அடர்த்திட் டருள்செய் தவது கருதாய்
வேர்த்தும் புரண்டும் விழுந்தும் மெழுந்தால்
என்வே தனையா னவிலக் கியிடாய்
ஆர்த்தார் புனல்சூ ழதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே. (ய)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-வீரட்டானேசுவரர், தேவியார்-திருவதிகை நாயகியம்மை,

**இந்தத் திருப்பதிகம்**, தம்முடைய சூலைநோய்தீர ஓதி அருளியது.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

### திருவெண்ணெய் நல்லூர்.

ஏழாந்திருமுறை-பண்-இந்தளம்.

**தூதுவருள்.**

திருச்சிற்றம்பலம்.

பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
எத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை [புள்
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறை
அத்தாவுனக் காளாயினி யல்லேனெனை லாமே. (க)

---

(ய) அங்கு - காசி; மால்வரை - கயிலாயமலை. (க) பித்தா - பித்தரே, அதாவது அளவுகடந்த அன்புடையவரே; எத்தான் - எவ்வகையாயினும்; அத்தா - அப்பனே; ஆமே - அடுக்குமோ.

நாயேன்பல நாளுநினைப் பின்றிமனத் துன்னைப்
பேயாய்த்திரிந் தெய்த்தேன்பெற லாகாவருள் பெற்றேன்
வேயார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆயாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (உ)

மன்னேமற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னைப்
பொன்னேமணி தானேவயி ரம்மேபொரு துந்தி
மின்னார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அன்னேயுனக் காளாயினி யல்லேனென லாமே. (ங)

முடியேனினிப் பிறவேன்பெறின் மூவேன்பெற்ற மூர்தீ
கொடியேன்பல பொய்யேயுரைப் பேனைக்குறிக் கொண்ணீ [யுள்
செடியார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறை
அடிகேளுனக் காளாயினி யல்லேனென லாமே. (ச)

பாதம்பணி வார்கள்பெறு பண்டம்மது பணியாய்
ஆதன்பொரு ளானேனறி வில்லேனரு ளாளா
தாதார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆதீயுனக் காளாயினி யல்லேனென லாமே. (ரு)

தண்ணார்மதி சூடீதழல் போலுந்திரு மேனி
எண்ணார்புர மூன்றுமெரி யுண்ணநகை செய்தாய்
மண்ணார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
அண்ணாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (சு)

ஊனாயுயி ரானாயுட லானாயுல கானாய்
வானாய்நில னானாய்கட லானாய்மலை யானாய்
தேனார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூ ரருட் டுறையுள்
ஆனாயுனக் காளாயினி யல்லேனென லாமே. (எ)

எற்றார்புர மூன்றுமெரி யுண்ணச்சிலை தொட்டாய்
தேற்றாதன சொல்லித்திரி வேனோசெக்கர் வானீர்

---

(உ) பேய் - எங்கும் அலைந்து திரியும் உயிர்; ஆய் - தாய். (ச) முடியேன் - இறவேன்; மூவேன் - மூப்படையேன். (ரு) பண்டம் - அருள்ஞானம்; ஆதன் - அறிவில்லாதவன். தாது - மகரந்தம். (அ) தேற்றாதன - தெளிவில்லாத வார்த்தைகள்; நீர் - நிறம்;

எற்றாய்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்டுறையுள்
ஆற்றாயுனக் காளாயினி யல்லேனென லாமே. (அ)

மழுவாள்வல னேந்தீமறை யோதீமங்கை பங்கா
தொழுவா ரவர்துயராயின தீர்த்தலுன தொழிலே [யுள்
செழுவார்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறை
அழகாவுனக் காளாயினி யல்லேனென லாமே. (கூ)

காரூர்புன லெய்திக் கரை கல்லித்திரைக் கையால்
பாரூர்புக ழெய்தித்திகழ் பன்மாமணி யுந்திச்
சீரூர்பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட் டுறையுள்
ஆரூரனெம் பெருமாற்கா ளல்லேனென லாமே. (ய)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கிருபாபுரீசுவரர், தேவியார் - வேற்கண் நாயகியம்மை.

**இந்தத் திருப்பதிகம்**, திருமணக்காலத்தில் தடுத்தாட் கொண்டபோது ஓதியருளியது.

---

# திருஞானசம்பந்த சுவாமிகள்

## திருவாலவாய்த்திருநீற்றுப்பதிகம்.

## இரண்டாந்திருமுறை - பண் - காந்தாரம்

**பரையின் வரலாறு.**

திருச்சிற்றம்பலம்.

மந்திர மாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தர மாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திர மாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் திருநீறே. (க)

---

(அ) ஆறு - நன்னெறி. (கூ) வலன் - வலக்கரம். (ய) கார் - கரியமேகம்; பாரூர் - உலகில் பரவிய. (க) மேலது - உடலின் மேல் அணியப்பெற்றிருப்பது; தந்திரம் - உபாயம்; துவர் - பவளம்.

வேதத்தி லுள்ளது நீறு வெந்துயர் தீர்ப்பது நீறு
போதந் தருவது நீறு புன்மை தவிர்ப்பது நீறு
ஓதத் தகுவது நீறு வுண்மையி லுள்ளது நீறு
சீதப் புனல்வயல் சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. (௨)

முத்தி தருவது நீறு முனிவ ரணிவது நீறு
சத்திய மாவது நீறு தக்கோர் புகழ்வது நீறு
பத்தி தருவது நீறு பரவ வினியது நீறு
சித்தி தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. (௩)

காண வினியது நீறு கவினைத் தருவது நீறு
பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு
மாணந் தகைவது நீறு மதியைத் தருவது நீறு
சேணந் தருவது நீறு திருவால வாயான் றிருநீறே. (௪)

பூச வினியது நீறு புண்ணிய மாவது நீறு
பேச வினியது நீறு பெருந்தவத் தோர்களுக் கெல்லாம்
ஆசை கெடுப்பது நீறு அந்தம தாவது நீறு
தேசம் புகழ்வது நீறு திருவால வாயான் றிருநீறே. (௫)

அருத்தம தாவது நீறு அவல மறுப்பது நீறு
வருத்தந் தணிப்பது நீறு வான மளிப்பது நீறு
பொருத்தம தாவது நீறு புண்ணியர் பூசும்வெண் ணீறு
திருத்தகு மாளிகை சூழ்ந்த திருவால வாயான் றிருநீறே. (௬)

எயிலது வட்டது நீறு இருமைக்கு முள்ளது நீறு
பயிலப் படுவது நீறு பாக்கிய மாவது நீறு
துயிலைத் தடுப்பது நீறு சுத்தம தாவது நீறு
அயிலைப் பொலிதரு சூலத் தாலவா யான்றிரு நீறே. (௭)

இராவணன் மேலது நீறு வெண்ணத் தகுவது நீறு
பராவண மாவது நீறு பாவ மறுப்பது நீறு

---

கவினை - அழகை. (௪) மாணம் - மாணவகன் இலக்கணமாகிய தாழ்வு; சேணம் - விண்ணுலகவின்பம். (௬) அருத்தம் - ஐசுவரியம். (௭) எயில் - திரிபுரம்; துயில் - மரணம்; அயில் - கூர்மை. (௮) பராவணம் - பராசத்தியின்வண்ணம்;

தராவண மாவது நீறு தத்துவ மாவது நீறு
அராவணங் குந்திரு மேனி யாலவா யான்றிரு நீறே. (அ)

மாலொ டயனறி யாத வண்ணமு முள்ளது நீறு
மேலுறை தேவர்க டங்கண் மெய்யது வெண்பொடி நீறு
ஏல வுடம்பிடர் தீர்க்கு மின்பந் தருவது நீறு
ஆலமு துண்டமி டற்றெம் மாலவா யான்றிரு நீறே. (கூ)

குண்டிகைக் கையர்க ளோடு சாக்கியர் கூட்டமுங்கூடக்
கண்டிகைப் பிப்பது நீறு கருத வினியது நீறு
எண்டிசைப் பட்ட பொருளா ரேத்துந் தகையது நீறு
அண்டத் தவர்பணிந் தேத்து மாலவா யான்றிரு நீறே. (ய)

ஆற்ற லடல்விடை யேறு மாலவா யான்றிரு நீற்றைப்
போற்றிப் புகலிநி லாவும் பூசுரன் ஞானசம் பந்தன்
தேற்றித் தென்னனுட லுற்ற தீப்பிணி யாயின தீரச்
சாற்றிய பாடல்கள் பத்தும் வல்லவர் நல்லவர் தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

**இந்தத் திருப்பதிகம்,** நின்றசீர்நெடுமாறநாயனார் என்னுங்கூன் பாண்டியர்க்குற்ற வெப்புநோயை "ஆலவா யண்ணனீரே, மன்னு மந்திரமுமாகி மருந்துமாய்த் தீர்ப்பீர்" என்று ஓதித் தீர்த்தருளியது.

---

# திருஞான சம்பந்த சுவாமிகள்.

## பஞ்சாக்கரத்திருப்பதிகம்.

மூன்றாந்திருமுறை - பண் - காந்தாரம்.

**அஞ்செழுத்துண்மை.**

திருச்சிற்றம்பலம்.

துஞ்சலுந் துஞ்சலி லாத போழ்தினும்
நெஞ்சக நைந்து நினைமி னாடொறும்

---

தராவணம் - பூதேவியின் நிறம்; அரா அணங்கும் - சர்ப்பங்கள் அணியப்பெற்றுள்ள. (ய) குண்டிகை - நீர்க்குடம்; சாக்கியர் - புத்தர்; திகைப்பிப்பது - திகைத்து மயங்கச்செய்வது; பொருளார் - பாலகர். (கக) அடல் - வெற்றி; பூசுரன் - பிராமணன்.

வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்
றஞ்ச வுதைத்தன வஞ்செ ழுத்துமே. (௧)

மந்திர நான்மறை யாகி வானவர்
சிந்தையு ணின்றவர் தம்மை யாள்வன
செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திர மஞ்செ ழுத்துமே. (௨)

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி நன்புலத்
தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்
ஆன கெடுப்பன வஞ்செ ழுத்துமே. (௩)

நல்லவர் தீயரெ னாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ
கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத்
தல்லல் கெடுப்பன வஞ்செ ழுத்துமே. (௪)

கொங்கலர் வன்மதன் வாளியைந்தகத்
தங்குள பூதமு மஞ்ச வைம்பொழில்
தங்கர வின்பட மஞ்சுந் தம்முடை
அங்கையி லைவிர லஞ்செ ழுத்துமே. (௫)

தும்ம லிருமறொ டர்ந்த போழ்தினும்
வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்
இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்
அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே. (௬)

வீடு பிறப்பை யறுத்து மெச்சினர்
பீடை கெடுப்பன பின்னை நாடொறும்
மாடு கொடுப்பன மன்னு மாநடம்
ஆடி யுகப்பன வஞ்செ ழுத்துமே. (௭)

---

(௧) துஞ்சல் - உறங்கல்; வஞ்சகம் - கபடம். (௨) செந்தழல் - அக்கினிஹோத்திரம்; அந்தி - மாலைக்காலம். (௩) உயிர்ப்பை - உசுவாசநிசுவாசம்; புலம் - இடம்; வழி - சுழிமுனை. (௪) செல்லல் - பிறவி; இடம் - காலம். (௫) அகம் - உடம்பு. (௭) வீடு - சாதல்; மெச்சினர் - இறைவனைப்புகழ்கின்றவர்; மாடு - செல்வம்.

வண்டம ரோதி மடந்தை பேணின
பண்டை யிராவணன் பாடி யுய்ந்தன
தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்
கண்ட மளிப்பன வஞ்செ ழுத்துமே. (அ)

கார்வண ணன்முகன் காணுதற் கொணாச்
சீர்வணச் சேவடி செவ்வி நாடொறும்
பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்
கார்வண மாவன வஞ்செ ழுத்துமே. (௯)

புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செ ழுத்துமே. (௰)

நற்றமிழ் ஞானசம் பந்த னன்மறை
கற்றவன் காழியர் மன்ன னுன்னிய
அற்றமின் மாலையீ ரைந்து மஞ்செழுத்
துற்றன வல்லவ ரும்ப ராவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

**இந்தத் திருப்பதிகம்**, உபநயனச் சடங்கியற்றிய காலத்தே, சிஷ்யபரம்பரையாய் ஓதியுணரவரும் வேதங்களை நமக்குத் தந்தோமென்று சுவஸ்திவாசகமந்திரங்களை யுரைத்த அந்தணர்க்கு ஆளுடைய பிள்ளையார் வேதமந்திர ரகசியப்பொருளை யெல்லாம் உபதேசித்து அவர் ஐயங்களை நீக்கியதோடு, இம்மந்திரங்களெல்லாம் உதித்தற்குக் காரணமாயுள்ளது ஸ்ரீ பஞ்சாக்ஷரமே என அதன் பெருமையினையுந் தெரித்தருளியது.

---

(அ) ஓதி- அளகபாரம்; மடந்தை - உமையம்மையார்; பண்டை- கயிலாயமலையைத்தூக்கி இடர்ப்பட்ட காலம்; அண்டம்-சிவலோகம். (௯) பேர்வணம்-பெயர்க்கிரமத்தில்; பித்தர்- அன்பர்; ஆர்வணம்-அநுபவிக்குந்தன்மை. (௰) பொய்-பொய்யுரை; சித்தத்தவர்-சிவனடியார்கள்; தேறின-நிச்சயித்தன; வித்தக-ஞானமயமான; அத்திரம்-படை. (௧௧) அற்றம் - அழிவு; மாலை-பாமாலை; உற்றன-பொருந்தியுள்ளன.

# திருஞானசம்பந்த சுவாமிகள்

## நமச்சிவாயத் திருப்பதிகம்.

### மூன்றாந்திருமுறை-பண்-கெளசிகம்.

### அஞ்செழுத்துண்மை.

திருச்சிற்றம்பலம்.

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே. (க)

நம்பு வார்நமர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்ப னாம நமச்சி வாயவே. (உ)

நெக்கு ளார்வ மிகப்பெரு கிநினைந்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராய்த்தகு விப்பது
நக்க னாம நமச்சி வாயவே. (௩)

இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயன னாம நமச்சி வாயவே. (௪)

---

(க) காதல் - பேரன்பு; மல்கி - நிறைந்து; நன்னெறி - முத்தி நெறி. (உ) நமர் - நம்மவராகிய அடியார்; வம்பு - மணம்; வார் - சிந்துகின்ற; மது - தேன். (௩) உள் - மனம்; ஆர்வம் - அன்பு; அக்குமாலை-உருத்திராக்ஷமாலை; எண்ணுவார்-ஜபிப்பார். (௪) நயம்- அன்பு; நியமம் - முறைமை.

கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கையு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாம நமச்சி வாயவே. (ரு)

மந்த ரம்மன பாவங்கண் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
நந்தி நாம நமச்சி வாயவே. (சு)

நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயினு ருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
வரத னாம நமச்சி வாயவே. (எ)

இலங்கை மன்ன னெடுத்த வடுக்கன்மேல்
தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்
மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை
நலங்கொ ளாம நமச்சி வாயவே. (அ)

போதன் போதன கண்ணனு மண்ணறன்
பாதந் தான்முடி நேடிய பண்பராய்
யாதுங் காண்பரி தாகிய லந்தவர்
ஓது நாம நமச்சி வாயவே. (கூ)

கஞ்சி மண்டையர் கையினுண் கையர்கள்
வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்
விஞ்சை யண்டர்கள் வேண்ட வமுதுசெய்
நஞ்சுள் கண்ட னமச்சி வாயவே. (ய)

---

(ரு) குணம் - நற்குணம். (சு) அன - அன்ன, ஒத்த; பந்தனையவர் - பிறவிப்பந்தத்தையுடையவர்; மல்கும் - நிறையும். (அ) அடுக்கல் - கயிலாயமலை; தலங்கொள் - இடங்கொண்ட; மலங்கி - அழுங்கி; வாய்மொழி செய்தவன் - வாய்விட்டு அரற்றினவன். (கூ) போதன் - பிரமன்; நேடி - தேடி; அலந்தவர் - எய்த்துவருந்தியவர். (ய) மண்டை - மட்கலம்; கையர்கள் - கீழ்மக்கள்; மிண்டையர் - முரடர்; விஞ்சை - வித்தை; நஞ்சுள் - விடந்தங்கிய.

நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெல்லாம்
பந்த பாசம றுக்கவல் லார்களே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

**இந்தத்திருப்பதிகம்.** உலகம்வாழ உதித்தவராகிய திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகள் தமது திருமணக்காலத்திலே சிற்சோதி தோன்றியபோது, உலகருய்ய முத்திசாதனமான உண்மைநெறியைக் கூறி எண்ணிறந்த உயிர்களைப்பரமுத்தியிற் சேர்ப்பித்தருளியது. [மரணகாலத்திலும் ஸ்ரீ பஞ்சாக்ஷரயோதினல் இயமன் றூதரும் அஞ்சுவர் - இதனைக் கடைப்பிடிக்க.]

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### நமச்சிவாயத்திருப்பதிகம்.

### நான்காந்திருமுறை - பண் - காந்தாரபஞ்சமம்.

### அஞ்செழுத்துண்மை.

திருச்சிற்றம்பலம்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே. (௧)

பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கல மரனஞ் சாடுதல்
கோவினுக் கருங்கலங் கோட்டமில்லது
நாவினுக் கருங்கல நமச்சி வாயவே. (௨)

---

(௧) சொல் - வேதங்களாற் றுதிக்கப்பெற்ற; துணை - தோன்றுத்துணை; பொன் - பொலிவு; துணை - இரண்டு. (௨) கலம் - ஆபரணம்; அஞ்சு - பஞ்சகௌவியம்; கோ - அரசன்; கோட்டம் - கோணுதல்.

விண்ணுற வடுக்கிய விறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்று மில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின் றறுப்பது நமச்சி வாயவே. (௩)

இடுக்கண்பட் டிருக்கினு மிரந்தி யாரையும்
விடுக்கிற்பி ரானென்று வினவு வோமல்லோம்
அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளி னாமுற்ற
நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சி வாயவே. (௪)

வெந்தநீ றருங்கலம் விரதி கட்கெலாம்
அந்தணர்க் கருங்கல மருமறை யாறங்கம்
திங்களுக் கருங்கலந் திகழு நீண்முடி
நங்களுக் கருங்கல நமச்சி வாயவே. (௫)

சலமிலன் சங்கரன் சார்ந்த வர்க்கல்லால்
நலமில னாடொறு நல்கு வானலன்
குலமில ராகினுங் குலத்துக் கேற்பதோர்
நலமிகக் கொடுப்பது நமச்சி வாயவே. (௬)

வீடினா ருலகினில் விழுமிய தொண்டர்
கூடினா ரந்நெறி கூடச் சென்றலும்
ஓடினே னோடிச்சென் றுருவங் காண்டலும்
நாடினே னாடிற்று நமச்சி வாயவே. (௭)

இல்லக விளக்கது விருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலருங் காண்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே. (௮)

---

(௩) உண்ணிய - உண்ணும்பொருட்டு. (௪) இடுக்கண் - துன்பம்; அடுக்கல் - மலை. (௫) விரதி - துறவி. (௬) சலம் - வைரம். (௭) வீடினார் - செத்தார்; விழுமிய - சீரிய; நெறி - வீட்டுநெறி; நாடினேன் - விசாரித்தேன்; நாடிற்று - நாடியது. (௮) பல்அகம் - பலஇடம்; நல்அகம் - நல்லமனம். (௯) சரண் - புகலிடம்; நன்னெறி - நல்ல வழி.

முன்னெறி யாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறி யேசர ணாத றிண்ணமே
அந்நெறி யேசென்றங் கடைந்த வர்க்கெலாம்
நன்னெறி யாவது நமச்சி வாயவே. (௯)

மாப்பிணை தழுவிய மாதோர் பாகத்தன்
பூப்பிணை திருந்தடி பொருந்தக் கைதொழ
நாப்பிணை தழுவிய நமச்சி வாயப்பத்
தேத்தவல் லார்தமக் கிடுக்க ணில்லையே. (ம)

திருச்சிற்றம்பலம்.

**இந்தத்திருப்பதிகம்**, சமணர்கள் திருநாவுக்கரசு மூர்த்திகளைக் கற்றூணிற்கட்டிக் கடலிற்றள்ளியபோது ஓதி கல்லே தெப்பமாகக் கரைசேர்ந்தது.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

### நமச்சிவாயத் திருப்பதிகம்.

### திருப்பாண்டிக் கொடுமுடி.

### ஏழாந்திருமுறை - பண் - பழம்பஞ்சுரம்.

**அஞ்செழுத்துண்மை.**

திருச்சிற்றம்பலம்.

மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும் பிறந் தேனி னிப்பிற வாததன் மைவந் தெய்தினேன்
கற்ற வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
நற்ற வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (க)

---

(ம) மாப்பிணை - அழகமைந்த பெண்மான்; பூப்பிணை-பூமாலை; நாப்பிணை - நாவினாலோதப்பட்ட சொன்மாலை. (க) மற்று - வேறு; பெற்றலும் - சிந்திக்கப்பெறலும்.

இட்ட னும்மடி யேத்து வாரிகழ்ந் திட்ட நாண்மறந் திட்டநாள்
கெட்ட நாளிவை யென்ற லார்கரு தேன்கிளர் புனற் காவிரி
வட்ட வாசிகை கொண்டடிதொழு தேத்து பாண்டிக் கொடுமுடி
நட்ட வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (உ)

ஓவு நாளுணர் வழியு நாளுயிர் போகு நாளுயர் பாடைமேல்
காவு நாளிவை யென்ற லாற்கரு தேன்கி ளர்புனற் காவிரிப்
பாவு தண்புனல் வந்தி ழிபரஞ் சோதி பாண்டிக் கொடுமுடி
நாவ லாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (௩)

எல்லை யில்புக ழெம்பி ரானெந்தை தம்பி ரானென்பொன் மாமணி
கல்லை யுந்திவ ளம்பொ ழிந்திழி காவி ரியதன் வாய்க்கரை
நல்ல வர்தொழு தேத்துஞ் சீர்க்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
வல்ல வாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (௪)

அஞ்சி னார்க்கர ணாதி யென்றடி யேனு நான்மிக வஞ்சினேன்
அஞ்ச லென்றடித் தொண்ட னேற்கருணல்கினுய்க்கழி கின்றதென்
பஞ்சின் மெல்லடிப் பாவை மார்குடைந் தாடு பாண்டிக் கொடுமுடி
நஞ்ச ணிகண்ட நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (௫)

ஏடு வானிளந் திங்கள் சூடினை யென்பின் கொல்புலித் தோலின்
ஆடு பாம்பத ரைக்க சைத்த வழகனே யந்தண் காவிரிப் [மேல்
பாடு தண்புனல் வந்தி ழிபரஞ் சோதி பாண்டிக் கொடுமுடிச்
சேட னேயுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (௬)

விரும்பி நின்மலர்ப் பாத மேநினைந் தேன்வி னைகளும் விண்டனன்
நெருங்கிவண்பொழில் சூழ்ந்தெழில்பெறநின்ற காவிரிக்கோட்டிடை

---

(உ) இட்டன் - இஷ்டனாகிய நான்; இகழ்ந்திட்ட - நிந்தைசெய்த; மறந்திட்ட - நினைக்காது மறந்த; வாசிகை - பூமாலை; நட்டவா - நட்புக் கொண்டவனே. (௩) ஓவும் - மறந்திருக்கும்; காவும் - சுமக்கப்படும்; பாவு - பரவிய; இழி - ஒழுகும்; நாவலா - ஞானநாவலரே. (௪) கல்லை - கற்களை. (௫) அரண் - காவல்; அழிகின்றது என் - நஷ்டமாவது யாது; குடைந்தாடு - கையினாலே நீரை மோதி மூழ்கி விளையாடு. (௬) ஏடு - தகட்டுவடிவு; பாடு - ஒலி; சேடன் - இளையோன். (௭) கோட்டிடை - கரையில்;

குரும்பை மென்முலைக் கோதைமார்குடைந்தாடுபாண்டிக்கொடுமுடி
விரும் பனேயுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (எ)

செம்பொ னேர்சடை யாய்தி ரிபுரந் தீயெ ழச்சிலை கோலினாய்
வம்பு லாங்குழ லாளைப் பாக மமர்ந்து காவிரிக் கோட்டிடைக்
கொம்பின் மேற்குயில் கூவ மாமயி லாடு பாண்டிக் கொடுமுடி
நம்ப னேயுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (அ)

சாரணன் றந்தை யெம்பிரானெந்தை தம்பிரானென் பொன்மாமணி
பேரெணாயிர கோடி தேவர்பி தற்றி நின்று பிரிகிலார் [யென்று
நார ணன்பிர மன்றொ ழுங்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடிக்
காரணாவுனை நான்ம றக்கினுஞ் சொல்லுநா நமச்சி வாயவே. (கூ)

கோணி யபிறை சூடி யைக்கறை யூரிற் பாண்டிக் கொடுமுடி
பேணி யபெரு மானைப் பிஞ்ஞகப் பித்த னைப்பிறப் பில்லியைப்
பாணு லாவரிவண்டறைகொன்றைத்தாரனைப் படப்பாம்பரை[பமே.
நாணனைத்தொண்டனூரன் சொல்லிவைசொல்லுவார்க்கில்லைத்துன்

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் கொங்கநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கொடுமுடிநாதர், தேவியார்-
பண்மொழியம்மை.

**இந்தத் திருப்பதிகம்,** "உன்னை நான் மறக்கினும் [மறக்கேன் - அப்படி மறந்தாலும்] என்னுடைய நா உன்னுமத்தைச் சொல்லிக் கொண்டே யிருக்கும்" என்று தெரித்தருளியது. இவ்விதத் தன்மை யெய்தினவரே தமது கரணங்களைப் பேரின்ப வுருவமாகப் பெற்றவர். இவரது செயல்கள் யாவுஞ் சிவச்செயலே. இவர்கள் மனித வர்க்கத் தவரன்று. சமரச நன்னிலையில் நின்ற அருள் வர்க்கத்தவர். சிவமே யாய்த் திகழ்ந்தவர்.

---

(எ) குரும்பை - தெங்கின் இளங்காய். (அ) சிலை - வில். (கூ) சாரணன் - புகலிடமாயுள்ளவன்; பேர் - நாமங்கள்; காரணன் - சர்வ காரணன். (ய) கோணிய - வளைந்த; பேணிய - விரும்பிய; பாண் - மது ; அரைநாண் - அரைஞாண்.

# திருஞான சம்பந்த சுவாமிகள்.

## திருக்ஷேத்திரக் கோவை.

### இரண்டாந்திருமுறை-பண்-இந்தளம்.

### கோயிற்றிறம்.

திருச்சிற்றம்பலம்.

ஆரூர்தில்லையம்பலம்வல்லநல்லம்
வடகச்சியுமச்சிறுபாக்கநல்ல
கூரூர்குடவாயில்குடந்தைவெண்ணி
கடல்சூழ்கழிப்பாலைதென்கோடிபீடார்
நீரூர்வயனின்றியூர்குன்றியூருங்
குருகாவையூர்நாரையூர்நீடுகானப்
பேரூர்நன்னீள்வயனெய்த்தானமும்
பிதற்றாய்பிறைசூடிதன்பேரிடமே. (௧)

அண்ணாமலையீங்கோயுமத்திமுத்தா
றகலாமுதுகுன்றங்கொடுங்குன்றமும்
கண்ணார்கழுக்குன்றங்கயிலைகோணம்
பயில்கற்குடிகாளத்திவாட்போக்கியும்
பண்ணார்மொழிமங்கையோர்பங்குடையான்
பரங்குன்றம்பருப்பதம்பேணிநின்றே
எண்ணாயிரவும்பகலுமிடும்பைக்
கடனீந்தலாங்காரணமே. (௨)

அட்டானமென்றோதியநாலிரண்டும்
அழகன்னுறைகாவனைத்துந்துறைகள்
எட்டாந்திருமூர்த்தியின்காடொன்பதும்
குளமூன்றுங்களமஞ்சும்பாடிநான்கும்

(௨) கண்ணார் - இடமகன்ற; பேணி - விரும்பி; இடும்பை - துன்பம்.

மட்டார்குழலாண்மலைமங்கைபங்கன்
மதிக்கும்மிடமாகியபாழிமூன்றும்
சிட்டானவன்பாசூரென்றேவிரும்பாய்
அரும்பாவங்களாயினதேய்ந்தறவே. (ரு)

அறப்பள்ளியகத்தியான்பள்ளிவெள்ளைப்பொடிப்பூசி
நீறணிவானமர்காட்டுப்பள்ளி
சிறப்பள்ளிசிராப்பள்ளிசெம்பொன்பள்ளி
திருநனிபள்ளிசீர்மகேந்திரத்துப்
பிறப்பில்லவன்பள்ளிவெள்ளச்சடையான்
விரும்பும்மிடைப்பள்ளிவண்சக்கரமால்
உறைப்பாலடிபோற்றக்கொடுத்தபள்ளி
உணராய்மடநெஞ்சமேயுன்னிநின்றே. (சு)

* ஆறைவடமாகறலம்பரையா
றணியார்பெருவேளூர்விளமர்தெங்கூர்
சேறைதுலைபுகலூரகலாதிவை
காதலித்தானவன்சேர்பதியே. (எ)

மனவஞ்சர்மற்றேரட முன்மாதராரும்
மதிகூர்திருக்கூடலிலாலவாயும்
இனவஞ்சொலிலாவிடைமாமருதும்
இரும்பைப்பதிமாகாளம்வெற்றியூரும்
கனமஞ்சினமால்விடையான்விரும்பும்
கருகாவூர்நல்லூர்பெரும்புலியூர்
தனமென்சொலிற்றஞ்சமென்றேநினைமின்
தவமாமலமாயினதானறுமே. (அ)

* மாட்டேர்மடப்பாச்சிலாச்சிராமம்
முண்டீச்சரம்வாதவூர்வாரணசி

---

(ரு) சிட்டானவன் - பெரியோன். (சு) உறைப்பால் - உறைத்த தொண்டினேடு. (அ) மனவஞ்சர் - சமணர்; மாதரார் - மங்கையர்க்கரசியார்; மதி அறிவு; மஞ்சு-மேகம்; தவ-மிகுதி. (எ) மடம்-மடங்கள். *இவ்விரண்டு திருப்பாட்டுகளும் மிகவுஞ் சிதைந்திருக்கின்றன.

காட்டூர்கடம்பூர்படம்பக்கங்கொட்டும்
கடலொற்றியூர்மற்றுறையூரவையும்
கோட்டூர்திருவாமாத்தூர்கோழம்பமும்
கொடுங்கோவலூர்திருக்குணவாயில். (௭)

* குலாவுதிங்கட்சடையான்குளிரும்பருதிநியமம்
போற்றூரடியார்வழிபாடொழியாத்
தென்புறம்பயம்பூவணம்பூழியூரும்
காற்றூர்வரையன்றெடுத்தான்முடிதோணெரித்தான்
உறைகோயிலென்றென்றுநீகருதே. (அ)

நெற்குன்றமோத்தூர்நிறைநீர்மருகல்
நெடுவாயில்குறும்பலாநீடுதிரு
நற்குன்றம்வலம்புரநாகேச்சரம்
நளிர்சோலையுஞ்சேனைமாகாளம்வாய்மூர்
கற்குன்றமொன்றேந்திமழைதடுத்த
கடல்வண்ணனுமாமலரோனுங்காணச்
சொற்கென்றுந்தொலைவிலாதானுறையுங்
குடமூக்கென்றுசொல்லிக்குலாவுமினே. (௯)

குத்தங்குடிவேதிகுடிபுனல்சூழ்
குருந்தங்குடிதேவன்குடிமருவும்
மத்தங்குடிதண்டிருவண்குடியும்
அலம்புஞ்சலந்தன்சடைவைத்துகந்த
நித்தன்னிமலனுமையோடுங்கூட
நெடுங்காலமுறைவிடமென்றுசொல்லாப்
புத்தர்புறங்கூறியபுன்சமணர்
நெடும்பொய்களைவிட்டுநினைந்துய்மினே. (௰)

அம்மானையருந்தவமாகிநின்ற
அமரர்பெருமான்பதியானவுன்னிக்
கொய்ம்மாமலர்ச்சோலைகுலாவுகொச்சைக்
கிறைவன்சிவஞானசம்பந்தன்சொன்ன

---

(௯) கற்குன்றம் - கோவர்த்தநமலை; தொலைவிலாதான் - கடந்தவன்; * இந்தத் திருப்பாட்டு மிகவும் சிதைந்துள்ளது.

இம்மாலையீரைந்துமிருநிலத்தில்
இரவும்பகலுநினைந்தேத்திநின்று
விம்மாவெருவாவிரும்புமடியார்
விதியார்பிரியார் சிவன்சே வடிக்கே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருக்ஷேத்திரக் கோவை.

### ஆறாந் திருமுறை - திருத்தாண்டகம்.

### கோயிற்றிறம்.

திருச்சிற்றம்பலம்.

தில்லைச்சிற்றம்பலமுஞ்செம்பொன்பள்ளி
தேவன்குடிசிராப்பள்ளிதெங்கூர்
கொல்லிக்குளிரறைப்பள்ளிகோவல்
வீரட்டங்கோகரணங்கோடிகாவும்
முல்லைப்புறவமுருகன்பூண்டி
முழையூர்பழையாறைசத்திமுற்றம்
கல்லிற்றிகழ்சீரார்காளத்தியும்
கயிலாயநாதனையேகாணலாமே. (௧)

ஆரூர்மூலட்டானமானைக்காவும்
ஆக்கூரிற்றான்றோன்றியாடவூர்
பேரூர்பிரமபுரம்பேராவூரும்
பெருந்துறைகாம்பீலிபிடவூர்பேணும்
கூடரார்குறுக்கைவீரட்டானமுங்
கோட்டூர்குடமூக்குக்கோழம்பமும்
காரார்கழுக்குன்றுங்கானப்பேரும்
கயிலாயநாதனையேகாணலாமே. (௨)

---

(௧௧) விதியார் - பிரமனால் விதிக்கப்படார். (௧) புறவம் - காடு; கல் - மலை. (௨) கார் - மேகம்.

இடைமருதீங்கோயிராமேச்சரம்
 இன்னம்பரேரிடவையேமப்பேறூர்
சடைமுடிசாலைக்குடிதக்களூர்
 தலையாலங்காடுதலைச்சங்காடு
கொடுமுடிகுற்றாலங்கொள்ளம்பூதூர்
 கோத்திட்டைகோட்டாறுகோட்டுக்காடு
கடைமுடிகானூர்கடம்பந்துறை
 கயிலாயநாதனையேகாணலாமே. (௩).

எச்சிலிளமரேமநல்லூர்
 இலம்பையங்கோட்டூரிறையான்சேரி
அச்சிறுபாக்கமளப்பூரம்பர்
 ஆவடுதண்டுறையழுந்தூராறை
கச்சினங்கற்குடிகச்சூராலக்
 கோயில்கரவீரங்காட்டுப்பள்ளி
கச்சிப்பலதளியு மேகம்பத்தும்
 கயிலாயநாதனையேகாணலாமே. (௪).

கொடுங்கோளூரஞ்சைக்களஞ்செங்குன்றூர்
 கொங்கணங்குன்றியூர்குரக்குக்காவும்
நெடுங்களநன்னிலநெல்லிக்காவும்
 நின்றியூர்நீடூர்நியமநல்லூர்
இடும்பாவனமெழுமூரேழூர்தோழூர்
 எறும்பியூரேராருமேமகூடம்
கடம்பையிளங்கோயிறன்னினுள்ளும்
 கயிலாயநாதனையேகாணலாமே. (௫).

மண்ணிப்படிக்கரைவாழ்கொளிபுத்தூர்
 வக்கரைமந்தாரம்வாரணசி
வெண்ணிவிளத்தொட்டிவேள்விக்குடி
 விளமர்விராடபுரம்வேட்களத்தும்
பெண்ணையருட்டுறைதண்பெண்ணாகடம்
 பிரம்பில்பெரும்புலியூர்பெருவேளூரும்

கண்ணைகளர்க்காறைகழிப்பாலையும்
கயிலாயநாதனையேகாணலாமே. (௬)

வீழிமிழலைவெண்காடுவேங்கூர்
வேதிகுடிவிசயமங்கைவியலூர்
ஆழியகத்தியான்பள்ளியண்ணா
மலையாலங்காடுமரதைப்பெரும்
பாழிபழனம்பனந்தாள்பாதாளம்
பராய்த்துறைபைஞ்ஞீலிபனங்காட்டூர்தண்
காழிகடவூரைகைக்காரோணத்தும்
கயிலாயநாதனையேகாணலாமே. (எ)

உஞ்சேனைமாகாளமூறலோத்தூர்
உருத்திரகோடிமறைக்காட்டுள்ளும்
மஞ்சார்பொதியின்மலைதஞ்சைவழுவூர்
வீரட்டமாதானங்கேதாரத்தும்
வெஞ்சமாக்கூடன்மீயச்சூர்வைகா
வேதீச்சுரம்விவீசுரம்வெற்றியூரும்
கஞ்சனூர்கஞ்சாறுபஞ்சாக்கையும்
கயிலாயநாதனையேகாணலாமே. (அ)

திண்டீச்சுரஞ்சேய்ஞலூர்செம்பொன்பள்ளி
தேவூர்சிரபுரஞ்சிற்றேமஞ்சேறை
கொண்டீச்சரங்கூந்தலூர்கூழையூர்கூடல்
குருகாவூர்வெள்ளடைகுமரிகொங்கு
அண்டர்தொழுமதிகைவீரட்டானம்
ஐயாறசோகந்தியாமாத்தூரும்
கண்டியூர்வீரட்டங்கருகாவூரும்
கயிலாயநாதனையேகாணலாமே. (௯)

நறையூரிற்சித்தீச்சரநள்ளாறும்
நாரையூர்நாகேச்சரநல்லூர்நல்ல
துறையூர்சோற்றுத்துறைசூலமங்கை
தோணிபுரந்துருத்திசோமீச்சரம்

உறையூர்கடலொற்றியூருற்றத்தூர்
ஓமாம்புலியூரோடேரகத்தும்
கறையூர்கருப்பறியல்கன்றாப்பூரும்
கயிலாயநாதனையேகாணலாமே. (௰)

புலிவலம்புத்தூர்புகலூர்புன்கூர்
புறம்பயம்பூவணம்பொய்கைநல்லூர்
வலிவலமாற்பேறுவாய்மூர்வைகல்
வலஞ்சுழிவாஞ்சியமருகல்வன்னி
நிலமலிநெய்த்தானத்தோடெத்தானத்து
நிலவுபெருங்கோயில்பலகண்டாற்றொண்டீர்
கலிவலிமிக்கோனைக்கால்விரலாற்செற்ற
கயிலாயநாதனையேகாணலாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### ஊர்த்தொகை.

ஏழாந்திருமுறை - பண் - பழம்பஞ்சுரம்.

### கோயிற்றிறம்.

திருச்சிற்றம்பலம்.

காட்டூர்க் கடலே கடம்பூர் மலையே கானப் பேரூராய்
கோட்டூர்க் கொழுந்தே யழுந்தூ ரரசே கொழுநற் கொல்லேறே
பாட்டூர் பலரும் பரவப் படுவாய் பனங்காட் டூரானே
மாட்டூ ரறவா மறவா துன்னைப் பாடப் பணியாயே. (௧)

கொங்கிற் குறும்பிற் குரக்குத் தளியாய் குழகா குற்றாலா
மங்குற் றிரிவாய் வானோர் தலைவா வாய்மூர் மணவாளா

---

(௧௧) கலி - பாவம்; வலி - வன்மை. (௧) கொழுநல் - கொழுத்தநல்ல, மாட்டூர் - இடபத்தில் ஊர்ந்தருளுகின்ற; அறவா - அறத்தின் வடிவினரே; (௨) மங்குல் - மேகம்.

சங்கக் குழையார் செவியா வழகா வவியா வனலேந்திக்
கங்குற் புறங்காட் டாடீ யடியார் கவலை களையாயே. (உ)

நிறைக்காட் டானே நெஞ்சத் தானே நின்றி யூரானே
மிறைக்காட் டானே புனல்சேர் சடையா யனல்சேர் கையானே
மறைக்காட் டானே திருமாந் துறையாய் மாகோ ணத்தானே
இறைக்காட் டாயே யெங்கட் குன்னை யெம்மான் றம்மானே. (ங)

ஆரூ ரத்தா வையாற் றமுதே யளப்பூ ரம்மானே
காரூர் பொழில்கள் புடைசூழ் புறவிற் கருகா வூரானே
பேரூ ருறைவாய் பட்டிப் பெருமான் பிறவா நெறியானே
பாரூர் பலரும் பரவப் படுவாய் பாசூ ரம்மானே. (ச)

மருக லுறைவாய் மாகா ளத்தாய் மதியஞ் சடையானே
அருகற் பிணிநின் னடியார் மேல வகல வருளாயே
கருகற் குரலாய் வெண்ணிக் கரும்பே கானூர்க் கட்டியே
பருகப் பணியா யடியார்க் குன்னைப் பவளப் படியானே. (ரு)

தாங்கூர் பிணிநின் னடியார் மேல வகல வருளாயே
வேங்கூ ருறைவாய் விளமர் நகராய் விடையார் கொடியானே
நாங்கூ ருறைவாய் தேங்கூர் நகராய் நல்லூர் நம்பானே
பாங்கூர் பலிதேர் பரனே பரமா பழனப் பதியானே. (சு)

தேனைக் காவல் கொண்டு விண்ட கொன்றைச் செழுந்தாராய்
வானைக் காவல் கொண்டு நின்று ரறியா நெறியானே
ஆனைக் காவி லரனே பரனே யண்ணா மலையானே
ஊனைக் காவல் கைவிட் டுன்னை யுகப்பா ருணர்வாரே. (எ)

அருத்திச் சுடரே நெய்த்தா னத்தாய் சொல்லாய் கல்லாலா
பருத்தி நியமத் துறைவாய் வெயிலாய்ப் பலவாய்க் காற்றானாய்
திருத்தித் திருத்தி வந்தென் சிந்தை யிடங்கொள் கயிலாயா
அருத்தித் துன்னை யடைந்தார் வினைக ளகல வருளாயே. (அ)

---

(ங) தம்மான் - தம்பிரான். (ச) புறவு - முல்லைநிலம்; நெறி - முத்திநெறி. (ரு) அருகல் - வருந்துதல்; கருகல் - கருகின; குரல் - கண்டம்; படி - வடிவம். (எ) காவல் - காத்தல். (அ) வெயில் - சூரியன்; அருத்தித்து - விரும்பி.

புலியூர்ச் சிற்றம் பலத்தாய் புகலூர்ப் போதா மூதூரா
பொலிசேர் புரமூன் றெரியச் செற்ற புரிபுன் சடையானே
வலிசே ரரக்கன் றடக்கை யைஞ்ஞான் கடர்த்த மதிசூடி
கலிசேர் புறவிற் கடவூ ராளீ காண வருளாயே. (௯)

கைம்மா வுரிவை யம்மான் காக்கும் பலவூர் கருத்துன்னி
மைம்மாந் தடங்கண் மதுர மன்ன மொழியாண் மடச்சிங்கடி
தம்மா னூரன் சடையன் சிறுவ னடியன் றமிழ்மாலை
செம்மாந் திருந்து திருவாய் திறப்பார் சிவலோ கத்தாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# திருஞானசம்பந்த சுவாமிகள்.

## திருவெழுகூற்றிருக்கை.

### முதற்றிருமுறை - சிவனுருவம்.

திருச்சிற்றம்பலம்.

ஒருரு வாயினை மானாங் காரத்
தீரியல் பாயொரு விண்முதல் பூதலம்
ஒன்றிய விருசுட ரும்பர்கள் பிறவும்
படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை

---

(௯) போதா - அறிவுருவினரே; பொலிசேர் - விளக்கமுற்ற; ஐஞ்ஞான்கு - இருபது; கலி-ஒலி. (௰) கைம்மா - கையையுடைய விலங்கு, யானை; மை - அஞ்சனம்; மா - மாவடுவின்பிளவு; சிங்கடி - சிங்கடியம்மை, இவர்கோட்புலி நாயனாரது புத்திரி, இவரையும் இவரது சகோதரியையும் நம்பியாரூரர் அபிமான புதல்வியராகக் கொண்டனர்; தம்மான் - பிதா; திறப்பார் - ஓதுவோர்.

(க - ச) ஓர் உருஆயினை - ஞானானந்தவஸ்துவாய் விளங்கும் சொரூபசிவமாகிய தேவரீரே உயிர்களின் பொருட்டுப் பஞ்சகிருத்தியஞ்செய்யும் நிமித்தமாக ஓர் திருமேனி தாங்கினீர்; மான் ஆங்காரத்து ஈரியல்பாய் - குணமாயுள்ள சத்தியைத் தன்னிடத்தில் தோற்றுவித்து அதனோடுநின்ற அவதாரத்து சத்திசிவம் என்னும் ஈரியல்பாயினீர்; ஆங்காரம் - எழுச்சி; மும்மூர்த்திகள் ஆயினை - சுத்த மாயையில் கிருத்தியஞ்செய்யும் பொருட்டுத் தடஸ்த லக்ஷணத்தில் மூன்று திருமேனிகளைத் தாங்கினீர்.

இருவரோ டொருவ னாகி நின்றனை
ஓரா னீழ லொண்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க் கொளிநெறி
காட்டினை நாட்டமூன் றாகக் கோட்டினை
இருநதி யரவமோ டொருமதி சூடினை
ஒருதா ளீரயின் மூவிலைச் சூலம்
நாற்கான் மான்மறி யைந்தலை யரவம்
ஏந்தினை காய்ந்த நால்வாய் மும்மதத்
திருகோட் டொருகரி யீடழித் துரித்தனை
ஒருதனு விருகால் வளைய வாங்கி
முப்புரத் தோடு நானில மஞ்சக்
கொன்று தலத்துற வவுணரை யறுத்தனை
ஐம்புல னாலா மந்தக் கரணம்
முக்குண மிருவளி யொருங்கிய வானோர்
ஏத்த நின்றனை யொருங்கிய மனத்தோ
டிருபிறப் போர்ந்துமுப் பொழுது குறைமுடித்து
நான்மறை யோதி யையவகை வேள்வி
அமைத்தா றங்க முதலெழுத் தோதி
வரன்முறை பயின்றெழு வான்றனை வளர்க்கும்
பிரமபுரம் பேணினை
அறுபத முரலும் வேணுபுரம் விரும்பினை
இகலி யமைந்துணர் புகலி யமர்ந்தனை
பொங்குநாற் கடல்சூழ் வெங்குரு விளங்கினை
பாணிமூ வுலகும் புதையமேன் மிதந்த
தோணிபுரத் துறைந்தனை தொலையா விருநிதி

(௫ - ௰) இருவரோடு ஒருவன் ஆகிநின்றனை - பிரகிருதி மாயையில் ஸ்தூல கிருத்தியஞ் செய்யுநிமித்தம் பிரம்ம விஷ்ணுக்களை அதிஷ்டித்துக்கொண்டு அவர்களோடு தானும் ஒருவனாகி நின்றீர்; ஒண்கழல் - ஞானசத்தி கிரியாசத்தி என்னும் திருவடிகள்; ஒளிநெறி - அருண்ஞானநெறி; கோட்டினை - புறவிருளை நீக்கினீர். (௧௧ - ௧௫) மான்மறி - மான்கன்று; ஈடு - வலி; கால் - குதை; நானிலம் - பூமியிலுள்ளவர். (௨௰ - ௨௫) அறுபதம் - அறுகாலுடைய வண்டு. (௨௬ - ௩௰) இகல் - பகை; மைந்து - வலி; பாணி - ஜலம்.

வாய்ந்த பூந்தரா யேய்ந்தனை
வரபுர மென்றுணர் சிரபுரத் துறைந்தனை
ஒருமலை யெடுத்த விருதிற லரக்கன்
விறல்கெடுத் தருளினை புறவம் புரிந்தனை
முந்நீர்த் துயின்றோ னான்முக னறியாப்
பண்பொடு நின்றனை சண்பை யமர்ந்தனை
ஐயுறு மமணரு மறுவகைத் தேரரும்
ஊழியு முணராக் காழி யமர்ந்தனை
எச்சனே ழிசையோன் கொச்சையை மெச்சினை
ஆறு பதமு மைந்தமர் கல்வியும்
மறைமுத னான்கும்
மூன்று காலமுந் தோன்ற நின்றனை
இருமையி னொருமையு மொருமையின் பெருமையும்
மறுவிலா மறையோர்
கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை
கழுமல முதுபதிக் கவுணிய னறியும்
அனைய தன்மையை யாதலி னின்னை
நினைய வல்லவ ரில்லைநீ ணிலத்தே.

திருச்சிற்றம்பலம்.

**இஃது,** சிவபாதவிருதயர் நித்தியகர்மங்களை நிறைவேற்றிய வுடனே தமது குமாரராகிய திருஞானசம்பந்த சுவாமிகளால் அருளிச்செய்யப்பட்ட திருப்பதிகங்களை ஓதிவிட்டே போசனஞ் செய்யும் நியமத்தைக்கொண்டனர். இவ்வாறு சிலகாலம் நிகழப் பிள்ளையார் தாம்பாடுவன பெருகுதலைத் திருவுளத்தடைத்து, தந்தையார் கொள்கைக்குத் தடைவராவண்ணம் அதுவரையும் இயற்றியுள்ள திருப்பதிகங்களின் பொருள்கள் யாவு மமைத்து இத்திருவெழுகூற்

(௩௧ - ௩௫) வரபுரம் - வரத்தைத்தரும் நகரம். (௩௬ - ௪௦) எச்சன் - யாகவுருவன், யாகத்தலைவன். (௪௧ - ௪௦) ஒருமையும் - சத்தியைத் தன்னிடத்திலே ஒடுக்கிக்கொண்டு தனிப்பொருளாய் விண்ணெனநிற்றலையும்; ஒருமையின்பெருமை - சொரூபசிவத்தின் பெருமை; க உணியன் அறியும் - கம்என்னும் பிரமகபாலத்தில் உண்கின்றவன் அறிவன். (௪௭) இல்லை - பிறப்பற்றவர்.

றிருக்கையைத் திருவாய்மலர்ந்தருளினர். ஆகலின் இதனை நாடோறும் அன்புடன் ஓதுவோர் பாசக்ஷயமும் சிவப்பேறும் எய்துவர் என்பது சத்தியம். முக்காலுஞ் சத்தியம்.

---

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

### திருக்கடவூர்மயானம்.

### இரண்டாந்திருமுறை - பண் - காந்தாரம்.

### சிவனுருவம்.

வரிய மறையார் பிறையார் மலையோர் சிலையா வணக்கி
எரிய மதில்க ளெய்தா ரெறியு முசல முடையார்
கரிய மிடறு முடையார் கடவூர் மயான மமர்ந்தார்
பெரிய விடைமேல் வருவா ரவரெம் பெருமா னடிகளே. (௧)

மங்கை மணந்த மார்பர் மழுவாள் வலனொன் றேந்திக்
கங்கை சடையிற் கரந்தார் கடவூர் மயான மமர்ந்தார்
செங்கண் வெள்ளே றேறிச் செல்வஞ் செய்யா வருவார்
அங்கை யேறிய மறியா ரவரெம் பெருமா னடிகளே. (௨)

ஈட லிடப மிசைய வேறி மழுவொன் றேந்திக்
காட திடமா வுடையார் கடவூர் மயான மமர்ந்தார்
பாட லிசைகொள் கருவி படுதம் பலவும் பயில்வார்
ஆட லரவ முடையா ரவரெம் பெருமா னடிகளே. (௩)

இறைநின் றிலங்கு வளையா ளிளையா ளொருபா லுடையார்
மறைநின் றிலங்கு மொழியார் மலையார் மனத்தின் மிசையார்
கறைநின் றிலங்கு பொழில்சூழ் கடவூர் மயான மமர்ந்தார்
பிறைநின் றிலங்கு சடையா ரவரெம் பெருமானடிகளே. (௪)

---

(௧) வரிய - இசைப்பாட்டுடைய; முசலம் - உலக்கை. (௨) வெள்ளேறு - வெண்மையான இடபம்; செல்வம் - திருவடிப்பேறு; எறிய-தரிக்கப்பட்ட. (௩) ஈடுஅல் - இணையில்லாத; காடு-மயானம்; படுதம் - வாத்தியம். (௪) இறை - கையிறை; பால் - பக்கம்; மலையார் - தடுமாற்றமில்லாதவர்; கறை-கறுப்பு.

வெள்ளை யெருத்தின் மிசையார் விரிதோ டொருகா திலங்கத்
துள்ளு மிளமான் மறியார் சுடர்பொற் சடைக டுலங்கக்
கள்ள நகுவெண் டலையார் கடவூர் மயான மமர்ந்தார்
பிள்ளை மதிய முடையா ரவரெம் பெருமா னடிகளே. (௫)

பொன்று அதிரு மணங்கொள் புனைபூங் கொன்றை புனைந்தார்
ஒன்று வெள்ளே றுயர்த்த துடையா ரதுவே யூர்வார்
கன்று வினஞ்சூழ் புறவிற் கடவூர் மயான மமர்ந்தார்
பின்றாழ் சடையா ரொருவ ரவரெம் பெருமா னடிகளே. (௬)

பாச மான களைவார் பரிவார்க் கமுத மனையார்
ஆசை தீரக் கொடுப்பா ரலங்கல் விடைமேல் வருவார்
காசை மலர்போன் மிடற்றார் கடவூர் மயான மமர்ந்தார்
பேச வருவா ரொருவ ரவரெம் பெருமா னடிகளே. (௭)

செற்ற வரக்க னலறத் திகழ்சே வடிமெல் விரலால்
கற்குன் றடர்த்த பெருமான் கடவூர் மயான மமர்ந்தார்
மற்றொன் றிணையில் வலிய மாசில் வெள்ளி மலைபோல்
பெற்றொன் றேறி வருவா ரவரெம் பெருமா னடிகளே. (௮)

வருமா கரியி னுரியார் வளர்புன் சடையார் விடையார்
கருமா னுரிதோ லுடையார் கடவூர் மயான மமர்ந்தார்
திருமா லொடுநான் முகனுந் தேர்ந்துங் காண முன்னொண்ணாப்
பெருமா னெனவும் வருவா ரவரெம் பெருமா னடிகளே. (௯)

தூய விடைமேல் வருவார் துன்னா ருடைய மதில்கள்
காய வேவச் செற்றார் கடவூர் மயான மமர்ந்தார்
தீய கருமஞ் சொல்லுஞ் சிறுபுன் றேர ரமணர்
பேய்பே யென்ன வருவா ரவரெம் பெருமா னடிகளே. (௰)

---

(௫) காது - இடக்காது; பிள்ளைமதியம் - இளம்பிறை; வெண் தலை-பிரமசிரம். (௬) தாது - மகரந்தம்; புனை - அலங்கரி; ஒன்று - நிகரில்லாத; இனம் - கூட்டம்; புறவம் - முல்லைநிலம்; ஒருவர் - ஒப்பற்றவர். (௭) பரிவார் - அன்புடையவர்; அலங்கல் - அசைவு; காசைமலர் - காயாம்பூ; பேச - புகழ. (௰) துன்னார் - பகைவர்; காயவேவ - எரிந்தழிய; தேரர் - புத்தர்; என்ன - இகழும்படி.

மரவம் பொழில்சூழ் கடவூர் மன்னு மயான மமர்ந்த
அரவ மசைத்த பெருமா னகல மறிய லாகப்
பரவு முறையே பயிலும் பந்தன் செஞ்சொன் மாலை
இரவும் பகலும் பரவி நினைவார் வினைக ளிலரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

சுவாமி பெயர் - பிரம்மபுரேசர்; தேவியார் - அமலக்குய மின்னம்மை.

இந்தத்திருப்பதிகம், திருஞானசம்பந்த சுவாமிகள் தலங்கடோறுஞ்சென்று தரிசித்து இத்தலத்துக்கு வந்து, அங்கிருந்த கலந்த நட்புப்பெருமை செறிந்த குங்கிலியக்கலயநாயனாரது திருஹத்திற்கெழுந்தருளி, அவர் அன்போடும் அமைத்தருளிய விருந்தை இனிதாகவிரும்பி, அங்குள்ள கோயிலிற் சென்று தரிசித்தபோது ஓதியருளியது.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

### கோயிற்றிருப்பதிகம்.

### நான்காந்திருமுறை - பண் - கொல்லி.

**சிவனுநுவம்.**

திருச்சிற்றம்பலம்.

பாளை யுடைக்கமு கோங்கிப்பன் மாட நெருங்கியெங்கும்
வாளை யுடைப்புனல் வந்தெறி வாழ்வயற் றில்லைதன்னுள்
ஆள வுடைக்கழற் சிற்றம் பலத்தர னாடல்கண்டால் [னே.
பீளை யுடைக்கண்க ளாற்பின்னைப் பேய்த்தொண்டர் காண்பதென்

---

(கக) மரவம் - குங்குமமரம்; அகலம் - வியாபகம். (க) வாளை - வாளை மீன்கள்; கழல் - தூக்கியபாதம்; பேய்த் தொண்டர் - சிவஞானிகள்; பின்னை - பிறகு.

பொருவிடை யொன்றுடைப் புண்ணிய மூர்த்தி புலியதளன்
உருவுடை யம்மலை மங்கை மணாள னுலகுக்கெல்லாந்
திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
திருவடி யைக்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. (உ)

தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங்கொண் டெப்பொழுதும்
அடுத்து வணங்கு மயனொடு மாலுக்குங் காண்பரியான்
பொடிக்கொண் டணிந்துபொன் னாகிய தில்லைச்சிற் றம்பலவன்
உடுத்த துகில்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. (௩)

வைச்ச பொருணமக் காகுமென் றெண்ணி நமச்சிவாய
அச்ச மொழிந்தே னணிதில்லை யம்பலத் தாடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி யுந்தியின் மேலசைத்த
கச்சி னழகுகண் டார்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே. (௪)

செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான் [னே.
கைஞ்ஞின்ற வாடல்கண் டார்பின்னைக் கண்கொண்டு காண்பதென்

ஊனத்தை நீக்கி யுலகறி யவென்னை யாட்கொண்டவன்
தேனைத் தெனக்கினி யான்றில்லைச் சிற்றம் பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை யுண்டகண் டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண் டார்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.

தெரித்த கணையாற் றிரிபுர மூன்றுஞ்செந் தீயின்மூழ்க
எரித்த விறைவ னிமையவர் கோமா னிணையடிகள்
தரித்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
சிரித்த முகங்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. (எ)

சுற்று மமரர் சுரபதி நின்றிருப் பாதமல்லாற்
பற்றொன் றிலோமென் றழைப்பப் பரவையு ணஞ்சையுண்டான்

---

(உ) அதள் - தோல். (௩) தொடுத்தமலர் - மலர் மாலை; துகில் - ஆடை. (௪) வைச்சபொருள் - சேமநிதி; ஆகும் - உதவும்; அச்சம் - பிறவிப் பயம். (ரு) ஞின்ற-நின்ற, தங்கிய; மைஞ்ஞின்ற - மைதீட்டிய; கைஞ்ஞின்ற - கைக்காட்டி நின்ற. (சு) ஏனத் தெயிறு - பன்றியின் கொம்பு. (எ) தெரிந்த - தேர்ந்தெடுத்த.

செற்றங் கநங்கனைத் தீவிழித் தான்றில்லை யம்பலவன்
நெற்றியிற் கண்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே.()

சித்தத் தெழுந்த செழுங்கம லத்தன்ன சேவடிகள்
வைத்த மனத்தவர் வாழ்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்
முத்தும் வயிரமு மாணிக்கந் தன்னுள் விளங்கியதூ
மத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே. (௯)

தருக்கு மிகுத்துத்தன் றோள்வலி யுன்னித் தடவரையை
வரைக்கை களாலெடுத் தார்ப்ப மலைமகள் கோன்சிரித்து
அரக்கன் மணிமுடி பத்து மணிதில்லை யம்பலவன்
நெருக்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டு காண்பதென்னே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

சுவாமிபெயர் - சபாநாதர்; தேவியார் - சிவகாமியம்மை.

---

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

### திருப்பூவணம்.

ஆறாந்திருமுறை - திருத்தாண்டகம்.

**சிவநுனுவம்.**

திருச்சிற்றம்பலம்.

வடிவேறு திரிசூலந் தோன்றுந் தோன்றும்
வளர்சடைமே லிளமதியந் தோன்றுந் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணிதோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழிறிகழுந் திருமுடியு மிலங்கித் தோன்றும்

---

(அ) பரவை - கடல்; அநங்கன் - மன்மதன். (ம) தருக்கு - செருக்கு.

பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. (க)

ஆணாகிப் பெண்ணாய வடிவு தோன்றும்
அடியவர்கட் காரமுத மாகித் தோன்றும்
ஊணாகி யூர்திரிவா னாகித் தோன்றும்
ஒற்றைவெண் பிறைதோன்றும் பற்றார் தம்மேல்
சேணாக வரைவில்லா லெரித்த தோன்றும்
செத்தவர்த மெலும்பினாற் செறியச் செய்த
பூணாணு மரைநாணும் பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனிதனூர்க்கே. (உ)

கல்லாலி னீழற் கலந்து தோன்றும்
கவின்மறையோர் நால்வர்க்கு நெறிக ளன்று
சொல்லாகச் சொல்லியவா தோன்றுந் தோன்றும்
சூழரவு மான்மறியுந் தோன்றுந் தோன்றும்
அல்லாத காலனைமுன் னடர்த்த தோன்றும்
ஐவகையா னினைவார்பா லமர்ந்து தோன்றும்
பொல்லாத புலாலெலும்பு பூணாய்த் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னூர்க்கே. (ங)

படைமலிந்த மழுவாளு மானுந் தோன்றும்
பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்
நடைமலிந்த விடையோடு கொடியுந் தோன்றும்
நான்மறையி னொலிதோன்று நயனந் தோன்றும்
உடைமலிந்த கோவணமுங் கீளுந் தோன்றும்
ஊரல்வெண் சிரமாலை யுலாவித் தோன்றும்

(க) வடிவு - அழகு; கடி - ஒளி; கண்ணி - மலர்மாலை; கலந்து - இருபுறத்துஞ்சேர்ந்து. (உ) ஊண் ஆகி - பலியுணவின்பொருட்டு; சேண் - ஆகாயம்; பூண்நாண் - அணிந்த மாலை. (ங) கவின் - சிவ வேடப் பொலிவு; சொல்லாக - கட்டுரையாக; சொல்லியவா - சொல்லிய விதம்; ஐவகை - பஞ்சமூர்த்தி. (ச) படைமலிந்த - படையிற்சிறந்த; பன்னிரண்டுகண் - மலர்ந்தகண்கள் பன்னிரண்டு. (இதனால் முகுளிதமானகண்கள் ஆறு கூறாமல் விடப்பட்டன); நடைமலிந்த - நடையிற்சிறந்த.

புடைமலிந்த பூதத்தின் பொலிவு தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித ஞர்க்கே. (ச)

மயலாகுந் தன்னடியார்க் கருளுந் தோன்றும்
மாசிலாப் புன்சடைமேன் மதியந் தோன்றும்
இயல்பாக விடுபிச்சை யேற்ற ஞேன்றும்
இருங்கடனஞ் சுண்டிருண்ட கண்டந் தோன்றும்
கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை
ஆயிரமா முகத்தினெடு வானிற் ஞேன்றும்
புயல்பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித ஞர்க்கே. (ரு)

பாராழி வட்டத்தார் பரவி யிட்ட
பன்மலரு நறும்புகையும் பரந்து தோன்றும்
சீராழித் தாமரையின் மலர்க ளன்ன
திருந்தியமா நிறத்தசே வடிக டோன்றும்
ஓராழித் தேருடைய விலங்கை வேந்தன்
உடறுணித்த விடர்பாவங் கெடுப்பித் தன்று
போராழி முன்னீந்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனிதஞர்க்கே. (சா)

தன்னடியார்க் கருள்புரிந்த தகவு தோன்றும்
சதுர்முகனைத் தலையரிந்த தன்மை தோன்றும்
மின்னனைய நுண்ணிடையாள் பாகந் தோன்றும்
வேழத்தி னுரிவிரும்பிப் போர்த்த ஞேன்றும்
துன்னியசெஞ் சடைமேலோர் புனலும் பாம்பும்
தூயமா மதியுடனே வைத்த ஞேன்றும்
பொன்னனைய திருமேனி பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனிதஞர்க்கே. (எ)

---

(ச) ஊரல்-நகர்தல். (ரு) மயல்-பித்து; கடுங்கலுழி - கொடிய நீர்ப்பெருக்கு ; புயல்-வெள்ளம். (சா) சீர்ஆழி - சிறந்தவட்டம்; மா நிறம்-அழகியநிறம்; இடர்பாவம்-பிரமஹத்தி; ஓராழித்தேர்-புஷ்பக விமானம். (எ) தகவு - மேன்மை. வேழம் - யானை; உரி - தோல்.

செறிகழலுந் திருவடியுந் தோன்றுந் தோன்றும்
திரிபுரத்தை யெரிசெய்த சிலையுந் தோன்றும்
நெறியதனை விரித்துரைத்த நேர்மை தோன்றும்
நெற்றிமேற் கண்டோன்றும் பெற்றந் தோன்றும்
மறுபிறவி யறுத்தருளும் வகையுந் தோன்றும்
மலைமகளுஞ் சலமகளு மலிந்து தோன்றும்
பொறியரவு மிளமதியும் பொலிந்து தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (அ).

அருப்போட்டு முலைமடவாள் பாகந் தோன்றும்
அணிகிளரு முருமென்ன வடர்க்குங் கேழல்
மருப்போட்டு மணிவயிரக் கோவை தோன்றும்
மணமலிந்த நடந்தோன்று மணியார் வைகைத்
திருக்கோட்டி னின்றதோர் திறமுந் தோன்றும்
செக்கர்வா னொளிமிக்குத் திகழ்ந்த சோதிப்
பொருப்போட்டி நின்றதிண் புயமுந் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (கூ).

ஆங்கணைந்த சண்டிக்கு மருளி யன்று
தன்முடிமே லலர்மாலை யளித்த றோன்றும்
பாங்கணைந்து பணிசெய்வார்க் கருளி யன்று
பலபிறவி யறுத்தருளும் பரிசுந் தோன்றும்
கோங்கணைந்த கூவிளமு மதமத் தம்மும்
குழற்கணிந்த கொள்கையொடு கோலந் தோன்றும்
பூங்கணைவே ளுருவழித்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (௰).

ஆருருவ வுள்குவா ருள்ளத் துள்ளே
யவ்வுருவாய் நிற்கின்ற வருளுந் தோன்றும்

---

(அ) பொறி - புள்ளி. (கூ) அரும்பு - தாமரை முகை; உரும் - இடி; அடர்க்கும்-ஆரவாரிக்கின்ற; கோட்டில்-கரையில்; பொருப்பு-மேருமலை; ஓட்டி - இகழ்ந்து. (௰) ஆங்கு - மண்ணி ஆற்றங்கரை; பரிசு - வள்ளற்றன்மை; கோங்கு - வாசனை; கூவிளம் - வில்வம்; பொற்பு - வெற்றி.

வாருருவப் பூண்முலைநன் மங்கை தன்னை
மகிழ்ந்தொருபால் வைத்துகந்த வடிவு தோன்றும்
நீருருவக் கடலிலங்கை யரக்கர் கோனை
நெறுநெறென வடர்த்திட்ட நிலையுந் தோன்றும்
போருருவக் கூற்றுதைத்த பொற்புத் தோன்றும்
பொழிறிகழும் பூவணத்தெம் புனித னார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் பாண்டிநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர்-பூவணநாதர்; தேவியார்-மின்னும்பிகையம்மை.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

### திருக்கடவூர்மயானம்.

ஏழாந்திருமுறை - பண் - பழம்பஞ்சுரம்.

**சிவனுருவம்.**

திருச்சிற்றம்பலம்.

மருவார் கொன்றை மதிசூடி மாணிக்கத்தின் மலைபோலே
வருவார் விடைமேன் மாதோடு மகிழ்ந்து பூதப் படைசூழத்
திருமால் பிரம னிந்திரற்குந் தேவர் நாகர் தானவர்க்கும்
பெருமான் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (க)

விண்ணோர் தலைவர் வெண்புரிநூன் மார்பர் வேத கீதத்தர்
கண்ணார் நுதலர் நகுதலையர் கால காலர் கடவூரர்
எண்ணார் புரமூன் றெரிசெய்த விறைவ ரிமையோ ரொருபாகம்
பெண்ணா ணவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (உ)

காயும் புலியி னதளுடையர் கண்ட ரெண்டோட் கடவூரர்
தாயுந் தந்தை பல்லுயிர்க்குந் தாமே யாய தலைவனார்

---

(கக) உருவ - உறைப்பாக; வார்உருவம்-கச்சழகு; நீர்உருவம்-நீர்வடிவம்; போர் உருவம் - போர்க்கோலம்.

பாயும் விடையொன் றதுவேறிப் பலிதேர்ந் துண்ணும் பரமேட்டி
பேய்கள் வாழு மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (௩)

நறைசேர் மலரைங் கணையானை நயனத் தீயாற் பொடிசெய்த
இறையா ராவ ரெல்லார்க்கு மில்லை யென்னு தருள்செய்வார்
பறையார் முழவம் பாட்டோடு பயிலுந் தொண்டர் பயில்கடவூர்ப்
பிறையார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (௪)

கொத்தார் கொன்றை மதிசூடிக் கோணு கங்கள் பூணுக
மத்த யானை யுரிபோர்த்து மருப்பு மாமைத் தாலியார்
பத்தி செய்து பாரிடங்கள் பாடி யாடப் பலிகொள்ளும்
பித்தர் கடவூர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (௫)

துணிவார் கீளுங் கோவணமுந் துதைந்து சுடலைப் பொடியணிந்து
பணிமே லிட்ட பாசுபதர் பஞ்ச வடிமார் பினர்கடவூர்த்
திணிவார் குழையார் புரமூன்றுந் தீவாய்ப் படுத்த சேவகனார்
பிணிவார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (௬)

காரார் கடலி னஞ்சுண்ட கண்டர் கடவூ ருறைவாணர்
தேரா ரரக்கன் போய்வீழ்ந்து சிதைய விரலா லூன்றினார்
ஊர்தா னாவ துலகேழு முடையார்க் கொற்றி யூராரூர்
பேரா யிரவர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (௭)

வாடா முலையா டன்னோடு மகிழ்ந்து கானில் வேடுவனாய்க்
கோடார் கேழற் பின்சென்று குறுகி விசயன் றவமழித்து
நாடா வண்ணஞ் செருச்செய்து வாவ நாழி நிலையருள்செய்
பீடார் சடையார் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (௮)

வேழ முரிப்பர் மழுவாளர் வேள்வி யழிப்பர் சிரமறுப்பர்
ஆழி யளிப்ப ரரிதனக்கு வானஞ் சுகப்ப ரறமுரைப்பர்

---

(க) தானவர் – அசுரர். (உ) காலகாலர் – இயமனுக்கு இயமன்; எண்ணார் – பகைவர். (௩) காயும் – கோபிக்கும்; பரமேட்டி – யாகத் தலைவர். (௪) நறை – தேன். (௫) கோள் நாகங்கள் – கொல்லும் நாகங் கள்; பாரிடங்கள் – பூதகணங்கள். (௬) பஞ்சவடி – மயிர்ப்பூணூல்; பிணிவார் – கட்டிய நீண்ட. (௮) வாடா – தாழா; ஆவம்நாழி – அம்புக்கூடு.

ஏழை தலைவர் கடவூரி லிறைவர் சிறுமான் மறிக்கையர்
பேழைச் சடையர் மயானத்துப் பெரிய பெருமா னடிகளே. (கூ)

மாட மல்கு கடவூரின் மறையோ ரேத்து மயானத்துப்
பீடை தீர வடியாருக் கருளும் பெருமா னடிகள்சீர்
நாடி நாவ லாரூர னம்பி சொன்ன நற்றமிழ்கள்
பாடு மடியார் கேட்போர்மேற் பாவ மான பறையுமே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

# திருஞானசம்பந்த சுவாமிகள்.

## திருவாழ்கொளிபுத்தூர்.

### முதற்றிருமுறை - பண் - தக்கராகம்.

### திருவடிகள்.

திருச்சிற்றம்பலம்.

பொடியுடை மார்பினர் போர்விடை யேறிப் பூதகணம் புடை சூழக்
கொடியுடை யூர்திரிந் தையங் கொண்டு பலபல கூறி
வடிவுடை வாணெடுங் கண்ணுமை பாக மாயவன் வாழ்கொளிபுத்தூர்க்
கடிகமழ் மாமல ரிட்டுக் கறைமிடற் றானடி காண்போம். (க)

அரைகெழு கோவண வாடையின் மேலோ ராடரவம்மசைத் தையம்
புரைகெழு வெண்டலை யேந்திப் போர்விடை யேறிப் புகழ
வரைகெழு மங்கைய தாகமோர் பாக மாயவன் வாழ்கொளிபுத்தூர்
விரைகமழ் மாமலர் தூவி விரிசடை யானடி சேர்வோம். (உ)

பூணெடு நாகம சைத்தன லாடிப் புன்றலை யங்கையி லேந்தி
ஊணிடு பிச்சையூ ரைய முண்டியென் றுபல கூறி [தூர்த்
வாணெடுங் கண்ணுமை மங்கையோர் பாக மாயவன்வாழ்கொளிபுத்
தாணெடு மாமல ரிட்டுத் தலைவன தாணிழல் சார்வோம். (௩)

---

(கூ) ஏழை - உமாதேவி; பேழை - பெரிய; (ய) பீடை - துன்பம்; பறையும் - கெட்டொழியும். (உ) புரை - ஓட்டை; வரைகெழுமங்கை - பார்வதி; ஆகம் - திருமேனி.

தாரிடு கொன்றையோர் வெண்மதி கங்கை தாழ்சடைமேல்வைசூடி
ஊரிடு பிச்சைகொள் செல்வ முண்டியென் றுபல கூறி
வாரிடு மென்முலை மாதொரு பாக மாயவன் வாழ்கொளி புத்தூர்
காரிடு மாமலர் தூவிக் கறைமிடற் றானடி காண்போம். (ச)

கனமலர்க் கொன்றைய லங்க லிலங்கக் காதிலோர் வெண்குழையோடு
புனமலர் மாலை புனைந்தூர் புகுதியென் றேபல கூறி
வனமுலை மாமலை மங்கையோர் பாக மாயவன் வாழ்கொளி புத்தூர்
இனமல ரேய்ந்தன தூவியெம்பெரு மானடி சேர்வோம். (ரு)

அளைவளர் நாகம சைத்தன லாடி யலர்மிசை யந்தணனுச்சிக்
களைதலை யிற்பலி கொள்ளுங் கருத்தனே கள்வனே யென்ற[தூர்த்
வளையொலி முன்கை மடந்தையோர் பாக மாயவன் வாழ்கொளிபுத்
தளையவிழ் மாமலர் தூவித் தலைவன தாளிணை சார்வோம். (சு)

அடர்செவி வேழத்தி னீருரி போர்த்து வழிதலை யங்கையி லேந்தி
யுடலிடு பிச்சையோ டைய முண்டியென் றுபல கூறி
மடனெடு மாமலர்க் கண்ணியோர் பாக மாயவன் வாழ்கொளிபுத்தூர்த்
தடமல ராயின தூவித் தலைவன தாணிழல் சார்வோம். (எ)

உயர்வரை யொல்கவெ டுத்தவ ரக்க னொளிர்கட கக்கை யடர்த்து
வயலிடு பிச்சையோ டைய மார்தலை யென்றடி போற்றி
வயல்விரி நீல நெடுங்கணி பாக மாயவன் வாழ்கொளி புத்தூர்ச்
சயவிரி மாமலர் தூவித் தாழ்சடை யானடி சார்வோம். (அ)

கரியவ னான்முகன் கைதொழு தேத்தக் காணலுஞ் சாரலு மாகா
எரியுரு வாகியூ ரைய மிடுபலி யுண்ணியென் றேத்தி

(௩) நெடுநாகம் - பெரியபாம்புகள்; தாள்நெடு - நீண்டதாள்கள்; இட்டு - அருச்சித்து; தாள்நிழல் - திருவடிநீழல். (ச) தார்இடு - மாலையாகக்கட்டின; கார்தூவி-மேகம்போலச் சொரிந்து(ரு) கனம் - அதிகம்; புனம் - கொல்லை; இனம் - கூட்டம். (சு) அளை - புற்று; களைதலை - கிள்ளினதலை; கள்வன் - பலியேற்பவன் போல்வந்து வளையும் நிறையும் கவர்ந்தவன்; தளை - முறுக்கு. (எ)அடர் -தகடு; மலர் - குவளைமலர். (அ) ஆர்தல் - புசித்தல்; சயம் - கூட்டம்.

வரியர வல்குன் மடந்தையோர் பாக மாயவன் வாழ்கொளி புத்தூர்
விரிமல ராயின தூவி விகிர்தன சேவடி சேர்வோம். (கூ)

குண்டம ணர்துவர்க் கூறைகண்மெய்யிற் கொள்கையினூர் புறங்கூற
வெண்டலை யிற்பலி கொண்டல் விரும்பினை யென்றுவி ளம்பி
வண்டமர் பூங்குழன் மங்கையோர்பாகமாயவன்வாழ்கொளிப்புத்தூர்த்
தொண்டர்கண் மாமலர் தூவத் தோன்றநின் றூனடி சேர்வோம்.(ഥ)

கல்லுயர் மாக்கட னின்று முழங்குங் கரைபொரு காழிய மூதூர்
நல்லுயர் நான்மறை நாவி னற்றமிழ் ஞானசம் பந்தன்
வல்லுயர் சூலமும் வெண்மழு வாளும்வல்லவன்வாழ்கொளிபுத்தூர்ச்
சொல்லிய பாடல்கள் வல்லார் துயர்கெடு தல்லெளி தாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டி லுள்ளது.

**சுவாமி - மாணிக்கவண்ணர்.**

**தேவியார் - வண்டமர் பூங்குழனாயகி.**

**இந்தத்திருப்பதிகம்**, ஆளுடையபிள்ளையார் இவ்வாலயசேவை செய்த காலத்து ஓதியருளியது.

---

(கூ) சரியவன் - புறம்போல் உள்ளுங்கரிய விஷ்ணு; ஊர் - ஊரார்; விகிர்தன - விகாரமில்லாதவனது. (ഥ) குண்டு - இழிவு; துவர் கூறை - சாயவுடை.(கக) கல் - ஒலி; மழுவாள் - மழுப்படை.

# திருநாவுக்கரசு சுவாமிகள்.

## திருவதிகை வீரட்டானம்.

## ஆறாந்திருமுறை - திருவடித்திருத்தாண்டகம்.

### திருவடிகள்.

திருச்சிற்றம்பலம்.

அரவணையான் சிந்தித் தரற்றும்மடி
அருமறையான் சென்னிக் கணியாமடி
சரவணத்தான் கைதொழுது சாரும்மடி
சார்ந்தார்கட் கெல்லாஞ் சரணமடி
பரவுவார் பாவம் பறைக்கும்மடி
பதினெண் கணங்களும் பாடும்மடி
விரவுநீர்த் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. (க)

கொடுவினையா ரென்றுங் குறுகாவடி
குறைந்தடைந்தா ராழாமைக் காக்கும்மடி
படுமுழவம் பாணி பயிற்றும்மடி
பதைத்தெழுந்த வெங்கூற்றைப் பாய்ந்தவடி
கடுமுரணே றூர்ந்தான் கழற்சேவடி
கடல்வையங் காப்பான் கருதும்மடி
நெடுமதியங் கண்ணி யணிந்தானடி
நிறைகெடில வீரட்ட நீங்காவடி. (உ)

வைதெழுவார் காமம்பொய் போகாவடி
வஞ்சவலைப் பாடொன் றில்லாவடி
கைதொழுது நாமேத்திக் காணும்மடி
கணக்கு வழக்கைக் கடந்தவடி

(க) அரவு - ஆதிசேஷன்; அணை - படுக்கை; விரவு - மிக்க.
(உ) படு - சப்திக்கின்ற; பாணி - கரதாளம்; கடுமுரண் - வேகமும் வலியும்.

நெய்தொழுது நாமேத்தி யாட்டும்மடி
நீள்விசும்பை யூடறுத்து நின்றவடி
தெய்வப் புனற்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. (௩)

அரும்பித்த செஞ்ஞாயி றெய்க்கும்மடி
யழகெழுத லாகா வருட்சேவடி
சுரும்பித்த வண்டினங்கள் சூழ்ந்தவடி
சோமனையுங் காலனையுங் காய்ந்தவடி
பெரும்பித்தர் கூடிப் பிதற்றும்மடி
பிழைத்தார் பிழைப்பறிய வல்லவடி
திருந்துநீர்த் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. (௪)

ஒருகாலத் தொன்றாகி நின்றவடி
ஊழிதோ றூழி யுயர்ந்தவடி
பொருகழலும் பல்சிலம்பும் மார்க்கும்மடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவடி
இருநிலத்தா ரின்புற்றங் கேத்தும்மடி
இன்புற்றா ரிட்டபூ வேறும்மடி
திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. (௫)

திருமகட்குச் செந்தா மரையாமடி
சிறந்தவர்க்குத் தேனாய் விளைக்கும்மடி
பொருளவர்க்குப் பொன்னுரையாய் நின்றவடி
புகழ்வார் புகழ்தகைய வல்லவடி
உருவிரண்டு மொன்றோடொன் றொவ்வாவடி
உருவென் றுணரப் படாதவடி

(௩) பாடு - படுதல்; ஊடறுத்து - ஊடுருவி. (௪) செஞ்ஞாயிறு - சிவந்தசூரியன்; எய்க்கும் - நிகர்க்கும்; சுரும்பு - வண்டின் பேதம்; காய்ந்த - கோபித்த. (௫) ஒருகாலத்து - ஸம்ஹாரகாலத்து; ஒன்றாகிநின்ற - எல்லாவற்றையும் தன்னுள் ஒடுக்கிக்கொண்டு தானொருவனேயாகிநின்ற; ஊழிதோறூழி - பல ஊழிகள்தோறும்;

திருவதிகைத் தென்கெடில நாடன்னடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. (௬)

உரைமாலை யெல்லா முடையவடி
உரையா லுணரப் படாதவடி
வரைமாதை வாடாமை வைக்கும்மடி
வானவர் கடாம்வணங்கி வாழ்த்தும்மடி
அரைமாத் திரையி லடங்கும்மடி
அகல மளக்கிற்பா ரில்லாவடி
கரைமாங் கலிக்கெடில நாடன்னடி
கமழ்வீரட் டானக்கா பாலியடி. (௭)

நறுமலராய் நாறு மலர்ச்சேவடி
நடுவா யுலகநா டாயவடி
செறிகதிருந் திங்களுமாய் நின்றவடி
தீத்திரளா யுள்ளே திகழ்ந்தவடி
மறுமதியை மாசு கழுவும்மடி
மந்திரமுந் தந்திரமு மாயவடி
எறிகெடில நாடர் பெருமானடி
திருவீரட் டானத்தெஞ் செல்வன்னடி. (௮)

அணியனவுஞ் சேயனவு மல்லாவடி
அடியார்கட் காரமுத மாயவடி
பணிபவர்க்குப் பாங்காக வல்லவடி
பற்றற்றார் பற்றும் பவளவடி
மணியடி பொன்னடி மாண்பாமடி
மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்லவடி
தணிபாடு தண்கெடில நாடன்னடி
தகைசார் வீரட்டத் தலைவன்னடி. (௯)

---

பொருகழல் - வீரக்கழல்; தகைய - மேன்மையடையச் செய்ய. (௬) உருஇரண்டும் - முதல்வன் முதல்வி என்னும் இரண்டு உருவங்களும். (௭) அரைமாத்திரை-பிரணவத்தின் நான்காம் மாத்திரை, அதாவது மிகவும் சூக்ஷ்மமான நாதரூபம்; அகலம் - வியாபகம். (௮) எறி - அலைவீசுகின்ற. (௯) தணிபாடு - தணிக்கின்ற; தகைசார் - பெருமைமிக்க.

அந்தா மரைப்போ தலர்ந்தவடி
    அரக்கனையு மாற்ற லழித்தவடி
முந்தாகி முன்னே முளைத்தவடி
    முழங்கழலாய் நீண்டவெம் மூர்த்தியடி
பந்தாடு மெல்விரலாள் பாகன்னடி
    பவளத் தடவரையே போல்வானடி
வெந்தார் சுடலைநீ றாடும்மடி
    வீரட்டங் காதல் விமலன்னடி. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

### திருப்புன்கூர்.

ஏழாந்திருமுறை - பண் - தக்கேசி.

**திருவடிகள்.**

திருச்சிற்றம்பலம்.

அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத
    வவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்ற னாருயி ரதனை
    வவ்வி னாய்க் குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீயெனை நமன்றமர் நலியில்
    இவன்மற் றென்னடி யானென விலக்குஞ்
சிந்தை யால்வந்துன் றிருவடி யடைந்தேன்
    செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (க)

---

(க) அந்தணாளன் - மார்க்கண்டன்; அழகிய கிருபையாகிய குளிர்ச்சியை ஆளுதலுடையவன்; தமர் - படர், தூதுவர்; புன்கூர் - புன்கினை ஸ்தல விருக்ஷமாகவுடைய திருப்பதி. (உ) மறந்து - பெய்யாது ஒழிந்து; பெயர்த்தும் - மறுபடியும்; செய்கை - அருட்செய்கை.

வையக முற்று மாமழை மறந்து
வயலி னீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன
ஒளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப்
பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளும்
செய்கை கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (௨)

ஏத நன்னில மீரறு வேலி
ஏயர் கோனுற்ற விரும்பிணி தவிர்த்துக்
கோத னங்களின் பால்கறந் தாட்டக்
கோல வெண்மணற் சிவன்றன்மேற் சென்ற
தாதை தாளற வெறிந்தசண் டிக்குன்
சடைமி சைமல ரருள்செயக் கண்டு
பூத வாளிநின் பொன்னடி யடைந்தேன்
பூம்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (௩)

நற்ற மிழ்வல்ல ஞானசம் பந்தன்
நாவி னுக்கரைய னாளைப்போ வானுங்
கற்ற சூதனற் சாக்கியன் சிலந்தி
கண்ணப் பன்கணம் புல்லனென் றிவர்கள்
குற்றஞ் செய்யினுங் குணமெனக் கருதுங்
கொள்கை கண்டுநின் குரைகழ லடைந்தேன்
பொற்றி ரண்மணிக் கமலங்கண் மலரும்
பொய்கை சூழ்திருப் புன்கூரு ளானே. (௪)

**ஞானசம்பந்தர்**—பரமுத்திக்குப் பக்குவரல்லாத பலரையும் தமது திருமணக்காலத்துப் பஞ்சாக்ஷரப்பதிக மோதி சிற்சோதியிற் புகும்படிச் செய்தமையானும், **நாவுக்கரசர்**—கொல்லாமை மறைந்

(௩) ஏதம் - துன்பம்; கோதனம் - பசுக் கூட்டம்; பூதஆளி - பூதங்களை ஆள்பவன். (௪) சூதன் - மூர்க்கநாயனார்; சிலந்தி - கோச்செங்கட் சோழராது முற்பிறப்பு.

துறையும் அமண் சமயம்புகுந்து முதல்வனை இகழ்ந்தமையானும், **நாளைப்போவார்**—தம்மரபிற் கேலாததாகிய சிதம்பரத்துக்குச் சென்று நடனதரிசனஞ் செய்ய எண்ணினமை யானும், **சூதர்**—யாவராலும் குற்றமாகக் கருதப்பெறும் சூதாட்டத்தை மேற்கொண்டு அவ்வாட்டத்தில் சூதுவார்த்தையினால் மறுத்துப்பேசினவர்களை உடைவாளை யுருவிக்குத்தி மூர்க்கர் என்னும் பெயர் பெற்றமையானும், **சாக்கியர்**—சிவலிங்கப் பெருமானைக் கல்லாலெறிந்தமையானும், **சிலந்தி**—முற்பிறப்பில் வாயினூலால் பந்தர் அமைத்து யானையினிடத்துப் பகைமை கொண்டமையானும், சோழ ராஜவாகப் பிறந்தகாலத்தும் பண்டைப் பகையுணர்ச்சியால் யானைபுகாவண்ணம் மாடக்கோயில்கட்டி அவ்வுணர்ச்சியை விடாதிருந்தமையானும், **கண்ணப்பர்**—இறைவன் திருமுடியில் அணியப் பெற்ற பூக்களைச் செருப்புக்காலால் நீக்கி, வாய் நீர் உமிழ்ந்து, குடுமியில் அமைத்துக் கொண்டு வந்த பூக்களைச் சொரிந்து, மாமிசவுணவை அருத்தினமையானும், **கணம்புல்லர்**—சிவபிரான் சந்நிதானத்தில் தலைமயிரினை விளக்கில்மாட்டி எரித்தமையானும், ஆகிய இச்செயல்கள்யாவும் இவர் மாட்டுக் குற்றமாகவிருக்கவும் திருத்தொண்டின் உறைப்பு, பெருக்கம் இவைகாரணமாக இவற்றைக் குணமாகக் கொண்டு நமதையன் அருளினமை உலகப்பிரசித்தம்.

கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோள ரவுசுற் றிக்கடைந் தெழுந்த
ஆல நஞ்சுகண் டவர்மிக விரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீல மார்கடல் விடந்தனை யுண்டு
கண்டத் தேவைத்த பித்தநீ செய்த
சீலங் கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (ரு)

இயக்கர் கின்னரர் யமனொடு வருணர்
இயங்கு தீவளி ஞாயிறு திங்கள்

---

(ரு) மிக இரிய - மிகவும் பயந்து திசைகள் தோறுமோட; சீலம்-உபகாரகுணம்; (சு) அயர்ப்பு-சோர்வு; திகைப்பு - மயங்குதல்.

மயக்க மில்புலி வானர நாகம்
வசுக்கள் வானவர் தானவ ரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை
அர்ச்சித் தார்பெறு மாரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (சு)

போர்த்த நீள்செவி யாளரந் தணர்க்குப்
பொழில்கொ ளானிழற் கீழறம் புரிந்து
பார்த்த னுக்கன்று பாசுப தங்கொடுத்
தருளி னய்பண்டு பகீரதன் வேண்ட
வார்த்து வந்திழி யும்புனற் கங்கை
நங்கை யாளைநின் சடைமிசைக் கரந்த
தீர்த்த னேநின்றன் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (எ)

மூவெயில் செற்றஞான் றுய்ந்த மூவரில்
இருவர் நின்றிருக் கோயிலின் வாய்தல்
காவ லாளரென் றேவிய பின்னை
ஒருவ னீகரி காடரங் காக
மானை நோக்கியோர் மாநட மகிழ
மணிமு ழாமுழக் கவருள் செய்த
தேவ தேவநின் றிருவடி யடைந்தேன்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே. (அ)

அறிவி னன்மிக்க வறுவகைச் சமயம்
அவ்வ வர்க்கங்கே யாரருள் புரிந்து
வெறிய மாகட லிலங்கையர் கோனைத்
துலங்க மால்வரைக் கீழடர்த் திட்டுக்

---

(எ) போர்த்த - பொத்தினை; நீள்செவியாளர் - நீண்ட கேள்வி யுடையவர்; அந்தணர் - சனகாதிநால்வர்; தீர்த்தன் - புனிதன்; (அ) கரிகாடு - இருண்மயமான சுடுகாடு; மானை - உமையம்மையை. (கூ) துலங்க - நடுங்க; குறிகொள் - இரங்கியருளாய் என்று வேண் டுங் குறிப்பைக்கொண்ட; நாள்-ஆயுள்; செறிவு - நிறைந்த அன்பு.

குறிகொள் பாடலி னின்னிசை கேட்டுக்
கோல வாளொடு நாளது கொடுத்த
செறிவு கண்டுநின் றிருவடி யடைந்தேன்
செழும் பொழிற்றிருப் புன்கூரு ளானே. (௯)

கம்ப மால்களிற் றின்னுரி யானைக்
காமற் காய்ந்ததோர் கண்ணுடை யானைச்
செம்பொ னேயொக்குந் திருவுரு வானைச்
செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானை
உம்ப ராளியை யுமையவள் கோனை
ஊரன் வன்றொண்ட னுள்ளத் தாலுகந்
தன்பி னாற்சொன்ன வருந்தமி ழைந்தோ
டைந்தும் வல்லவ ரருவினை யிலரே. (ய)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - சிவலோகநாயகர்.

தேவியார் - சொக்கநாயகியம்மை.

**இந்தத் திருப்பதிகம்,** சுந்தரமூர்த்திசுவாமிகள் கலிக்காமநாயனார்க்குற்ற சூலைநோயினையகற்றி நட்புகொண்டு அவரோடு இத்தலத்திற் சேர்ந்து சுவாமிதரிசனஞ் செய்தகாலத்து ஓதியருளியது.

---

(ய) கம்பம் - அசைவு; உம்பர்ஆளி - தேவர்களை யாள்பவன்.

# திருஞானசம்பந்த சுவாமிகள்

## திருப்பூந்தராய்.

### மூன்றாந்திருமுறை - பண் - காந்தாரபஞ்சமம்.

### அருச்சனை.

திருச்சிற்றம்பலம்.

பந்துசேர்விர லாள்பவளத்துவர் வாயினாள்பனி மாமதி போன்முகத்
தந்தமில்புக ழாண்மலைமாதொடு மாதிப்பிரான் [லர்
வந்துசேர்விடம் வானவரெத்திசை யுந்நிறைந்துவ லஞ்செய்து மாமல
புந்திசெய்திறைஞ் சிப்பொழிபூந்தராய் போற்றுதுமே. (க)

காவியங்கருங் கண்ணினாள்கனித்தொண்டை வாய்க்கதிர் முத்தநல்
வெண்ணகைத், தூவியம்பெடை யன்னநடைச் சுரிமென்குழலாள்
தேவியுந்திரு மேனியோர்பாகமா யொன்றிரண்டொரு மூன்றொடு
சேர்பதி, பூவிலந்தண னொப்பவர் பூந்தராய் போற்றுதுமே. (உ)

பையராவரு மல்குன்மெல்லியல் பஞ்சின்னேரடி வஞ்சிகொ ணுண்
தையலாளொரு பாலுடையெம்மிறை சாருமிடஞ் [ணிடை
செய்யெலாங்கழு நீர்கமலம்மலர்த் தேறலூறலிற் சேறுல ராதநற்
பொய்யிலாமறை யோர்பயில்பூந்தராய் போற்றுதுமே. (ங)

முள்ளிநாண்முகை மொட்டியல்கோங்கின ரும்புதேன்கொள் குரும்
பை மூவாமருந், துள்ளியன்றபைம் பொற்கலசத்திய லொத்தமுலை,
வெள்ளிமால்வரை யன்னதோர்மேனியின் மேவினார்பதி வீமருதண்
பொழிற், புள்ளினந்துயின் மல்கியபூந்தராய் போற்றுதுமே. (ச)

---

(க) ஆதிப்பிரான் - மூவர்க்கும் முதல்வனாய சிவபிரான்; பூந்தராய் - சீகாழி. (உ) காவி - நீலோற்பலம்; தொண்டை-கொவ்வை; தூவி - இறகு; ஒன்று இரண்டு ஒரு மூன்று - ஆறு, அதாவது சீகாழியின் பன்னிரு பெயர்களுள் பூந்தராய் ஆறாவது; அந்தணன் - பிரமதேவன். (ங) பை - படம்; வஞ்சி - வஞ்சிக்கொடி; தேறல் - தேன். (ச) முள்ளி - தாமரை; வீ - பூ.

பண்ணியன்றெழு மென்மொழியாள்பகர் கோதையேர்திகழ் பைந்தளிர் மேனியோர், பெண்ணியன்றமொய்ம் பிற்பெருமாற்கிடம் பெய்வளையார், கண்ணியன்றெழு காவிச் செழுங்கரு நீலமல்கிய காமருவாவிநற், புண்ணியருறை யும்பதிபூந்தராய் போற்றுதுமே. (ரு)

வாணிலாமதி போனுதலாண்மட மாழையொண்கணுள் வண்டாளந்நகை, பாணிலாவிய வின்னிசையார்மொழிப் பாவையொடும், சேணிலாத்திகழ் செஞ்சடையெம்மண்ணல் சேர்வதுசிக ரப்பெருங்கோயில்சூழ், போணிலாநுழை யும்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. ()

காருலாவிய வார்குழலாள்கயற் கண்ணினுள்புயற் காலொளி மின்னிடை
வாருலாவிய மென்முலையாண்மலை மாதுடனாய்
நீருலாவிய சென்னியன்மன்னி நிகருநாமமுந் நான்கு நிகழ்பதி
போருலா வெயில் சூழ்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. (எ)

காசைசேர்குழ லாள்கயலேர்தடங் கண்ணி காம்பன தோட்கதிர் மென்முலைத்
தேசுசேர்மலை மாதமருந்திரு மார்பகலத்
தீசன்மேவுமி ருங்கயிலையெடுத் தானையன்றடர்த் தாணிணைச்சேவடி
பூசை செய்பவர் சேர்பொழிற்பூந்தராய் போற்றுதுமே. (அ)

கொங்குசேர்குழ லாணிழல்வெண்ணகைக் கொவ்வைவாய்க் கொடியேரிடை யாளுமை, பங்குசேர்திரு மார்புடையார்படர் தீயுருவாய் மங்குல்வண்ணனுமாமலரோனுமயங்கநீண்டவர்வான்மிசைவந்தெழு பொங்குநீரின் மிதந்த நற்பூந்தராய் போற்றுதுமே, (கூ)

கலவமாமயி லாரியலாள்கரும் பன்னமென்மொழி யாள்கதிர் வாணுதல்
குலவுபூங்குழ லாளுமைகூறனை வேறுரையால்
அலவை சொல்லுவார் தேரமணாதர்க ளாக்கினன்றனை நண்ணலு நல்குநற், புலவர்தாம் புகழ் பொற்பதிபூந்தராய் போற்றுதுமே.

---

(ரு) கோதை - அளகபாரம்; மொய்ம்பு - தோள்; கண் இயன்று - கண்ணை யொத்து; காவி - கருங்குவளை; காமருவாவி-அழகிய தடாகம். (சு) மாழை - அழகு, மாவடு; தாளம் - முத்து;பாண் - பண்; போழ்நிலா - பிளவுபட்டநிலா. (எ) காசை-காயாம்பூ; காம்பு - மூங்கில். (அ) மங்குல் - மேகம். (ய) கலவம் - கலாபம்; அலவை - அல்லவை, தகாதவை; தேர் -புத்தர்; ஆதர்கள் - அறிவில்லாதவர்கள்.

தேம்பனுண்ணிடை யாள்செழுஞ்சேலன கண்ணியோடண்ணல்
சேர்விடந் தேனமர், பூம்பொழிறிகழ் பொற்பதிபூந்தராய்போற்று து
மென், றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை ஞானசம்பந்த
ஞெண்டமிழ் மாலைகொண், டாம்படியிவை யேத்தவல்லார்க்கடை
[யாவினையே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

# திருநாவுக்கரசு சுவாமிகள்

## ஸ்ரீகயிலாயம்.

### ஆறாந்திருமுறை - திருத்தாண்டகம்.

**அநச்சனை.**

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகி விண்ணாகி நின்றாய் போற்றி
மீளாமே யாளென்னைக் கொண்டாய் போற்றி
ஊற்றாகி யுள்ளே யொளித்தாய் போற்றி
ஓவாத சத்தத் தொலியே போற்றி
ஆற்றாகி யங்கே யமர்ந்தாய் போற்றி
ஆறங்க நால்வேத மானாய் போற்றி
காற்றாகி யெங்குங் கலந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (க)

பிச்சாடல் பேயோ டுகந்தாய் போற்றி
பிறவி யறுக்கும் பிரானே போற்றி
வைச்சாட னன்று முகந்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி

---

(யக) தேம்பல் - மெலிதல்.
(க) வேற்றாகி - வேறாய பூதங்களாகி; மீளாமே - திரும்பாமல்; ஆற்றாகி - உபசாந்தமாகி. (உ) பிச்சாடல் - பித்தர்களாடல்; வைச்சு - வைத்து, திருவடி நிழலில் இருத்தி; ஆள்தல் - ஆட்கொள்ளுதல்;

பொய்ச்சார் புரமூன்று மெய்தாய் போற்றி
போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
கச்சாக நாக மசைத்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (உ)

மருவார் புரமூன்று மெய்தாய் போற்றி
மருவியென் சிந்தை புகுந்தாய் போற்றி
உருவாகி யென்னைப் படைத்தாய் போற்றி
உள்ளாவி வாங்கி யொளித்தாய் போற்றி
திருவாகி நின்ற திறமே போற்றி
தேசம் பரவப் படுவாய் போற்றி
கருவாகி யோடு முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (ங)

வானத்தார் போற்று மருந்தே போற்றி
வந்தென்றன் சிந்தை புகுந்தாய் போற்றி
ஊனத்தை நீக்கு முடலே போற்றி
ஓங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி
தேனத்தை வார்த்த தெளிவே போற்றி
தேவர்க்குந் தேவனாய் நின்றாய் போற்றி
கானத்தீ யாட லுகந்தாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (ச)

ஊராகி நின்ற வுலகே போற்றி
ஓங்கி யழலாய் நிமிர்ந்தாய் போற்றி
பேராகி யெங்கும் பரந்தாய் போற்றி
பேராதென் சிந்தை புகுந்தாய் போற்றி
நீராவி யான நிழலே போற்றி
நேர்வா ரொருவரையு மில்லாய் போற்றி
காராகி நின்ற முகிலே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (ரு)

---

பொய்ச்சார்-பொய்த்தார், திருவடி பிழைத்தவர்; போகாது-நீங்காது.
(ச) தேனத்தை - தேனை; வார்த்த - வடித்த; கானம் - மயானம்.

சில்லுருவாய்ச் சென்று திரண்டாய் போற்றி
　　தேவ ரறியாத தேவே போற்றி
புல்லுயிர்க்கும் பூட்சி புணர்த்தாய் போற்றி
　　போகாதென் சிந்தை புகுந்தாய் போற்றி
பல்லுயிராய்ப் பார்தோறு நின்றாய் போற்றி
　　பற்றி யுலகை விடாதாய் போற்றி
கல்லுயிராய் நின்ற கனலே போற்றி
　　கயிலை மலையானே போற்றி போற்றி. (௬)

பண்ணி னிசையாகி நின்றாய் போற்றி
　　பாவிப்பார் பாவ மறுப்பாய் போற்றி
எண்ணு மெழுத்துஞ்சொல் லானாய் போற்றி
　　என்சிந்தை நீங்கா விறைவா போற்றி
விண்ணு நிலனுந் தீயானாய் போற்றி
　　மேலவர்க்கு மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
　　கயிலை மலையானே போற்றி போற்றி. (௭)

இமையா துயிரா திருந்தாய் போற்றி
　　என்சிந்தை நீங்கா விறைவா போற்றி
உமைபாக மாகத் தணைத்தாய் போற்றி
　　ஊழியே ழான வொருவா போற்றி
அமையா வருநஞ்ச மார்ந்தாய் போற்றி
　　ஆதி புராணனாய் நின்றாய் போற்றி
சுமையாகி நின்ற கனலே போற்றி
　　கயிலை மலையானே போற்றி போற்றி. (௮)

மூவாய் பிறவா யிறவாய் போற்றி
　　முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர் கொழுந்தே போற்றி
　　சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி

---

(௬) சில் - அணு; பூட்சி - உடம்பு. (௭) மேலவர்க்கும் மேலாகி-திரிமூர்த்திகளுக்கும் பரமாகி. (௮) கமை - பொறுமை. (௯) மூவாய்-மூப்படையாதவனே; அலந்தேன் - வருந்தினேன்.

ஆவா வடியேனுக் கெல்லாம் போற்றி
அல்ல னலிய வலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (கூ)

நெடிய விசும்பொடு கண்ணே போற்றி
நீள வகலை முடையாய் போற்றி
அடியு முடியு மிகலிப் போற்றி
யங்கொன் றறியாமை நின்றாய் போற்றி
கொடியவன் கூற்ற முதைத்தாய் போற்றி
கோயிலா வென்சிந்தை கொண்டாய் போற்றி
கடிய வுருமொடு மின்னே போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (ய)

உண்ணா துறங்கா திருந்தாய் போற்றி
ஓதாதே வேத முணர்ந்தாய் போற்றி
எண்ணா விலங்கைக்கோன் றன்னைப் போற்றி
இறைவிரலால் வைத்துகந்த வீசா போற்றி
பண்ணா ரிசையின்சொற் கேட்டாய் போற்றி
பண்டேயென் சிந்தை புகுந்தாய் போற்றி
கண்ணா யுலகுக்கு நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் வடநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - கயிலாயநாதர்; தேவியார் - பார்வதியம்மை.

---

(கக) எண்ணா - மதியாத; இறை - நொடிப்பொழுது; சொல் - பாடல்; பண்டே - அநாதியே.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

### திருக்கழுக்குன்றம்.

ஏழாந்திருமுறை - பண் - நட்டபாடை.

**அருச்சனை.**

திருச்சிற்றம்பலம்.

கொன்று செய்த கொடுமை யாற்பல சொல்லவே
நின்ற பாவ வினைகடாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் றேவர் பிரானிடம்
கன்றி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. (௧)

இறங்கிச் சென்று தொழுமி னின்னிசை பாடியே
பிறங்கு கொன்றைச் சடைய னெங்கள் பிரானிடம்
நிறங்கள் செய்த மணிக ணித்திலங் கொண்டிழி
கறங்கு வெள்ளை யருவித் தண்கழுக் குன்றமே. (௨)

நீள நின்று தொழுமி னித்தலு நீதியால்
ஆளு நம்ம வினைக ளல்கி யழிந்திடத்
தோளு மெட்டு முடைய மாமணிச் சோதியான்
காள கண்ட னுறையுந் தண்கழுக் குன்றமே. (௩)

வெளிறு தீரத் தொழுமின் வெண்பொடி யாடியை
முளிறி லங்குமழு வாளன் முந்தியு றைவிடம்
பிளிறு தீரப் பெருங்கைப் பெய்மத மூன்றுடைக்
களிறி னோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே. (௪)

புலைக டீரத் தொழுமின் புன்சடைப் புண்ணியன்
இலைகொள் சூலப் படைய னெந்தை பிரானிடம்
முலைக ளுண்டு தழுவிக் குட்டியொ டுமுசுக்
கலைகள் பாயும் புறவிற் றண்கழுக் குன்றமே. (௫)

---

(௧) கொன்று - பிறவுயிர்களைக் கொன்று; பிடி - பெண்யானை. (௨) நித்திலம் - முத்து; கறங்கு - ஒலி. (௩) நீள - அதிகமாக. (௪) வெளிறு - அறியாமை, முளிறு - கூர்மை; பிளிறு - பேரொலி; முசு - குரங்கு; கலைகள் - ஆண்கள்; புறவு - குறிஞ்சி நிலம்.

மடமு டைய வடியார் தம்மனத் தேயுற
விடமு டைய மிடறன் விண்ணவர் மேலவன்
படமு டைய வரவன்றான் பயிலு மிடம்
கடமு டைய புறவிற் றண்கழுக் குன்றமே. (௬)

ஊன மில்லா வடியார் தம்மனத் தேயுற
ஞான மூர்த்தி நட்ட மாடிந விலுமிடம்
தேனும் வண்டு மதுவுண் டின்னிசை பாடியே
கான மஞ்ஞை யுறையுந் தண்கழுக் குன்றமே. (௭)

அந்த மில்லா வடியார் தம்மனத் தேயுற
வந்து நாளும் வணங்கி மாலொடு நான்முகன்
சிந்தை செய்த மலர்க ணித்தலுஞ் சேரவே
சந்த நாறும் புறவிற் றண்கழுக் குன்றமே. (அ)

பிழைக டீரத் தொழுமின் பின்சடைப் பிஞ்ஞகன்
குழைகொள் காதன் குழகன் றானுறை யும்மிடம்
மழைகள் சாலக் கலித்து நீடுயர் வேயவை
குழைகொண் முத்தஞ் சொரியுந் தண்கழுக் குன்றமே. (௯)

பல்லில் வெள்ளைத் தலையன் றான்பயி லும்மிடம்
கல்லில் வெள்ளை யருவித் தண்கழுக் குன்றினை
மல்லின் மல்கு திரடோ ளூரன் வனப்பினால்
சொல்லல் சொல்லித் தொழுவா ரைத்தொழு மின்களே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.

சுவாமிபெயர் - வேதகிரீசர்,

தேவியார் - பெண்ணினல்லாளம்மை.

---

(௬) மடம்-(ஆன்மஅறிவுகெட்டு ஒன்றையும்)அறியாமை, அதாவது முதல்வனறிவுமாத்திரையாய் நிற்றல்;கடம்-(செல்லுதற்கரிய) வழிகள். (௯) மழைகள் - மேகங்கள்; வேய் - மூங்கில். (௰)கல் - கற்பாறை; மல் - வலி; சொல்லல் - தோத்திரங்கள்,

## திருஞான சம்பந்த சுவாமிகள்.

### கோளறு திருப்பதிகம்.

இரண்டாந்திருமுறை - பண் - பியந்தைக்காந்தாரம்.

அடிமை.

திருச்சிற்றம்பலம்.

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணைதடவி
மாசறு திங்கள்கங்கை முடிமே லணிந்தெ
னுளமேபு குந்தவதனால்
ஞாயிறு திங்கள்செவ்வாய் புதன்வியாழம் வெள்ளி
சனிபாம்பி ரண்டுமுடனே
ஆசறு நல்லநல்ல வவைநல்ல நல்ல
அடியார வர்க்குமிகவே. (க)

என்பொடு கொம்பொடாமை யிவைமார்பி லங்க
வெருதேறி யேழையுடனே
பொன்பொதி மத்தமாலை புனல்சூடி வந்தெ
னுளமேபு குந்தவதனால்
ஒன்பதொ டொன்றொடேழு பதினெட்டொ டாறு
முடனாயநாள்க ளவைதாம்
அன்பொடு நல்லநல்ல வவைநல்ல நல்ல
அடியார வர்க்குமிகவே. (உ)

---

(க) வேய்உறு - மூங்கில்போலும்; தடவி - வாசித்து; பாம்பிரண்டு - இராகுகேது; ஆசு - குற்றம். (உ) ஏழை - உமாதேவி; மத்தம் - ஊமத்தம்; ஒன்பது - ஒன்பதாவதுநாள்; அதாவது ஆயிலியம்; ஒன்பதொடுஒன்று - பத்தாம்நாள், அதாவது மகம்; ஒன்பதொடு ஏழு - பதினாறாம்நாள், அதாவது விசாகம்; பதினெட்டு - பதினெட்டாம்நாள், அதாவது கேட்டை; ஆறு - ஆறாம்நாள், அதாவது திருவாதிரை; உடனாயநாள்கள் - மற்றஏழுநாட்கள், அதாவதுபரணி, கிர்த்திகை, பூரம், சித்திரை, சுவாதி, பூராடம், பூரட்டாதி;

உருவளர் பவளமேனி யொளிநீற ணிந்து
 வுமையோடும் வெள்ளைவிடைமேன்
முருகலர் கொன்றைதிங்கண் முடிமே லணிந்தெ
 னுளமேபு குந்தவதனால்
திருமகள் கலையதூர்தி சயமாது பூமி
 திசைதெய்வ மானபலவும்
அருநெதி நல்லநல்ல வவைநல்ல நல்ல
 அடியார வர்க்குமிகவே. (௫)

மதிநுதன் மங்கையோடு வடபாலி ருந்து
 மறையோது மெங்கள்பரமன்
நதியொடு கொன்றைமாலை முடிமேல ணிந்தெ
 னுளமேபு குந்தவதனால்
கொதியுறு காலனங்கி நமனோடு தூதர்
 கொடுநோய்க ளானபலவும்
அதிகுண நல்லநல்ல வவைநல்ல நல்ல
 அடியார வர்க்குமிகவே. (௬)

நஞ்சணி கண்டனெந்தை மடவாட னோடு
 விடையேறு நங்கள்பரமன்
துஞ்சிருள் வன்னிகொன்றை முடிமேல ணிந்தெ
 னுளமேபு குந்தவதனால்
வெஞ்சின வவுணரோடு முருமிடியு மின்னு
 மிகையான பூதமவையும்
அஞ்சிடு நல்லநல்ல வவைநல்ல நல்ல
 அடியார வர்க்குமிகவே. (௭)

வாள்வரி யதளதாடை வரிகோவ ணத்தர்
 மடவாட னோடுமுடனாய்
நாண்மலர் வன்னிகொன்றை நதிசூடி வந்தெ
 னுளமேபு குந்தவதனால்
கோளரி யுழுவையோடு கொலையானை கேழல்
 கொடுநாக மோடுகரடி

---

(௫) உரு-அழகு; முருகு - மணம்; கலை அது ஊர்தி - கலைமகள்; சயமாது - துர்க்கை; பூமி - பூமகள்; நெதி - நியதி. (௬) உரும் - அச்சம்.

ஆளரி நல்லநல்ல வவைநல்ல நல்ல
அடியாரவர்க்குமிகவே. (சு)

செப்பிள முலைநன்மங்கை யொருபாகமாக
விடையேறு செல்வ னடைவார்
ஒப்பிள மதியுமப்பு முடிமே லணிந்தெ
னுளமேபு குந்தவதனால்
வெப்பொடு குளிரும்வாத மிகையான பித்தும்
வினையான வந்துநலியா
அப்படி நல்லநல்ல வவைநல்ல நல்ல
அடியாரவர்க்குமிகவே. (எ)

வேள்பட விழிசெய்தன்று விடைமேலி ருந்து
மடவாட னோடுமுடனாய்
வாண்மதி வன்னிகொன்றை மலர்சூடி வந்தெ
னுளமேபு குந்தவதனால்
ஏழ்கடல் சூழிலங்கை யரையன் றனோடு
மிடரான வந்து நலியா
ஆழ்கட னல்லநல்ல வவைநல்ல நல்ல
அடியாரவர்க்குமிகவே. (அ)

பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறு மெங்கள்பரமன்
சலமக ளோடெருக்கு முடிமேல ணிந்தெ
னுளமேபு குந்தவதனால்
மலர்மிசை யோனுமாலு மறையோடு தேவர்
வருகால மானபலவும்
அலைகடன் மேருநல்ல வவைநல்ல நல்ல
அடியாரவர்க்குமிகவே. (கூ)

---

(சு) வாள் - ஒளி; அதள் - புலித்தோல், கோள்அரி - கொலைசெய்யும்சிங்கம்; உழுவை - புலி; கேழல் - பன்றி; ஆள்அரி மனிதக்குரங்கு. (எ) அப்பு - கங்கை; வினையான - வினையால்வரும் நோய்கள். (அ) வேள் - மன்மதன்; வாள் - ஒளி; இலங்கைஅரையன் - (பொதுமையில்) அரக்கர்கள்; கடல் - சமுத்திரப்பம்.

கொத்தலர் குழலியோடு விசயற்கு நல்கு
குணமாய வேடவிகிர்தன்
மத்தமு மதியுநாக முடிமேல ணிந்தெ
னுளமேபு குந்தவதனல்
புத்தரொ டமணைவாதி லழிவிக்கு மண்ணல்
திருநீறு செம்மைதிடமே
அத்தகு நல்லநல்ல வவைநலல நல்ல
அடியார வர்க்குமிகவே. (ய)

தேனமர் பொழில்கொளாலை விளைசெந்நெ றுன்னி
வளர்செம்பொ னெங்குநிகழ
நான்முக னாதியாய பிரமாபு ரத்து
மறைஞான ஞானமுனிவன்
தானுறு கோளுநாளு மடியாரை வந்து
நலியாத வண்ணமுரைசெய்
ஆனசொன் மாலையோது மடியார்கள் வானி
லரசாள்வ ராணைநமதே. (கக)

திருச்சிற்றம்பலம்.

**இந்தத் திருப்பதிகம்,** திருஞானசம்பந்த சுவாமிகள் சமணரை வாதில்வெல்லத்திருவுளங்கொண்டு மதுரைக்கு எழுந்தருளியபோது திருத்தாண்டகவேந்தர், "சமணரோ! மிகவுங்கொடியர், இப்போது கோள்நிலையுந் தீதாயிருக்கின்றது" என்று தடுத்தவிடத்து, "புவனேசராகிய சிவபெருமானை அம்மையோடு எம்முளத்திற் குடிகொள்ளப் பெற்றிருக்கின்றனம்" ஆகையால் யாதோர் தீங்கும் வாராதென்று உறுதிமொழிந்து ஓதியருளியது.

---

(கூ) பரன் - பரமன்; பசு - இடபம். (கக) துன்னி - நெருங்கி; மறைஞானம் - வைதிகஞானம், அதாவது அபரஞானம் பரஞானம்; ஆன - முத்திக்கேதுவான.

# திருநாவுக்கரசு சுவாமிகள்.

## திருவாரூர் திருவிருத்தம்.

### நான்காந்திருமுறை-பண்-கொல்லி.

### அடிமை.

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம் பாவரு குண்டர்முன் னேநமக் குண்டுகொலோ
அலம்பலம் பாவரு தண்புன லாரூ ரவிர்சடையான்
சிலம்பலம் பாவரு சேவடி யான்றிரு மூலட்டானம்
புலம்பலம் பாவரு தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. (க)

மற்றிட மின்றி மனைதுறந் தல்லுணா வல்லமணர்
சொற்றிட மென்று துரிசுபட் டேனுக்கு முண்டுகொலோ
விற்றிடம் வாங்கி விசயனொ டன்றொரு வேடுவனாய்ப், புற்றிடங்
கொண்டான்றன் றொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. (உ)

ஒருவடி வின்றிநின் றுண்குண்டர் முன்னமக் குண்டுகொலோ
செருவடி வெஞ்சிலை யாற்புர மட்டவன் சென்றடையாத்
திருவுடை யான்றிரு வாரூர்த் திருமூலட் டானன்செங்கண்
பொருவிடை யானடித் தொண்டர்க்குத் தொண்டராம்புண்ணியமே.

மாசினை யேறிய மேனியர் வன்கண்ணர் மொண்ணரைவிட்
டீசனை யெந்நைத் தேசறு வேனுக்கு முண்டுகொலோ
தேசனை யாரூர்த் திருமூலட் டானனைச் சிந்தைசெய்து
பூசனைப் பூசுரர் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. (௪)

அருந்தும் பொழுதுரை யாடா வமணர் திறமகன்று
வருந்தி நினைந்தா னேயென்று வாழ்த்துவேற் குண்டுகொலோ

---

(க) குலம் - கூட்டம்; பலம் - வன்மை; பாவரு - பரவிவரு; அலம்பல் - ஒலித்தல்; புலம்பு அலம்பாவரு - வருந்தி அழுதுவரும். (உ) அல் - இரவு; சொல் - உபதேசம்; திடம் - உறுதி; துரிசு - குற்றம்; புற்றிடம் கொண்டான் - வன்மீகநாதன். (ங) செரு - போர்; வடி-தேர்ந்த; திரு - முத்திச்செல்வம். (௪) மொண்ணர் - சமணர்; ஏசு-குற்றம்.

திருந்திய மாமதி லாரூர்த் திருமூலட் டானனுக்குப்
பொருந்துந்தவமுடைத்தொண்டர்க்குத் தொண்டராம்புண்ணியமே.

வீங்கிய தோள்களுந் தாள்களு மாய்நின்று வெற்றரையே
மூங்கைகள் போலுண்ணு மூடர்முன் னேநமக் குண்டுகொலோ
தேங்கமழ் சோலைத்தென் னாரூர்த் திருமூலட் டானன்செய்ய
பூங்கழ லானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. (சு)

பண்ணிய சாத்திரப் பேய்கள் பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணில் புகழீசன் றன்னருள் பெற்றேற்கு முண்டுகொலோ
திண்ணிய மாமதி லாரூர்த் திருமூலட் டானனெங்கள்
புண்ணியன் றன்னடித்தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே..

கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக் கச்சுக மென்னுங்குண்டர்
உரைப்பன கேளாதிங் குய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
திருப்பொலி யாரூர்த் திருமூலட் டானன் றிருக்கயிலைப் [மே..
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய

கையி லிடுசோறு நின்றுண்ணுங் காத லமணரைவிட்
டுய்யு நெறிகண்டிங் குய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
ஐய னணிவய லாரூர்த் திருமூலட் டானனுக்குப்
பொய்யன் பிலாவடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே..

குற்ற முடைய வமணர் திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந் தேனுக்கு முண்டுகொலோ
மற்பொலி தோளா னிராவணன் றன்வலி வாட்டுவித்த
பொற்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (ய)

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர்-வன்மீகநாதர், தேவிபெயர்-அல்லியங்கோதையம்மை.

---

(ரு) உரையாடா - வேண்டுவனவற்றிற்குக் கேட்க வேண்டியிருக்க அதையுஞ்செய்யாது மௌனமாயிருக்கும். (சு) வீங்கிய - பருத்த; வெற்றரை-நிருவாணமாய்; பண்ணிய - கட்டி யுரைத்த; சாத்திரப் பேய்கள் - சாத்திரங்களைச் சொல்லிச் செருக்கித் திரிகின்றவர்கள். (ய) கையகன்றிட்டு - விட்டு நீங்கி.

# சுந்தரமூர்த்தி சுவாமிகள்

## திருத்தொண்டத்தொகை.

### ஏழாந்திருமுறை - பண் - கொல்லிக்கௌவாணம்.

### அடிமை.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத வியற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டற் கடியேன்
அல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (க)

இலைமலிந்த வேனம்பி யெறிபத்தற் கடியேன்
ஏனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பற் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளன் மானக்கஞ் சாறன்
எஞ்சாத வாட்டாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானயற் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (உ)

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்

---

(க) வெல்லுமா - வெல்லுமாறு, வெற்றி பெருந்தன்மையில்; அல்லி - அகவிதழ்; அம்மான் - இறைவன். (உ) இலை - இலைவடிவு; கலைமலிந்த - நூல்களால் மிகவும் புகழப்பெற்ற; மலைமலிந்த - மலை போல் பருத்த; மங்கை - திருமங்கலம்.

மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினு லெறிந்த
அம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூர ஞரூரி லம்மானுக் காளே. (௩)

திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்.
பெருநம்பி குலச்சிறைத னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பற்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கற் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூர ஞரூரி லம்மானுக் காளே. (௪)

வம்பறு வரிவண்டு மணநாற மலரும்
மதுமலர்நற் கொன்றையா னடியலாற் பேணு
எம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
ஏயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
நம்பிரான் றிருமூல னடியார்க்கு மடியேன்
நாட்டமிகு தண்டிக்கு மூர்க்கற்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூர ஞரூரி லம்மானுக் காளே. (௫)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியற்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டற் கடியேன்

---

(௩) மும்மை - மூவிதசாதனம், அதாவது விபூதி, ருத்ராக்ஷம், சடைமுடி; திருமேனி - மணலினுற்சமைத்த சிவலிங்கம். (௪) திருநின்ற செம்மையே - சர்வைசுவரிய சம்பந்நராகிய செம்பொருட் சிவத்தையே; செம்மையாய்க்கொண்ட - சிறந்தபற்றுக் கோடாகக் கொண்ட; பேயார்-பேயுருவடைந்த காரைக்காலம்மையார்; நாட்டம்மிகு - பார்வையை மிகுதியாகப்பெற்றுக்கொண்ட. (௬) கழறிற்றறிவார் - சேரமான் பெருமாள் நாயனர் (எங்கும் எவருங் கூறு

கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவாற்கு மடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (சு)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழற் கடியேன்
மெய்யடியா னரசிங்க முனையரையற் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தற் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (எ)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண் டிருந்த
கணம்புல்ல நம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
அறைக்கொண்ட வேனம்பி முனையடுவாற் கடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (அ)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைதன் னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக்கு மடியேன்
அடல்சூழ்ந்த வேனம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (கூ)

---

வதைத் தாமிருந்த இடத்திலேயே அறியுந் தன்மையுடையவர்); ஆர் - கூர்மை; கூற்றன்-கூற்றுவநாயனார். (எ) துஞ்சிய - திருவடியடைந்த. (அ) காப்பு-காவல்; நிறை - நிறைவு; துறை - கடற்றுறை; அறை - அறுத்தல். (கூ) மடல் - இதழ்.

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்த வடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே. (ய)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாண் மானிக்கு நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
என்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் றிருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இந்தப் பதினொரு திருப்பாட்டினும் ஒன்பதுதொகை அடியார்களும் அறுபத்துமூன்று தனியடியார்களுங் கூறப்பட்டுள்ளார்கள்.



அகத்திய மாமுனிவர் திரட்டியருளிய
தேவாரத்திரட்டு முற்றுப்பெற்றது.

---

(கக) அடல் சூழ்ந்த - வெற்றிபொருந்திய; சடையநாயனார் இசைஞானியார் - சுந்தரமூர்த்திகளது தந்தையும் தாயும்.

சைவசமய பரமாசாரிய சுவாமிகளாகிய ஞானமூர்த்திகள் **மூவர்** தாமோதியருளிய தமிழ்வேதத்தைக்கொண்டு செய்த பற்பல அற்புதங்களில் **பஞ்சகிருத்தியங்களை** விளக்கிக்காட்டும் அற்புதங்களிற் சில வருமாறு :—

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்.

**சிருஷ்டி**—அரவாலிறந்த வணிகனை யெழுப்பியது.
திருமயிலையில் எலும்பைப் பெண்ணுக்கியது.

**திதி**—திருவீழி மிழலையில் அடியார்களை யாதரித்தது.
பாண்டியருக்குற்ற சுரநோயைத் தவிர்த்தது.
இராஜகுமாரத்தியின் முயலகநோயை யகற்றியது.

**சம்ஹாரம்**—திருவாலவாயில் சமணர்களைக் கழுவேற்றியது.
புத்த நந்தியின்றலையில் இடிவிழச்செய்தது.

**திரோபவம்**—வேதாரண்யத்தில் கதவை யடைத்தது.

**அநுக்கிரகம்**—திருமணத்தில் எவரையும் ஜோதியிற் புகச்செய்து பேரின்பமளித்தது.

## திருநாவுகரசு மூர்த்தி சுவாமிகள்.

**சிருஷ்டி**—விஷத்தாலிறந்த மூத்தநாவுக்கரசை யெழுப்பியது.

**திதி**—திருவீழி மிழலையில் அடியார்களை யாதரித்தது.

**சம்ஹாரம்**—ஏவிய யானையைக்கொண்டு ஏவினரைக்கொன்றது.

**திரோபவம்**—அப்பூதியடிகள் கூறிய கர்ண கடூரமானவார்த்தைகளைக் கவனியாதது.

**அநுக்கிரகம்**—அப்பூதியடிகளுக்குப் பரமுத்தியையளித்தது.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

**சிருஷ்டி**—முதலையுண்ட பாலனை அழைத்தது.

**திதி**—பஞ்சகாலத்தில் நென்மலையை யெவர்க்குமளித்தது.

**சம்ஹாரம்**—காவிரியின் வெள்ளப் பெருக்கை யடக்கியது.

**திரோபவம்**—ஏயர்கோன் கலிக்காம நாயனருக்குத்தன்னை மறைத்தது.

**அநுக்கிரகம்**—பெருமிழலைக் குறும்பர், சேரமான் பெருமாள், கலிக்காமனர் முதலிய திருத்தொண்டர்களைச் கயிலையிற் சேர்த்தது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

## அகத்தியர் தேவாரத்திரட்டு

# பாட்டு முதற்குறிப்பகராதி.



திருப்பாட்டு முதற்குறிப்பகராதி

முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மாணிக்கவாசக சுவாமிகள்

## சரித்திரச் சுருக்கம்.



அநாதிமலமுத்த சித்துருவாகிய முழுமுதற்கடவுள் சிவபெருமானே என்று ஆன்மாக்கள் யாவருந் துணிந்து வழிபட்டு உய்யும் பொருட்டுப் பற்பல அற்புதங்களினாலே, சகல சமயாதீதமாகிய சித்தாந்த சைவத்தை ஸ்தாபித்தருளிய பரம சமயாசாரிய சுவாமிகள் நால்வருள் **ஸ்ரீமந் - மாணிக்கவாசக சுவாமிகள்** ஒருவர். அவர் திருவாய்மலர்ந்தருளிய திருவாசகமும் தமிழ்வேதமென்று உயர்ந்தோர் அனைவராலுங் கொள்ளப்பெற்றுப் பாராயணஞ் செய்வோர்க்குப் பத்தி ஞானங்களை உண்டாக்குகின்றது. மாணிக்கவாசக சுவாமிகளுக்குச் சிவக்ஷேத்திரங்கள் எல்லாவற்றினும் மார்கழி மாசத்திலே திருவிழா நடத்தப்படுகின்றது. அவற்றுள் அப்பெருமானார் உபதேசம்பெற்ற திருப்பெருந்துறையிலே மார்கழி ஆனிமாசங்களில் நடத்தப் படுகின்ற மகோற்சவங்களிலே அவருக்கு இடபவாகன முதலிய எல்லா வாகனங்களுமுண்டு.

இத்துணை அரியபெரிய மகிமைவகித்த மாணிக்கவாசக சுவாமிகள் பலவளங்கள் நிறைந்த செந்தமிழ்த் தென் பாண்டிநாட்டிலே, அரிமர்த்தன பாண்டிய ராஜன்காலத்திலே, திருவாதவூரிலே, அமாத்தியரென்னும் அந்தணர் குலத்திலே திருவவதாரஞ்செய்து **வாதவூரர்** என்கிற பிள்ளைத்திருநாமம்பெற்றுப் பதினாறு பிராயத்துள்ளே வேதசிவாகம முதலியகலைகள் முற்றுங் கற்றுச் சிவபெருமானிடத்துப் பேரன்பு பூண்டவராயொழுகினார்.

அவ்வாறு ஒழுகிப்பொலிவெய்திய அவ்வாதவூராருடைய நற்குண நற்செய்கைகள் அனைத்தும் மதுரையில் அரசாட்சிசெய்த்

அரிமர்த்தனபாண்டியன் செவிக்குப் புலப்பட்டன. புலப்பட்ட வுடனே, அவ்வரசன் வாதவூரரை வருவித்து ஆராய்ந்து, கேள்வி யுற்றதினும் மேம்பட்டு விளங்குங் குணாதிசயங்களை வியந்து கொண் டாடிப் பல சிறப்புகள் செய்து, **தென்னவன் பிரமராயன்** என்னும் பட்டப்பெயருங் கொடுத்துத் தனக்கு முதன் மந்திரியாராக நியமித் துக் கொண்டான்.

அம்மந்திரியார் அரசனுக்கு இனியராய்ப் பெருஞ்செல்வராய் வாழ்ந்திருக்கும்போழ்து, மனந்தூய்மையுடையராய் நித்தியாநித்திய வுணர்வு தோன்ற, இம்மை மறுமைப்பயனை வெறுத்துப் பிறவிக் கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையராய், தம்முடைய எண்ண முழுதும் சிவபெருமான் பாற்சேர்த்து அவருடைய திருவடிப்பேறு அடைதற்குக் காரணமாகிய தத்துவஞானத்தை உபதேசிக்கத்தக்க ஞானசாரியரைக் காணுதற்குப் பேரவா வுற்றிருந்தனர்.

அங்ஙனமிருக்கும்போது, அரசன் கீழ்க்கடற்றுறையிலே சென்று குதிரைகள் வாங்கி வரும்படி அம்மந்திரியாரை ஏவினான். ஏவப்பட்ட மந்திரியார் அரசனது அளவிறந்த திரவியத்தைக் கைக் கொண்டு, நால்வகைப் படைகளுஞ் சூழ ஓர் நல்லநாளிலே பிர யாணப்பட்டுச் சென்று, மார்க்கத்தின் மத்தியிலேயுள்ள **திருப்பெருந் துறை** என்னுஞ் சிவக்ஷேத்திரத்தைச் சமீபித்தனர். சமீபிக்குங் கால், பரமபதியாகிய சிவபிரான் மந்திரியார்க்கு இருவினையொப்பு மலபரிபாக முற்றமைநோக்கி, அவருக்கு அநுக்கிரகிக்கும்பொருட்டு, திருப்பெருந்துறைச் சிவாலயத்திலே, அருள்வடிவாகிய குருந்தமர நீழலிலே, தம்முடைய கணநாயகர்கள் மாணாக்கராய்ச்சூழ அக் குழாத்தின் நாப்பணே தாம் ஒரு அந்தணர் வடிவத்தோடு ஆசாரி யராகத் திருவுருக்கொண்டு வீற்றிருந்தருளினார். பின்பு மந்திரியார் ஆலயஞ் சேர்ந்து குருமூர்த்தியைத் தரிசித்த வளவில் அழலிடைப் பட்ட மெழுகென மனமுருகி அழுதகண்ணுந் தொழுதகையுமுடை யராய்த் திருவடிக்கமலங்களிலே வீழ்ந்து, தேவரீர் அடியேனுக்கு அநுக்கிரகிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனர். மந்திரி யாரது அதிதீவிரதர சத்திநிபாதத்தைக் கண்டதேசிகோத்தமர் திரு வருள் சுரந்து விஞ்ஞானதீக்ஷைசெய்து பாசத்தை ஒருவி, ஞானத்

தாற் பசுபதியாகிய தம்மை யநந்நியமாகக் கண்டு தம்முள் விழுங்கக் கொடுத்து ஏகபூரணவடிவாய் நிற்கும் வண்ணம் **ஸ்ரீ முத்தி பஞ்சாக்கரத்தை** உபதேசித்துத் திருவடி சூட்டி யருளினர். அவ்வுபதேசப் பொருளைக் கேட்டுச் சிந்தித்துத்தெளிந்து நிட்டையில் அமர்ந்து சிவாநுபவஞ் சுவாநுபூதியாகக்கொண்ட மெய்யன்பர் சிவாநந்த மேலீட்டினலே குருமூர்த்தங்கொண் டருளிய பரமசிவனது பாதாரவிந்தங்களிற் பாமாலை சூட்டத் தொடங்கினர். அப்பாடல்களைக் கேட்டருளிய சிவபிரான் திருவுளங் களிகூர்ந்து, உயர்ந்த மாணிக்கங்கள்போல அப்பாடல்களிலே வாசகங்கள் அமைந் திருந்தமை நோக்கி, அவ்வாதவூரடிகளுக்கு "**மாணிக்க வாசகன்**" என்று திருப்பெயர் கொடுத்து அங்கே அமர்ந் திருக்கும்படி கட்டளையிட்டுத் தம் மாணக்கர்களோடு மறைந்தருளினர்.

பின்பு அன்பே உருவாகிய மாணிக்கவாசகப் பிரான் குதிரை கொள்ளக் கொடுவந்த தனங்களை யெல்லாம் அப்பதிக்கண்ணதாகிய சிவாலயத்திருப்பணிக்கும், நித்திய பூஜைக்கும், நைமித்திகமாகிய விசேட பூஜைக்கும், அடியார்களுக்கும் உபயோகப் படுத்திப் பித்துப் பிடித்தார்போல் அமர்ந்தருளுங்கால், "இதுகாறுங் குதிரைகள் வாங்கிவாராமைக்குக் காரணம என்னை" என்று அரசன்நிருபம் அனுப்பினமைகண்டு, ஆலயத்துக்குச்சென்று சிவ சந்நிதானத்திலே விண்ணப்பஞ் செய்தபொழுது, அசரீரிவாக்கு எழுந்தது. அதனைக் கேட்டவுடனே அடியார்க் கெளியராய் அவர் வேண்டிய வேண்டியாங்கு செய்தருளும் எம்பரமநாதன் குருவடிவாயெழுந்தருளி அன்பனே! "நாம் பரிகொண்டு வருகின்றேம் நீ செல்லுதி" என்று திருவாய் மலர்ந்தருள, உடனே மாணிக்கவாசக மூர்த்திகள் எழுந்து மதுரையம்பதி சேர்ந்து, அரசனுக்கு மகிழ்ச்சி யுண்டாகும்படி "இத்தனை நாளிலேபரிகள்வரும்" என்று வரையறை கூறினர். வரைசெய்த நாள்காறும் பரிகள் வாராமைகண்டு அரசன் கோபங் கொண்டு மாணிக்கவாசக சுவாமிகளை வருத்தப்படுத்தி முன் கொண்டுசென்ற பொன்னை வாங்கும்படி சேவகரை ஏவினன். சுவாமிகள் அவ்வருத்தம் பொறுது சிவபிரானை நோக்கி முறையிடும் பொழுது, சிவபிரான் வனத்திலே திரிகின்ற நரிகளைப் பரிகளாக்கிக் கொடுவந்து காட்டி, அரசனை மகிழ்வித்துத் தந்தொண்டரை

விடுவித்தனர். பின்பு அன்றிரவிற்றனே அப்பரிகள் அனைத்தும் நரிகளாய் முன்னுள்ள பரிகளுக்கும் ஊறுசெய்து நகரமெங்கும் கலங்கும்படிச் செய்து தம்மிடங்களை அடைந்தன. விடிந்தவுடனே நிகழ்ந்த செய்திகளைக்கேட்டு அரசன் பெருங்கோபங்கொண்டு மந்திரியாரை வருவித்து "எ மந்திரியே ? நீமாயவித்தையினால் நம்மை மயக்கிவிட்டாய்" என்று கூறிச் சேவகரை நோக்கி இம்மந்திரியைக் கொடுந்தண்டஞ்செய்து குதிரை கொள்ளக்கொடுசென்ற பொன்னை வாங்கும்படி ஆஞ்ஞாபித்தான். உடனே சேவகர் அடிகளைக் கொடுந்தண்டஞ்செய்த போது, சுவாமிகள் சிவபிரானை நோக்கித் துதித்தனர். அதனையுணர்ந்த சிவபிரான் வைகைநதியை மதுரைநகர்மீது பெருகி வரும்படிச்செய்து மாணிக்கவாசக சுவாமிகளது மகிமையை அரசனுக்கு அறிவித்தனர்.

பின்பு சிற்பரச் செல்வர்களாகிய சுவாமிகள் எக்காலமுந் திருவருளிற் றிளைத்துக்கொண்டு அரசனையுந் துறந்து பல சிவஸ்தலங்களையும் பணிந்து பாடி, ஸ்ரீ சிதம்பரக்ஷேத்திரத்தை அடைந்து அங்கே ஸ்ரீ ஆனந்த நடராஜப் பெருமானைத் தொழுது உளங்கசிந்துருகும்படிப் பாடி, அத்தில்லை யெல்லைக்கு மேலைத் திசையிலேயுள்ள தபோவனத்திலே ஞானானந்த நிட்டையில் அமர்ந்தருளினார். அதன்பின் ஸ்ரீ ஞானநடராஜர் ஆஞ்ஞைப்படி புத்தரை வாதிலே வென்று, ஊமைப் பெண்ணைப் பேசுவித்து அங்கே அமரும்போது, சிவபிரான் அந்தணராய் வந்தருளி அதுவரையும் பாடியவைகளைத் தொகுத்துக் கூறும்படிகேட்டு அதிகாரவரைசெய்து திருவாசகத் திருமுறையாகவும், திருக்கோவையார் பாடும்படி கேட்டு அதனை யதன் பின்னாகவும், தமது அருமைத் திருக்கரத்தால் வரைந்தருளி "**இங்ஙனம் மாணிக்கவாசகன் சொல்லியபடி அழகிய திருச்சிற்றம்பல முடையார் எழுதியது**" என்று திருக்கைச்சாத்துமிட்டு அந்தர்த்தானமாயினர். பின்பு அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய ஸ்ரீ பரமானந்தத் தாண்டவேசுரர் திருவடி நிழலிலே அருள்வர்க்கத்தவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் ஞானானந்த வடிவா யமர்ந்தனர்.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# மாணிக்கவாசக சுவாமிகள் புராணசாரம்.

செய்யதிரு வாதவூர் வந்தருளி யமைச்சரெனச் சிறந்துநீடு
வையமிசை வழுதிநிதி கொண்டரனைக் குருந்தடியில் வணங்கிஞாலம்
உய்யவருட் பணியாற்றி நரிபரியாச் செய்துநதி யுடைப்பிலெங்கள்
ஐயன்முடி மிசையுவந்து மண்சுமக்க வன்பினுரு வாயினாரே. (க)

எங்குமாகிய வழகன் மேனிபிரம் படிதாங்க வேங்கிப் புத்தர்
மங்கவா ரருள்செய்து மூகைபே சிடவழங்கி மணிமன் றூடும்
எங்கணு யகன்கரத்தா லேடுமெழுத்தாணியுங் கொண்டெழுதப் பாடி
அங்கண்மே வியசோதி தன்னிலிரண் டறக்கூடி யமர்ந்திட்டாரே.

## மாணிக்கவாசக சுவாமிகள் தோத்திரம்.

எழுதரு மறைகடேறு விறைவனை யெல்லிற் றுங்குல்
பொழுதறு காலத்தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருண்மூழ்கி
அழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம். (க)

பெருந்துறையிற் சிவபெருமா னருளுதலும் பெருங்கருணைப்
பெற்றி நோக்கிக்
கரைந்துகரைந் திருகண்ணீர் மழைவாரத் துரியநிலை
கடந்து போந்து
திருந்துபெருஞ் சிவபோகக் கொழுந்தேறல் வாய்மடுத்துத்
தேக்கிச் செம்மாந்
திருந்தருளும் பெருங்கீர்த்தி வாதவூ ரடிகளடி
யிணைகள் போற்றி. (உ)

## மாணிக்கவாசக சுவாமிகள் சிறப்பு.

ஊமையினை மாற்றி யுணர்மொழியச் செய்ததுவும்
காமனைவென் றோனெழுதக் கற்றதுவும் - ஆமையைப்போல்
ஐந்தடக்கி யீச னருளிற் கலந்ததுவும்
முந்தும் பசுகரண மோ.

# திருவாசகப் பெருமை.

—••❀••—

## நேரிசை வெண்பா.

வள்ளுவர்நூ லன்பர்திரு **வாசகந்**தொல் காப்பியமே
தெள்ளுபரி மேலழகன் செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர் புராணந் தொகைச்சித்தி யோராறும்
தண்டமிழின் மேலாந் தரம். (க)

தேவர் குறளுந் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும்—கோவை
**திருவா சகமுந்** திருமூலர் சொல்லும்
ஒருவா சகமென் றுணர். (உ)

## நேரிசை யாசிரியப்பா.

விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரண னுரையெனு மாரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த **வாசகத் தேனோ**
யாதோ சிறந்த தென்குவீ ராயின்
வேத மோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
**திருவா சகமிங்** கொருகா லோதின்
கருங்கன் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே. (௩)

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளம்
மூழ்கிய புனிதன் மொழிந்தவா **சகமே**
வாசக மதற்கு வாச்சியந்
தாசக லல்குல்வேய்த் தோளிடத் தவனே. (௪)

வலமழு வுயரிய நலமலி கங்கை
நதிதலை சேர்ந்த நற்கரு ணைக்கடல்
முகந்துல குவப்ப வுகந்தமா ணிக்க
வாசக னெனுமொரு மாமழை பொழிந்த
**திருவா சக**மெனும் பெருநீ ரொழுகி
ஓதுவார் மனமெனு மொண்குளம் புகுந்து
நாவெனு மதகி னடந்து கேட்போர்
செவியெனு மடையிற் செவ்விதிற் செல்லா
உளமெனு நிலம்புக வூன்றிய வன்பாம்
வித்திற் சிவமெனு மென்முளை தோன்றி
வளர்ந்து கருணை மலர்ந்து
விளங்குறு முத்தி மெய்ப்பயன் றருமே. (ரு)

நலமலி வாதவூர் நல்லிசைப் புலவ
மனநின் றுருக்கு **மதுர வாசக**
கலங்குறு புலனெறி விலங்குறு வீர
திங்கள் வார்சடைத் தெய்வ நாயகன்
ஒருகலை யேனு முணரா னஃதான்று
கைகளோ முறிபடுங் கைகள் காணின்
கண்களோ வொன்று காலையிற் காணும்
மாலையி லொன்று வயங்கித் தோன்றும்
பழிப்பி னென்று விழிப்பி னெரியும்
ஆயினுந் தன்னை நீபுகழ்ந் துரைத்த
பழுதில் செய்யு ளெழுதின னதனால்
புகழ்ச்சி விருப்பன் போலும்
இகழ்ச்சி யறியா வென்பணி வானே. (சு)

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நீழல்வா யுண்டநிகரிலா னந்தத்
தேன்றேக் கெறியுஞ் செய்யமா ணிக்க
வாசகன் புகன்ற **மதுர வாசகம்**
யாவரு மோது மியற்கைத்தாதலின்
பொற்கல நிகர்க்கும் பூசுரர் நான்மறை

மட்கல நிகர்க்குமதுர வாசகம்
ஓதின் முத்தி யுறுபயன்
வேத மோதின் மெய்ப்பய னறமே. (எ)

செய்ய வார்சடைத் தெய்வ சிகாமணி
பாதம் போற்றும் வாதவூ ரன்ப
பாவெனப் படுவ துன் பாட்டுப்
பூவெனப் படுவது பொறிவாழ் பூவே. (அ)

**அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.**

மாசறு மணிபோற் பன்னுள் **வாசக மாலை** சாத்திப்
பூசனை செய்து பன்னுட் புண்ணிய மன்று ளாடும்
ஈசன தடிக்கீ ழெய்தி யீறிலா வறிவா னந்தத்
தேசொடு கலந்து நின்றார் சிவனருள் விளக்க வந்தார். (கூ)

---

## திருவாசக உண்மை.



### சிவபுராணம்.

தேசுறுமா ணிக்கமெனச் சிறந்ததிரு வாசகத்தில்
பேசுதிருச் சிவபுரா ணத்தகவற் பெருமைசொலில்
ஈசர்தமக் கியல்பான திருநாம முதலெவையும்
மாசறவே வாழ்கவென வாழ்த்துகின்ற வருட்குறிப்பாம். (க)

### கீர்த்தித்திருவகவல் - திருவண்டப்பகுதி.

புகழ்பெருகுஞ் செய்கையெலாம் புகலகவ லொன்றாகும்
திகழ்திருவண் டப்பகுதித் திருவகவல் செப்பியது
தகுசிருட்டி திதியொடுக்கஞ் சாற்றுதிரோ தம்பொதுவாய்
அகலமுறத் தேர்ந்திடவே யருளியநற் பொருளாகும். (உ)

### போற்றித்திருவகவல் - திருச்சதகம் - நீத்தல்விண்ணப்பம்.

முத்திபெறு நெறியறியு மொழிபோற்றித் திருவகவல்
சத்தியஞா னந்தருதே சிகர்மோகஞ் சதகமதாம்

மித்தையுல கினையகற்றி விடாமலெனை யாண்டருளென்
றத்தாறிந் திடநீத்தல் விண்ணப்ப மறைந்ததுவாம். (௩)

## திருவெம்பாவை - திருவம்மானை.

மலவிருளுற் றுறங்காமன் மன்னுபரி பாகரருள்
செலமுழுக வருகவெனச் செப்பறிரு வெம்பாவை
நலமுறுமந் தணர்வடிவாய் நாரணன்காண் பரியபதம்
நிலமதில்வந் தாள்சருணை நினைந்தாட லம்மானை. (௪)

## திருப்பொற்சுண்ணம் - திருக்கோத்தும்பி.

சத்திகளாற் றனுகரண புவனபோ கங்கடமை
அத்தனுக்குச் சுண்ணமவை யாமிடிக்கக் கூவுதலே
ஒத்ததிருச் சுண்ணமுயர் போதமொரு வுண்டாகச்
சித்தவிசா ரத்தூது செப்பிவிடல் கோத்தும்பி. (௫)

## திருத்தெள்ளேணம் - திருச்சாழல்.

பொன்னார்மெய் யண்ணலரும் போதவின்ப மேமிகுந்து
தென்னதென் னவெனவே தெள்ளேணங் கொட்டியதாம்
முன்னார் கலையுமுண ராமூகை யாமேடி
தன்னாற் பதிமுதன்மை சாற்றியதாந் திருச்சாழல். (௬)

## திருப்பூவல்லி - திருவுந்தியார்.

தேவரறி யாதசிவன் றேடியே யாண்டநலம்
ஆவலொடுஞ் சொல்லி யடியாரோ டுங்கூடிப்
பூவியந்து கொய்தறிருப் பூவல்லி யாமரன்சீர்
பாவமுறு தீமையறப் பாடறிரு வுந்தியதே. (௭)

## திருத்தோணோக்கம் - திருப்பொன்னூசல்.

சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய்
அத்தன் செயுங்கருணைக் காராமை யுண்மிகுந்து
பொத்தியகை கொட்டிப் புகழ்தரோ ணோக்கமருள்
சத்தியிருந் தாடத்தா லாட்டிடுதல் பொன்னூசல். (௮)

### திருவன்னைப்பத்து - குயிற்பத்து.

நேயம்மி குந்த நிலைகுலையக் கூடுதலை
ஆயவருட் டாய்க்கங் கறைதலன்னைப் பத்தாகும்
தூயவருட் குயிலேநற் சோதியெனைக் கூடுதற்குன்
வாயினாற் கூவெனமுன் வாழ்த்தல்குயிற் பத்தாமே. (கூ)

### திருந்தசாங்கம் - திருப்பள்ளியெழுச்சி.

பேர்நாடே ராறுமலை பெயரூர்தி படைமுரசு
தார்கொடியே லாமரற்குச் சாற்றறசாங் கமதாம்
ஏர்மருவு திருப்பள்ளி யெழுச்சிபணி விடைகேட்
டார்வமுட னண்டவரற் கன்புசெயு மியல்பே. (ய)

### கோயின்மூத்ததிருப்பதிகம் - கோயிற்றிருப்பதிகம்.
### செத்திலாப்பத்து - அடைக்கலப்பத்து.

கோயின்மூத்ததிருப்பதிகஞ்சிதம்பரத்திலருளடையுங்குறிப்பதாகும்
ஏயுங்கோயிற்றிருப்பதிகம்பெருந்துறைத்தேசிகர்மோகமியம்பலாகு
ஆயபசுபோதம்முற்றுங்கெடவேண்டலேசெத்திலாப்பத்தாகும் [ம்
ஓதுவல்வாதனைகள்வந்தணுகாமலடைக்கலப்பத்துரைத்ததாமே. (கக)

### ஆசைப்பத்து - அதிசயப்பத்து.

கருவியுறு மூனுடற்கண் வாராமற் றிருவருளிற் கலப்ப தற்கே,
அரனடியைப்புகழ்ந்துபெருகார்வமொடுபாடுதலேயாசைப்பத்தாம்
வெருவிமலத்தினைச்சீலத்தொன்றுகுமடியர்குழாத்துடனேகூட்டும்
பரமரருட்பெருமைமிகுதியைப்புகழ்ந்துபாடலதிசயப்பத்தாமே. ()

### புணச்சிப்பத்து - வாழாப்பத்து.

ஆண்டகுரு வைப்பிரியா தணைந்துபணி பிரிந்துமிகு மன்போ டின்பம், பூண்டுகிடக் கப்பெறுவ தென்றுகொலோ வெனும் விருப்பம் புணர்ச்சிப் பத்தாம், நீண்டவுல கத்தினிற்பற் றென்றிலே னிவ்வுடற்க ணின்று வாழேன், மாண்டகுநின் பதநிழற்கீழ் வருக வருள் புரியெனுஞ்சொல் வாழாப் பத்தே. (கங)

### அருட்பத்து - திருக்கழுக்குன்றப்பதிகம்.

சோதியருட் சுடர்விளக்கே துயர்ப்பிறவி குடல்விடுத் துன் றாள் சேர்தற், காதரித்திங் குனையழைத்தா லதெந்துவெனக் கேளே

ஹுஞ்சொ லருட்பத் தாகும், நீதிமறை பரவுதிருப் பெருந்துறையிற் குருவடியாய் நிகழ்ந்த கோலம், காதலொடுங் காட்டினையே யெனுங் களிப்புப் பகர்தறிருக் கழுக்குன்றமே. (கச)

**கண்டபத்து - பிரார்த்தனைப்பத்து.**

இந்திரிய வயமயங்கா தேயெடுத்துத் தாளுக்கு மெழிலா னந்தம், கந்தமலி தில்லையினுட் கண்டேனென் றுவந்துரைத்தல் கண்ட பத்தாம், அந்தமிலா வானந்தத் தசலாம லெனையழுத்தி யாள்வா யென்று, சிந்தைசலந்துரைத்ததுவே பிரார்த்தனைப்பத் தாய்ப்புக லுஞ் செய்கை யாமே. (கரு)

**குழைத்தபத்து - உயிருண்ணிப்பத்து.**

இழைத்தேனிவ் வாக்கைபொறுத் தினிக்கணமும் பொறுக் கலே னேழையேனைக், குழைப்பதேன் பிழைபொறுத்தா ளென விரங்கிக் கூறுதலே குழைத்த பத்தாம், தழைத்துவளர் பேரின்பந் தானுகி யுயிர்தோன்றாத் தன்மை யாய்த்துன், பொழித்துநிறை வைப்பெறுத லுயிருண்ணிப் பத்தாயிங் குரைத்த தாமே. (கசு)

**அச்சப்பத்து - திருப்பாண்டிப்பதிகம்.**

தரையில்வளர் வினைமுழுதும் வரினுமஞ்சேன் சிவசமயத் தவஞ்சாராதார், அருகின்வரக் காண்கின்மன மஞ்சுமென விசழ்ந் துரைத்த லச்சப் பத்தாம், புரவியின்மேற் பாண்டியன்முன் வரும் பதத்தை யாம்பெறுமற் புதம்போல் யாரும், விரவுமின்க ளென்றடி யார்க் குறுதி சொலற் றிருப்பாண்டி விருத்த மாமே. (கஎ)

**பிடித்தபத்து - திருவேசறவு.**

மிக்கபிற வித்துயரெ லாமொழித்து விபுத்துவமிங் களித்த லாலே,பிக்கறச் சிக்கெனப் பிடித்தே னின்னை யென்று துணிவு செப் பல் பிடித்த பத்தாம், தக்கபரி யாய்நரியை யாக்குதல்போ லெனைப் பெரிதாய்த் தாக்கித் தாட்கீழ், அக்கணம்வைத் தனையேயென் றிரங் கறிரு வேசறவென் றியம்பலாமே. (கஅ)

**திருப்புலம்பல் - குலாப்பத்து.**

கரைந்துருகும் பேரன்புன் கழலிணைக்கே கற்றாவின் மனம்போ லென்றும், திருந்தும்வகை யெனக்கருள்க வெனக்கேட்ட திருப்

புலம்ப லாகு முள்ளம், விரும்புசிவா னந்தவெள்ளம் விளைந்துதில்லை நாயகனை மிகக்கொண்டாடி, நிரம்புமனக் களிமிகுத்த விறுமாப்பே குலாப்பத்தாய் நிகழ்த்த லாமே. (௧௯)

**அற்புதப்பத்து - சென்னிப்பத்து.**

மாயவுருக் கொண்டுளத்தை மயங்குமின்னார் கண்வலையுண் மயங்கு வேற்கிங், காயுமறி வளித்தாள லதிசயமென் றுரைத்தலற்பு தப்பத் தாகும், தூயவருட் குருபதத்தைச் சூட்டுதற்குப் பெற்றவுயிர் சுகத்தை நோக்கிச், சேயமலர்ப் பதத்தருமை யடியரொடும் வியந் துரைத்தல் சென்னிப் பத்தே. (௨௰)

**திருவார்த்தை - எண்ணப்பதிகம்.**

அறம்பெருகும் பெருந்துறையிற் றமையாண்ட செயன்முதலா வரன்சீ ராட்டின், திறமறிவா ரெம்பிரா னவரென வுரைத்ததிரு வார்த்தையாகும், நிறம்வளரு மலர்ப்பொழில்சூழ்ந் தோங்குதிருத் தில்லைமன் றுணிமலனுமத், திறம்பெருகு மின்பமரு ளென்றலெண் ணப் பத்தெனவுந் திகழ்த்த லாமே. (௨௧)

**யாத்திரைப்பத்து - திருப்படையெழுச்சி.**

பொல்லாத பவத்தைவிட்டுச் சிவன்கழற்கீழ்ப் புகுங்காலம் புணர்ந்த தெற்கிங், கெல்லாரும் வாருமெனக் கருணையினு லழைத் திடல்யாத் திரைப்பத்தாகும், அல்லாத துர்க்குணமா யப்படைகள் விளையாம லருள்வா ளேந்தி, நல்லோர்க ளியாருமெம்மோ டெய்து மெனப் படை யெழுச்சி நவிறலாகும். (௨௨)

**திருவெண்பா - பண்டாயநான்மறை.**

தொந்தமா மலமொறுத்துச் சுகம்பெருக்கிப் பெருந்துறைவாழ் சோதி யென்றன், சிந்தனையே யூராகக் கொண்டிருந்தா ரென் றுரைத்த திருவெண் பாவாம், எந்தைதிருப் பெருந்துறையை யேத்துநம ரேவாழ்வற் றிடர்சேர்பாச, பந்தமறுத் திடுவரெனப் பண்டாய நான்மறையும் பகர்ந்த தாமே. (௨௩)

**திருப்படையாட்சி - ஆனந்தமாலை - அச்சோப்பதிகம்.**

வாகுதிருப் பெருந்துறையா ரெழுந்தருளப் பெறிலெல்லா வளங்கண்முற்றும், ஆகுமெமக் கல்லாத தாசாதென் றியம்பல்படை

யாட்சி யாகும், மோகமிகு மடியரொடுங் கூடவிரும் பியதானந் தமொ ழியு மீசர், போகசுக மெனக்களித்தா ரார்பெறுவா ரெனுமருமை புகற லச்சோ. (உச)

## திருப்பதிகங்களின் பெயருந் தொகையும்.



சிவபுரா ணங்கீர்த்தி திருவண்டப் பகுதி
திருப்போற்றி யுடனகவ றிருச்சதக நூறும்
நவநீத்தல் விண்ணப்ப மைம்பதாம் பாவை
நலந்திகழு மம்மானை நல்லபொற் சுண்ணம்
புவனமகிழ் கோத்தும்பி திருவார்தெள் ளேணம்
பொருவரிய திருச்சாழல் பூவல்லி யுந்தி
இவையிருப தாமிரே ழாகுதோ ணோக்கம்
எழிற்பொன்னூ சலுமேயோன் பானென்ப விவையே. (க)

திருவன்னை குயிற்பத்துத் திருத்தசாங்கம்
திருப்பள்ளி யொடுகோயின் மூத்ததிருப் பதிகம்
அருட்கோயிற் றிருப்பதிகஞ் செத்திலடைக் கலமே
ஆசையதி சயம்புணர்ச்சி வாழாப்பத் தருட்பத்
தொருபதென வுரைசெய்வர் கழுக்குன்ற மேழாம்
உயர்பிரார்த் தனைகள்பதி னென்றுங் காண்பத்
திருமைபெருங் குழைத்தபத் துயிருண்ணி யச்சம்
எழிற்பாண்டி பிடித்தபத்தொ டேசறவு பத்தே. (உ)

திருப்புலம்பல் மூன்றுகுலா வற்புதமே சென்னி
திருவார்த்தை பத்தெண்ணப் பதிகமொரு வாறும்
பாற்குரிய யாத்திரைப்பத் தொருபதா மற்றைப்
படையெழுச்சி யிரண்டாகும் பதினொன்றும் வெண்பா
அருட்டவழும் பண்டாய நான்மறையே ழாகும்
வலியபடை யாட்சியெட் டானந்த மேழாம்
அருட்பெறுமச் சோவொன்ப தைம்பதொன்றும் பதிகம்
அகவலொடு செய்யுளறு நூற்றைம்ப தெட்டே. (ங)

## நூலின் திருநாமங்கள்.



க. திருவாசகம்.

உ. மணிவாசகம்.

௩. மதுரவாசகம்.

ச. வாசகமாலை.

ரு. தமிழ்வேதம்.

சு. வாசகத்தேன்.

எ. அம்பலத்தானெழுதுமறை.

அ. எட்டாத்திருமுறை.



## சுவாமிகள் திருநாமங்கள்.



க. திருவாதவூரர்.

உ. தென்னவன் பிரமராயர்.

௩. மாணிக்கவாசகர்.

ச. மணிவாசகப்பிரான்.

ரு. ஆளுடைய வடிகள்.

சு. கோவை வேந்தர்.



உ

சிவமயம்.

தமிழ்வேதம்,

ஆகிய

# திருவாசகம்.



## நூற்சிறப்பு.



### நேரிசை வெண்பா.



திருச்சிற்றம்பலம்.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந்தளை நீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

திருச்சிற்றம்பலம்.

(குறிப்புரையும் விஷய சூசனமும்.)

தொல்லை இரும் - அநாதியாக (தொன்றுதொட்டு) வராநின்ற பெரிய; தளை - கட்டு, பிணிப்பு; அல்லல் - துன்பங்களுக்கெல்லாம் மூலமாகிய அறியாமை; எல்லை மருவா - முடிவெய்தாத; நெறி - பேரின்பப்பெருநெறி (வீட்டுநெறி); தேன்-பூந்தேன். இப்பூந்தேனை நுகருந்தோறும் நுகருந்தோறும் நாவுக்கும் மனதுக்குமே சிறுபோழ்து சுவையைத் தருகின்றது. ஆனால் **திருவாசகம்** என்னுந் **தமிழ்த் தேனோ** அவ்விரண்டுக்கும் சுவையைத் தருவதோடு, உயிர்க்கும் உயிர்க்குயிர்க்கும் எப்போதும் இனிப்பையே தந்துகொண்டிருக்கின்றது. அம்மட்டோ, நினைக்குந்தோறும் காணுந்தோறும் பேசுந்தோறும் எப்போதும் எலும்புகளனைத்தும் உள்ளே நெகிழும்படிச் செய்து ஆனந்த வெள்ளம் பொழிந்துகொண்டிருக்கின்றது. ஆகையினாலன்றோ "திருவாசகத்திலுருகாதார் ஒரு வாசகத்திலுமில்லை" என்னும் முதுமொழி பண்டைக் காலந்தொட்டு நம்நாட்டில் வழங்கப் பெற்று வருகின்றது.

அன்றியும், வேதாகமங்களின் சாரமாயும், பேரின்பப்பொருளைப் பயப்பதாயும், பாடல்களுட் சிறந்த ஞானப்பனுவலாயுமுள்ள இம்**மணிவாசகத்தேன்** சொல்லளவானே இன்பத்தைத் தருதலால் இதனைப் பலகாலன்றி ஒருகாலோதினும் நெஞ்சம் நெக்குவிட்டுருகிக் கசிவதோடு எத்தகைய கருவிகரணங்களும் அன்பினாலீர்க்கப்பட்டுப் புரைபுரைகனிந்து, அருள் வசப்பட்டு, இறுதியில் தேன் போன்று இனித்து, இன்பகனமாய் விடுதல் எவராலும் மறுக்கப் படாத பரமசித்தாந்தம். ஆகையினாலே மரணாவஸ்தையினுங்கூட இதைத் தப்பாதோதும் நியமம் அறிஞர் பலராலுங் கொள்ளப்பட்டு வருகின்றது. இதுவே சிந்தைக்கினிது, செவிக்கினிது, வாய்க்கினிதாயுள்ளது. இது துதிவடிவாய்க் காணப்படினும் எவரும் வீட்டு நெறியிற் றலைப்படுதற்கு விழுமிய வாயிலாய் விளங்குகின்றது. பிராமணர் முதல் பல திறத்தராயுள்ள பலரும் எளிதிலோர்ந்து சிவானந்தத்தேனைப் பருகுதற்குப் பெருஞ்சாதனமாயிருப்பது இம்**மதுரவாசகத்தேனே**. இதைத் திருவருள் கொண்டு பருக ஆகூழ் வேண்டும்.

சிவமயம்.

# சிவபுராணம்.

## சிவனதநாதிமுறைமையான பழமை

## எ - து, சிவனது அருவ நிலைமை கூறல்.

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

**கலிவெண்பா.**

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாஅழ்க நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழி யாண்ட குருமணிதன் றாள்வாழ்க
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
ஏக னநேக னிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க

(௧) நமச்சிவாய - ஸ்தூல பஞ்சாக்ஷரம்; நாதன் - பஞ்சாக்ஷரப் பொருளாயுள்ள தலைவன். (௩) கோகழி - திருப்பெருந்துறை, திருவாவடுதுறை எனவுங் கூறுவாருமுளர். (௪) ஆகமம் - காமிக முதல் வாதுளாந்தமாகச் சொல்லப்பட்ட இருபத்தெட்டு சிவாகமங்கள்; அண்ணிப்பான் - அணுகி அநுக்கிரகிப்பவன். (௫) ஏகன் - ஏகபரிபூரணன்; அநேகன் - தடஸ்த லக்ஷணத்தில் பல திருமேனிகளுடையவன் (தடஸ்தம் - பிறிதொரு பொருளின் சார்பாயுள்ளது), அது உலகெலாமாகி நின்ற தன்மையையும் குறிக்கும்; இறைவன் - இறைமைத் தன்மையுடையவன், சேதநாசேதனப் பிரபஞ்சங்களுக்குப் பதியாயுள்ளவன். (௬) வேகம் - மனவிருத்திகளின்வேகம்; கெடுத்து - ஒடுக்கி.

பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங் குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத வின்ப மருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையு ணின்ற வதனால்
அவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுது மோய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்

---

(அ) புறத்தார் - தன்னை வழிபடாத அயலார்; சேயோன் - தூரமானவன். (கக) ஈசன் - அனைத்தையுமாள்வோன். (கஉ) தேசன் - ஒளியுருவன். (கங) நேயத்தே - உள்ளன்பின் கண்ணே. (கச) மாயப்பிறவி - வஞ்சனை, பொய் முதலியவற்றிற்கு இருப்பிடமான பிறவி. (ககூ) சிவபுராணம்-சிவனது அநாதிமுறைமையான பழமை. (உ௰) ஓய - கெட. (உக) கண் நுதலான் - நெற்றியில் அக்கினிக் கண்ணையுடையவன். (உஉ) எழில்-அழகு. (உஎ) விருகம்-மிருகம். (௩௰) தாவரம் - அசையாப்பொருள்; சங்கமம் - அசையும்பொருள்.

மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியா யியமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
அஞ்ஞானந் தன்னை யகல்விக்கு நல்லறிவே
ஆக்க மளவிறுதி யில்லா யனைத்துலகும்
ஆக்குவாய் காப்பா யழிப்பா யருடருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பில்
நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை
அறம்பாவ மென்னு மருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகும்

---

(௩௪) விமலா - மலத்தினின்றும் நீங்கினவனே; விடைப் பாகா - இடபவாகனனே. (௩௫) இயமானன் - எஜமானன். (௪௧) ஆக்கம் - தோற்றம்; அளவு - நிலை. (௪௪) நாற்றம் - பூவின்மணம்; நேரியாய் - பொருந்தியிருப்பவனே. (௪௫) மாற்றம் - சொல். (௪௯) நிறங்கள் - ஸத்தியோ ஜாத முதலியவற்றிற்குரிய நிறங்கள். (௫௨) அறம்பாவம் - புண்ணிய பாவங்கள்.

நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே யளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட வெந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தில்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச் சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப

---

(௫௪) குடிலை - குடிசை, உடல். (௫௫) மலங்க - குலைய. (௫௬) விலங்கும்-பிரபஞ்சவாதனையினின்று நீங்கும். தத்துவனே-உண்மையனே. (௬௪) பாரிக்கும்-வளர்க்கும்; ஆரியனே-அறிவுடையோனே, மேலோனே. (௭௫) கூர்த்த - கூர்மையான. (௭௭) புணர்வு - கலந்திருத்தல். (௮௧) மாற்றம் - மாறுபாடு. (௮௪) விடக்கு - ஊன்.

ஆற்றேனெம் மையா வரனேயோ வென்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.

---

(அரு) ஐயா-ஐயனே; அரனே-அஞ்ஞானத்தை அரிப்பவனே, முடிவில் மாயாகாரியமனைத்தைதடம் சங்கரிப்பவனே, அடியார் துயர் களைபவனே. (அகூ) மெய்யானார் - சிவமாந்தன்மை யெய்தினவர், அறிவேயுருவானவர், ஆன்ம அறிவுகெட்டு முதல்வனறிவு மாத்திர மாய் நின்றவர். (அஅ) குரம்பை-உடல். (அகூ) நள்ளிருள்-நடுவிருள், ஸம்ஹாரகாலம், தமஸ் என்னும் மூலப்பிரகிருதியாகிய விருள்; பயின்று - மிகுந்து. (கூஉ) சொல்லி - துதித்து; கீழ் - மீது; சொல்லுவார் - துதிப்பவர். (கூச) செல்வர் - செல்வார்கள்; உள்ளார் — இன்புற்றிருப்பார்கள்.

# கீர்த்தித் திருவகவல்.

## சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை.

*தில்லையிலருளிச் செய்யப்பட்டது.*

*நிலைமண்டிலவாசிரியப்பா.*

---

திருச்சிற்றம்பலம்.

தில்லை மூதூ ராடிய திருவடி
பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி
எண்ணில் பல்குண மெழில்பெற விளங்கி
மண்ணும் விண்ணும் வானோ ருலகும்
துன்னிய கல்வி தோற்றியு மழித்தும்
என்னுடை யிருளை யேறத் துறந்தும்
அடியா ருள்ளத் தன்புமீ தூரக்
குடியாக் கொண்ட கொள்கையுஞ் சிறப்பும்
மன்னு மாமலை மகேந்திர மதனில்
சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்
கல்லா டத்துக் கலந்தினி தருளி
நல்லா ளோடு நயப்புற வெய்தியும்
பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்
எஞ்சா தீண்டு மின்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்

---

(௨) பயின்றனன் - இயக்கினவன். (௬) ஏற-முழுதும். (௧௪) ஈண்டும் - மிகுதியும். (௧௫) கிராதன் - வேடன்; கிஞ்சுக வாய் - முருக்கம் பூப்போன்ற வாய். (௧௬) விராவு - நெருங்கின.

கேவேட ராகிக் கெளிறது படுத்து
மாவேட் டாகிய வாகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்
துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்
நந்தம் பாடியி னான்மறை யோனாய்
அந்தமி லாரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிர மியல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்
கூறுடை மங்கையுந் தானும்வந் தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்
கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணான்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள வழகுறு திருவடி
பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்
றீண்டு கனக மிசையப் பெறாஅ
தாண்டா னெங்கோ னருள்வழி யிருப்பத்
தூண்டுசோதி தோற்றிய தொன்மையும்

---

(௧௭) கேவேடர் - வலைஞர்; கெளிறு - கெளிற்று மீன். (௧௮) மா - பெரிய; வேட்டு - விருப்பம். (௨௨) ஆரியன் - ஆசிரியன். (௨௭) குடநாடு - மேல்நாடு. (௨௮) சதுர் - திறமை; சாத்தாய் - வணிகர் கூட்டத் தலைவனாய். (௨௯) விட்டேறு - வேற்படை. (௩௧) தர்ப்பணம் - கண்ணாடி. (௩௨) ஈந்த - கொடுத்த; விளைவு - ஊக்கம். (௩௩) மொக்கணி - கொள்முதலியன இடும் பை. (௩௪) சொக்கம் - அழகு. (௩௮) பரிமா - குதிரை. (௩௯) ஈண்டு - திரண்ட.

அந்தண னாகி யாண்டு கொண்டருளி
இந்திர ஞாலங் காட்டியவியல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
ஆங்கது தன்னி லடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய வியல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்
திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்
பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனில்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளியவதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்
மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரி னுகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னி லீண்ட விருந்தும்
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவில்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்

---

(௫௫) கரு - மூலம்; கள்ளம் - வஞ்சகம். (௭௰) ஈண்ட - மிக.

தேனமர் சோலைத் திருவா ரூரின்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனி லீண்ட விருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற விருந்து
மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்
சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னி லிடம்பெற விருந்தும்
ஈங்கோய் மலையி லெழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்
துருத்தி தன்னி லருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பய மதனி லறம்பல வருளியும்
குற்றா லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை யழலுருக் கரந்து
சுந்தரவேடத் தொருமுத லுருவுகொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபர னெம்மிறை
சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன்

(எஉ) கோ - அரசத் தன்மை. (எசு) படிமம் - தெய்வத் தன்மை. (அஉ) பாவகம் - தோற்றம். (கூரு) வயின் - இடம்; படுத்து - அடக்கி. (கூசு) தன்மை - கோலம். (ா) மந்திரம் - இரகசியத்தானம்.

அந்தமில் பெருமை யருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை யழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குட னறுக்கும்
ஆனந் தம்மே யாறா வருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாம லாண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மல மறுக்கும்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை
ஏலுடைத் தாக வெழில்பெற வணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெ யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள் கடிந் தருளிய வின்ப வூர்தி
அருளிய பெருமை யருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையு மெவ்வெவர் திறமும்
அப்பரி சதனா லாண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுள்
கோல மார்தரு பொதுவினில் வருகென

(௯௪) நீற்றுக் கோடி - திருவெண்ணீற்று ரேகைகள்; நிமிர்ந்து - இடையிட்டு. (௯௫) ஊனம் - உடற் பிறவித்துன்பம். (௱) கழுக்கடை - சூலம். (௱௪) ஏல் - பொருத்தம். (௱௯) பரம்பரம் - மிகவும் மேலான முத்தி, அதாவது பரமுத்தி.

ஏல வென்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற வருள்பெறு மடியவர்
ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதா ரெரியிற் பாயவும்
மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத வென்றழு தரற்றிப்
பாத மெய்தினர் பாத மெய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்
எழில்பெறு மிமயத் தியல்புடை யம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினி னடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவ னீண்டிய வடியவ ரொடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

திருச்சிற்றம்பலம்.

---

(௧௨௯) ஏல - பொருந்த. (௧௩௧) ஒன்ற ஒன்ற - பொருந்தப் பொருந்த. (௧௩௩) மாலது ஆகி - ஆசைகொண்டு. (௧௩௪). பூதலம் - பூமி. (௧௩௫) விசைத்து - வேகங்கொண்டு; மண்டி - நெருங்கி. (௧௩௯) இதம் - இருதயம். (௧௪௰) இமயத்து - இமயமலையின். (௧௪௨) கனிதரு - கொவ்வைக் கனிபோன்ற. (௧௪௪) ஈண்டிய - நெருங்கிய. (௧௪௬) கிழவோன் - உரிமையுடையோன்.

# திருவண்டப் பகுதி



## சிவனது தூலசூக்குமத்தை வியந்தது



தில்லையிலருளிச் செயப்பட்டது.

இணைக்குறளாசிரியப்பா.



திருச்சிற்றம்பலம்.

அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங்காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமுஞ் சிறப்பு மீற்றொடு புணரிய
மாப்பே ரூழியு நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியில்
கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்

---

(க) பகுதி - பிரிவு; உண்டை - கோளம்; பிறக்கம் - பெருக்கம். (ரு) இல் - வீடு; துன் - நெருக்கம். (எ) மிகுதி - ஏற்றம். (அ) ஈற்றொடு புணரிய - இறுதியடைய. (கக) எறியது - வீசுவதில். (கஉ) கொட்க - சுழல. (கரு) கரப்போன் - ஸம்ஹரிப்பவன்.

கருத்துடைக் கடவு டிருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோ னாடொறும்
அருக்கனிற் சோதி யமைத்தோன் றிருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் றிண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
சாலி னூக்கங் கண்டோ னிழறிகழ்
நீரி லின்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோ னென்றென்
றெனைப்பல கோடி யெனைப்பல பிறவும்
அனைத்தனைத் தவ்வயி னடைத்தோ னஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் றானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறு நினைதொறும்
ஆற்றேன் காண்க வந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையி லிசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயி னறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க வநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவ னென்னு மொருவன் காண்க
விரிபொழின் முழுதாய் விரிந்தோன் காண்க

(௧௯) கீடம் - புழு; கிழவோன் - உரியன். (௨௪) ஊக்கம் - வேகம்; நிழல்-ஒளி. (௨௭) பிறவும் - மற்றப்பொருள்களும். (௨௮) அஃது ஆன்று - அதுவுமல்லாமல். (௩௪) ஆற்றேன் - சகியேன்.

அணுத்தருந் தன்மை யிலையோன் காண்க
இணைப்பரும் பெருமையி லீசன் காண்க
அரியதி லரிய வரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க
நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமு மாதியு மகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதுஞ் செல்வது மானோன் காண்க
கற்பமு மிறுதியுங் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறு மீசன் காண்க
தேவரு மறியாச் சிவனே காண்க
பெண்ணா ணலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானுங் கண்டேன் காண்க
அருணனி சுரக்கு மமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளுந் தானு முடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே
கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து

---

(௪௧) சேட்சியன் - தூரத்தன். (௪௪) பொழில் - உலகம். (௪௫) ஐயோன் - அழகன். (௫௭) பெற்றியன் - தன்மையன். (௫௯) நனி - மிகவும். (௭௧) கோடை - வெய்யில்; மாத்தலை - பெரியதலை.

முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா வின்னரு ணுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடு
அவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழூ ழோங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்
துருவ வருணீ ரோட்டா வருவரைச்
சந்தின் வான் சிறை கட்டி மட்டவிழ்
வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
அருச்சனை வயலு ளன்புவித் திட்டுத்
தொண்ட வுழவ ராரத் தந்த
அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளு மாதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலு மீர்த்தாட் கொள்வோன் வாழ்க

(எங) கோபம்-இந்திரகோபப்பூச்சி. (எரு) பூ-தாமரை மலர்; அஞ்சல்-கைகுவித்தல். (எஅ) கேதக்குட்டம் - துன்பமாகிய குளம்; கையற - அழகிய. (எகூ) பேய்த்தேர்-கானல் நீர். (அய) கணம்-கூட்டம். (அஉ) அசைந்தன - துவண்டன. (அங) ஆயிடை - அவ்விடத்து. (அசு) ஊழ் ஊழ் - முறை முறையாய். (அகூ) வான்சிறை - பெரியகரை. (கூய) வெறி-மணம். (கூச) ஆர-உண்ண. (கூரு) மேகன்-மேகம் போல்பவன். (கூகூ) பணம்-படமுடைய பாம்பு. (கூஅ) அச்சம்-பிறவிப்பயம்.

சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் மிறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை
நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரு மாக்கை யொழியச் செய்த, வொண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரு மாக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா வின்ப மலர்ந்தலை செய்யப்
போற்றா வாக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்
இன்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்

---

(௱உ) குனிப்போன் - குனிந்து நடிப்போன். (௱ங) அமை - மூங்கில். (௱ரு) வைப்பு - சேர்த்து வைத்தபொருள். (௱உங) பொறுத்தல் - தாங்குதல். (௱உச) குவா அல் - கூட்டம். (௱உஎ) முறையுளி - முறைமையாக.

ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்தும்
மறைத்திற நோக்கி வருந்தினர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தி னவ்வயி னொளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி யலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிறொறு மின்றே பயிறொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்
ஆர்மி னார்மி னாண்மலர்ப் பிணையலின்
தாடளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் றொடர்மின் விடேன்மின்
பற்றுமி னென்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் றானே யான தன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்
உளையா வன்பென் புருக வோலமிட்
டலைகடற் றிரையி னார்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவுங் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு

---

(கஙஎ) துற்றவை துறந்த - நுகர்ந்தவற்றை விட்ட. (க௫0) உளையா அன்பு - நீங்காத அன்பு.

கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூ ரெழினகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயி னடியோ மடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையி னெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியே னாயேன் றானெனைச் செய்தது
தெரியே னாவா செத்தே னடியேற்
கருளிய தறியேன் பருகியு மாரேன்
விழுங்கியு மொல்லகில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரைவித்
துவாக்கட னள்ளுநீ ருள்ளகந் ததும்ப
வாக்கிறந் தமுத மயிர்க்கா றோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியே னூன்றழை
குரம்பை தோறு நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான வமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தன னொள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையு மிருப்ப தாக்கின னென்னில்
கருணை வான்றேன் கலக்க
அவனொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே:

திருச்சிற்றம்பலம்.

---

(கசுய) அடிக்குடில்-அடிமைச்சிறுவீடு. (கசுசு) ஆரேன் - நிறைவு பெறேன். (கசுஎ) ஒல்லகில்லேன் - ஆற்றேன். (கசுகூ) உவா - பௌர்ணமி; நள்ளும் - நடுவிலுள்ள. (கஎஅ) கன்னல் - கரும்பு; தேர் - உண்; கடைமுறை - இறுதி. (கஅக) பரா - மேலான.

# போற்றித்திருவகவல்.

## சகத்தினுற்பத்தி

## ௪-து. பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கு முறைமை.

தில்லையிலருளிச்செயப்பட்டது.

நிலைமண்டிலவாசிரியப்பா.

திருச்சிற்றம்பலம்.

நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரு மைம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியு மாதர வதனில்
கடுமுர ணேன மாகி முன்கலந்
தேழ்தல முருவ விடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய வென்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகில்
யானை முதலா வெறும்பீ றாய
ஊனமி லியோனியி னுள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுண் மாதா வுதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்

(ரு) ஆதரவு - விருப்பம். (சு) கடு - மிக்க; முரண் - வலி. (எ) தலம் - உலகம். (கஉ) வினை - நல்வினை; பிழைத்து - தப்பி. (கச) ஈனம் - குறைவு; செரு - போர்.

ஒருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவி னொருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னு ளம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களி னூறலர் பிழைத்தும்
ஏழு திங்களிற் றாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்
தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுக டோறு மடைந்தவக் காலை
ஈண்டியு மிருத்தியு மெனப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாய னெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த வெழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா விளமுலை மாதர்தங்
கூர்த்தநயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனு மவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வ மென்னு மல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
பல்வரம் பாய பலதுறை பிழைத்தும்

---

(௧௫) தான்றியின்-தான்றிக்காய்போன்ற உருவில். (௧௬) விளைவு-நிகழ்ச்சி. (௧௯) முஞ்சுதல்-சாதல். (௨௰) ஊறு-கொலை; அலர்-பழிச்சொல். (௨௨) கட்டம்-கஷ்டம். (௨௭) ஈண்டி-நெருங்கி. (௩௰) கார்-கார்காலம். (௩௨) கதிர்த்து-ஒளிபெற்று; பணைத்து-பருத்து. (௩௫) கொள்ளை-சூறை. (௩௬) துறை-இடம், உலகம். (௪௧) வரம்பு-எல்லை.

தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்
ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைக டொடங்கின
ஆத்த மானா ரயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிக டத்த மதங்களில்
அமைவ தாக வரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாத மென்னும்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்
துலோகா யதனெனு மொண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிட மெய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழு துள முருகி யழுதுடல் கம்பித்
தாடியு மலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையுங் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா வன்பின்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப

---

(சஙு) முனிவு - வெறுப்பு. (சசு) ஆத்தமானோர் - ஆப்தரானவர். (சஅ) பதறினர் பெருகவும் - பதறிப்பெருகவும். (ருக) சரதம் - உண்மை. (ருங) மலை - போர்செய். (ருச) மிண்டிய - திண்ணிய. (ருஎ) கலாபேதம் - சாஸ்திரபேதம். (சூங) கொடிறு - குறடு. (சூசு) மறுகி - மயங்கி.

நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாரும்
கதியது பரமா வதிசய மாகக்
கற்ற மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலு நினையா
தருபரத் தொருவ னவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்
சாயா வன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை யரசே போற்றி
கூட லிலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி

(எக) சதுர் - திறம்; மால் - மயக்கம். (எரு) பாதத்தொரு வன் - மேலோனொருவன். (அரு) களிகூர - களிப்புமிக. (கூய) ஆடகம் - பொன். (கூரு) விகிர்தா - வேறுபாடுடையவனே.

காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா வென்றனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையு மெந்தாய் போற்றி
ஈச போற்றி யிறைவ போற்றி
தேசப் பளிங்கின் றிரளே போற்றி
அரைசே போற்றி யமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி யறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி யுணர்வே போற்றி
கடையே னடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி யணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய விறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயரு ளரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி யரனே போற்றி
உரையுணர் விறந்த வொருவ போற்றி
கைதர வல்ல கடவுள் போற்றி
விரிகட லுலகின் விளைவே போற்றி

---

(௱சு) வேதி - வேதியனே. (ககஅ) மூவேழ் - இருபத்தொரு தலைமுறை. (க௨சு) விளைவே - பயனே.

அருமையி லெளிய வழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருண் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழல்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா வானந்த வாரி போற்றி
அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவது மிறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலு நாயேற் கருளினை போற்றி
இடைமரு துறையு மெந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூ ரமர்ந்த வரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் மண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெங் கூத்தா போற்றி

---

(கஉஅ) கண்ணே - ஆதாரமே. (கஙஉ) கை - உடனே.

கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் மெந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளு மப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய வரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கு மிறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டு மம்மான் போற்றி
இருள்கெட வருளு மிறைவா போற்றி
தளர்ந்தே னடியேன் றமியேன் போற்றி
களங்கொளக் கருத வருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி யையா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி யமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி யுயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி

---

(கசுய) பாங்கு - அழகு. (கசுக) விடங்கா - ஆண்மையுடைய வனே; (கசுஎ) குருளை - குட்டி. (களஉ) களம் கொள - கள்ளஞ் செய்ய; அருளாய் - அருளாதவனே. (கஅங) சிறவே - சிறப்பே. (கஅச) மஞ்சா - அருண்மழையே.

அலந்தே னாயே னடியேன் போற்றி
இலங்கு சுடரெம் மீசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
௧௯௰. மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமு முருவமு மானாய் போற்றி
௧௯௫. மருவிய கருணை மலையே போற்றி
துரியமு மிறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
௨௱. ஆரா வமுதே யருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி யறுகின் றாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
௨0௫. சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி
எந்தமை யுய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி
௨௧௰. கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர விசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி

---

(௧௯௧) அரி - பகைவர்; கேசரி - சிங்கம். (௧௯௮) தோளா - தொளைக்காத. (௨0௨) தாளி அறுகின்தாராய் - தாளிஎன்னும் ஓர் கொடியின் இலையும் அறுகும் சேர்த்துக்கட்டிய மாலை அணிந்தவனே. (௨0௪) சந்தனச்சாந்து - சந்தனமும் திருநீறும். (௨0௮) புல்வாய் - மான். (௨௧௨) பாவக - தோற்றங்களையுடையவனே.

அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த வொருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மைய றுணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல வெரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

திருச்சிற்றம்பலம்.



(உகச) நானிலம் - பூமி. (உகசு) ஒருவ - ஏகனே. (உஉ0) பிழைப்புவாய்ப்பு-பிழைபடுதல் பிழைபடாமை. (உஉக) குழைத்த-மனங்குழைந்து. (உஉஉ) புரம்பல - திரிபுரங்கள்; புராண - பழையோனே. (உஉச) புயங்கம் - பாம்பு. (உஉரு) புராண காரண - புராதனமாகிய மூலகாரணனே. (உஉசு) சயசய - வெற்றியுண்டாக; வெற்றியுண்டாக.

# திருச்சதகம்.*

## பத்தி வைராக்கிய விசித்திரம்.

### ௬. - து. ஞானசிரியர் பத்துவகையாக இரட்சித்த முறைமையை யுரைத்தல்.

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

அவையாவன

### க - வது. மெய்யுணர்தல்.

அதாவது:—தேகாதி பிரபஞ்சங்களைக்கண்டு நீங்கல்; பொய்யைத் தவிர்த்து மெய்யை அறிதல்.

கட்டளைக் கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி யுள்ளம்
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங்
கைதா னெகிழ விடேனுடை யாயென்னைக் கண்டுகொள்ளே. (க)

---

* நூறுசெய்யுள் கொண்டது.

(க) மெய்தான் அரும்பி - மெய் (உடல்) தானுகவே மயிர் சிலிர்த்து; விதிர்விதிர்த்து-மிகவும் நடுங்கி; விரை ஆர்-வாசனைநிறைந்த; கைதான் தலைவைத்து - கைதானுகவே தலைமேல் அஞ்சலிசெய்து; ததும்பி - வடிந்து; வெதும்பி - வாடி; கை - ஒழுக்கம்; நெகிழ-நழுவ; என்னை - எனது நிலைமையை; கொள் - ஏற்றுக்கொள்.

இப்பாசுரத்தில் தூய்மைபெற்ற திரிகரண வழிபாடு கூறப்பட்டுள்ளது. ஒருவர்க்கு ஒரேவிதமான வழிபாடிருந்தால் அதை ஒரு முறை செய்யலாமேயொழிய மாறி மாறி செய்யமுடியாது. அஃதொன்றையே அடிக்கடி செய்தால் மனஞ்சலித்து வெறுப்படையும்.

கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு குடிகெடினும்
நள்ளே னினதடி யாரொடல் லானர கம்புகினும்
எள்ளேன் றிருவரு ளாலே யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல் லாதெங்க ளுத்தமனே. (௨)

உத்தம னத்த னுடையா னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ னென்ன மனநினைவில்
ஒத்தன வொத்தன சொல்லிட வூரூர் திரிந்தெவரும்
தத்த மனத்தன பேசவெஞ் ஞான்றுகொல் சாவதுவே. (௩)

சாவமுன் னாட்டக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவவெந் தாயென் றவிதா விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணாண்டுமண்மேல்
தேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே. (௪)

தவமே புரிந்திலன் றண்மல ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த வருவினை யேனுனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு வெய்திற்றி லேனின் றிருவடிக்காம்
பவமே யருளுகண் டாயடி யேற்கெம்பரம் பரனே. (௫)

பரந்துபல் லாய்மல ரிட்டுமுட் டாதடி யேயிறைஞ்சி
இரந்தவெல் லாமெமக் கேபெற லாமென்னு மன்பருள்ளம்

---

பலவிதமான வழிபாடிருப்பின் திரிகரணங்களால் செய்யுங் கிரியைகள் வெவ்வேறாக மாறி வருமாதலால் புதிது புதிதாக வருமவற்றை மனஞ்சலியாது செய்யும். ஆதலால் புறவழிபாடு, அகப்புறவழிபாடு, அக வழிபாடு, அறிவுத்தொழில் வழிபாடு என நான்கு வழிபாடுகள் நஞ்சைவத்தில் ஏற்பட்டுள்ளன. மேற்சொன்ன வழிபாடு இவற்றுளடங்கும். மனந்தூய்மை பெற்ற பின்னரே ஞானமார்க்கம் தலைப்படும்.

(௨) நள்ளேன்–நட்புகொள்ளமாட்டேன்; எள்ளேன் (நரகத்தை) இகழேன்; உத்தமன்–தமசு என்னும் மூலப்பிரகிருதியாகிய இருளைக் கடந்தவன், பெரியோன். (௩) அத்தன் - தந்தை; மத்தம் - உன்மத்தம்; மால் - மயக்கங்கொண்டவன்; சாவது - செயலற்றிருப்பது. (௪) வேள்வித்தகர் - யாகப்பசு; தின்று - அவிசுடனுண்டு; ஆவ – ஐயோ; அவிதாஇடு – முறையிடு; நம்மவர் அவரே – பிரம விஷ்ணுக்களாகிய நம்மவர்கள் தாமோ; திரிதவர் – திரிகின்றதலைவர்கள். (௫) உள்ளாம் - நடுவுளிருத்தலாகிய; சிவம் - மங்களகரம்; திரு–செல்வம்; பவம்–பிறப்பு; பரம்பரன்–மிக்கமேன்மையுடையவன்.

கரந்துநில் லாக்கள்வ னேநின்றன் வார்கழற் கன்பெனக்கு
நிரந்தர மாயரு ளாய்நின்னை யேத்த முழுவதுமே. (௬)

முழுவதுங் கண்டவ னைப்படைத் தான்முடி சாய்த்துமுன்னாள்
செழுமலர் கொண்டெங்குந் தேடவப் பாலனிப் பாலெம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடக மாடிக் கதியிலியாய்
உழுவையின் றோலுடுத் துன்மத்த மேல்கொண் டுழிதருமே. (௭)

உழிதரு காலுங் கனலும் புனலொடு மண்ணும்விண்ணும்
இழிதரு காலமெக் காலம் வருவது வந்ததற்பின்
உழிதரு காலத்த வுன்னடி யேன்செய்த வல்வினையைக்
கழிதரு காலமு மாயவை காத்தெம்மைக் காப்பவனே. (அ)

பவனெம் பிரான்பனி மாமதிக் கண்ணிவிண் ணோர்பெருமான்
சிவனெம் பிரானென்னை யாண்டுகொண் டானென் சிறுமைகண்டும்
அவனெம் பிரானென்ன நானடி யேனென்ன விப்பரிசே
புவனெம் பிரான்றெரி யும்பரி சாவதி யம்புகவே. (௯)

புகவே தகேனுனக் கன்பருள் யானென்பொல் லாமணியே
தகவே யெனையுனக் காட்கொண்ட தன்மையெப் புன்மையரை
மிகவே யுயர்த்திவிண் ணோரைப் பணித்தியண் ணாவமுதே
நகவே தகுமெம் பிரானென்னை நீசெய்த நாடகமே. (௰)

(௬) நிரந்தரம் - சதாகாலம். (௭) கண்டவன் - படைத்த பிரமன்; படைத்தான்—உந்திக்கமலத்தில் தோற்றுவித்த விஷ்ணு; அப்பாலன்- அப்பாலாயிருந்தவன்; கழுது - பேய்; உழிதரும் - திரியாநிற்பன். இதனால் இவன் சுடுகாட்டில் வசித்தலும், என்பு மாலை தரித்தலும், பேய்களை நேசித்தலும், பிணங்களைச் சூலத்தி லேந்துதலும், பித்தனாய்த் திரிதலுமே இலக்கணமாக உடையவன். இத்தனையும் கருணையின்பாற் பட்டதே.(அ) உழிதருகால்—உழலாநின்ற காற்று; இழிதரு காலம் - அழிகின்ற சர்வஸம்ஹாரகாலம்; உழிதருகாலத்த - நிலைத்திருக்கும் காலதத்துவத்தையுடையவனே; கழிதரு - கழித்தருளல் வேண்டும். (௯) பவன் - எல்லாவற்றிற்கும் பிறப்பிடமாயுள்ளவன்; மதிக்கண்ணி - ஒருகலைமாலை, (மதி மலர்மாலையைப்போல் வளைந்திருப்பதால் கண்ணி எனப்பட்டது). பரிசு - விதம்; புவன் – ஸ்வயம்பு; பரிசு - வழி. (௰) பொல்லா - பொள்ளா (போழ்க்காத);தகவே- தகுதியோ; உயர்த்தி-உயர்த்துகின்றாய்; பணித்தி -தாழ்த்துகின்றாய்; அண்ணா-சார்தற்கரியவனே;அமுதே-நாசமற்றவனே;நாடகம்-கூத்து.

## உ - வது அறிவுறுத்தல்.

ஆதாவது :—பொறியோடே கூட்டுதல், அருள்தரிசனம், குரு தரிசனம்.

---

### தரவுகொச்சகக்கலிப்பா.

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே. (கக)

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே. (கஉ)

---

(கக) இந்தப்பாசுரத்தின் முதலிரண்டடியில் கூறியுள்ள தாழ்வைச் சுவாமிகளின்மீது ஏற்றுதல் கூடாமை. ஏனெனின், சுவாமிகள் வைதிகசைவமரபு மயங்காவண்ணம் பக்திநெறியின்திறத்தை உலகறிய நடத்திக்காட்டவந்த குருமூர்த்தமாதலின் ஆன்மாக்கள் தத்தம் பக்குவநிலைக்கீடாக உண்மையுணர்ந்து வழிபட்டுய்யும்வண்ணம் அவ்வாறு தமது தமிழ்வேதசூக்தியில் ஓதியருளினார். அது எது போலுமெனின், இறைவன்வாக்காகிய ஆரியவேதத்தில் ஆண்டவன் தன்னைப்பன்முறையும் புகழ்ந்துகொண்டதோடு ஆன்மநிலையினுந் தன்னைவைத்து, ஆண்டவனாகிய தன்னை ஆன்மாக்கள் பரவித் துதித்து உய்யுமுறைகாட்டியருளினபடியாம். இவ்வாறே சுவாமிகள் தன்னைத்தாழ்வாகக் கூறிக்கொண்ட இடங்களிலெல்லாம் அமைத்துக்கொள்க. அவர்கள் அவ்வாறு எடுத்துக்கூறியது ஜீவசுபாவப் பொதுத்தன்மைநோக்கியே. நடித்து-அபிநயித்து; வீடகம் - முத்தியுலகம்; ஆடகம் - பொன்; இடையறா அன்பு - இடையீடில்லாத அன்பு. அது தைலதாரையைப் போன்றது. எவ்வாறெனின், ஒருயௌவன ஸ்திரியின்மீது வைத்த ஓர் காமுகனது அடங்காத காதல் அவன் எத்தொழிலைச்செய்தாலும், எதவத்தைப்பட்டாலும் அவனதுமனம் அவளையேபற்றிச் சிந்தித்துக்கொண்டிருத்தல் போன்றதாம்; அகத்துடு - மனத்துள். (கஉ) ஏதும் - சிறிதும்; வானேயும் - விண்ணுலக ஆளுகையையும்; என்றே என்று - எக்காலமோ வென்று.

வருந்துவனின் மலர்ப்பாத மவைகாண்பா னுயடியேன்
இருந்துநல மலர்புனையே னேத்தேனுத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தா யருளமுதம் புரியாயேல்
வருந்துவனற் றமியேன்மற் றென்னேநா னுமாறே. (கங)

ஆமாறுன் றிருவடிக்கே யகங்குழையே னன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் றிருக்கோயி றூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே. (கச)

வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி யுண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை யென்சொல்லி வாழ்த்துவனே. (கரு)

வாழ்த்துவதும் வானவர்க டாம்வாழ்வான் மனநின்பால்
தாழ்த்துவதுந் தாமுயர்ந்து தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந் தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான் யானுமுன்னைப் பரவுவனே. (கசு)

---

(கங) இருந்தும் - உயிரோடிருந்தும்; குனித்தாய் - வளைத்தாய்; நல் - மிகவும்; தமியேன் - தன்னந்தனியேன்; மற்று என் - வேறுயாது; நான் ஆம் ஆறு - நான் ஆளாகும்வகை. (கச) குழையேன் - இளகேன்; உருகேன் - கரையேன்; தூகேன் - அலகிடேன்; சாம்ஆறே - இறக்கும்வழியிலே; சதுராலே - தொண்டின்உறைப்பினாலே; சார்வானே - அடையப்படுபவனே. (கரு) இப்பாசுரத்தில் வானாகி என்றதுமுதல் உயிராகி என்றது வரையிலும் இறைவன் உயிரில்பொருளினும் உயிரினும் புணர்ந்துநின்றான் என்பதேயன்றி அவைகளாய் விரிந்தானென்பதன்று. எல்லாப்பொருள்களினும் இறைவனைக்காணும் அரியபெரியகொள்கை சைவசித்தாந்தத்துக்கே சிறப்பாயுள்ளது. அதுதான் பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தம். கண்டனவெலாமோனவுருவெளியதாகும். உண்மையும்ஆய்-பிரபஞ்சசொரூபமுமாய்; இன்மையும்ஆய்-பிரபஞ்சாதீதமாய்; கோன்ஆகி - பிரபஞ்சபதியாய்; கூத்தாட்டுவான் ஆகி - பிரபஞ்சாந்தர்யாமியாய். (கசு) மதுகரம் - வண்டுகள் (மது - தேன்; கரம் - செய்தல்); தார் - கொன்றைமாலை.

பரவுவா ரிமையோர்கள் பாடுவன நால்வேதம்
குரவுவார் குழன்மடவாள் கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பி னடியார்கண் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள் காண்பாரோ வரியானே. (கஎ)

அரியானே யாவர்க்கு மம்பரவா வம்பலத்தெம்
பெரியானே சிறியேனை யாட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன் வியந்தலறே னயந்துருகேன்
றரியேனு னுமாறென் சாவேனான் சாவேனே. (கஅ)

வேனில்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலா நின்றுருகப் புகுந்தாண்டா னின்றுபோய்
வானுளான் காணாய்நீ மாளாவாழ் கின்றாயே. (கக)

வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றா யாழாமற் காப்பானை யேத்தாதே

(கஎ) குரவு-குராமலர்; மடவாள்-இளமையையுடையவள் (உமாதேவியார்); விரவுவார்-கலந்தவர்கள்; அரவு-அராவு; காண்பார் - தரிசிப்பார்; அரியானே - திரிகரணங்களுக்குமெட்டாதவனே. (கஅ) அம்பரவா-சிதாகாசத்திலிருப்பவனே; கழற்கீழ் - பாதங்களில்; ஆம் ஆறுஎன் - ஆளாதும்விதம்யாது. (கக) இந்தப்பாசுரத்தின் முதலிரண்டடியில் சுவாமிகள் தன்னை அவ்வாறு கூறிக்கொண்டது பிறர் உய்யும் பொருட்டேயாம். இளமைதொட்டு இம்மைமறுமை இன்பங்களில் உவர்ப்புற்று அறத்துறவியாயிருந்த தாம் இல்லறத்தானைப்போல் கூறிக்கொண்டார். நித்திய மாப்பிள்ளையாயிருந்த சுந்தரமூர்த்திகள் "கீளார் கோவணமுந் திருநீறுமெய்ப் பூசியுன்றன், றாளேவந் தடைந்தேன் தலைவாவெனை என்றுக்கொள்நீ" என்று தன்னைத் துறவியினும் அதிகமாகக் கூறிக்கொண்டார். சமணச்சார்பிலிருந்த நாவுக்கரசரும், யார் எந்தச்சமயத்திலிருந்து எதை வழிபட்டாலும் முடிவில் அவ்வழிபாடு சிவபெருமானையே சாரும் என்பதாக "சலம் பூவொடு தூபமறந்தறியேன் தமிழோடிசைபாடல் மறந்தறியேன், நலந்தீங்கிலுமுன்னை மறந்தறியேன் உன்னாமமென்னாவில் மறந்தறியேன்." என்று தன்னைச்சிவாக்ரேசராகக் கூறிக்கொண்டார். இவற்றையெல்லாம் உய்த்துணரின் இவர்களது செய்கையும் வாக்கும் பரப்பிரயோசனார்த்தமென்றே உணரக்கிடக்கின்றது. வேனில்-வசந்தகாலம்; வேள் - மன்மதன்; நகை - பல்; பானல் - குவளைமலர்.

சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக் கடலாய வெள்ளத்தே. (உ0)

## ரு - வது சுட்டறுத்தல்.

அதாவது :—தன்செயலறுத்தல்.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சா
உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங் கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே. (உக)

வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேட னென்பாய் போல
இனையனா னென்றுன்னை யறிவித் தென்னை
ஆட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை
அனையநான் பாடேனின் றாடே னந்தோ
அலறிடே னுலறிடே னாவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயினானே. (உஉ)

ஆயநான் மறையவனு நீயே யாதல்
அறிந்தியா னியாவரினுங் கடைய னாய

(உ0) வாழ்கின்றாய் - (சமரசஞான சன்மார்க்க நன்னெறியில் நில்லாமல்) வாழ்கின்றாய்; வாழாத - அந்நன்னெறியில் நின்று வாழாத. (உக) வெள்ளம்தாழ் - கங்கைதங்கிய; ஆண்டாய்க்கு - ஆண்ட நின்பொருட்டு; உள்ளந்தாள் நின்று - உள்ளங்காலிலிருந்து; உருகாதால் - உருகாமையானும்; பாயாதால் - பாயாமையானும். (உஉ) புகுந்து வலியப்புகுந்து; போது - வா; உலறிடேன் - காயேன்; முனைவனே - முன்னோனே. நான் ஆன ஆறுமுடிவும் - நான் உண்டானவிதமும் முடியும்விதமும். (உ௩) ஆய - ஆராயப்பட்ட;

நாயினே னாதலையு நோக்கிக் கண்டு
நாதனே நானுனக்கோ ரன்ப னென்பேன்
ஆயினே னாதலா லாண்டு கொண்டாய்
அடியார்தா மில்லையே யன்றி மற்றோர்
பேயனே னிதுதானின் பெருமை யன்றே
எம்பெருமா னென்சொல்லிப் பேசுகேனே. (௨௩)

பேசிற்றா மீசனே யெந்தா யெந்தை
பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்றான் றிருநீறே நிறையப் பூசிப்
போற்றியெம் பெருமானே யென்று பின்றா
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே யவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே யெந்தா யந்தோ
என்னைநீ யாட்கொண்ட வண்ணந் தானே. (௨௪)

வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்ற
நேகனேக னணுவணுவி லிறந்தா யென்றங்
கெண்ணந்தான் றடுமாறி யிமையோர் கூட்டம்
எய்துமா றறியாத வெந்தா யுன்றன்
வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமா னென்சொல்லிச் சிந்திக் கேனே. (௨௫)

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் றிருப்பாதப் போதுக் காக்கி

---

நோக்கிக்கண்டு - நன்றாயறிந்து. (௨௪) பேசில்-சொன்னால்; பூசில் - பூசினால்; நிறையப்பூசி-சர்வாங்கமும் உத்தூளனஞ்செய்து; பின்றா - பிறகிடாத; அவாவெள்ளம் - ஆசைப்பெருக்கு; என்னை - என்னையோ. (௨௫) வண்ணம் - நிறம்; சேயது அன்று - செந்நிறத்தது அன்று; வெளிது அன்று - வெண்ணிறத்தது அன்று; அநேகன் - பலவாந்தன்மையன்; இறந்தாய் - இருப்பாய்; அங்கு - அப்படியே; வழி - உய்யும்வழி; காத்து - தடுத்து. (௨௬) ஆர - அநுபவிக்க;

வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே. (உசு)

தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலால்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லல்
கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்கே. (உஎ)

கேட்டாரு மறியாதான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. (உஅ)

---

வந்தனை - எழுந்தருளி வந்தனை; விச்சை - வித்தை; மால் - பழமை; அமுதம் - இறவாத; இரண்டும் இல் இ - இம்மை மறுமைப் பயனாகிய இரண்டும் இல்லாத இந்த. (உஎ) பௌவம் - கடல்; எவ்வம் - துன்பம்; காலால் - காற்றால்; வான் - பெரிய; புணை - தெப்பம்; மல்லல் - வளப்பம்; கரை - முத்திக்கரை; (உஅ) கேட்டாரும் - அழிவினையுடைய எவராலும்; கேடு - மரணம்; கிளை - உறவினர்; தவிசு - ஆசனம்; எல்லாங்காட்டி - தன்னுடைய சொரூப தடஸ்த லக்ஷணங்களெல்லாவற்றையுங்காட்டி; எல்லாங்கேட்பித்து - வேதசிவாகமங்களின் இரகசியப்பொருள்களெல்லாவற்றையும் கேட்பித்து; விச்சை - வித்தை.

விச்சைதா னிதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாத லடியார்தம் மடியனுக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டா னமுத மூறி
அகநெகவே புகுந்தாண்டா னன்பு கூர
அச்சனுண் பெண்ணலியா காச மாகி
ஆரழலா யந்தமா யப்பா னின்ற
செச்சைமா மலர்புரையு மேனி யெங்கள்
சிவபெருமா னெம்பெருமான் றேவர் கோவே. (உகூ)

தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாது மஞ்சோம்
மேவினே மவனடியா ரடியா ரோடும்
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. (ருய)

---

## ச - வது ஆத்துமசுத்தி.

அதாவது:—அனுபவத்தழுந்தல்.

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஆடு கின்றிலை கூத்துடை யாள்கழற் கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை பணிகிலை பாதமலர்

---

(உகூ) விச்சை - வித்தை; மிகுகாதல் - மிக்க அன்பு; அச்சன் - அத்தன், தந்தை; அந்தம் - முடிவிடம், பிரகிருதி; செச்சை - செச்சைமலர்; மாமலர் - தாமரை; புரையும் - நிகர்த்த. (ருய) தேவர்கோ - இந்திரன்; பொழில்கள் - உலகங்கள்; மூர்த்தி - சகளமூர்த்தி; யாவர்கோன் - யாவர்க்குந்தலைவன்; மேவினோம் - கூடினோம்; குடைந்து - கவிந்து.

(ருக) ஆடுகின்றிலை கூத்து - கூத்து ஆடுகின்றாயில்லை; உடையான் - எப்பொருளையும் எவ்வுயிரையும் உடைமையாகவும் அடிமையாகவும் உடையவன்; சூட்டுகின்றதும் இலை - சூட்டுவதும்

சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை செய்வதொன் றறியேனே.()

அறிவி லாத வெனைப்புகுந் தாண்டுகொண் டறிவதை யருளிமேல்
நெறியெ லாம்புல மாக்கிய வெந்தையைப் பந்தனை யறுப்பானைப்
பிறிவி லாதவின் னருள்கள்பெற் றிருந்துமா றுடுதி பிணநெஞ்சே
கிறியெ லாமிகக் கீழ்படுத் தாய்கெடுத் தாயென்னைக் கெடுமாறே.

மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையையெம் மதியிலி மடநெஞ்சே
தேறு கின்றில மினியுனைச் சிக்கெனச் சிவனவன் றிரடோண்மேல்
நீறு நின்றது கண்டனை யாயினு நெக்கிலை யிக்காயம்
கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது கேட்கவுங் கில்லேனே. (௫௩)

கிற்ற வாமன மேகெடு வாயுடை யானடி நாயேனை
விற்றெ லாமிக வாள்வதற் குரியவன் விரைமலர்த் திருப்பாதம்
முற்றி லாவிளந் தளிர்பிரிந் திருந்துநீ யுண்டன வெல்லாமுன்
அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையு மளவறுக் கில்லேனே. ()

அளவ றுப்பதற் கரியவ னிமையவர்க் கடியவர்க் கெளியானங்
களவ றுத்துநின் றாண்டமை கருத்தினுட் கசிந்துணர்ந் திருந்தேயும்
உளக றுத்துனை நினைந்துளம் பெருங்களன் செய்தது மிலைநெஞ்சே
பளக றுத்துடை யான்கழல் பணிந்திலை பரகதி புகுவானே. (௫௫)

புகுவ தாவதும் போதர வில்லதும் பொன்னகர் புகப்போதற்
குகுவ தாவது மெந்தையெம்பிரானென்னை யாண்டவன் கழற்கன்பு

---

செய்கின்றிலை; துணை - ஒப்பு; பிணம் - பேய். (௫௨) நெறி - மார்க்கம்; புலமாக்கிய - அறிவுறுத்திய; பந்தனை - பிறவித்தளை; கிறி - பொய். (௫௩) கிடந்து - சும்மாவிருந்து; அனையை - அத்தன்மைத்தாயினை; கீறு - பிளவு; பரிசு - தன்மை; கில்லேன் - சம்மதியேன். (௫௪) கிற்று அவாம் - வேண்டியவற்றையெல்லாம் அவாவும்; முற்றிலா - முதிராத, மிகவும்; அளவு அறுக்கிலேன் - அளவுபடுத்தவல்லனல்லேன். (௫௫) நங்களவு அறுத்து - நங் கள்ளத் தன்மையைச் சேதித்து; உளகறுத்து - உள்ளகுறைகளை முனிந்து; பெருங்களன் - பெரியவஞ்சகம்; பளகுஅறுத்து - குற்றங்களை யொழித்து. (௫௬) போதரவு - மீளுதல்; பொன்நகர் - சிவலோகம்; உகுவது - மனங்குழைவது; நித்தலும் - நாடோறும்.

நெருவ தாவது நித்தலு மமுதொடு தேனொடு பால்கட்டி
மிகுவ தாவதுமின்றெனின் மற்றிதற்கென்செய்கேன்வினையேனே.

வினையென் போலுடை யார்பிற ராருடை யானடி நாயேனைத்
தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப் பன்றுமற் றதனாலே [ன்
முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்துநான் முட்டிலேன் றலைகீறே
இனையன்பாவனை யிரும்புகன்மனஞ்செவியின்ன தென்றறியேனே.

ஏனை யாவரு மெய்திட லுற்றுமற் றின்னதென் றறியாத
தேனை யானெயைக் கரும்பினின்றேறலைச்சிவனையென்சிவலோகக்
கோனை மானன நோக்கிதன் கூறனைக் குறுகிலே னெடுங்காலம்
ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு வேனுயி ரோயாதே.(௩௮)

ஓய்வி லாதன வுவமனி லிறந்தன வொண்மலர்த் தாடந்து
நாயி லாகிய குலத்தினுங் கடைப்படு மென்னைநன் னெறிகாட்டித்
தாயி லாகிய வின்னருள் புரிந்தவென் றலைவனை நனிகாணேன்
தீயில்வீழ்கிலேன் றிண்வரையுருள்கிலேன்செழுங்கடல்புகுவேனே.

வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடு மதுதனை நினையாதே
மானி லாவிய நோக்கியர் படிறிடை மத்திடு தயிராகித்
தேனி லாவிய திருவருள் புரிந்தவென் சிவனகர் புகப்போகேன்
ஊனி லாவியை யோம்புதற் பொருட்டினு முண்டுடுத்திருந்தேனே.

---

(௩௭)தினையின்பாகம்-தினையளவு;முட்டிலேன்-முட்டிக்கொள்ளேன் பாவனை - சிந்தனை. (௩௮) ஏனையயாவரும் - மற்றையபெருந்தேவர்களும்; தேறலை - சாற்றை; ஓயாதே - அழியாதோ. (௩௯) ஓய்வு - அழிவு; நாயில் ஆகிய குலம் - நாய்ச்சாதி; நனி - மிகவும்; வரை - மலை. (௪௰) படிறு - பொய், வஞ்சகம்; தேன்நிலாவிய - தேனினும் இனிமைபொருந்திய; ஓம்புதல் - வளர்த்தல்; இனும் - இன்னமும். வேள் - மன்மதன், இவன் கருவேள், விஷ்ணுமூர்த்தியின் மானஸ புத்திரன். (ஈண்டு குறிப்பிட்டது இவனையே). மற்றொரு பொருள்:—வேள் - முருகன், இவன் செவ்வேள், ஸ்ரீகண்ட ருத்திரமூர்த்தியின் நெற்றிக்கண்ணில் தோன்றினவன். இவ்விருவருக்குமுள்ள பேதம் யாதெனின்; **கருவேள்** - தனதுருவால் தன்றந்தையுருவங் கருப்பெனக்காட்டுவன். **செவ்வேள்** - தனதுருவால் தன்றந்தையுருவஞ் சோதிச்செவ்வுரு எனக்காட்டுவன். (உ) **கருவேள்** - தனது அனங்கன் என்னும்பெயரால் தன்றந்தைக்கு அதையுண்டாக்கும் ஆற்றலில்லையெனக்காட்டுவன். **செவ்வேள்** - தனது

## ரு - வது கைம்மாறுகொடுத்தல்.

அதாவது:—தன்னைச் சிவனிடத்திலே கொடுத்தல்.

### கலி விருத்தம்.

இருகை யானையை யொத்திருந் தென்னுளச்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெவ்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே. (சச)

உண்டொ ரொண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டி ராணலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலே னென்னகண் மாயமே. (சஉ)

மேலை வானவ ரும்மறி யாததோர்
கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோங்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே. (சஙு)

---

வேலிறைவன் என்னும் பெயரால் தன் தந்தைக்கு எல்லா வன்மையு முள எனக்காட்டுவன். (ங) **கருவேள்** - தன்தொழிலால் தன் தந்தையை மாயோன் எனக்காட்டுவன். **சேவ்வேள்** - தன்தொழிலால் தன் தந்தையை மாயாரஹிதனெனக்காட்டுவன். (ச) **கருவேள்** - ஆத்மாக்களுக்கு என்றும் பந்தமங்கையின் இச்சையை எழுப்புவன். **சேவ்வேள்** - ஆத்மாக்களுக்கு என்றும் மோக்ஷமங்கையின் இச்சையை எழுப்புவன். (ரு) **கருவேள்** - ஆத்மாக்களை சிற்றின்பத் தழுத்துவன். **சேவ்வேள்** - ஆத்மாக்களை பேரின்பத்தழுத்துவன். இவ்வுண்மையால் கற்றவர்கள் எக்காலமும் வெறுப்பது **கருவேளையே.** அவர்கள் நிரந்தரம் விரும்புவது மாறாத இளமையும், நீங்காத ஞான மணத்தையும், அழியாத அழகையுமுடைய **முருகன்** என்னுஞ் **சேவ்வேளையே.**

(சக) இருந்து - (குருமூர்த்தமா யெழுந்தருளி) இருந்து; அக்கருவை - அந்த மகிமைப்பொருளை; எவ்வமே - துன்பமே; கிற்பன் - அடியேன்; உண்ணகிற்றிலேன் - நுகரப்பெற்றிலேன். (சஉ) ஒண் - சிறந்த; ஒள்கிலை - அறிந்துகொள்ளக் கூடாமை; கண் மாயமே - கண்ணை மறைக்கும் மாயவித்தையோ. (சஙு) மேலை - விண்ணுலகம்; வந்துபோம் - தோற்றி யொடுங்கும். (சச) கட்கு - அகக்

காண லாம்பர மேகட் கிறந்ததோர்
வாணி லாப்பொரு ளேயிங்கொர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே. (௪௪)

போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்து நின்
றேற்றன் மிக்கவன் பாலழைக் கின்றிலேன்
ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்ற மன்னதொர் கொள்கையென் கொள்கையே. (௪௫)

கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டு மறாமலர்க் கொன்றையான்
நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும்
எள்ளு மெண்ணெயும் போனின்ற வெந்தையே. (௪௬)

எந்தை யாயெம் பிரான்மற்று மியாவர்க்குந்
தந்தை தாய்தம் பிரான்றனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவருஞ்
சிந்தை யாலு மறிவருஞ் செல்வனே. (௪௭)

செல்வ நல்குர வின்றிவிண் ணோர்புழுப்
புல்வ ரம்பின்றி யார்க்கு மரும்பொருள்
எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்
கல்வகைமனத் தேன்பட்ட கட்டமே. (௪௮)

கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ
றிட்ட வன்பரொ டியாவருங் காணவே

---

கண்ணுக்கு; (கட்கு) இறந்தது-ஊனக்கண்ணுக்குப் புலப்படாதது; பார்ப்பு - பறவைக்குஞ்சு; பாணனேன் - பாழ்நனேன், பாழான வணுகிய நான்; படிறு ஆக்கை - வஞ்சகம், பொய் முதலியவை நிறைந்தவுடல்; புலன் போற்றி - ஐம்பொறிகளைக்காத்து (௪௫) எதிர் ஏற்று வந்து - எதிர்த்து வந்து; கூற்றம் - கூறுபடுத்தல், அது உடலுயிரைப் பிரித்தல் (இயமன்). (௪௬) கொள்ளுங்கில் எனை - அறிந்து கொள்ளுஞ் சக்தியில்லாத வென்னை; அனபர் இல் - அன்பரைப்போல; கூய்ப்பணி - கூவிப்பணிகொள்; கள் - தேன்; நள் - நடு; நின்ற - நீக்கமற நிறைந்து நின்ற. (௪௮) பட்ட கட்டம் - அடைந்த துன்பம். (௪௯) கட்டறுத்து - பிறவித்தளையைச் சேதி

பட்டி மண்டப மேற்றினை யேற்றினை
எட்டி னோடிரண் டும்மறி யேனையே. (சக)

அறிவ னேயமு தேயடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டோவெனை யாண்டது
அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்
அறிவ னோவல்ல னோவரு ளீசனே. (ருய)

---

## சு - வது அநுபோகசுத்தி.

அதாவது :—சுகமேலீடு.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஈச னேயென் னெம்மானே யெந்தை பெருமா னென்பிறவி
நாச னேநான் யாதுமொன் றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேயம் பலவனே செய்வ தொன்று மறியேனே. (ருக)

செய்வ தறியாச் சிறுநாயேன் செம்பொற் பாத மலர்காணப்
பொய்யர் பெரும்பே றத்தனையும் பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாத மேவக் கண்டுங் கேட்டிருந்தும்
பொய்ய னேனு னுண்டுடுத்திங் கிருப்பதானேன் போரேறே.(ருஉ)

---

த்து; கண் ஆர ஆண்டு - நயனதீக்ஷைசெய்து ஆண்டு கொண்டு; பட்டி - கள்வன்; எட்டினோடு இரண்டும் அறியேனையே - எட்டு என்னும் எண் வரிவடிவில் அ வடிவாயும், இரண்டு என்னும் எண் வரிவடிவில் உ வடிவாயும் காணப்படுகின்றன. இவ்விரண்டோடு ம் என்னும் எழுத்தைச் சேர்த்தால் ஓம் என்று ஆயிற்று. இவ்வோங்காரத்தையும் அதன் உட்பொருளையும் அறியாத வென்னையே. அதுவுமன்றி, எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தை அறியாத என்னையே எனினும் பொருந்தும். அது எட்டும் இரண்டும் பத்து. அது யகரம்—அந்தயகரம் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் நடுவணின்று ஆன்மாவைக்குறிக்கும். அந்த ஆன்மாவாகிய தன்னைத்தான் அறியாததென்னையே; இதன் விரிவெல்லாம் எமது தனி விஷய சூசனத்தில் காண்க. (ருய) அறிவனே - ஞான உருவினனே; அறிவன் ஆக - அறிவுடையோனாக; அல்லனோ - அறிவிலேனோ.

(ருக) ஒன்று அல்லா - ஒரு பொருளுமல்லாத. (ருஉ) பேறு —

போரே றேநின் பொன்னகர்வாய் நீபோந் தருளி யிருணீக்கி
வாரே றிளமென் முலையாளோ டுடன்வந் தருள வருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதஞ் சேரக் கண்டுங் கண்கெட்ட
ஊரே றாயிங் குழல்வேனோ கொடியே னுயிர்தா னுலவாதே.(ருங)

உலவாக் காலந் தவமெய்தி யுறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்
பலமா முனிவர் நனிவாடப் பாவியேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை யிதுமாய்க்க மாட்டேன் மணியே யுனைக்காண்பான்
அலவா நிற்கு மன்பிலே னென்கொண்டெழுகே னெம்மானே(ருச)

மானேர் நோக்கி யுமையாள் பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே யமுதே கரும்பின் றெளிவே சிவனே தென்றில்லைக்
கோனே யுன்றன் றிருக்குறிப்புக் கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்ப தானே னுடையானே. (ருரு)

உடையா னேநின் றனையுள்கி யுள்ள முருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதஞ் சேரக் கண்டிங் கூர்நாயின்
கடையா னேனெஞ் சுருகாதேன் கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங் கிருப்பதாக முடித்தாயே. (ருசு)

முடித்த வாறு மென்றனக்கே தக்க தேமுன் னடியாரைப்
பிடித்த வாறுஞ் சோராமற் சோரனேனிங் கொருத்திவாய்
துடித்த வாறுந் துகிலிறையே சோர்ந்த வாறு முகங்குறுவேர்
பொடித்த வாறு மிவையுணர்ந்து கேடென் றனக்கே சூழ்ந்தேனே.

தேனைப் பாலைக் கன்னலின் றெளியை யொளியைத் தெளிந்தார்தம்
ஊனை யுருக்கு முடையானை யும்ப ரானை வம்பனேன்

---

துன்பம்; போர் ஏறே - போரில் ஆண் சிங்கமே. (ருங) நகர்வாய்- நகரி னின்றும்; ஊர் ஏறு ஆய்-ஊர்ப்பன்றியைப் போன்று; உழல் - சுழல்; உலவாதே - அழியாமல் (ருச) உலவா - ஒழியா, அளவில்லா; உறுப்பு - உடம்பு; குரம்பை - உடல்; அலவா - துன்புற்று; எழுகேன் - உய்வேன். (ருரு) கூடுவார் - பெறுவோர். (ருசு) உள்கி - நினைத்து; முடை ஆர் - துர்க்கந்தம் நிறைந்த. (ருஎ) சோராமல் - கைகூடாமல்; துகில் இறை - ஆடைசிறிது; பொடித்த - அரும்பின; சூழ்ந்தேன் - செய்து கொண்டேன். (ருஅ) ஊனை - உடலை; உம்பரானை - திருச்சிற்றம்பலவனை, சிதாகாசசொரூபனை.

நானின் னடியே னீயென்னை யாண்டா யென்று லடியேற்குத்
தானுஞ் சிரித்தே யருளலாந் தன்மை யாமென் றன்மையே. (ருஅ)

தன்மை பிறரா லறியாத தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை யாண்டையா புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே யென்னான் செய்கே னெம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி யெந்தா யெங்குப் புகுவேனே.(ருகூ)

புகுவே னெனதே நின்பாதம் போற்று மடியா ருண்ணின்று
நகுவேன் பண்டு தோணோக்கி நாண மில்லா நாயினேன்
நெகுமன் பில்லை நினைக்காண நீயாண் டருள வடியேனும்
தகுவ னேயென் றன்மையே யெந்தா யந்தோ தரியேனே. (கூ௰)

---

## எ - வது காருணியத்திரங்கல்.

அதாவது :—சிவனுடைய வெற்றிப்பாட்டிரங்கல்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தரிக்கிலேன் காய வாழ்க்கை சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி யெங்கள் விடலையே போற்றி யொப்பில்
ஒருத்தனே போற்றி யும்பர் தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி யெங்க ணின்மலா போற்றி போற்றி. (கூக)

போற்றியோ நமச்சிவாய புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய சயசய போற்றி போற்றி. (கூஉ)

போற்றியென் போலும் பொய்யர் தம்மையாட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி நாதனே போற்றி போற்றி

---

(ருகூ) தன்மைபிறரால்அறியாத–தனக்கு அந்நியமாகப் பிறரொருவரும் இல்லையாதலின் அவர்களாலறியப்படாத தன்மை; ஆண்டு-அடிமையாக்கிக்கொண்டு. (கூ௰) பண்டு - பழமையாகிய; தரியேன் - சகியேன். (கூக) வான விருத்தனே – சிதாகாயத்திலிருக்கும் பழையோனே; விடலையே - திண்ணியனே; (கூஉ) புறம் - புறத்தே, போக்கல் - போகவிடாதே; (கூங) இயமானன் - உயிர்; கடவுள் -

போற்றிநின் கருணை வெள்ளப் புதுமதுப் புவனநீர்தீக்
காற்றிய மானன் வான மிருசுடர்க் கடவு ளானே. (௬௩)

கடவுளே போற்றி யென்னைக் கண்டுகொண் டருளு போற்றி
விடவுளே யுருக்கி யென்னை யாண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை யும்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த சங்கரா போற்றி போற்றி. (௬௪)

சங்கரா போற்றி மற்றோர் சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா வல்குற் செவ்வாய் வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க போற்றி மால்விடை யூர்தி போற்றி
இங்கிவாழ் வாற்றகில்லே னெம்பிரா னிழித்திட் டேனே. (௬௫)

இழித்தன னென்னை யானே யெம்பிரான் போற்றி போற்றி
பழித்திலே னுன்னை யென்னை யாளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை யெல்லாம் பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி யும்பர்நாட் டெம்பிரானே. (௬௬)

எம்பிரான் போற்றி வானத் தவரவ ரேறு போற்றி
கொம்பரார் மருங்குன் மங்கை கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத் திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி யென்னை யாளுடை யொருவ போற்றி. (௬௭)

ஒருவனே போற்றி யொப்பி லப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி யெங்கள் கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால் வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி தமியனேன் றனிமை தீர்த்தே (௬௮)

---

(ஆன்மாவின் இருதய குகையிலிருந்துகொண்டு இச்சாஞானக்கிரியைகளை இயக்கிச் செலுத்துகின்ற) முதல்வன், கடவு + உள் = கடவுள் (கடவுதல் - செலுத்துதல்). அன்றியும். கட + உள் = கடவுள் எனப் பிரித்து தத்துவாதீதமாய் எல்லாவற்றையுங்கடந்து நின்ற பொருள் எனலுமாம்; விட - நெகிழும்படி ; உள்உருக்கி - மனத்தை யுருகச் செய்து; உம்பர் - முத்தியுலகம். (௬௫) இழித்திட்டேன் - தாழ்வு படுத்தினேன். (௬௭) கொம்பர் - பூங்கொம்பு ; ஆர் - நுண்ணிய. (௬௮) கோமளம் - இளமை ; வாங்கிட - வளைக்க. (௬௯) தீர்ந்த - சார்புகெட்ட; அன்பாய்-அன்புருவமாகிய; வார்ந்த - ஓங்கியெழுந்த;

தீர்ந்தவன் பாய வன்பர்க் கவரினு மன்ப போற்றி
பேர்ந்துமென் பொய்மையாட்கொண் டருளிடும் பெருமை போற்றி
வார்ந்தநஞ் சயின்று வானோர்க் கமுதமீ வள்ளல் போற்றி
ஆர்ந்த நின் பாத நாயேற் கருளிட வேண்டும் போற்றி. (கூகூ)

போற்றியிப் புவன நீர்தீக் காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற மாகிநீ தோற்ற மில்லாய்
போற்றியெல் லாவுயிர்க்கு மீறாயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்க ளின்னைப் புணர்கிலாப் புணர்க்கையானே.

---

## ௮ - வது ஆனந்தத்தழுந்தல்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

புணர்ப்ப தொக்க வெந்தை யென்னை யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக வன்றி தாக வன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக வங்க ளாள புங்க மான போகமே. (எக)

போகம் வேண்டி வேண்டி லேன்பு ரந்த ராதி யின்பமும்
ஏக நின்க ழலிணைய லாதி லேனெ னெம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து குஞ்சி யஞ்ச லிக்கணே
ஆக வென்கை கண்க டாரை யாற தாக வையனே. (எஉ)

---

ஆர்ந்த - எங்கும்நிறைந்த. (எய்) புணர்கிலா - அடையாத; புணர்க்கையானே - புதுமையை யுடையவனே.

(எக) புணர்ப்பதுஒக்க - ஆண்டான் அடிமையைத் தன்னோடு சேர்த்துக்கொள்வது போல; பூண - தற்போதம் மேலெழாவண்ணம் அழுந்தும்படி; இது - இத்தகைய கிருபாநோக்கம்; புணர்ப்பது அன்று என்றபோது-இலேசில் கிடைப்பதன்று என்றறிந்தபோது; என் இது ஆம்புணர்ப்பு - என்னதாகியிருந்த சகஜமலம்; நின்னோடு என்னோடு - என்னை நின்னோடும்; அதுஆக - அநந்நியமாய்க் கூட்டுவதாகவும்; அன்பு இதுஅன்றுஆக - பிரபஞ்சத்தின்மேல் வைத்த பற்று இப்போது அன்றாகவும்; நின்கழற்கணே புணர்ப்பதுஆக - நின்றிருவடிக்கண்மீளாது நிற்பதாகவும் ஆயின்; புங்கம் ஆன போகமே - (அதனால்) சிவானந்த போகமே உயர்ந்ததாயிற்று. (எஉ) போகம்வேண்டி - அநுபவிக்க விரும்பி; ஏகம்-ஒப்பில்லாத; ஆகம் - தேகம், விண்டு - பிளந்து; கம்பம் - நடுக்கம்; குஞ்சி - சிரசு; தாரை

ஐய நின்ன தல்ல தில்லை மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை பொய்மை யேனெ னெம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த வன்ப ரன்பெ னக்கு மாக வேண்டுமே. (எ௩)

வேண்டும் நின்க ழற்க ணன்பு பொய்மை தீர்த்து மெய்ம்மையே
ஆண்டு கொண்டு நாயினேனை யாவ வென்ற ருளுநீ
பூண்டுகொண் டடிய னேனும் போற்றி போற்றி யென்று மென்றும்
மாண்டு மாண்டு வந்து வந்து மன்ன நின்வ ணங்கவே. (எ௪)

வணங்கு நின்னை மண்ணும் விண்ணும் வேத நான்கு மோலமிட்
டுணங்கு நின்னை யெய்த லுற்று மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க வென்கொ லோநினைப்பதே. (எ௫)

நினைப்ப தாக சிந்தை செல்லு மெல்லை யேய வாக்கினால்
தினைத்த னையு மாவ தில்லை சொல்ல லாவ கேட்பவே
அனைத் துலகு மாய நின்னை யைம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெ னைத்த தெப்பு றத்த தெந்தை பாத மெய்தவே. (எ௬)

எய்த லாவ தென்று நின்னை யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்க ணன்றி மற்றொ ருண்மை யின்மையின்
பைத லாவ தென்று பாது காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்க ணொன்றும் வண்ண மில்லை யீசனே. (எஎ)

---

ஆறதா - நீர்த்தாரை ஆருய்ப்பெருக. (எ௩) நின்னது அல்லது - நின்னுடைய பற்றன்றி; கலந்தது - சேர்ந்திருந்தது; இல்லை-(மெய்) இல்லை. (எ௪) மெய்ம்மையே - உண்மையாகவே; பூண்டுகொண்டு-(உன் திருத்தொண்டை) மேற்கொண்டு; வந்துவந்து - பிறந்து பிறந்து. (எ௫) உணங்கும் - மெலியும்; எய்தல்உற்று - அறியத் தொடங்கி; உண்மை - மெய்ப்பொருள்; விடேங்கள் என்ன - விடோமென்று சொல்ல; இணங்கு-நெருங்கின; என்கொல் நினைப்பது - திருவுளம்பற்றுவது என்னோ. (எ௬) எல்லைஎய - வரம்புண்டாக; எனைத்து எனைத்தது - அது எவ்வளவு அளவினது; எப்புறத்தது - எவ்விடத்தது. (எஎ) எய்தலாவது - அடைதலாவது; பைதல்ஆவது - துன்பமுண்டாம்; ஈது அலாது - இது வல்லாமல்; ஒன்றும் வண்ணம் - கூடும் வகை. (எ௮) முந்தையானகாலம் - முற்

ஈச னேநீ யல்ல தில்லை யிங்கு மங்கு மென்பதும்
பேசி னேனொர் பேத மின்மை பேதை யேனெ னெம்பிரான்
ஈச னேனை யாண்டு கொண்ட நின்ம லாவொர் நின்னலால்
தேச னேயொர் தேவ ருண்மை சிந்தி யாது சிந்தையே. (எஅ)

சிந்தை செய்கை கேள்வி வாக்குச் சீரி லைம்பு லன்களால்
முந்தை யான கால நின்னை யெய்தி டாத மூர்க்கனேன்
வெந்தை யாவி ழுந்தி லேனெ னுள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை யாய நின்னை யின்ன மெய்த லுற்றி ருப்பனே. (எகூ)

இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை யாண்டு கொண்ட நின்னதாள்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ னைக்க லந்து போகவும்
நெருப்பு முண்டி யானு முண்டி ருந்த துண்ட தாயினும்
விருப்பு முண்டு நின்க ணென்க ணென்ப தென்ன விச்சையே.

---

## கூ - வது ஆனந்தபரவசம்.

கலிநிலைத்துறை.

விச்சுக் கேடு பொய்க் காகா தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானா ரெல்லாரும் வந்துன் றாள் சேர்ந்தார்
அச்சத் தாலே யாழ்ந்திடு கின்றே னாரூரெம்
பிச்சைத் தேவா வென்னான் செய்கேன் பேசாயே. (அக)

பேசப் பட்டே னின்னடி யாரிற் றிருநீறே
பூசப் பட்டேன் பூதல ராலுன் னடியானென்
றேசப் பட்டே னினிப்படு கின்ற தமையாதால்
ஆசைப் பட்டே னாட்பட் டேனுன் னடியேனே. (அஉ)

அடியேனல்லேன்கொல்லோதானெனையாட்கொண்டிலைகொல்லோ
அடியா ரானா ரெல்லாரும் வந்துன் றாள்சேர்ந்தார்

---

காலத்தில்; விண்டிலேன்—நெஞ்சு வெடித்திலேன்; எய்தல் உற்று — அடைய உத்தேசித்து. (அ0) கருப்புமட்டு – கருப்பஞ்சாறு; போகவும் – பிரியவும்.

(அக) விச்சு – வித்து, வேர்; இச்சை – அன்பு; பிச்சைத் தேவா – பிக்ஷாடன மூர்த்தியே. (அஉ) பூதலர் – உலகத்தார்;

செடிசே ருடல மிதுநீக்க மாட்டே னெங்கள் சிவலோகா
கடியே னுன்னைக் கண்ணாரக் காணுமாறு காணேனே. (அ௩)

காணு மாறு காணே னுன்னை யந்நாட் கண்டேனும்
பாணே பேசி யென்றன்னைப் படுத்த தென்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே யாரமுதே யத்தா செத்தே போயினேன்
ஏணு ணில்லா நாயினே னென்கொண் டெழுகேனெம்மானே. (அ௪)

மானேர் நோக்கி யுடையாள் பங்கா மறையீ றறியா மறையோனே
தேனே யமுதே சிந்தைக் கரியாய் சிறியேன் பிழைபொறுக்குங்
கோனே சிறிதே கொடுமை பறைந்தேன் சிவமா நகர்குறுகப்
போனா ரடியார் யானும் பொய்யும் புறமே போந்தோமே. (அ௫)

புறமே போந்தோம் பொய்யும் யானு மெய்யன்பு
பெறவே வல்லே னல்லா வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சேர்ந்த வடியார் மற்றொன் றறியாதார்
சிறவே செய்து வழிவந்து சிவனே நின்றாள் சேர்ந்தாரே. (அ௬)

தாரா யுடையா யடியேற் குன்றா ளிணையன்பு
போரா வுலகம் புக்கா ரடியார் புறமே போந்தேன்யான்
ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்திங் குன்றா ளிணையன்புக்
காரா யடியே னயலே மயல்கொண் டழுகேனே. (அ௭)

அழுகே னின்பா லன்பா மனமா யழல்சேர்ந்த
மெழுகே யன்னார் மின்னார் பொன்னார் கழல்கண்டு
தொழுதே யுன்னைத் தொடர்ந்தா ரோடுந் தொடராதே
பழுதே பிறந்தே னென்கொண் டுன்னைப் பணிகேனே. (அ௮)

---

(அ௩) செடி-பாவம்; கடியேன்-கருமையுடையேன் (குரூரன்). (அ௪) பாண் - பாழ்; ஏண் - பெருமை; நாண் - வெட்கம்; எழுகேன் - உய்வேன். (அ௫) பறைந்தேன் - பேசினேன்; புறம் - வெளி; அறவே - (பிறவி) அறும்படியாக; சிறவு - சிறத்தல். (அ௭) போரா - செல்லுதற்கரிய; ஊர்ஆ - ஊர்ப்பசுக்கள்; மிலைக்க - போர்செய்ய; குருட்டுஆ - குருட்டுப்பசு; மிலைத்தாங்கு - போர் செய்தாற்போல; ஆராய் - உரிமையுடையேனாகி. (அ௮) தொடர்ந்தார் - பின்பற்றித் தொடர்ந்த அடியார்; பழுதே - வீணே.

பணிவார் பிணிதீர்த் தருளிப் பழைய வடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி யதுவு மரிதென்றால்
திணியார் மூங்கி லனையேன் வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லை தாராய் பொய்தீர் மெய்யானே. (அகூ)

யானே பொய்யென் னெஞ்சும் பொய்யென் னன்பும்பொய்
ஆனால் வினையே னழுதா லுன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின் றெளிவே தித்திக்கும்
மானே யருளா யடியே னுனைவந் துறுமாறே. (கூ0)

---

(கூ0) அழுதால் பெறலாம்-அன்பினாலே உளங்கசிந்துருகிக்கண்ணீர் விட்டழுதால் அடையலாம். அஃதெவ்வாறெனின், தாயானவள் தன்குழந்தை எத்தகைய குற்றத்தைச்செய்யினும் அது அழுமாயின் அவள் சகியாள். அதுபோல கருவிகரணங்கள் யாவும் நைந்துருகி அன்பே வடிவா யழுதால் அவனும் அவளும் சகியார்களாதலால் இலேசாக அவனைப் பெறலாமென்பது அடிகளார் கருத்தாம். இதனால் மாயாகாரியமாகிய கரணங்கள்யாவும் பொய், கேவலம் ஞானத்தினாலேயே வீட்டை யடையலாமென்பது வீணும். அன்பு கலந்த ஞானமே உய்யும் நெறியாகும். "சிவமே அன்பு அன்பே சிவம்." ஆதலின் ஞானங்கனிந்த நலமாகிய அன்பே சிவநெறியாம். இதையே **செம்மை நலம்** என்று மற்றோரிடத்தில் சுவாமிகள் கூறியுள்ளார். அன்பு முதிரமுதிர உபாசிப்பவன் சொரூபமுழுதும் கருவிகரணங்களோடு அன்பு மயமாய்விடும். அப்போது நான் என்னும் அறிவு அடியோடு நழுவிப்போக முன்னிலையாயிருந்த சொரூபமும் நழுவிவிடும். பிறகு தன்மை முன்னிலையற்ற ஏகசொரூபமாய் (அகண்டமாய்) யாவும் விளங்கும். அதுவே பிரம்மானந்தம். தற்போதத்தால் விளையுந்தீங்கை வேரோடழிப்பதும் இவ்வன்பே. இதுகாரணமாக உண்டாகும் அழுகையே சிவத்தைப் பெறச்செய்யும். இவ்வன்பைக் கைவிட்டுக் கேவலம் ஞானத்தையே பேணுதல் தவக்குறைவாம். ஞானம் வித்தும், அன்பு அதன் முளையுமாமென்பது சுவாமிகள் தீர்மானம். ஆதலாற்றான் சாதனசதுஷ்டயம் கைவரப் பெற்ற பின்னரும் தெய்வ வழிபாடாகிய ஞானச்சரியையாதிகள் நான்கும் அவசியம் வேண்டற்பாற்றென்று வைதிக சைவ **சமரசம்** பகரும். "நான்கு சாதனமு மோர்ந்திட்டு ஆன நெறியாஞ் சரியையாதி சோபானமுறற" என்றதும் இக்கருத்துபற்றியே. இதுவே வைதிக சைவர்களுக்கும் போலி வேதாந்திகளுக்குமுள்ள வேற்றுமை.

## க0 - வது ஆனந்தாதீதம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொ டாளிணை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்
ஈறி லாதநீ யெளியை யாகிவந்
தொளிசெய் மானுட மாக நோக்கியும்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
கடைய னாயினேன் பட்ட கீழ்மையே. (கூக)

மையி லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்
கையி லங்குபொற் கிண்ண மென்றலால்
அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்
மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்
பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே. (கூஉ)

பொருத்த மின்மையேன் பொய்மை யுண்மையேன்
போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியா யருள்செ யன்பரும்
நீயு மங்கெழுந் தருளி யிங்கெனை
இருத்தி னாய்முறை யோவெ னெம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. (கூங)

(கூக) பதப்பரிசுபெற்ற - பக்குவத்தன்மை வாய்ந்த; மெய்ம்மை (பின்னயது) - உண்மைநிலை; கீறு-பிளத்தல்; பட்டகீழ்மையே - உண்டாகிய தீவினைப்பயனே. (கூஉ) மழம் - மேன்மை; அரியை - அருமையுடையாய்; பொய்-அநித்தியமாகிய வுலகம். (கூங) பொருத்தம்-தகுதி, இணக்கம்; போத-வருக; வருத்தம்-அநுதாபம்; அரத்தம்-

இல்லை நின்கழற் கன்ப னென்கணே
    ஏல மேலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
    டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்
எல்லை யில்லைநின் கருணை யெம்பிரான்
    ஏது கொண்டுநா னேது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னு முன்கழல்
    காட்டி மீட்கவும் மறுவில் வானனே. (கச)

வான நாடரு மறியொ ணாதநீ
    மறையி லீறுமுன் றொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
    என்னை யின்னிதா யாண்டு கொண்டவா
ஊனை நாடக மாடு வித்தவா
    உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
    நைய வையகத் துடைய விச்சையே. (கரு)

விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
    விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
    புலைய னேனையுன் கோயில் வாயிலில்
பிச்ச னாக்கினாய் பெரிய வன்பருக்
    குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமர மாயி னுங்கொலார்
    நானு மங்ஙனே யுடைய நாதனே. (கசு)

---

செவ்வரத்தம்பூ; அங்கு-மஹாசிவலோகம். (கச) என்கண் இல்லை—; ஏலம் ஏலும் - மயிர்ச்சாந்து பொருந்திய; மீட்கவும் வல்லை - திரும்பவும் சக்தியுடையை; மறு-மாசு. (கரு) ஈறும்முன் - முடியும் அடியும்; ஏனை நாடு - பூமிபாதலம்; ஊனை நாடகம் - ஆன்மாக்களைப் பிறப்பிறப்புக்களில் அழுத்தும் திருக்கூத்து; ஞான நாடகம் - அவர்களை அவற்றினின்றும் எடுத்துமுத்தியில்விடும் தாண்டவம்; இச்சை நைய- ஆசை ஒழிய. (கசு) வைச்சு வாங்குவாய்-காத்து அழிப்பாய்; நச்சுமாமரம் - பெரிய எட்டிமரம்.

உடைய நாதனே போற்றி நின்னலால்
    பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னேபணி போற்றி யும்பரார்
    தம்ப ராபரா போற்றி யாரினுங்
கடைய னாயினேன் போற்றி யென்பெருங்
    கருணை யாளனே போற்றி யென்னைநின்
அடிய னாக்கினாய் போற்றி யாதியும்
    அந்த மாயினாய் போற்றி யப்பனே. (௧௭)

அப்ப னேயெனக் கமுத னேயா
    னந்த னேயக நெகவள் ளூறுதேன்
ஒப்ப னேயுனக் குரிய வன்பரில்
    உரிய னாயுனைப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னேதுணை
    யாள னேதொழும் பாள ரெய்ப்பினில்
வைப்ப னேயெனை வைப்ப தோசொலாய்
    நைய வையகத் தெங்கள் மன்னனே. (௧௮)

மன்ன வெம்பிரான் வருக வென்னெனை
    மாலு நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன வெம்பிரான் வருக வென்னெனை
    முழுதும் யாவையு மிறுதி யுற்றநாள்
பின்ன வெம்பிரான் வருக வென்னெனைப்
    பெய்க ழற்கணன் பாயெனா வினால்
பன்ன வெம்பிரான் வருக வென்னெனைப்
    பாவ நாசநின் சீர்கள் பாடவே. (௧௯)

பாட வேண்டுநான் போற்றி நின்னையே
    பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்

---

(௧௭) பணி - கட்டளையிடு. (௧௮) வள் ஊறு - வளமாகச் சுரக்கின்ற; துப்பனே - ஞானசொரூபனே; வைப்பனே - சேமநிதியே. (௧௯) மன்ன - தலைவனே; எனை வருக என்—; முன்ன - முன்னவனே; பின்ன - பின்னவனே; பன்ன - புகழ.

காட வேண்டுநான் போற்றி யம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே. (ா)

திருச்சிற்றம்பலம்.



---

(ா) பாடவேண்டும் - காமுகன் எப்பொழுதும் வநி தையைப் பாடுவதுபோல் தேவரீரைப் பாட எனக்கு விரைவும் அவாவும் மிக்குடைமை வேண்டும். கழல்போது - திருவடித் தாமரை; கூடு - உடம்பு; மெய்யர் - மெய்யன்பர், மெய்ப்பொருளை யுணர்ந்தவர்.

# நீத்தல் விண்ணப்பம்.

## பிரபஞ்ச வைராக்கியம்.

## எ - து. பிரபஞ்சத்தை அசத்தெனக் காட்டி யருளிய முறைமை.



உத்தரகோசமங்கையிலருளிச் செயப்பட்டது.

கட்டளைக் கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின்றோல்
உடையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பி ரானென்னைத் தாங்கிக்கொள்ளே

கொள்ளேர் பிளவக லாத்தடங் கொங்கையர் கொவ்வைச்செவ்வாய்
விள்ளே னெனினும் விடுதிகண் டாய்நின் விழுத்தொழும்பின்
உள்ளேன் புறமல்லே னுத்தர கோசமங் கைக்கரசே
கள்ளே னொழியவுங் கண்டுகொண் டாண்டதெக் காரணமே. (உ)

---

(க) கலந்து - வலியவந்தடைந்து; விட்டிடுதி - விட்டுவிடு கின்றாயோ; விறல்-வலி. (உ) கொள் ஏர் பிளவு அகலா-கொள்ளின் அழகாகிய பிளவளவும் நீங்குதலில்லாத, அதாவது மிகவும் நெருங் கின; தடம் - மலை; விள்ளேன் - விட்டுநீங்கேன்; விழு - மேலாகிய; கண்டு - (நிலைமையைப்) பார்த்து. (இந்தப்பாசுரத்திலும் இதன்கீழ் வரும் பாசரங்களினும் சுவாமிகள் தம்மை முழு காமுகனாகவும், இழிந்தோனாகவுங் கூறிக்கொண்டது தம்பொருட்டன்று. உலகை யீடேற்றும் வண்ணம் அவதரித்த அருட்குரவராதலின் இவரது

காருறு கண்ணிய ரைம்புல ஞற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண் டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க வென்னை வளர்ப்பவனே. (௩)

வளர்கின்ற நின்கரு ணைக்கையில் வாங்கவு நீங்கியிப்பால்
மிளிர்கின்ற வென்னை விடுதிகண் டாய்வெண் மதிக்கொழுந்தொன்
றொளிர்கின்ற நீண்முடி யுத்தர கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னு மின்னும் மன்ன தோற்றச் செழுஞ்சுடரே.

செழிகின்ற தீப்புகு விட்டிலிற் சின்மொழி யாரிற்பன்னுள்
விழுகின்ற வென்னை விடுதிகண் டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி யுத்தர கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு தூட்ட மறுத்தனனே. (௫)

மறுத்தனன் யானுன் னருளறி யாமையி லென்மணியே
வெறுத்தெனை நீவிட் டிடுதிகண் டாய் வினை யின்றொகுதி
ஒறுத்தெனை யாண்டுகொ ளுத்தர கோசமங் கைக்கரசே
பொறுப்பரன் றேபெரி யோர்சிறு நாய்கடம் பொய்யினையே. (௬)

பொய்யவ னேனைப் பொருளென வாண்டொன் றுபொத்திக்கொ
மெய்யவ னேவிட் டிடுதிகண் டாய்விட முண்மிடற்று [ண்ட
மையவ னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி யேன்பவந் தீர்ப்பவனே. (எ)

---

திருவாக்குகள் யாவும் ஆன்மாக்கள் உய்தற்குரிய அருண்மொழிகளேயாம். அவற்றிலுள்ள இழிவுகள் அவர் மாட்டணுத்துணையும் எய்தப்பெறுவென்பது ஒருதலை. இவ்வுண்மை சிவபுண்ணிய முதிர்வினர்க்கே தோன்றும். சப்தார்த்த ஞானமுடையார்க்குவிளங்காது). (௩) கார்உறு – கருமை மிகுந்த; வேர் உறுவேனை - வேர் ஊன்றுகிறவென்னை; வார்உறு - கச்சணிந்த. (௪) வாங்கவும் – வளைக்கவும்; இப்பால் - இவ்விடம்; மிளிர் - விளங்கு; மதிக்கொழுந்து - இளஞ்சந்திரன். (௫) விட்டில் - விட்டிற்பறவை; சின் – சில், அற்பம்; அறுகால் – வண்டுகள்; வழி - கெட்டுப்போகும் வழி. (௬) ஒறுத்து – அழித்து. (எ) ஒன்று பொத்திக்கொண்ட – ஒருபொருளை (முத்தியை) மறைத்துக்கொண்ட; மை – கருமை; பவம் – பிறவி, பாவம்.

தீர்க்கின்ற வாறென் பிழையைநின் சீரரு ளென்கொலென்று
வேர்க்கின்ற வென்னை விடுதிகண் டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை யுத்தர கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற வஞ்சொடச் சம்வினை யேனை யிருதலையே. (௮)

இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வல னேந்திப் பொலிபவனே. (௯)

பொலிகின்ற நின்றாள் புகுதப்பெற் றாக்கையைப் போக்கப்பெற்று
மெலிகின்ற வென்னை விடுதிகண் டாயளி தேர்விளரி
ஒலிகின்ற பூம்பொழி லுத்தர கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித் தாய்புர மாறுபட்டே. (௰)

மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண் டாய்வினை யேன்மனத்தே
ஊறுமட் டேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன் மேனி நெடுந்தகையே. (௧௧)

நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள யானைம்புலன்கள்கொண்டு
விடுந்தலகை யேனை விடுதிகண் டாய்விர வார்வெருவ
அடுந்தகை வேல்வல்ல வுத்தரகோசமங் கைக்கரசே
கடுந்தகை யேனுண்ணுந் தெண்ணீ ரமுதப் பெருங்கடலே. (௧௨)

கடலினு ணாய்நக்கி யாங்குன் கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை விடுதிகண் டாய்விட லில்லடியார்

---

(௮) வேர்க்கின்ற - மனம் புழுங்குகின்ற; விரவார் - பகைவர்; தார் - கிண்கிணிமாலை; அஞ்சு - ஐம்புலவாசை; இருதலை - இரண்டுபக்கம். (௯) வியன் - பெருமை; பொருதலை - போர்செய்யும் முனை; வலன் - வலக்கை. (௰) போக்கப்பெற்று - வீணிலே கழிக்கப்பெற்று; அளி - வண்டுகள்; விளரிஒலி - விளரிப்பண்; மாறுபட்டு - பகைத்து. (௧௧) அஞ்சு - பஞ்சேந்திரியங்கள்; ஊறும்மட்டே - சுரக்குந்தேனே; நெடுந்தகை - பெருங்குணத்தையுடையவன். (௧௨) விடும்-(உன்னை விட்டு) நீங்கும்; விரவார் - பகைவர்; வேல் - வேற்போர்; கடுந்தகை - தீக்குணம். (௧௩) கடலினுள் நாய் - ; விடல்அரியேன் - விடுதலில்

உடலில மேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
மடலின்மட் டேமணி யேயமு தேயென் மதுவெள்ளமே. (கங)

வெள்ளத் துணவற் றியாங்குன் னருள்பெற்றுத் துன்பத்தின்றும்
விள்ளக்கி லேனை விடுதிகண் டாய்விரும் பும்மடியார்
உள்ளத்துள் ளாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கரு ளாய்களி யாத களியெனக்கே. (கச)

களிவந்த சிந்தையொ டுன்கழல் கண்டுங் கலந்தருள
வெளிவந்தி லேனை விடுதிகண் டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்
ஒளிவந்த பூங்கழ லுத்தர கோசமங் கைக்கரசே
எளிவந்த வெந்தைபி ரானென்னை யாளுடை யென்னப்பனே.(கரு)

என்னையப் பாவஞ்ச லென்பவ ரின்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண் டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
என்னையொப் பாயெனக் கத்தனொப் பாயென் னரும்பொருளே.

பொருளே தமியேன் புகலிட மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண் டாய்மெய்மை யார்விழுங்கும்
அருளே யணிபொழி லுத்தர கோசமங் கைக்கரசே
இருளே வெளியே யிகபர மாகி யிருந்தவனே. (கஎ)

இருந்தென்னை யாண்டுகொள் விற்றுக்கொ ளொற்றிவை யென்னி
விருந்தின னேனை விடுதிகண் டாய்மிக்க நஞ்சமுதா [னல்லால்
அருந்தின னேமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப் பட்டு மடங்கினர்க்கே. (கஅ)

மடங்கவென் வல்வினைக் காட்டைநின் மன்னருட் டீக்கொளுவும்
விடங்கவென் றன்னை விடுதிகண் டாயென் பிறவியைவே

---

லாதவன்; விடல்இல் - விடுதலில்லாத; இல்லமே - வீட்டின் கண்ணே; மடல் - பூவிதழ். (கச) விள்ளக்கிலேனை-நீங்காதவென்னை; களியாதகளி - எப்பொழுதும் அனுபவிக்காத பெருங்களிப்பு. (கரு) வந்த - பொருந்திய; எளிவந்த - எளிதாயெழுந்தருளிவந்த. (கசு) உன்னையொப்பாய் - உன்னைநீயே நிகர்த்தி. (கஎ) வெருளே - பயங்கரனே; மெய்ம்மையார் - மெய்யன்பர்; வெளி - ஒளி. (கஅ) ஒற்றிவை - அடமானம் வைத்துக்கொள்; விருந்தினன் - புதியன்.

ரொடுங்களைந் தாண்டுகொ ளுத்தர கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித் தாய்வஞ்சிக் கொம்பினையே. (௧௯)

கொம்பரில் லாக்கொடி போலல மந்தனன் கோமளமே
வெம்புகின் றேனை விடுதிகண் டாய்விண்ணர் நண்ணுகில்லா
உம்பருள் ளாய்மன்னு முத்தர கோசமங் கைக்கரசே
அம்பர மேநில னேயனல் காலொடப் பானவனே. (௨௰)

ஆனைவெம் போரிற் குறுந்தூ றெனப்புல னலைப்புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண் டாய் வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை யும்மமு தத்தையுமொத்
தூனையு மென்பினை யும்முருக் காநின்ற வொண்மையனே. (௨௧)

ஒண்மைய னேதிரு நீற்றையுத் தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண் டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென்றுஞ் சேயாய் பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை யாண்மை யனேயலிப் பெற்றியனே.

பெற்றது கொண்டு பிழையே பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண் டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்றன்னைத் தாங்குந ரில்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின் றேனெனக் குள்ளவனே. (௨௩)

உள்ளன வேநிற்க வில்லன செய்யுமை யற்றுழனி
வெள்ளனலேனை விடுதிகண் டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய் புலனின்கட் போதலொட்டா
மெள்ளன வேமொய்க்கு நெய்க்குடந் தன்னை யெறும்பெனவே. ()

---

(௧௯) மடங்க - அழிய; விடங்க - அழகனே. (௨௰) கொம்பர் - கொழு கொம்பு; அலமந்தனன் - சுழன்றேன்; உம்பர் - மேலுலகம். (௨௧) குறும் தூறுஎன - சிறுசெடிபோல. (௨௨) ஒண்மை - ஒட்பம், நன்மை, அழகு முதலியன. (௨௩) பெற்றது - பெற்றஉடல்; வெற றடியேன் - வெறுமையாகிய அடியேன், அடிமைத்தனமில்லாத வன்; உற்று - மிகவும்; உள்ளவனே - உள்ளிருப்பவனே. (௨௪) துழனிவெள்ளன் - ஒலியையுடைய வெள்ளப்பெருக்கில் ஆழ்ந்த வன்; அல்லேனை - (உனக்குரியன்) அல்லாதவென்னை; வியன் - பெரிய; மா - அழகிய; தடக்கை - நீண்ட துதிக்கை; பொள்ளல் - தொளை; நல் - சிறந்த. (௨௫) நாங்கூழ் - நாகப்பூச்சி; கடி - மணம்.

எறும்பிடை நாங்கூ ழெனப்புல னலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண் டாய்வெய்ய கூற்றெடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர் வுற்றவ ரும்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே. (உரு)

பெருநீ ரறச்சிறு மீன்றுவண் டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர் மையேனை விடுதிகண் டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுண் மலைச்சிறு தோணி வடிவின்வெள்ளைக்
குருநீர் மதிபொ தியுஞ்சடை வானக் கொழுமணியே. (உசு)

கொழுமணி யேர்நகை யார்கொங்கைக் குன்றிடைச் சென்றுகுன்றி
விழுமடி யேனை விடுதிகண் டாய்மெய்ம் முழுதுங்கம்பித்
தழுமடி யாரிடை யார்த்துவைத் தாட்கொண் டருளியென்னைக்
கழுமணி யேயின்னுங் காட்டுகண் டாய்நின் புலன்கழலே. (உஎ)

புலன்கடி கைப்பிக்க யானுந்திகைத் திங்கொர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனை விடுதிகண் டாய்விண்ணு மண்ணுமெல்லாம்
கலங்கமுந் நீர்நஞ் சமுது செய்தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை யாயென் றொழுகுலமே. (உஅ)

குலங்களைந் தாய்களைந் தாயென்னைக் குற்றங்கொற் றச்சிலையாம்
விலங்கலெந் தாய் விட் டிடுதிகண் டாய்பொன்னின் மின்னுகொன்
அலங்கலந் தாமரை மேனியப் பாவொப்பி லாதவனே [றை
மலங்களைந் தாற்சுழல் வன்றயி ரிற்பொரு மத்துறவே. (உகூ)

---

போது - தாமரைமலர்; உறும் - சென்ற; உம்பர் (முன்னையது) - தேவர்கள்; உம்பர்(பின்னையது) - மேல்; எய்-அடைந்த. (உசு) அற- வற்ற; துவண் ஆங்கு - வாடினாற்போல; வெரு - அச்சம்; நீர்மை - குணம்; மலை - தடுமாற்றம்; வடிவின் - உருவம்போல; வெள்ளை குருநீர் - வெண்ணிறத்தன்மை; பொதியும் - தவழும்; (உஎ) குன்றி- மெலிந்து; ஆர்த்துவைத்து - பொருத்திவைத்து; கழுமணி - கழு வினமாணிக்கம்; புலன்கழல் - ஞானமாகிய திருவடி. (உஅ) திகைப் பிக்க - பிரமிக்கும்படிச்செய்ய; துலங்கு - கலங்கு. (உகூ) குலம் களைந்தாய் - ஜாதிப்பற்றை அகற்றினவனே; கொற்றம் - வெற்றி ; சிலை - வில் ; விலங்கல் - மலை, மேருமலை ; மலங்கள் ஐந்து - ஐந்து மலங்கள், அவை ஆணவமலம், கன்மமலம் மாயாமலம், மாயையே மலம், திரோதாயிமலம் என ஐவகைப்படும். அவற்றுள் **ஆணவம்** -

மத்துறு தண்டயி ரிற்புலன் றீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்துகுடர்நெடு மாலைசுற்றித்
தத்துறுநீறுட ணரச்செஞ் சாந்தணி சச்சையனே. (௫0)

சச்சைய னேமிக்க தண்புனல் விண்கா ணிலநெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண் டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய னேயொண் படவரவக்
கச்சைய னேகடந் தாய்தடந் தாள வடற்கரியே. (௫௧)

அடற்கரி போலைம் புலன்களுக் கஞ்சி யழிந்தவென்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண் டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு தாக்குங் கறைக்கண்டனே. (௫௨)

---

ஆன்மாவின் வியாபகஅறிவை அணுத்தன்மை செய்யும், அதன் தொழிலை முழுதும் மறைக்கும், அதன்பேரின்பத்துக்குத் தாரகமாயுள்ள திருவருளையும் மறைக்கும், அதற்குத்தேகாதிப் பிரபஞ்சத்திலே விருப்பத்தையுண்டுபண்ணும், அதற்குக் கன்மமலத்திலே இச்சையை எழுப்பும். **கன்மம்** - ஆன்மாவுக்குப் பொய்ம்மை செய்கின்ற சுகதுக்கங்களைத் தோற்றுவிக்கும், ஆன்மா ஆணவமலத்தைப் பொருந்தி மலத்தொழிலிலிருக்கிறபோது அத்தொழில்மயமாயுமிருக்கும். **மாயை** - ஆன்மாவுக்குச் சுகதுக்கங்கள் தோன்றுதற்கு அநுகூலமாகத் தநுகரண புவனபோகங்களைத் தோற்றுவிக்கும். **மாயேயம்** - மாயாகாரியங்களாகிய தநுகரண புவன போகங்களாம். **திரோதாயி** - பெத்தகாலத்தில் ஆன்மாவோடு மறைந்துநின்று ஆணவமலம் நசிக்கும்படிக் காரியப்படுத்தும்: சுழல்வன் - சுழல்வேன், அது நிலையில்லாத கொள்ளிவட்டமும் காற்றூடியும்போல பலமுறை சுழற்சியுற்று ஜனனமரணத்தைப்பொருந்தி பூமி, நரகம், சுவர்க்கங்களிலே போக்குவரவுடைத்தாய்த்திரிவது. இவ்வாறு ஐந்து மலங்களும் ஆன்மாவைப்பந்தித்தலால் அவற்றைத்தம் மேலேற்றிக் கூறியது உபசாரமும் உலகுய்யும் நெறிகாட்டும் பொருட்டுமாம். (௫0) புலன்தீ - புலன்களாகிய நெருப்பு; கதுவ - பற்ற; வித்துறு வேனை - விதையாயிருக்கிற வென்னை; கொத்து உறுபோது - கொத்தாகிய கொன்றைமலரை; மிலைந்து - அணிந்து; தத்துஉறு - பரவிய; சாந்து - சந்தனம்; சச்சையனே - சத்தாயுள்ளவனே, மெய்ப்பொருளே. (௫௧) விச்சை - வித்தை; அடல் - வலி. (௫௨)

கண்டது செய்து கருணைமட் டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண் டாய்நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போற் பணித்துப் பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெனெந் தாய்களை யாய்களை யாய குதுகுதுப்பே. (ருங)

குதுகுதுப் பின்றிநின் றென்குறிப் பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண் டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப் பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக் கயிலைப் பரம்பரனே. (ருச)

பரம்பர னேநின் பழவடி யாரொடு மென்படிறு
விரும்பர னேவிட் டிடுதிகண்டாய் மென் முயற்கறையின்
அரும்பர நேர்வைத் தணிந்தாய் பிறவியை வாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மன மஞ்சிப் பொதும்புறவே.(ருரு)

பொதும்புறு தீப்போற் புகைந்தெரி யப்புலன் றீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண் டாய்விரை யார்நறவம்
ததும்புமந் தாரத்திற் றாரம் பயின்றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தே னவிர்சடை வானத் தடலரைசே. (ருசு)

அரைசே யறியாச் சிறியேன் பிழைக்கஞ்ச லென்னினல்லால்
விரைசேர் முடியாய் விடுதிகண் டாய்வெண் ணகைக்கருங்கண்
திரைசேர் மடந்தை மணந்த திருப்பொற் பதப்புயங்கா
வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை தான்வந் தடர்வனவே. (ருஎ)

---

சுடுதீ - வடவைத்தீ. (ருங) மட்டு - தேன்; மிண்டுகின்றேனை - மதங்கொண்டு திரிகின்ற என்னை; பணித்து - கொடுத்து; கூவித்து - கூவி அழைத்து; கொண்டு - ஏற்றுக்கொண்டு; களை ஆய - அயர்வாகிய; குதுகுதுப்பு - வெதுவெதுப்பு. (ருச) குறிப்பு - நினைப்பு; விதுவிதுப்பேனை - விருப்பஞ்செய்கின்ற என்னை; எதிர்வது - எதிர்ப்படுவது; பயில் - சொல்; விக்கயிலை - அறிவுருவாகிய கயிலைமலை. (ருரு) படிறு - பொய்யொழுக்கம்; விரும்பு அரனே—; முயற்கறையின் அரும்பு - மதிக்கொழுந்து; அர - அரா, பாம்பு; ஐவாய் அரவம்-ஐந்தலை நாகம்; பொரும் - போர் செய்கின்றது; பொதும்புற - பொந்தையடைய. (ருசு) கதுவ - பற்ற; வெதும்புறு - வெப்பமடைகின்ற; நறவம் - தேன்; தாரம் - வல்லிசை; முரல்- சத்தம்; அதும்பும் - அழுந்தும்; அவிர் - பிரகாசிக்கிற; வானம் -

அடர்புல னானிற் பிரிந்தஞ்சி யஞ்சொனல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண் டாய்விரிந் தேயெரியுஞ்
சுடரனை யாய்சுடு காட்டர சேதொழும் பர்க்கமுதே
தொடர்வரி யாய்தமி யேன்றனி நீக்குந் தனித்துணையே. (௫௮)

தனித்துணை நீநிற் கயான்றருக் கித்தலை யானடந்த
வினைத்துணை யேனை விடுதிகண் டாய்வினை யேனுடைய
மனத்துணை யேயென்றன் வாழ்முத லேயெனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும் பொறேன்றுய ராக்கையின் றிண்வலையே. ()

வலைத்தலை மானன்ன நோக்கியர் நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண் டாய்வெண் மதியினொற்றைக்
கலைத்தலை யாய்கரு ணாகர னேகயி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாண்மண வாளவென் வாழ்முதலே. (௬௰)

முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கை வெந்நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண் டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்சிவ னேமுறை யோமுறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங் காவென் சிவகதியே. (௬௧)

கதியடி யேற்குன் கழறந் தருளவு மூன்கழியா
விதியடி யேனை விடுதிகண் டாய்வெண் டலைமுழையில்
பதியுடை வாளரப் பார்த்திறை பைத்துச் சுருங்கவஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக் குஞ்சடை மன்னவனே. (௬௨)

---

பரமாகாசம். (௫௭) நகை - பல்; திரைசேர் மடந்தை - கங்காதேவி; வரை - மலை; அடர்வன - வருத்துகின்றன. (௫௮) நிற்பிரிந்து - நின்னைப்பிரிந்து; அம்சொல் நல்லார் - அழகிய சொல்லினையுடைய மாதர்; விடர் - பிளப்பு, அதாவது பெண்குறி. (௫௯) பொறேன் - ஆற்றேன்; வலை - வலைப்பிணிப்பு. (௬௰) வலைத்தலை - வலையினிடத் தகப்பட்ட; மிலைத்து - பிரமித்து. (௬௧) செவ்வாய்ச்சியர் - சிவந்த அதரத்தையுடைய மாதர்; வெந்நீர் - கொடுங்குணம்; விதலைச்செய் - நடுக்கஞ்செய்; விடக்கு - தசை; ஊன் - நிணம்; மிடைந்த - நெருங்கிய; சிதலை - நோய்; திதலைச்செய் - தேமல்படர்ந்த. (௬௨) கதி - புகலிடம், ஆதரவு; ஊன் - உடம்பு; வெண்டலை முழையில் - வெள்ளியதலையாகிய வளையில்; பதிஉடை - பொருந்துதலையுடைய; இறை - சிறிது; பைத்து - படம்விரித்து. (௬௩) ஒன்றும் - சிறி

மன்னவ னேயொன்று மாறறி யாச்சிறி யேன்மகிழ்ச்சி
மின்னவ னேவிட் டிடுதிகண் டாய்மிக்க வேதமெய்ந்நூல்
சொன்னவ னேசொற் கழிந்தவ னேகழி யாத்தொழும்பர்
முன்னவ னேபின்னு மானவ னேயிம் முழுதையுமே. (௪௩)

முழுதயில் வேற்கண் ணியரென்னு மூரித் தழன்முழுகும்
விழுதனை யேனை விடுதிகண் டாய்நின் வெறிமலர்த்தாள்
தொழுதுசெல் வானத் தொழும்பரிற் கூட்டிடு சோத்தெம்பிரான்
பழுதுசெய் வேனை விடேலுடை யாயுன்னைப் பாடுவனே. (௪௪)

பாடிற்றி லேன்பணி யேன்மணி நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண் டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றி லேன்சிவ னெவ்விடத் தானெவர் கண்டனரென்
றோடிற்றி லேன்கிடந் துள்ளுரு கேனின் றுழைத்தனனே. (௪௫)

உழைதரு நோக்கியர் கொங்கைப் பலாப்பழத் தீயினொப்பாய்
விழைதரு வேனை விடுதிகண் டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி மானிடன் றேய்மதியன்
பழைதரு மாபர னென்றென் றறைவன் பழிப்பினையே. (௪௬)

பழிப்பினின் பாதப் பழந்தொழும் பெய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண் டாய்வெண் மணிப்பணிலங்
கொழித்துமந் தாரமந் தாகினி நுந்தும்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ் சேர்தரு தாரவனே. (௪௭)

---

தும்; மாறு – கைம்மாறு ; மகிழ்ச்சிமின் அவனே - ஆநந்தரூபியாகிய உமாதேவியை யுடையவனே ; கழிந்தவனே - கடந்தவனே; முன்னவனே – எதிர்நிற்பவனே. (௪௪) முழுதுஅயில் – மிக்க கூர்மை; மூரித்தழல் - பெருநெருப்பு; விழுது - வெண்ணெய் ; சோத்து - சோத்தம், அதாவது இழிந்தோர் செய்யும் அஞ்சலி. (௪௫) பச்சூன் - பச்சத்தசை; வீடிற்றிலேன் - விட்டு நீங்காத என்னை ; உழைத்தனன் – வருந்தினேன். (௪௬) உழை - மான்; ஈயின்-ஈக்கு; மழை - நீலமேகம். (௪௭) பழிப்புஇல் - பழிப்பற்ற; விழப்பழித்து- மிகவும் நிந்தித்து ; வெள்மணி - வெண்மணி, அதாவது முத்து; பணிலம்–சங்கு; கொழித்து - ஒதுக்கி; மந்தாகினி - ஆகாயகங்கை; பந்தம்- அழகு; பெருமைதழி – பெருமையைக்கொண்ட; சிறைநீர் - தடுக்கப்பட்ட நீர்; பிறைக்கலம் - பிறையாகிய தோணி ; தாரவனே -

தாரகை போலுந் தலைத்தலை மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண் டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென் னினுத்தர கோசமங் கைக்கரசின்
சீரடியா ரடியானென்று நின்னைச் சிரிப்பிப்பனே. (சஅ)

சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத் தொழும்பையு மீசற்கென்று
விரிப்பிப்ப னென்னை விடுதிகண் டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் றோலுடைப் பிச்சனஞ் சூண்பிச்ச னூர்சுடுகாட்
டெரிப்பிச்ச னென்னையு மாளுடைப் பிச்சனென் றேசுவனே. ()

ஏசினும் யானுன்னை யேத்தினு மென்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண் டாய்செம் பவளவெற்பிற்
றேசுடை யாயென்னை யாளுடை யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின வாலமுண் டாயமு துண்ணக் கடையவனே. (ருய)

திருச்சிற்றம்பலம்.



---

மாலையை யுடையவனே. (சகூ) சீறும்பிழைப்பு - வெறுக்கின்ற வாழ்க்கை. (ருய) காய்சினம் - சுடுகின்ற கோபம்; கடையவன் - கடைந்தவன், திருமால்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெம்பாவை கருத்து.



ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரையும் இரவும், தை மாத முதல் ஆனி மாதம் வரை பகலுமாகத் தேவர்களுக் கொருநாளாகும். ஸம்ஹார காலத்திற்கும் சிருஷ்டி காலத்திற்கும் பிரமாணமாக இந்த ஆறு மாதமும் பிரிந்து நடக்கும். மார்கழிமாதம் உதய காலமாய்ச் சிருஷ்டிக் கேதுவாயிருக்கும்.

பிரபஞ்ச சிருஷ்டியைத் திருவுளத்தடைத்து வயிந்தவ சக்தியைச் சிருஷ்டிக்கத் தொடங்கும் அவசரம் **திருப்பள்ளியெழுச்சி** என வழங்கும்.

இனி, அந்தச் சுத்த மாயை நாதமாகவும், விந்துவாகவும், சாதாக்கியமாகவும், மகேசுரமாகவும், சுத்த வித்தையாகவும், அஞ்சுதலமாயிருக்கும். நாதமாகிய தலத்திலே பரமும், விந்துவாகிய தலத்திலே பரையும் அதிஷ்டிக்கும். சாதாக்கியமாகிய தலத்திலே சதாசிவமூர்த்தி எழுந்தருளியிருப்பர். போகாங்களாகிய அணுசதாசிவர் சேவிக்கவும், இதன்கீழே ஈசுரற்கதிஷ்டானமாகிய மகேசுரதலத்திலே அனந்தாதி அஷ்டவித்தியேசுரர் சேவிக்கவும், இதன்கீழே உருத்திரமூர்த்திக்கு அதிஷ்டானமாகிய சுத்த வித்யாதலத்திலே மந்திரேசுரர் சேவிக்கவும், இப்படி பிரபஞ்ச அநுக்கிரக காரியமாகப் பராசத்தியிற் றோன்றிய ஞானமும் கிரியையும் ஒத்த இச்சையே திருமேனியான சதாசிவமூர்த்தியின் றிருவருளால் அந்த மகேசுர தத்துவத்திலே சத்தி மண்டலத்திலிருந்த மனோன்மணி என்னுஞ் சத்தி சர்வபூத தமனியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி பலப்பிரமதனியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி பலவிகரணியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி கலவிகரணியைப் பிரேரிக்க,அந்தச் சத்தி **காளி**யைப்பிரேரிக்க, அந்தச் சத்தி ரௌத்திரியைப் பிரேரிக்க, அந்தச் சத்தி ஜ்யேஷ்டையைப் பிரேரிக்க, அந்தச் சத்தி **வாமை**யைப் பிரேரிக்க இப்படி

நவசத்திகளின் பிரேரகத்தினுல் மாயையை அதிஷ்டித்திருக்கிற அனந்ததேவராலே அசுத்த மாயை காரியப்பட்டும் பிருதிவி முடிவான பிரபஞ்சகாரியம் நடவாநிற்கும். (பிரேரிக்க - ஏவ, காரியப்படுத்த; அதிஷ்டித்திருக்கிற - நிலைக்களமாகக் கொண்டு செலுத்துகிற.)

## திருவெம்பாவையின் வரலாறு.

**ஸ்ரீமந் மாணிக்கவாசக சுவாமிகள்** திருவண்ணுமலையி லெழுந்தருளியிருந்தபொழுது மார்கழிமாதம் விடியற்காலத்தில் மாதர்கள் ஒருங்கு சேர்ந்து ஒருவர் வீட்டிற்கு ஒருவர் சென்று துயிலெழுப்பிக்கொண்டு கூட்டமாகப் போய்க் குளத்தில் நீராடினுர்கள். அதைக்கண்ட சுவாமிகள் அவர்கள் சொன்னதாக இத்திருவெம்பாவையைப் பாடியருளினுர்.

## திருவெம்பாவையின் பாராயண காலம்.

தினந்தோறும் சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்கு முன்னுவது, இரண்டரை நாழிகைக்கு முன்னுவது, ஒன்றேமுக்கால் நாழிகைக்கு முன்னுவது நித்திரை விட்டெழுந்து புறத்தேசென்று இயன்றவளவு சுத்தி செய்துகொண்டு வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் இருந்து விபூதியை நெற்றியில் தரித்துக் கொண்டு கணபதியையும் குருவையும் நமஸ்கரித்து ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் சக்தியாநுசாரம் ஜபித்து மிக்க சிரத்தாபக்தியோடு இதைப் பாராயணஞ் செய்தல்வேண்டும். அவ்வாறு செய்ய அநுகூலப்படாதாயின் **மார்கழிமாதத்தி**லாவது அவசியஞ் செய்ய வேண்டும். அங்ஙனஞ் செய்வோர் சிவபெருமானது கிருபா கடாக்ஷத்துக்குப் பாத்திரராய் திருவருண்ஞானம் பெறுவரென்பது திண்ணம். ஒவ்வொரு நாளும் விடியற்காலம் இருபத்தைந்து நாழிகை முதல் முப்பது நாழிகை வரையில் தேவகாலமாதலால் அக்காலம் **ப்ராம்ஹ** முகூர்த்தம் எனப்பெயர் பெறும். அக்காலமே சிவத்தியானத்துக்கு மனந்தெளியுங்காலம். அக்காலத்தில் விழித்திருக்கின் நோய்களும் அணுக அஞ்சும். சிவஞானமுமிது.

---

# திருவெம்பாவை.

## சத்தியை வியந்தது.

சத்திகளாவார் - அம்பிகை, கணம்பிகை, கௌரி, கங்கை, உமை, பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என ஒன்பதின்மர். இவர்கள் பிரபஞ்ச சிருஷ்டிக்காதாரமாய் நின்றமையின் வியந்துரைக்கப்பட்டார்கள்.

### திருவண்ணாமலையிலருளிச் செயப்பட்டது.

வெண்டளையான்வந்த இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா.

---

திருச்சிற்றம்பலம்.

ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ்
  சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
  மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
  போதா ரமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனு மாகாள் கிடந்தா ளென்னே யென்னே
  யீதேயெந் தோழி பரிசேலோ ரெம்பாவாய்.

**இது மனோன்மணி** என்னுஞ் சக்தி **சர்வபூததமனி** என்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (க)

---

(க) வாள் - ஒளி; தடம் - பெரிய; கண்வளர்தல் - நித்திரை செய்தல்; வன்செவி - செவிட்டுச்செவி; போது ஆர்அமளி - புஷ்பங்கள் நிறைந்த படுக்கை; ஏதேனும் - யாதொரு பொருளாயினும்; பரிசு - தன்மை; எல் - (யாம்சொல்வதை) ஏற்றுக்கொண்டு; ஓர் - (அதன்பொருளை) ஆராய்வாயாக; எம்பாவாய் - எம்முடைய பதுமை போன்ற பெண்ணே. (உ) பாசம்அன்பு - பேரன்பு; நேர் இழை

பாசம் பரஞ்சோதிக் கென்பா யிராப்பகனும்
பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசீ யிவையுஞ் சிலவோ விளையாடி
ஏசு மிடமீதோ விண்ணோர்க ளேத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் றில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யா மாரேலோ ரெம்பாவாய்.

இது **சர்வபூததமனி** என்னுஞ் சக்தி **பலப்பிரமதனி** என்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (உ)

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
அத்தனா னந்த னமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீ ரீசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
எத்தோநின் னன்புடைமை யெல்லோ மறியோமோ
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை
யித்தனையும் வேண்டு மெமக்கேலோ ரெம்பாவாய்.

இது **பலப்பிரமதனி** என்னுஞ் சக்தியும் அவளோடு வந்தவர்களும் **பலவிகாணி** என்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (௩)

ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே

ஆய் - திருத்தமாகச் செய்யப்பட்ட ஆபரணத்தை அணிந்தவளே; தேசன் - ஒளியுருவன்; அன்புஆர் - அன்புபொருந்திய. (௩) நகை - பல்; அள்ஊறி - வாயூறி; கடை - கதவு; பத்து - பற்று; பாங்கு - உரிமை; புத்து - புதிய; அழகியார் - செம்மையையுடையார். (௪) ஒண் - ஒளி; நித்திலம் - முத்து; மருந்து-அமிர்தம்; விழுப்பொருள்-மேலான பொருள். (௫) மலை - அண்ணமலை, அதாவது இறுமாப்

விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோ நீயேவந்
தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய்.

**இது பலவிகாணி** என்னுஞ் சக்தியும் அவர்களோடு வந்தவர்களும் **கலவிகரணி** என்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (ச)

மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
போலறிவோ மென்றுள்ள பொக்கங்களேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான்
கோலமு நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டும்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
றோல மிடினு முணரா யுணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய்.

**இது கலவிகரணி** என்னுஞ் சக்தியும் அவளோடு வந்தவர்களும் **காளி** என்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (ரு)

மானே நீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவ னென்றலு நாணாமே
போன திசை பகரா யின்னம் புலர்ந் தின்றோ
வானே நிலனே பிறவே யறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே யுருகா யுனக்கே யுறுமெமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய்.

இது **காளி** என்னுஞ் சக்தியும் அவளோடு வந்தவர்களும் **ரௌத்திரி** என்னுஞ் சக்தியை துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (சு)

---

புப்படைத்தோர் சாரவொண்ணமலை; (அண்ணுதல் - சார்தல்); பொக்கங்கள் - பொய்கள்; படிறீ - வஞ்சகியே; சீலம் - குணம்; ஏலம் - மயிர்ச்சாந்து. (சு) நென்னல் - முன்னைநாள், நேற்று;

அன்னே யிவையுஞ் சிலவோ பலவமரர்
உன்னற் கரியா னொருவ னிருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னாவென் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்
என்னானை யென்னரைய னின்னமுதென் றெல்லோமும்
சொன்னோங்கேள் வெவ்வேறா யின்னந் துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய்.

இது **ரௌத்திரி** என்னுஞ் சக்தியும் அவளோடு வந்தவர்களும் **ஜ்யேஷ்டை** என்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. (எ)

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழி லியம்ப வியம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய்
ஆழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை
ஏழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய்.

இது **ஜ்யேஷ்டை** என்னுஞ் சக்தியும் அவளோடு வந்தவர்களும் **வாமை** யென்னுஞ் சக்தியைத் துயிலெழுப்பியதாகக் கூறப்பட்டது. இவ்வாறு நவசக்திகளாலும் பிரபஞ்சகாரியம் நடவா நிற்கும். (அ)

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே

---

புலர்ந்தின்றோ - விடிந்ததில்லையோ; தலை அளித்து - காத்து; வான் - மேன்மை; உறும் - தரும். (எ) உன்னற்கு - நினைத்தற்கு; ஒருவன் - ஒப்பற்றவன்; இருஞ்சீரான் பெரிய சிறப்பமைந்தவன்; என் ஆனை - என்யானை; வாளா - சும்மா. (அ) கோழிசிலம்ப - சேவல்கள்கூவ; சிலம்புங்குருகு - சப்திக்கும் பறவைகள்; ஏழில்- ஏழிசைபோல்; கேழ்இல் - ஒப்பில்லாத; ஆழியான் - சக்கரத்தையுடையவன் (திருமால்); ஏழைபங்காளன் - ஏழைகள் பங்கிலிருப்பவன், உமையொருபாகன். (கூ) முன்னைப் பழம்பொருட்கும் -

உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்
 உன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து
 சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல்
 என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய்.

**இந்தத் திருப்பாசுரமுதல் ஏனையவும்** நவசக்திகள் றம்மிற்றுமே கூறினவாகும். (கூ)

பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
 போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
 வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலும்
ஓத வுலவா வொருதோழன் றொண்டருளன்
 கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகாள்
ஏதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலார்
 ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய். (ய)

மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
 கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி

---

அநாதியாயுள்ளவர்களுக்கெல்லாம்; பின்னை - பின்புள்ள; புதுமைக்கும் - அநுபவிப்பவர்களுக்கும்; பேர்த்தும் அப்பெற்றியனே - மேன்மேலும் நவநவமாகத்தோன்றும் இன்பத்தைக்கொடுப்பவனே; உன்னடியார் - அணுசதாசிவர், அஷ்டவித்தியேசுரர், சப்தகோடி மஹாமந்திரேசுரர்; சொன்னபரிசே தொழும்பாய்ப்பணிசெய்வோம் - சொன்னவண்ணம் தொண்டராகி ஏவல்செய்வோம், அதாவது அவர்களேவலால் அசுத்த மாயையைப் பிரேரியாநிற்போம்; நல்குதியேல் - கிருபை செய்வையாயின். (ய) சொல்கழிவு - சொல்லுக்கு அளவுபடாதது; ஒன்றல்லன் - ஒருவடிவல்லன; உலவா - முடியாத; உளன் - உள்ளத்திலிருப்பவன்; குலத்து - மேன்மையுடைய; பிணாப்பிள்ளை - பெண்பிள்ளை, (வாமை முதலிய சிவசக்திகள்); "ஏது அவன் ஊர், ஏது அவன் பேர், ஆர் உற்றார், ஆர் அயலார், ஏது அவனைப்பாடும்பரிசு" என்றதனால் ஒன்றுமில்லாத பரமசிவத்தைப் பாசபந்திகளான ஜீவர்கள் மும்மலமும் நீங்கப்பெற்று அவரைப்போல் ஒன்றுமில்லாதவர்களானாற்றான் அவரை யடை

ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்கா ணாழல்போல்
செய்யாவெண் ணீருடி செல்வா சிறுமருங்குன்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டில்
உய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய். (கக)

ஆர்த்த பிறவித் துயர்கெடநா மார்த்தாடும்
தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடும்
கூத்தனிவ் வானுங் குவலயமு மெல்லோமும்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய வணிகுழன்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி யிருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். (கஉ)

பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகி னத்தாற் பின்னு மரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியு மெங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்

---

யலாமென்பது கருத்தாம். (கக) மொய்யார் - வண்டுகள் நிறைந்த; முகேர் - ஓர்வகைச்சத்தம்; குடைந்து - முகந்து; செய்யா - செந்நிறமுடையவனே; மருங்குல் - இடை; விளையாட்டில் - லீலையில், அநாயாசமாய் எளிதாகச்செய்யுந்தொழிலில். அது சூரிய சந்நிதானத்தில் தாமரை முகைகள் விகசித்தல்போலச் சந்நிதான விசேஷமாய் நிகழ்வது. அதன்கருத்து என்னையோவெனின், ஆன்மாக்களுக்குப் பெத்தகாலத்துச் சுவர்க்காதிபோகங்களையும் முத்திகாலத்து வீடுபேற்றையும் கொடுத்தற்பொருட்டே. (கஉ) ஆர்த்த - பிணித்த; தீர்த்தன் - பரிசுத்தன்; குரு - வேதாகம சாஸ்திரவுணர்ச்சியும் உண்மை அறிவுமுள்ளோன்; குவலயம் - பூமண்டலம்; வார்கலைகள் - நெடிய ஆடைகள்; அரவம் - சத்தம்; குடைந்து - முழுகி. (கங) அங்கம் - அடையாளம்; குருகு - வளையல், பறவை; அரவம் - பாம்பு, சத்தம்; மலம் - மும்மலம், அழுக்கு; மடு - குளம்; சங்கம் -

கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (கரு)

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி யப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி யந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய். (கசு)

ஓரொருகா லெம்பெருமா னென்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணியாள்
பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும்
ஆரொருவ ரிவ்வண்ண மாட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
யேருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (சரு)

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையா ளிட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்

---

சங்குவளையல்; சிலம்பு - காற்சிலம்பு; பொங்க - பூரிக்க. (கசு) காதார் குழை - காதிலுள்ள குண்டலம்; கலன் - ஆபரணம்; கோதை - பூமாலை; ஆடி - மூழ்கி; வேதப்பொருள் - சிவபிரான்; அப்பொருள் ஆம்ஆறு - சிவபிரான் அந்த வேதப்பொருளாகும் வகை; திறம் - தன்மை; சூழ் - வளைவாகிய; தார் - மாலை; பெய்வளை - மிகுதியா யிடப்பட்ட வளையலையுடைய உமாதேவி. (கரு) ஓரொருகால் - ஒவ்வொருகாலத்திலும்; ஒருகால் - ஒருகாலும்; வாய் ஓவாள் - வாயி னின்றும் நீங்காள்; பனிப்ப-துளிக்க; வித்தகர் - ஞான உருவினர்.

(கஅ) முன் - எதிரிலுள்ள; கடல் - கடல்நீரை; சுருக்கி - உட்கொண்டு; இட்டுஇடையின் - சிற்றிடைபோல; பொலிந்து -

என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா வெங்கோமா னன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கு மின்னருளே
யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய். (கசு)

செங்க ணவன்பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பால்
எங்கு மிலாததோ ரின்பநம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் மில்லங்க டோறு மெழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்க ணரசை யடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (கஎ)

அண்ணா மலையா னடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்
கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணா ரொளிமழுங்கித் தாரகைக டாமகலப்
பெண்ணாகி யாணா யலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (கஅ)

உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் மச்சத்தால்
எங்கள் பெருமா னுனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க

---

பிரகாசித்து; சிலம்பி - சப்தித்து ; குலவி - விளங்கப்பெற்று; முன்னி - முந்தி; அவண் - அவ்விடத்து; நமக்குமுன் - நம்மீது. (கஎ) கொங்குஉண் கருங்குழலி - மணந்தங்கிய கரிய கூந்தலை யுடைய பெண்ணே; கோதாட்டி - சீராட்டி; அம்கண் - கிருபா நோக்கம். (கஅ) வீறு-ஒளி, பெருமை; கண்ஆர் - பெருமை பொருந்திய; இரவி - சூரியன்; கார் - மேகம்; கரப்ப - மறைய; தாரகைகள் - நட்சத்திரங்கள்; பிறங்கு ஒளிசேர் - விளங்குகின்ற ஒளிபொருந்திய. (கக) கங்குல் - இரவு; ஞாயிறு - சூரியன். (உ0) ஆதி - முதன்மை;

எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோ னல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய். (௧௯)

போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் னந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கு மீறா மிணையடிகள்
போற்றிமா லன்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். (௨0)

திருச்சிற்றம்பலம்.



அந்தம் - முடிவிடம்; தோற்றம் - பிறப்பிடம்; போகம் - போகரூபம்; ஈறும் - லயமிடம்; நீர் ஆடு - நீராட்டம்.

செந்தளிர்கள், பூங்கழல்கள், புண்டரிகம் (தாமரை), பொன்மலர்கள் இவையாவும் பாதங்களையே உணர்த்துகின்றன.

தோற்றமாம், போகமாம், ஈறும், காணாத, ஆட்கொண்டருளும் ஆகிய இவ்வைந்தும் பஞ்சகிருத்தியங்களைத் தெரிக்கா நின்றன.

# திருவம்மாவனை.



## ஆநந்தக்களிப்பு

## எ - து. சுகமேலீடு.

திருவண்ணாமலையி லருளிச் செயப்பட்டது.

ஒப்புமைபற்றிவந்தவாறடித்தரவு கொச்சகக்கலிப்பா.

---

திருச்சிற்றம்பலம்.

செங்க ணெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கண னந்தணனு யறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய். (க)

பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலுங் காண்டற் கரியா னெமக்கெளிய
பேராளன் றென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழியருளி வந்தென் னுளம்புகுந்த
ஆரா வமுதா யலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்கா ணம்மானாய். (உ)

---

(க) இடந்தும் - பிளந்தும்; தரம் - கூட்டம்; தென் - அழகு; நன் - நன்மை; அறைகூவி - வலிய அழைத்து; அம்மானை - மகளிரது ஓர் விளையாட்டு. (உ) புறத்தார் - மற்றையுலகங்களிலுள்ளவர்கள்; பேராளன் - புகழையுடையவன்; வாராவழி - புனராவிருத்தியில்லா முத்திநெறி; விசிறும் - வலைவீசின; பேர்ஆசை வாரியனை - பெருங் கருணைக்கடலாயுள்ளவனை. (ங) அவனி - பூமி; எம்தரம் - எமது

இந்திரனு மாலயனு மேனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி
எந்தரமு மாட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்
பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்றந்த
அந்தமிலா வானந்தம் பாடுதுங்கா ணம்மானாய். (௩)

வான்வந்த தேவர்களு மாலயனோ டிந்திரனும்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்
டூன்வந் துரோமங்க ளுள்ளே யுயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் றெளிவி னொளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய். (௪)

கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் றென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலமன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்கா ணம்மானாய். (௫)

கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான்கொண் டாண்டவா பாடுதுங்கா ணம்மானாய். (௬)

---

கூட்டம்; கொண்ட - அணிந்த; பந்தம்பறிய - பிறவிப்பிணிப்பு அகல; பரி-குதிரை. (௪) கான் நின்று வற்றியும் - காட்டில் நின்று உலர்ந்தும்; ஊன் உரோமங்கள்வந்து - உடம்பில் மயிர்சிலிர்த்து; ஒளி வந்த - ஒளியுருவாயெழுந்தருளிவந்த; வான்வந்த - மேன்மையமைந்த. (௫) வல்லாளன் - பேராற்றலுடையவன்; கல்லை - மனமாகிய பாறையை; (௬) கிறி - மாயம்; தீட்டு - சித்திரி; ஆள்தான்கொண்டு - ஆட்படுத்திக்கொண்டு. (எ) உள் - மனம்; உள்ளானை - அந்தர்யா

ஓயாதே யுள்குவா ருள்ளிருக்கு முள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னென் பெருந்துறையின்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நம்தம்மை யாட்கொண்ட நாயகனைத்
தாயான தத்துவனைத் தானே யுலகேழும்
ஆயானை யாள்வானைப் பாடுதுங்கா ணம்மானாய். (எ)

பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கா ணம்மானாய். (அ)

துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோலமா வூர்தியான்
கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்
அண்டமுத லாயினா னந்தமிலா வானந்தம்
பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்
அண்டம் வியப்புறுமா பாடுதுங்கா ணம்மானாய். (கூ)

விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்கா ணம்மானாய். (ய)

---

மியை; தத்துவனை - உண்மையனை. (அ) பரிசு - வெகுமதி; வியன் - பெருமை; கலி - புகழ்; அகோவால் - அந்தப்பாண்டியராஜனால். (கூ) துண்டப்பிறை - ஒற்றைக்கலை; கோலம் ஆ - அழகியரிஷபம்; அண்டம்முதல் - பிரபஞ்சகாரணன்; பரிசே - முறைப்படி. (ய) தமிழ் அளிக்கும் - தமிழைவளர்க்கும்; தமிழ் தென் மொழியெனவும் பெயர்பெறும். இது கைலாயத்திலும் வழங்கும் பாஷை. தனக்கு எம்மொழியும் இணையில்லாமல் இனிமையாய் விளங்கும். பிறபாஷை களில்இல்லாத ழகரவொற்றை யுடைமையின் தனித்த ழகரமுடைய

செப்பார் முலைபங்கன் றென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினான்
அப்பாண்டி நாட்டை சிவலோக மாக்குவித்த
அப்பார் சடையப்ப னானந்த வார்கழலே
ஒப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௧)

மைப்பொலியுங் கண்ணிபேணு மாலயனோ டிந்திரனும்
எப்பிறவி யுந்தேட வென்னையுந்தன் னின்னருளால்
இப்பிறவி யாட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட்கட் டோற்றமாய் மெய்யே நிலைபேறாய்
எப்பொருட்குந் தானேயா யாவைக்கும் வீடாகும்
அப்பொருளா நஞ்சிவனைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௨)

கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை யெங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு
மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௩)

ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை

---

பாஷையாகும். இது ஐந்தெழுத்தோடு கூடியதால் உயிரெழுத்துப் பன்னிரண்டும், மெய்யெழுத்துப் பதினெட்டும், உயிர்மெய்யெழுத்து இருநூற்றுப்பதினாறும் இதில் அடங்கியிருப்பதைக் காணலாம். வேறுபாஷைகளில் இத்தகைய சிறப்பில்லை. வேண்டுதல் வேண்டாமை யில்லாத பரம்பொருள் இத்தமிழ்மொழியில் இனித்தனா யிருத்தலினாலே அனேக அரிய பெரிய அற்புதங்கள் செய்தமை பிரத்தியட்சம். இது சிவபெருமானாலே பாண்டிநாட்டில் வளர்க்கப்பட்டது. பேணு - விரும்புகின்ற; கண் - பெருமை. (௧௧) அப்பு ஆர் - கங்கை தங்கிய; அப்பாலைக்கு அப்பாலை - பிரகிருதிக்கு அப்பாற்பட்டவனை. (௧௨) தோற்றமாய் - காட்சியாய். (௧௩) ஆர் - அணியப்பெற்ற; சேர்ந்தரியாக் கையானை - இரண்டு கைகளும் ஒன்றாகச்சேர்த்து குவிக்காத கையை யுடையவனை, நமஸ்காரத்தின்பொருட்டுக் கூப்பியறியாதகையை யுடையனை; செறிந்தானை - வியாபித்தவனை.

ஊனையு நின்றுருக்கி யென்வினையை யோட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையு மொத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற் கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்கா ணம்மானாய். (கச)

சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்றன் வேள்வியினில்
இந்திரனைத் தோணெரித்திட் டெச்சன் றலையரிந்
தந்தரமே செல்லு மலர்கதிரோன் பற்றகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை யோட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்கா ணம்மானாய். (கரு)

ஊனா யுயிரா யுணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளும்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா வறிவா யளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்கா ணம்மானாய். (கசு)

சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்றிரடோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவே னுள்ளுருகித்
தேடுவேன் றேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வே னனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்கா ணம்மானாய். (கஎ)

கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனுங் காண்பரிய வித்தகனைத்

---

(கச) கீடம்-புழு; பிற ஆய் - பிற உயிர்களுமாய்; ஒட்டு - ஒட்டுதல்; கன்னல்-சர்க்கரை; கோன் - தலைவன்; வானவன்-மேலோன். (கரு) எச்சன் - யாககர்த்தா (தக்கன்); அந்தரம் - ஆகாயம்; சிந்தி - சிதறி; தார் - மலர்; மந்தாரம் - பஞ்சதருக்களில் ஒன்று. (கசு) ஊன் - உடல்; ஒளிசேர் - ஒளிபொருந்திய; ஆனா - விட்டு நீங்காத. (கஎ) பூங்கொன்றை - பொலிவாகிய கொன்றைமலர்; முயங்கி - தழுவி; ஊடு - பிணங்கு; பேர்த்தும் - மீட்டும்; மலர்வேன் - களிப்பேன்.

தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி யெண்ணரிய வின்னருளால்
ஒளிவந்தெ னுள்ளத்தி னுள்ளே யொளிதிகழ
அளிவந்த வந்தணனைப் பாடுதுங்கா ணம்மானாய். (கஅ)

முன்னானை மூவர்க்கு முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை யென்னப்ப னென்பார்கட் கின்னமுதை
அன்னானை யம்மானைப் பாடுதுங்கா ணம்மானாய். (கக)

பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்க ணீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் றொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்கா ணம்மானாய். (உ௰)

திருச்சிற்றம்பலம்.



(கஅ) கேழ்கிளரும் - ஒளிவிளங்குகின்ற; வெளிவந்த - (காண்போமென்று) வெளிப்பட்டுவந்த; அளிவந்த - கருணை செய்த. (கக) முன்னானை - முற்பட்டவனை; மன்னானை-நிலை பெற்றவனை; ஆனைக்காவானை - திருவானைக்காவினை யுடையவனை; அமுதை அன்னானை - அமிர்தம் போன்றவனை. (உ௰) கொற்றம் - வெற்றி; தொடர்வு - சம்பந்தம்.

# திருப்பொற்சுண்ணம்

## ஆனந்தமனோலயம்

### ௭ - து. தானன்றி நிற்றல்.

தில்லையி லருளிச் செயப்பட்டது.

எண்சீரடியாசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்துநற் றாமம் பூமாலை தூக்கி
முளைக்குடந் தூபநற் றீபம் வைம்மின்
சத்தியுஞ் சோமியும் பார்மகளும்
நாமக ளோடு பல்லாண் டிசைமின்
சித்தியுங் கௌரியும் பார்ப்பதியும்
கங்கையும் வந்து கவரி கொண்மின்
அத்தனை யாறனம் மானைப் பாடி
ஆடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௧)

பூவியல் வார்சடை யெம்பி ராற்குப்
பொற்றிருச் சுண்ண மிடிக்க வேண்டும்
மாவின் வடுவகி ரன்ன கண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடு மின்கள்

(௧) நல்முத்துதாமம் - நல்லமுத்துமாலை; தூக்கி-தொங்கவிட்டு; முளைக்குடம் - முளைப்பாலிகை; கவரி - சாமரம்; ஆட - ஆடுதற்கு; பொற்சுண்ணம் இடித்தும் - பொற்றூள் (கதம்பப்பொடி) இடிப்போம். (௨) பூஇயல்வார் - கொன்றைமலர் பொருந்தியநீண்ட; மாவின்வடுவகிர் - மாம்பிஞ்சின்பிளவு; புறம் - வெளியே; குனிமின்-

கூவுமின் றொண்டர் புறநி லாமே
குனிமின் றொழுமினெங் கோனெங் கூத்தன்
தேவியுந் தானும்வந் தெம்மை யாளச்
செம்பொன்செய் சுண்ண மிடித்து நாமே. (உ)

சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிப ரப்பி
இந்திரன் கற்பக நாட்டி யெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடி யெடுமின்
அந்தரர் கோன யன்றன் பெருமான்
ஆழியா னாதனல் வேலன் றாதை
எந்தர மாளுமை யாள் கொழுநற்
கேய்ந்தபொற் சுண்ண மிடித்து நாமே. (௩)

காசணி மின்க ளுலக்கை யெல்லாம்
காம்பணி மின்கள் கறை யுரலை
நேச முடைய வடிய வர்கள்
நின்று நிலாவுக வென்று வாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங் கச்சித்
திருவேகம்பன் செம்பொற் கோயில் பாடிப்
பாச வினையைப் பறித்து நின்று
பாடிப் பொற் சுண்ண மிடித்து நாமே. (௪)

அறுகெ டுப்பா ரயனும் மரியும்
அன்றி மற்றிந் திரனோ டமரர்
நறுமுறு தேவர் கணங்க ளெல்லாம்
நம்மிற்பின் பல்ல தெடுக்க வொட்டோம்

---

கூத்தாடுங்கள். (௩) நிதி - மங்கலதிரவியங்கள்; கற்பகம் - கற்பக மரம்; சுடர் - தீபங்கள்; ஆழியான்நாதன் - சக்கரமேந்திய திருமாலுக்குத் தலைவன்; எம்தரம்ஆள் - எமது இனத்தையும் ஆண்டருள்கின்ற. (௪) காசு - மணிவடம்; காம்பு - பூண்; கறைஉரல் - கருங்காலிமரத்தாற் செய்யப்பட்டஉரல். (௫) அறுகு-குடவிளக்கு முதலியன; நறுமுது - நல்லமுதிய; செறிவு - நெருக்கம்; முறுவல் - தந்தம், பல்.

செறிவுடை மும்மதி லெய்த வில்லி
திருவேகம்பன் செம்பொற் கோயில் பாடி
முறுவற்செவ் வாயினீர் முக்க ணப்பற்
காடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௫)

உலக்கை பலவோச் சுவார் பெரியர்
உலகமெ லாமுரல் போதா தென்றே
கலக்க வடியவர் வந்து நின்றார்
காண வுலகங்கள் போதா தென்றே
நலக்க வடியோமை யாண்டு கொண்டு
நாண்மலர்ப் பாதங்கள் சூடத் தந்த
மலைக்கு மருகனைப் பாடிப் பாடி
மகிழ்ந்துபொற் சுண்ண மிடித்து நாமே. (௬)

சூடகந் தோள்வளை யார்ப்ப வார்ப்பத்
தொண்டர் குழாமெழுந் தார்ப்ப வார்ப்ப
நாடவர் நந்தம்மை யார்ப்ப வார்ப்ப
நாமுமவர் தம்மை யார்ப்ப வார்ப்பப்
பாடக மெல்லடி யார்க்கு மங்கை
பங்கின னெங்கள் பரா பரனுக்
காடக மாமலை யன்ன கோவுக்
காடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௭)

வாட்டடங் கண்மட மங்கை நல்லீர்
வரிவளை யார்ப்பவண் கொங்கை பொங்கத்
தோட்டிரு முண்டந் துதைந்தி லங்கச்
சோற்றெம் பிரானென்று சொல்லிச் சொல்லி
நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி
நாயிற் கடைப்பட்ட நம்மை யிம்மை
ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப் பாடி
ஆடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௮)

---

(௬) ஓச்சுவார் - வரவிடுவார்; மலை - மலையரையன். (௭) சூடகம் - கைவளையல்; ஆர்ப்ப - சப்திக்க, ஆரவாரிக்க; பாடகம் ஆர்க்கும் - பாடகம் சப்திக்கும். (௮) மடம் - இளமை; முண்டம் -

வையக மெல்லா முரல தாக
மாமேரு வென்னு முலக்கை நாட்டி
மெய்யெனு மஞ்ச ணிறைய வட்டி
மேதகு தென்னன் பெருந்து றையான்
செய்ய திருவடி பாடிப் பாடிச்
செம்பொ னுலக்கை வலக்கை பற்றி
ஐயனணி தில்லை வாண னுக்கே
ஆடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௯)

முத்தணி கொங்கைக ளாட வாட
மொய்குழல் வண்டின மாட வாடச்
சித்தஞ் சிவனொடு மாட வாடச்
செங்கயற் கண்பனி யாட வாடப்
பித்தெம் பிரானொடு மாட வாடப்
பிறவி பிறரொடு மாட வாட
அத்தன் கருணையொ டாட வாட
ஆடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௰)

மாடுநகை வாணி லாவெ றிப்ப
வாய்திறந் தம்பவ ளந்து டிப்பப்
பாடுமி னந்தம்மை யாண்ட வாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப் பாடித்
தேடுமி னெம்பெரு மானைத் தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத் தேறி
ஆடுமி னம்பலத் தாடி னானுக்
காடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௧௧)

மையமர் கண்டனை வான நாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன் றன்னை

---

தலை; துதைந்து - நெருங்கி; சோத்து - அஞ்சலி; நாள்கொண்ட - (மலரும்) பருவங்கொண்ட. (௯) அட்டி - அப்பி; மேதகு-மேன்மை பொருந்திய. (௰) முத்து - முத்துவடம்; ஆட - அசைய; கயல் - கயல்மீன்; பனி - நீர்துளித்தல்; ஆட - உண்டாக. (௧௧) மாடு - பக்கம்; எறிப்ப - வீச; திகைத்து - பிரமித்து. (௧௨) அகப்படுத்து -

ஐயனை யையர் பிரானை நம்மை
அகப்படுத் தாட்கொண் டருமை காட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர் மெய்யைப்
போதரிக் கண்ணிணைப் பொற்றொ டித்தோள்
பையர வல்குன் மடந்தை நல்லீர்
பாடிப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௧௨)

மின்னிடைச் செந்துவர் வாய்க்க ருங்கண்
வெண்ணகைப் பண்ணமர் மென்மொ ழியீர்
என்னுடை யாரமு தெங்க ளப்பன்
எம்பெரு மானிம வான்ம கட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்ற கப்பன்
தமையனெம் மையன் றாள்கள் பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கை நல்லீர்
பொற்றிருச் சுண்ண மிடித்து நாமே. (௧௩)

சங்க மரற்றச் சிலம்பொ லிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலை யாடச்

---

உட்படுத்தி; அரி - செவ்வரி; அரவுபை - பாம்பின்படம். (௧௩) மின் - மின்னற்கொடி; கேள்வன் - நாயகன்; மகன்தகப்பன் தமையன் - அக்கினிக்கு உஷ்ணம்போலச் சிவத்தில் அபின்னமாயடங்கி நின்ற அருள் வெளிப்பட்டுச் சத்தியாய் நின்றபோது அச்சத்திக்குச்சிவம் தந்தை முறையாகலின் **தகப்பன்** எனவும், பஞ்சசத்திகளினிடமாகச் சதாசிவம் தோன்றியபோது அச்சிவம் சத்திக்குப்புத்திரன் முறையாகலின் **மகன்** எனவும், (தொழிற்பேதத்தால் சத்தி ஐந்து வகையாகக் கூறப்படினுஞ்சத்தி ஒன்றே), சத்தியின் கூறாகிய உமாதேவியார் தோன்றுவதற்கு முன்னரே சதாசிவம் தோன்றியபடியால் அச்சிவம் சத்திக்கு முன்னோன் முறையில் **தமையன்** எனவுங் கூறப்பட்டனர். இக்கருத்துபற்றியே ஆதிசத்தி (திரோதான சக்தியின் கூறாகிய திருமால்) அம்பிகை தோன்றுவதற்கு முன்னரே தோன்றினபடியால் அவ்வம்பிகைக்கு அவர் தமையனாகின்றனர் என்று புராணேதிகாசங்கள் புகழ்ந்து பேசுகின்றன. சிவசத்தியொன்றே சிவத்துக்குத் தேகமாயும், கரணமாயும், வஸ்திரமாயும், ஆபரணமாயும், ஆயுதமாயும், ஐசுவரியமாயும் இருப்பதுபோல அதுவே வியாபாரபேத வேறுபாடுகள்பற்றி இவ்வித முறையைச்சிவத்துக்களித்ததென் றுணரற்பாற்று. (௧௪) சங்கம் - சங்க

செங்கனி வாயித ழுந்து டிப்பச்
சேயிழை யீர்சிவ லோகம் பாடிக்
கங்கை யிரைப்ப வராவி ரைக்குங்
கற்றைச் சடைமுடி யான்க ழற்கே
பொங்கிய காதலிற் கொங்கை பொங்கப்
பொற்றிருச் சுண்ண மிடித்து நாமே (௧௪)

ஞானக் கரும்பின் றெளியைப் பாகை
நாடற் கரிய நலத்தை நந்தாத்
தேனைப் பழச்சுவை யாயி னானைச்
சித்தம் புகுந்து தித்திக்க வல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டு கொண்ட
கூத்தனை நாத்தழும் பேற வாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தை நல்லீர்
பாடிப் பொற்சுண்ண மிடித்து நாமே. (௧௫)

ஆவகை நாமும்வந் தன்பர் தம்மோ
டாட்செயும் வண்ணங்கள் பாடி விண்மேல்
தேவர் கனாவி லுங்கண் டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ் செல்வச்
சேவக மேந்திய வெல்கொ டியான்
சிவபெரு மான்புரஞ் செற்ற கொற்றச்
சேவக னாமங்கள் பாடிப் பாடிச்
செம்பொன்செய் சுண்ண மிடித்து நாமே. (௧௬)

தேனக மாமலர்க் கொன்றை பாடிச்
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்

---

வளையல்; தாழ்குழல் - நீண்டகூந்தல்; சூழ்தரு-வளைந்த; சேயிழை - செம்மையாகிய ஆபரணம்; கற்றை - திரட்சி; பொங்கிய - மிகுந்த; பொங்க - விம்ம. (௧௫) நந்தா - (சுவை) குன்றாத; பழம் - முப்பழம், அதாவது வாழை, மா, பலா; பானல் - கருங்குவளை மலர். (௧௬) ஆவகை - உய்யும்வண்ணம்; வண்ணங்கள் - திறங்கள்; சேவகம் - வீரம். (௧௭) தேனகம் - தேனுக்குஇடம்; மதிப்பிள்ளை - இளஞ்சந்திரன்; ஊன் அகம்ஆம் - தசைக்குஇடமாகிய; போனகம் - உணவு.

வானக மாமதிப் பிள்ளை பாடி
மால்விடை பாடி வலக்கையேந்தும்
ஊனக மாமழுச் சூலம் பாடி
உம்பரு மிம்பரு முய்ய வன்று
போனக மாகநஞ் சுண்டல் பாடிப்
பொற்றிருச் சுண்ண மிடித்து நாமே. (௧௭)

அயன்றலை கொண்டுசெண் டாடல் பாடி
அருக்க னெயிறு பறித்தல் பாடிக்
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல் பாடிக்
காலனைக் காலா லுதைத்தல் பாடி
இயைந்தன முப்புர மெய்தல் பாடி
ஏழையடி யோமை யாண்டு கொண்ட
நயந்தனைப் பாடிநின் றாடி யாடி
நாதற்குச் சுண்ண மிடித்து நாமே. (௧௮)

வட்டமலர்க் கொன்றை மாலை பாடி
மத்தமும் பாடி மதியும் பாடிச்
சிட்டர்கள் வாழுந் தென்றில்லை பாடிச்
சிற்றம் பலத்தெங்கள் செல்வம் பாடிக்
கட்டிய மாசுணக் கச்சை பாடிக்
கங்கணம் பாடிக் கவித்த கைம்மேல்
இட்டுநின் றாடு மரவம் பாடி
ஈசர்க்குச் சுண்ண மிடித்து நாமே. (௧௯)

வேதமும் வேள்வியு மாயி னார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையு மாயி னார்க்குச்
சோதியு மாயிரு ளாயி னார்க்குத்
துன்பமு மாயின்ப மாயி னார்க்குப்

---

(௧௮) கயம் - யானை; இயைந்தன - கூடின. (௧௯) மாசுணம் - பாம்பு; கவித்த - மூடின. (௨௰) மெய்ம்மை பொய்ம்மை, சோதி இருள், துன்பம் இன்பம், பாதிமுற்று, பந்தம்வீடு, ஆதி அந்தம் இவையாவும் சிவபிரானது பரிபூரணவியாபகத்தை விளக்கும். இதுவே வேதங்களிலே பிரதிபாதிக்கப்பட்ட ஸர்வாத்மிகவித்தை. பந்தமுமாயினார்

பாதியு மாய் முற்று மாயி னார்க்குப்
பந்தமு மாய் வீடு மாயி னாருக்
காதியு மந்தமு மாயி னாருக்
காடப்பொற் சுண்ண மிடித்து நாமே. (௨௰)

திருச்சிற்றம்பலம்.



---

**வீடுமாயினார்** என்பது ஆதியும் அந்தமுமில்லா இறைவன் கேவலம் ஆணவமலத்தில் கட்டுண்டிருந்த ஆன்மாவை வெளிப்படுத்தி, மாயா மலத்தைத் தநுகரண புவனபோகங்களாகக் காரியப்படுத்தி, அவற்றின் வழித்தாய் கன்மமலத்தையுங்காரியப்படுத்தி, அவற்றை அநுபவிக்கச்செய்து,பிறகு ஆணவமலத்தைத் தற்போதவழியில் நிறுத்தி, அவ்வழியால் அம்மலத்திற்குத் தளர்ச்சி வரச்செய்து, இவ்வாறு மூன்றுமலங்களையுங் காரியப்படுத்தி, அவற்றின் சக்திகளையொருங்கே கெடுத்துப் பின்னர் முத்தாந்த நிலையில் ஏகபரிபூரணவறிவாய் நிற்கும்படிச்செய்வதால் பந்தமும் வீடுமாயினார் என்றருளியபடியாம்.

# திருக்கோத்தும்பி.

## சிவனைக்கியம்

## எ - து. சிவனுடன் இடையறாது நிற்றல்.

தில்லையி லருளிச் செயப்பட்டது.

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

---

திருச்சிற்றம்பலம்.

பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியு நாரணனு நான்மறையும்
மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (க)

நானாரென் னுள்ளமார் ஞானங்களா ரென்னையாரறிவார்
வானோர் பிரானென்னை யாண்டிலனேன் மதிமயங்கி
ஊனா ருடைதலையி லுண்பலிதே ரம்பலவன்
தேனார் கமலமே சென்றூ தாய் கோத்தும்பீ. (உ)

தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும்
அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (ங)

---

(க) கோன் - பிரமன்; செல்வி - சரஸ்வதி; மாஏறுசோதி - மேன்மைபொருந்திய ஒளி வடிவினராகிய ருத்ரமூர்த்தி; சேஏறுசே அடி - இடபமூர்ந்த திருவடி; கோ தும்பீ - அரசவண்டே. (உ) பலி தேர் - பிச்சையைத்தேர்கின்ற. (ங) தினைத்தனை - தினையளவு; குனிப்பு - திருவடியையெடுத்து மடித்துக்குனிந்தாடுங்கூத்து. இது அநுக்கிரஹ கிருத்தியத்தைக்குறிக்கும். அநுக்கிரகமாவது ஆன்மா

கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின்
என்னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி
வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௪)

அத்தேவர் தேவ ரவர்தேவ ரென்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேது மில்லாதென் பற்றற நான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௫)

வைத்த நிதிபெண்டீர் மக்கள்குலங் கல்வியென்னும்
பித்த வுலகிற் பிறப்போ டிறப்பென்னும்

---

வின் வியாபகநிலையில் ஸர்வஞ்ஞத்வாதி குணங்களை விளங்கச்செய்தல். திருவடியாவது இறைவனுடைய அருள். அதை உயரவெடுத்தலாவது அவ்வருளை ஆன்மாவினிடத்தில் மேலிடச்செய்தல். அதை மடித்தலாவது அவ்வருளை என்றும் நிலைபெறுவித்தல். துக்கநிவிருத்தியும் சுகப்பேறுமாகிய இருதொழில்கள் இறைவனது சத்தியால் நடைபெறு மென்பது தோன்ற அச்சத்திவடிவாகிய இரண்டு திருவடிகளில் ஒன்று (திரோபவ சக்தி) மலத்தைப் பக்குவப்படுத்தி மேலிடாது அழுத்த, மற்றொன்று (ஞான சக்தி) ஆன்மவியாபக முழுதும் மேற்பட்டு நின்று, நிரந்தரம் ஆனந்தத்தேன் சொரிந்து கொண்டு நிற்பதாம். இதுவே தாண்டவேசுரரது திருக்கூத்தின் பிரபாவம். (௪) கண்ணப்பன் ஒப்பது ஓர் அன்பு - கண்ணப்ப தேவரை நிகர்த்ததாகிய ஒப்பற்றதலையன்பு. இதனால் கண்ணப்பதேவருக்கு ஒப்பானது அன்பும், அன்புக்கு ஒப்பானவர் கண்ணப்பதேவருமேயாம். அன்புக்கு வேறொரு உவமானப்பொருள் பிரபஞ்சத்தில் கிடையாது. அன்பும் சிவமும் இரண்டு பொருள்களல்ல வென்றும், அன்பேசிவம், சிவமே அன்பு என்றும் நஞ்சித்தாந்த சைவங்கூறும். ஆனமையின் கண்ணப்பதேவரே சிவமென்றறியற்பாலர். சிவத்திற்குரிய **ஞானவடிவம்** புறத்தே ஆசிரியவுருவத்திலும், அவரது **அன்புவடிவம்** அகத்தே ஆன்மாவினிலும் காண்டற்குறியதாம். என் ஒப்பு இல் - எனக்குச் சமானமில்லாத; வண்ணம் – நன்மை; சுண்ணம் - பொடி. (௫) அதேவர் தேவர் - அந்தத்தேவரே தேவர்; அவர் தேவர் - அவரே தேவர்; பொய்த்தேவு – ஜீவலிங்கமாகிய பிறப்பிறப்புள்ள பொய்த்தேவர்கள்; பத்து - பற்று; மெய்த்தேவர் – பிறப்பிறப்புக்களை நீக்கும் மெய்யான தேவர். (௬) வைத்த – ஈட்டி வைத்த; பித்தவுலகு – பித்தங்கொண்டவுலகு. (எ) சட்டோ – செம்

சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௬)

சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரைநா முருவறியோம்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௭)

ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை யேற்றுவித்த
என்றாதை தாதைக்கு மெம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௮)

கரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௯)

நோயுற்று மூத்துநா னுந்துகன்றா யிங்கிருந்து
நாயுற்ற செல்வ நயந்தறியா வண்ணமெல்லாம்
தாயுற்று வந்தென்னை யாண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௰)

வன்னெஞ்சக் கள்வன் மனவலிய னென்னாதே
கன்னெஞ் சுருக்கிக் கருணையினா லாண்டுகொண்ட
அன்னந் திளைக்கு மணிதில்லை யம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௧௧)

---

மையாக; ஒட்டாத-அடையவொட்டாத; சிட்டாய சிட்டன் - மேன்மையாகிய பெரியோன், சிரேஷ்டன். (௮) கவடு-கிளைகள்; சிவிகை-பல்லக்கு. (௯) கரணங்கள் - அகக்கரணம் புறக்கரணம்; கறை - விஷம்; மிடறு - கண்டம்; சரணங்கள் - திருவடிகள்; சார்தலுமே - அடைதலுமே, அதுதிருவருட்டுணையானே தற்போதங்கெட்டுச் சிவபோதம் மேலிட்டு ஜீவச்செயலெல்லாம் சிவச்செயலா யடைதலாம். (௰) நுந்து - தள்ளப்பட்ட; நாய் - நாயினேன்; உற்ற - மிக்க; தாயுற்றுவந்து - தாய்போ லெழுந்தருளிவந்து; தேயுற்ற - தேசுற்ற, ஒளிமிகுந்த. (௧௧) வன்னம் திளைக்கும் - அழகு நிரம்பின. (௧௨) சீ - இக.

நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளும்
தாயான வீசற்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௧௨)

நான்றனக் கன்பின்மை நானுந்தா னும்மறிவோம்
தானென்னை யாட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆன கருணையு மங்குற்றே தானவனே
கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. (௧௩)

கருவா யுலகினுக் கப்புறமா யிப்புறத்தே
மருவார் மலர்க்குழன் மாதினொடும் வந்தருளி
அருவாய் மறைபயி லந்தணனா யாண்டுகொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௧௪)

நானுமென் சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் றையலுந் தாழ்சடையோ னுண்டிலனேல்
வானுந் திசைகளு மாகடலு மாயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௧௫)

உள்ளப் படாத திருவுருவை யுள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரானெம் பிரானென்னை வேறேயாட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௧௬)

பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை யாட்கொண்ட
ஐயாவென் னுருயிரே யம்பலவா வென்றவன்றன்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (௧௭)

---

ழ்ச்சி; ஏதும் - சிறிதும். (௧௩) ஆன - உண்டான; அங்குஉற்றே - அங்கு மிகுந்ததே. (௧௪) கரு - பிறப்பிடம்; திருஆன - அழகாகிய. (௧௬) உள்ளப்படாத - நினைக்கமுடியாத; உள்குதலும் - பாவனாதீதமாய் அருளைக்கொண்டு நினைத்தலும்; களிவந்த - களிப்புமிகுந்த. (௧௭) அம்பலவா - பொன்னம்பலவனே; செய்யார்மலர் - செந்நிறம் பொருந்திய தாமரைமலர். (௧௮) துகில் - ஆடை; குழை - குண்ட

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையு முடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. (கஅ)

கள்வன் கடியன் கலதியிவ னென்னாதே
வள்ளல் வரவர வந்தொழிந்தா னென்மனத்தே
உள்ளத் துறுதுய ரொன்றொழியா வண்ணமெல்லாம்
தெள்ளுங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (கக)

பூமே லயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க வடியே னிருமாக்க
நாய்மேற் றவிசிட்டு நன்றாய்ப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. (உ௰)

திருச்சிற்றம்பலம்.

---

லம்; தொக்க - திரண்ட. இந்தப்பாசுரம் அர்த்தநாரீசுர பெரிய கோலத்தைக்கூறியதாகலின் தோல், குழை, நீறுமுதலியவை முதல்வனுக்கும், துகில், தோடு, பசுஞ்சாந்து முதலியவை முதல்விக்குங் கொள்ளக்கிடக்கின்றன. சூரியன் ஒரே பொருளாயிருப்பினும் குணத்தன்மை குணித்தன்மை என்னுந்தன்மை வேறுபாட்டால் சூரியன் ஒளி யென இருவகையாய் எண்ணப்படுவதுபோல் சிவம் ஒரே பொருளாயினும் குண குணிபாவத்தால் அம்மை அப்பாவென இருமையாக மதிக்கப்படுகின்றது. அவ்வுண்மை விளங்கவே இந்தப் பண்டைக்கோலம் ஏற்பட்டது. (அம்மையென்றால் பெண்ணுருவ மன்று). உலகத்திலுள்ள எந்தப்பொருளினும் இவ்வித குணத்தன்மை குணித்தன்மை இல்லாம லிருக்கவில்லை யாதலின் அவையாவும் அம்மை யப்பரைப்போல் உள்பொருளே யன்றி மித்தையல்ல. ஆனலவை காரியரூபத்தில் நிலையில்லாதன. காரணத்தில் உள்ளன. எனவே, காரணத்தில் தோன்றாது சூக்ஷ்மமாய் நின்று காரியத்தில் ஸ்தூலமாய் விளங்கித்தோன்றி நிற்கும். (கக) கடியன் - கொடியன்; கலதி - மூதேவி; வரவர - நாளுக்குநாள்; தெள்ளும்-தெளிந்த. (உ௰) ஏமாறிநிற்க - தடுமாறிநிற்க, எத்துணைப் பெரியாராயினும் அன்பரல்லாதார்க்கு அரியராய் மிகச்சேய்மைக் கண்ணும், அஃதுடையாரெவராயினும் அவர்களுக் கெளியராய் மிக அணிமைக்கண்ணும் இருப்பது அவரது அசாதாரணகுண மென்பது வலியுறுத்தப்பட்டது.

# திருத்தெள்ளேணம்.

## சிவனோடடைவு

## எ - து. சிவனுடனே சென்று கூடுதல்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

இதுவுமது.

திருச்சிற்றம்பலம்.

திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநா மறியவோ ரந்தணனை யாண்டுகொண்டான்
ஒருநாம மோருருவ மொன்றுமில் லாற்காயிரம்
திருநாமம் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (க)

திருவார் பெருந்துறை மேயபிரா னென்பிறவிக்
கருவே ரறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை
அருவா யுருவமு மாயபிரா னவன்மருவும்
திருவாரூர் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (உ)

அரிக்கும் பிரமற்கு மல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்து நம்மை
உருக்கும் பணிகொள்ளு மென்பதுகேட் டுலகமெல்லாம்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (ங)

அவமாய தேவ ரவகதியி லழுந்தாமே
பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலு நாமொழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (ச)

---

(க) உரு - வடிவம்; தெள்ளேணம் - மகளிர்விளையாட்டி லொன்று. (உ) திரு - அழகு, செல்வம்; மருவும் - எழுந்தருளி யிருக்கின்ற. (ச) அவமாய - வீணாகிய; தேவர் - பிறப்பிறப்பை

அருமந்த தேவ ரயன்றிருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோ ருகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் னுளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (ரு)

அரையாடு நாக மசைத்தபிரா னவனியின்மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்
உரையாட வுள்ளொளியாட வொண்மாமலர்க் கண்களினீர்த்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (சு)

ஆவா வரியயனிந் திரன்வானோர்க் கரியசிவன்
வாவாவென் றென்னையும்பூ தலத்தேவலித் தாண்டுகொண்டான்
பூவா ரடிச்சுவ டென்றலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (எ)

கறங்கோலை போல்வதோர் காயப்பிறப்போ டிறப்பென்னும்
அறம்பாவமென் றிரண்டச்சந் தவிர்த்தென்னை யாண்டுகொண்டான்
மறந்தேயுந் தன்கழலன் மறவாவண்ண நல்கியவத்
திறம்பாடல் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (அ)

கன்னா ரூரித்தென்ன வென்னையுந்தன் கருணையினால்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி
மின்னேர் நுடங்கிடைச் செந்துவர்வாய் வெண்ணகையீர்
தென்னா தென்னா வென்று தெள்ளேணங் கொட்டாமோ. (கூ)

---

யுடைய தேவர்; பவம் - மாயம்; காத்து - பிறவி மயக்கத்தைத் தடுத்து; நவம் - புதிய; நாம் ஒழிந்து - நாம் என்னும் ஆன்ம அறிவு அற்று; சிவம் ஆன ஆறு - சிவ அறிவு மாத்திரையாய் ஆனவிதம்; எக்காலத்தும் சிவாநுபவச் செல்வராய் இறைவன் மலரடிக்கீழிருந்த இவர் அவ்வாறு மொழிந்தது உண்மை அறிவுறுத்தும் பொருட்டே. (ரு) அருமந்த - அருமருந்தன்ன; கரு - பிறவிக்குமூலம்; கடைக் கணித்து - கடைக்கண்ணால் நோக்கி; திருவந்த - மேன்மையுண் டான. (சு) அரை - இடுப்பு; அசைத்த - கட்டிய; அவனி - பூமி; பங்கு - பாகம்; உள் - மனம்; ஒளி ஆட - ஒளி விளங்க; திரை ஆடும் - அலை வீசும். (எ) ஆவா - ஐயோ; பூஆர் - தாமரைமலர் போன்ற; பொறித்தல் - பதியவைத்தல்; தே - தெய்வத்தன்மை. (அ) கறங்கு ஓலை - சுழலுகிற சுருளோலை; காயப்பிறப்பு - தேகத்

கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
புனவே யனவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே யெனைப்பிடித்தாட் கொண்டவா நயந்துநெஞ்சம்
சினவேற்க ணீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. (௰)

கயன்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக்கலந் தாண்டலுமே
அயன்மாண் டருவினைச்சுற் றமுமாண் டவனியின்மேல்
மயன்மாண்டு மற்றுமுள்ள வாசகமாண் டென்னுடைய
செயன்மாண்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௧)

முத்திக் குழன்று முனிவர்குழா நனிவாட
அத்திக் கருளி யடியேனை யாண்டுகொண்டு
பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி
தித்திக்கு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௨)

பார்பாடும் பாதாளர் பாடும்விண் ணோர் தம்பாடும்
ஆர்பாடுஞ் சாரா வகையருளி யாண்டுகொண்ட
நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
சீர்பாடல் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௩)

மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியா னுண்ணியனாய் வந்தடியேன்
பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்
சேலேர்கண் ணீர்மல்கத் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௪)

உருகிப் பெருகி யுளங்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை

---

தோற்றம். (௯) பணித்து - வணங்குவித்து; நுடங்கு – துவள்கின்ற. (௰) புனம் வேய் அன - புன மூங்கிலை யொத்த; வளை - தொடி; நனவு–சாக்கிராவஸ்தை. (௧௧) கயல் - கயல்மீன்; அயல்மாண்டு–அன்னியமானவை அற்று; வாசகம் – சொற்கள்; செயல் மாண்ட ஆறு – செய்கையற்ற விதம், அதாவது சும்மாவிருத்தல். எனது செயல் நினதுசெயல் என்றபடி அவ்விடத்து யானெனுந் தன்மையின்றாம். (௧௨) நனி – மிகவும்; அத்தி – யானை. (௧௩) பார்பாடும் - பூமியிலுள்ளோரிடத்தும்; பாதாளர் – பாதாள லோகத்தார்; விண்ணோர்தம் – தேவலோகத்தார்; ஆர்பாடும் - எவரிடத்தும். (௧௪) அடியேன்பால் - அடியேன் பக்கல்; பாவகம் – இயல்பாயுள்ள கருணைக்குணம். (௧௫)

மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௫)

புத்தன் புரந்தரா தியயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்த னணிதில்லை யம்பலவ னருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ. (௧௬)

உவலைச் சமயங்க ளொவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுள னாய்க்கிடந்து தடுமாறும்
கவலைக் கெடுத்துக் கழலிணைக டந்தருளும்
செயலைப் பரவிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௭)

வான்கெட்டு மாருத மாய்ந்தழனீர் மண்கெடினுந்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட் டுயிர்கெட் டுணர்வுகெட்டெ னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. (௧௮)

---

திரு - பாக்கியம், புண்ணியம். (௧௬) புத்தன் - என்றும் புதுமையை யுடையவன். (௧௭) உவலைச்சமயங்கள் - பொய்மதங்கள்; அவை இம்மைக்கேற்ற சில சுகவழிகளை மட்டும் கவனித்தனவே யன்றி மறுமை, வீடு இவற்றிற்குரிய அறிவு படைத்தனவல்ல. அவற்றிற்குக் காரணம் அவரவரது அபக்குவ நிலையே. ஆதலாலவை சாவி போம்சமயங்கள். சவலைக் கடல் - மெலிவுக்குக் காரணமாகிய கடல்; கவலை - துன்பம். (௧௮) கெட்டு - அழிந்து; சலிப்பு - சலித்தல்; ஊன் - இந்திரியம்; உயிர் - பிராணன்; உணர்வு - கரணவுணர்ச்சி; உள்ளம் - புருஷதத்துவம், உள்ளந்தக்கரண வுணர்ச்சி, சீவ அறிவு, தற்போதம், (அது ஆன்ம அறிவையிடமாகக் கொண்டிருப்பது); நான்-சேடமாய்த் தனித்துநின்ற ஆன்ம அறிவு; கெட்ட ஆறுபாடி - கெட்ட விதத்தைப்பாடி, அது அக்கினியானது விறகு முதலியவற்றைத் தகித்துவிட்டுத் தானும் நசித்துப்போகிறது போல் ஆன்ம அறிவும் துக்க நிவர்த்தி செய்துவிட்டுத் தானும் அடங்கிவிடும். உண்மை இவ்வாறிருக்க அந்தக் கரணதண்டம் புறக்கரணதண்டஞ் செய்ய சக்தியற்ற அற்ப அறிவிலிகளுங் கூட நீரில் பிரதிபிம்பிக்கின்ற கனிகளையருந்தி மகிழ்வார்போன்று நானே பிரமம், என்னிறைவே பரிபூரணம் என்று பிதற்றுதல் செய்துகொண்டு அன்பின்வழிநின்று அதனால் தூயகதிபெறாது பங்கயாசனன் முதல்தேவரும், பாருள பெரியோரும், கங்கையாதி தீர்த்தமும், தேசமும்,

விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து
மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோம்
கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்
தென்னாதென் னாவென்று தெள்ளேணங் கொட்டாமோ. (கக)

குலம்பாடிக் கொக்கிற குப்பாடிக் கோல்வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாடோறும்
அலம்பார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற
சிலம்பாடல் பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ. (உ0)

திருச்சிற்றம்பலம்.



---

காலமும், மறைநாலும், அங்கமாறும், மந்திரங்களும், தவங்களும் அசத்தியமென்று பறை யறைந்துகொண்டு வாணாளைக் கழிப்பது யாது பயன் கருதியோ! யமனுக்கு இரையாகவோ! அறியேம். ஆன்ம ஞானங் கைவரப்பெற்ற பின்னர் கூறினாலும் அடுத்த ஜன்மமாவது சைவமாஞ் சமயஞ்சார ஊழுண்டாகலாம். சிவதா! சிவதா!! அசுர வேதாந்தம் எற்றுக்கோ! (கக) வைப்பு - புதையல்; கண்ணார - கண்களால் பருக. (உ0) குலம் - மேன்மை; கோல் - அழகிய; அலம்பு ஆர் புனல் - சப்தித்தலையும் நிறைவையுமுடைய நீர்.

# * திருச்சாழல்.

## சிவனுடையகாருணியம்

## எ - து. சிவனுடைய அருட்சத்தி விளையாட்டு.



தில்லையிலருளிச் செயப்பட்டது.

இதுவுமது.

திருச்சிற்றம்பலம்.

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதுந் திருவாயான் மறைபோலுங் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவ னெவ்வுயிர்க்கு மியல்பானான் சாழலோ. (க)

---

(க) பொங்கு - சீறு; என்னை - யாதுபயன்; இயல்பு - உன்னில் உன்னும் உனுவிடில் விட்டிடும் என்னும் இயல்பு; சாழல் - மகளிர் விளையாட்டிலொன்று. (உ) எல்லார்க்கும் தான் ஈசன் -

* ஈழநாட்டரசனது புதல்வியாகிய ஊமைப்பெண்ணை நம் மணிவாசகப்பிரான் பார்த்து அவளது ஊமைத்தன்மையை நீக்கிய தன்றி வித்தியா சாமர்த்தியத்தையும் உண்டாக்கக் கருதி சிவபிரானது புகழ்களைப் பாட்டாகப் பாடி வினவினரெனவும், உடனே "விரும்புந் திருத்தில்லை யம்பலத்தானருள் மேவிலொரு, துரும்பும் படைத்தளிக்கும் அகிலாண்டத் தொகுதியையே." என்றபடி தற்சுதந்தரமில்லாத அவ்வூமைப்பெண் சிவாதிஷ்டானத்தினாலே பாட்டாகவே விடைபகர்ந்தன ளெனவும் அறிக. அதுவே திருச்சாழலாம். அன்றியும், புத்தர் வினவிய தர்க்க வினாக்களுக்கெல்லாம் அவ்வூமைப்பெண் அடிகளது கிருபாகடாக்ஷ வீக்ஷண்யத்தால் வேத சிவாகமங்களை யோதியுணர்ந்த மஹா பண்டிதையைப்போல் வசன ரூபமாக எதிருத்தரங் கூறினளெனவும், அவ்வினா வுத்தரங்களையே திருச்சாழல் என்னுந் திருவாசகமாக சுவாமிகள் ஓதியருளினரெனவும் புராணங் கூறும்.

என்னப்ப னெம்பிரா னெல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது வென்னேடீ
மன்னுகலை துன்னுபொருண் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ. (௨)

கோயில் சுடுகாடு கொல்புலித்தோ னல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ
தாயுமிலி தந்தையிலி தான்றனிய னாயிடினும்
காயி னுலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ. (௩)

அயனை யனங்கனை யந்தகனைச் சந்திரனை
வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ
நயனங்கண் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ. (௪)

தக்கனையு மெச்சனையுந் தலையறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்ததுதா னென்னேடீ
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி யருள்கொடுத்தங்
கெச்சனுக்கு மிகைத்தலைமற் றருளினன்காண் சாழலோ. (௫)

அலரவனு மாலவனு மறியாமே யழலுருவாய்
நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதா னென்னேடீ
நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனே லிருவருந்தம்
சலமுகத்தா லாங்காரந் தவிரார்காண் சாழலோ. (௬)

---

ஸர்வ ஜீவராசிகளுக்கும் ஈசனாயிருப்பவன் தானொருவனே. எவ்வெவர் எவ்வெத் தேவரைக் குறித்து வழிபாடியற்றினும் முடிவில் அவ்வத் தேவரிடமாக நின்று அவற்றையேற்று அவரவர் வேண்டிய பலன்களை அளிக்கவல்ல முழுமுதற் கடவுள் சிவபெருமானொருவரே யாதலின் எல்லாருக்கும் அவரே ஈசராவர். துன்னம்பெய்கோவணம் ஆ—தைத்ததுணியை அணியத்தகுந்த கோவணமாக; துன்னுபொருள் - செறிந்த பல பொருள்கள். (௩) சுடுகாடு - மயானம்; காயின் - கோபிக்கின்; கற்பொடி - கற்றூள். (௪) அநங்கனை - மன்மதனை; அந்தகனை - யமனை; வயனங்கள் - வகைகள்; மாயா - கெடாத; வடு - தழும்பு. (௫) எச்சன் - யாககர்த்தா; தொக்கனவந்து - ஓர்வித சப்தத்தோடுவந்து; மிகைத்தலை - மிகுதியாகிய தலை, அதாவது ஆட்டின் தலை. (௬) அலரவன் - பிரமன்; நிலமுதற் கீழ்

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னேடீ
சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேற் றரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ. (எ)

கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த
ஆலால முண்டா னவன் சதுர்தா னென்னேடீ
ஆலால முண்டிலனே லன்றயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. (அ)

தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ. (கூ)

தானந்த மில்லான் றனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண் சாழலோ. (ய)

நங்காய் தென்னதவ நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந் தரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ. (கக)

கானார் புலித்தோ லுடைதலையூண் காடுபதி
ஆனா லவனுக்கிங் காட்படுவா ராரேடி

---

பூமி முதல் கீழ் புவனங்களுக்குங் கீழாக; அண்டம் உற - ஆகாயத்தைப் பொருந்த; சலமுகத்தால் - கோபங்காரணமாக. (எ) சலமுகத்தால் - நீர் உருவால்; தரணி - பூமி; பிலம்முகத்தே - பாதாளத்தினிடத்தில்; (அ) கோலாலம் ஆகி - பேரிரைச்சல் செய்துகொண்டு; கடல்வாய் - கடலினிடத்து; ஆலாலம் - ஆலகால விஷம்; வீடுவர் - மடிவர். (கூ) தென்பால் - தென்றிசை; விண்பால் - விண்ணுலகம்; இயோகு எய்தி - யோகத்தையடைந்து; வீடுவர் - அடையப்பெறுவர். (ய) வான் உந்து - விண்ணுலகில் வாழ்கின்ற; வான்பொருள் - மேலான பொருள். (கக) கங்காளம் - தசையற்ற உடம்பின் முழு எலும்பு; ஆமா - ஆம்ஆறு, வந்தவிதம்; இருவர் - பிரம விஷ்ணுக்

ஆனாலுங் கேளா யயனுந் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ. (கஉ)

மலையரையன் பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை
உலகறியத் தீவேட்டா னென்னுமது வென்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்தனனே லுலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங்காண் சாழலோ. (கந)

தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது வென்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேற் றரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ. (கச)

கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேறாதே
இடபமுகந் தேறியவா றெனக்கரிய வியம்பேடீ
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் றிருமால்காண் சாழலோ. (கரு)

நன்றாக நால்வர்க்கு நான்மறையி னுட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தா னாயிடினும்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ. (கசு)

அம்பலத்தே கூத்தாடி யமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையுந் தேவனென்று நண்ணுமது வென்னேடீ
நம்பனையு மாமாகே ளான்மறைக டாமறியா
எம்பெருமா னீசாவென் றேத்தினகாண் சாழலோ. (கஎ)

---

கள். (கஉ) கானார் - காட்டில் வசிக்கும்; தலைஊண் - தலை ஓடு உண்கலம்; காடுபதி - மயானம் ஊர்; அரையன் - அரசன்; வாள் நுதல் - ஒளி பொருந்திய நெற்றி; தீவேட்டான் - அக்கினி முன் மணஞ் செய்தான்; கலைநவின்ற-சாஸ்திரஞ் சொன்ன. (கச) தேன் புக்க - தேன்பாய்கிற; பணை - வயல்; நட்டம் - நடனம்; ஊன்புக்க - தசைபொருந்திய; ஊட்டுஆம் - உண்பொருளாம். (கரு) கடம்கரி - மதயானை; பரிமா - குதிரை; உகந்து - விரும்பி; தடம் - பெரிய; எரித்த - நீறாக்கின; கூட்டோடே - வேரோடு; கொன்றான் - அழித்தான். (கஎ) பலிதிரியும் - பிச்சைக்கு உழலாநின்ற; நண்ணுமது-அடைவது. (கஅ) தடிந்த - சேதித்த; நயனம் இடந்து - கண்

சலமுடைய சலந்தரன்ற னுடறடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ
நலமுடைய நாரணன்ற னயனமிடந் தரனடிக்கீழ்
அலராக விடவாழி யருளினன்காண் சாழலோ. (கஅ)

அம்பரமாம் புள்ளித்தோ லாலால மாரமுதம்
எம்பெருமா னுண்டசது ரெனக்கறிய வியம்பேடீ
எம்பெருமா னேதுடுத்தங் கேதமுது செய்திடினும்
தம்பெருமை தானறியாத் தன்மையன்காண் சாழலோ. (கக)

அருந்தவருக் காலின்கீ ழறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது வெனக்கறிய வியம்பேடீ
அருந்தவருக் கறமுதலன் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ. (உ0)

திருச்சிற்றம்பலம்.



---

ணைத் தோண்டி; அலர் ஆகஇட - தாமரை மலராக இட. (கக) அம்பரம் - ஆடை; ஆர் - அரிய. (உ0) அருந்தவர் - சனகாதி நால்வர்; அறம் முதலாம் நான்கு - அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருஷார்த்தங்கள் நான்கு; திருந்து - திருந்திய; உலகு இயற்கை - லௌகிக இயல்புகள்.

# திருப்பூவல்லி.



## மாயாவிசய நீக்குதல்

## எ - து. மாயையின் பலத்தை மறுத்தல்.

தில்லையிலருளிச் செய்யப்பட்டது.

இதுவுமது.

திருச்சிற்றம்பலம்.

இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தேன்
அணையார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ. (க)

எந்தையெந் தாய்சுற்ற மற்றுமெல்லா மென்னுடைய
பந்த மறுத்தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ. (உ)

நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்
தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்

---

(க) இணையார் - தனக்குத்தானே நிகராயிருக்கிற; திருவடி - ஞானசக்தி கிரியாசக்தியென்னுந் திருவடிகள்; வைத்தலுமே - சூட்டுதலுமே, அது திருவடி தீக்ஷையாம். அத்தீக்ஷை ஆணவமல சக்தியைக் குன்றுவித்துப் பாமுத்திபயப்பித்தற்கு மிகச்சிறப்புடைத்து. துறந்து - விட்டு; அணைஆர் - அணைபொருந்திய; புணையாளன் - (பவக்கடல்கடக்க) மரக்கலம்போன்றவன். (உ) அந்தம் - அழகாகிய; இடைமருதில் - திருவிடைமருதூரில்; பொந்தை - பொந்துபோன்ற சிவபிரானை. (ங) பொடிஅட்டி - புழுதியைக் கொட்டி. (ச) பண்பட்ட - சீர்பொருந்திய; எண்பட்ட - மதிப்

மாயப் பிறப்பறுத் தாண்டானென் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ. (ங)

பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்க னருக்கனெச்ச னிந்துவனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரரால்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. (ச)

தேனாடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனாடி நாடிவந் துள்புகுந்தா னுலகர்முன்னே
நானாடி யாடிநின் றோலமிட நடம்பயிலும்
வானாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ. (ரு)

எரிமூன்று தேவர்க் கிரங்கியருள் செய்தருளிச்
சிரமூன் றறத்தன் றிருப்புருவ நெரித்தருளி
உருமூன்று மாகி யுணர்வரிதா மொருவனுமே
புரமூன் றெரித்தவா பூவல்லி கொய்யாமோ. (சு)

வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
திணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை யம்பலத்தே யாடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. (எ)

நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே
குறிசெய்து கொண்டென்னை யாண்டபிரான் குணம்பரவி
முறிசெய்து நம்மை முழுதுடற்றும் பழவினையைக்
கிறிசெய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. (அ)

---

பமைந்த; அருக்கன் - சூரியன்; இந்து - சந்திரன்; அனல் - அக்கினிதேவன்; விண்பட்ட - ஆகாயத்தை அளாவிய; புண்பட்ட - காயப்பட்ட. (ரு) ஊன் நாடிநாடி வந்து - மானுடசரீரத்தைத் தாங்கிக்கொண்டுவந்து; நாடிஆடி - தேடியாடி; பயிலும் - செய்யும். (சு) எரிமூன்றுதேவர் - எரிகின்றமுச்சுடர். (எ) அணங்கொடு - தெய்வத்தன்மையோடு; கூரப்பாடி - மிகவம்பாடி. (அ) நெறி - சன்மார்க்கம்; செய்தருளி - உண்டுபண்ணி; குறி - இலக்கு; முறி - அடிமை; உடற்றும் - வருந்துகின்ற; கிறிசெய்த-சூன்யமாக்கின. (க) ஆகம் - மனது; துன்ன - பொருந்த; ஆனஆறு - (அருமை) ஆன விதம்;

பன்னாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என்னகந் துன்னவைத்த பெரியோ னெழிற்சுடராய்க்
கன்ன ருரித்தென்னை யாண்டுகொண்டான் கழலிணைகள்
பொன்னான வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. (கூ)

பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான்
சீரார் திருவடி யென்றலைமேல் வைத்தபிரான்
காரார் கடனஞ்சை யுண்டுகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. (ய)

பாலு மமுதமுந் தேனுடனும் பராபரமாய்க்
கோலங் குளிர்ந்துள்ளங் கொண்டபிரான் குரைகழல்கள்
ஞாலம் பரவுவார் நன்னெறியா மந்நெறியே
போலும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. (கக)

வானவன் மாலயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்
கோனவ னாய்நின்று கூடலிலாக் குணக்குறியோன்
ஆன நெடுங்கட லாலால மமுதுசெய்யப்
போனக மானவா பூவல்லி கொய்யாமோ. (கஉ)

அன்றால நீழற்கீ ழருமறைக டானருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாடோறும்
நின்றார வேத்து நிறைகழலோன் புனைகொன்றைப்
பொன்றாது பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. (கங)

படமாக வென்னுள்ளே தன்னிணைப்போ தவையளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்ப மேயபிரான்
தடமா மதிற்றில்லை யம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ. (கச)

அங்கி யருக்க னிராவணனந் தகன்கூற்றன்
செங்க ணரியய னிந்திரனுஞ் சந்திரனும்

---

(ய) பிண்டம் - உடம்பு; காரார் - கருமைபொருந்திய; காபாலி - கபாலத்தையுடையவன்; புரம் - திரிபுரதகனஞ்செய்தமை. (கஉ) போனகம் - உணவு. (கங) ஆர - நிரம்ப. (கரு) பரிசு - குணம்;

பங்கமிீ றக்கனு மெச்சனுந்தம் பரிசழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. (கரு)

திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பான் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. (கசு)

முன்னாய மாலயனும் வானவருந் தானவரும்
பொன்னார் திருவடி தாமறியார் போற்றுவதே
என்னாகம் முள்புகுந் தாண்டுகொண்டா னிலங்கணியாம்
பன்னாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. (கஎ)

சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத வாசையதா யடியே னகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் றிருநடஞ்செய்
பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. (கஅ)

அத்தி யுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்
பித்த வடிவுகொண் டிவ்வுலகிற் பிள்ளையுமாம்
முத்தி முழுமுதலுத் தரகோச மங்கைவள்ளல்
புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ. (கக)

* மாவார வேறி மதுரைநகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ. (உ0)

திருச்சிற்றம்பலம்.

---

பொங்கிய - கோபித்த. (கசு) ஏறு - சிங்கம்; தண்டு - பிரம்பு; புண் பாடல் - புண்ணைப்பற்றிய பாடல். (கஎ) முன்னாய - முதன்மை யாகிய; ஆகம்உள் - மனத்துள்; இலங்கு அணி - விளங்குகின்ற ஆபர ணம்; பல்நாகம் - பலநாகாபரணங்கள். (கஅ) சிலம்புஒலிக்கே - சப் திக்கிற சப்தத்துக்கே. * இத் திருப்பாசுரஞ்சில பிரதிகளிற் காணப் பட்டிருத்தலானும் திருப்பதிகத் தொகையைக் குறிக்குஞ் செய்யு ளினும் திருப்பூவல்லி இருபது திருப்பாசுரங்களை யுடைத்து எனக் கூறியிருப்பதனானுஞ் சேர்க்கப்பட்டது.

# திருவுந்தியார்.



## ஞானவெற்றி

## ௭ - து. அருட்சத்தியினுடைய சாமர்த்தியம்.

*தில்லையிலருளிச் செயப்பட்டது.*

**கலித்தாழிசை.**

திருச்சிற்றம்பலம்.

வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புர முந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற. (௧)

ஈரம்பு கண்டில மேகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புர முந்தீபற
ஒன்றும் பெருமிகை யுந்தீபற. (௨)

தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற
அழிந்தன முப்புர முந்தீபற. (௩)

உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே யுந்தீபற
இளமுலை பங்கனென் றுந்தீபற. (௪)

(௧) பூசல் - போர்; உளைந்தன - வருந்தின; உந்தீபற - குழாங் கூடிய மகளிரது ஓர் விளையாட்டு (அது, உம் தீ பற - உம்முடைய குற்றமாகிய மும்மலங்கள் உம்மை விட்டகலும்படி இவ்வுந்தியாரின் கருத்தே கருத்தாகக் கொள்க என்பதாம்). (௨) ஒன்றும் - ஓரம்பும்; மிகை - குற்றம். (௩) தச்சு - தச்சுத்தொழில். (௪) மூவர் - இறவாமல் இருந்த மூன்றசுரர். (௫) சாடிய - அழிக்கப்பட்ட; சரிந்

சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி யுந்தீபற
உருத்திர நாதனுக் குந்தீபற. (௫)

ஆவா திருமா லவிப்பாகங் கொண்டன்று
சாவா திருந்தானென் றுந்தீபற
சதுர்முகன் றாதையென் றுந்தீபற. (௬)

வெய்யவ னங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தானென் றுந்தீபற
கலங்கிற்று வேள்வியென் றுந்தீபற. (எ)

பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்பதென் னேயேடி யுந்தீபற
பணைமுலை பாகனுக் குந்தீபற. (அ)

புரந்தர னாரொரு பூங்குயி லாகி
மரந்தனி லேறினா ருந்தீபற
வானவர் கோனென்றே யுந்தீபற. (௯)

வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை
துஞ்சின வாபாடி யுந்தீபற
தொடர்ந்த பிறப்பற வுந்தீபற. (௰)

ஆட்டின் றலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி யுந்தீபற
கொங்கை குலுங்கநின் றுந்தீபற. (கக)

உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற
கருக்கெட நாமெலா முந்தீபற. (கஉ)

---

திட - அழிய. (௬) ஆவா - ஐயோ; அவி - தேவருணவு; பாகம்- பங்கு. (எ) வெய்யவன் - உஷ்ணமுடையவன்; அங்கி - அக்கினித் தேவன்; விழுங்க - உண்ண. (அ) பகைசாற்றிய - விரோதமாகப் பேசிய; பார்ப்பதென் - கண்ணோட்டஞ் செய்வதென். (௯) புரந் தரன் - தேவேந்திரன்; (௰) வேள்வி வியாத்திரனார் - யாககுரு; துஞ்சின ஆறு - அற்றவிதம். (கக) விதி - தக்ஷன், சிறுவிதி. (கஉ) பகன் - சூரியன்; கருகெட - பிறவியொழிய. (கங) பட -

நாமக ளுசி சிரம்பிர மன்படச்
சோமன் முகனெரித் துந்தீபற
தொல்லை வினைகெட வுந்தீபற. (கங)

நான்மறை யோனு மகத்திய மான்படப்
போம்வழி தேடுமா றுந்தீபற
புரந்தரன் வேள்வியி லுந்தீபற. (கச)

சூரிய னார்தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற. (கரு)

தக்கனு ரன்றே தலையிழந் தார்தக்கன்
மக்களைச் சூழநின் றுந்தீபற
மடிந்தது வேள்வியென் றுந்தீபற. (கசு)

பாலக னார்க்கன்று பாற்கட லீந்திட்ட
கோலச் சடையற்கே யுந்தீபற
குமரன்றன் றாதைக்கே யுந்தீபற. (கஎ)

நல்ல மலரின்மே னான்முக னார்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரா லரிந்ததென் றுந்தீபற. (கஅ)

தேரை நிறுத்தி மலையெடுத் தான்சிரம்
ஈரைந்து மிற்றவா றுந்தீபற
இருபது மிற்றதென் றுந்தீபற. (ககூ)

* ஏகாச மிட்ட விருடிகள் போகாமல்
ஆகாசங் காவலென் றுந்தீபற
அதற்கப்பா லுங்காவலென் றுந்தீபற. (உ0)

திருச்சிற்றம்பலம்.

---

அறுபட; நெரித்து - தேய்த்து. (கச) அகத்து இயமான்பட - உள்ளிருக்கும் உயிர் அழிய; போம் வழி - தப்பியோடும் வழி. (கரு) தொண்டை வாய் - கோவைக்கனி போலும் வாய்; வாரிநெரித்த - தகர்த்தெறியப்பட்ட. (கசு) மக்களைச் சூழநின்று - மக்களால் சூழப்பட்டிருந்து. (கஎ) கோலம் சடை - அழகிய சடை. (கஅ) ஒல்லை - விரைவு; உகிர் - நகம். (ககூ) இற்ற ஆறு - நெரிந்தவிதம்.

* இத்திருப்பாசுரமும் சில பிரதிகளிற் காணப்பட்டிருத்தலானும் திருப்பதிகத் தொகையின்படி இருபதாகலானுஞ் சேர்க்கப்பட்டது.

# திருத்தோணேக்கம்.

## பிரபஞ்ச சுத்தி

## எ - து. ஆன்மாக்களைச் சுத்திகரித்தல்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்
கூத்தா வுன்சேவடி கூடும்வண்ணந் தோணேக்கம். (க)

என்றும் பிறந்திறந் தாழாமே யாண்டுகொண்டான்
கன்றால் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய
குன்றாத சீர்த்தில்லை யம்பலவன் குணம்பரவித்
துன்றார் குழலினீர் தோணேக்க மாடாமோ. (உ)

பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலச மூனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணேக்க மாடாமோ. (ங)

---

(க) ஆரும் - நிரம்பியிருக்கிற; பேய்த்தேர் - கானல்நீர்; முகக்குறும் - மொள்ளத் தொடங்கும்; தோணேக்கம் - மகளிர் விளையாட்டிலொன்று. (உ) கன்றால் விளவு எறிந்தான் - கன்றைக் கொண்டு விளாங்கனியை எறிந்த திருமால்; துன்று ஆர் - நெருங்கிய. (ங) பொருள்பற்றி - (பூசைக்குரிய) பொருள்களைக்கொண்டு; வாய்க்கலசம் - வாயாகியகுடம்; வேடனார் - கண்ணப்பதேவர்; சேடு - பெருமை. (ச) நல்பால் படுத்து - நல்ல பகுதியில் உட்

கற்போலு நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால்
நிற்பானைப் போலவென் னெஞ்சினுள்ளே புகுந்தருளி
நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்ஙன்
சொற்பால தானவா தோணோக்க மாடாமோ. (௪)

நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்
உலகேழெனத் திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ. (௫)

புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்த மதங்களிற் றட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினாற் றோணோக்க மாடாமோ. (௬)

---

படுத்திக்கொண்டு; சொல்பாலது ஆன - புகழின்பாற் பட்டதான. (௫) உயிர் - வாயு; விசும்பு - ஆகாயம்; புலன்ஆய மைந்தன் - அறிவுடைய ஆன்மா; நின்ற - வியாபித்து நின்ற. (௬) **இந்தப் பாசுரத்தின்** முதலிரண்டடியிலும் பௌத்த முதலிய சமயங்களை இழித்துக்கூறிய காரணமென்னை யெனின், அவற்றின் பொருள் நிச்சய தாரதம்மியங்களை விளக்கும் பொருட்டே. அதாவது, எந்தச் சமயத்தில் நின்றாலும் முத்தி கிடைக்குமென்பது கூடாமை. ஆத்மா இல்லையென்பார் ஆத்மாவைப் பெறமாட்டார். கடவுள் இல்லையென்பார் கடவுளை வணங்கமாட்டார். மலமாயை கன்மங்கள் இல்லையென்பார் அவைகளினின்றும் நீங்கமாட்டார். ஆகையால் அவரவர் கூறும் பொருள் நிச்சயத்துக் கேற்பவே ஞானமும் ஒழுக்கமும் பயனும் வேறு வேறாயிருக்குமாதலின் அவர்கள் யாவரும் ஒரே பயனடைய நியாயமின்று. அதனால் அந்தந்தச் சமயவிதிப்படி யொழுகினால் பரமுத்தியடைவ தெப்படியென்பதை யோர்க. அன்றியும் வேத போதனையிலமையாத மிலேச்சமதங்கள் பலவிருக்கின்றன. அவை சரீர தத்துவங்களைப் பற்றியாவது, கன்மவிளைவைப்பற்றியாவது, இன்பதுன்ப விளைவுகளைப் பற்றியாவது, ஆன்மாவைப் பற்றியாவது, கடவுளைப் பற்றியாவது அறியாதவைகளாகவே யிருக்கின்றன. **சமாசம் சமாசம்** என்று கூறி எல்லா மதங்களும் ஒன்றேயென்று குழப்புவது சிறிதும் பொருத்தமின்று. அவையாவும் அவ்வக்கால நிலைமைக்குத் தக்கவாறே ஆண்டவனே அறிஞர் மூலமாய் அறிவுறுத்தினாராதலின் அவையாவும் சமரச சன்மார்க்கமாகிய சித்தாந்த செந்நெறிக்குச் சோபானங்களாம். அவற்றைக் குறைகூறியது

தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டும்
சேதிப்ப வீசன் றிருவருளாற் றேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம். (எ)

மான மழிந்தோ மதிமறந்தோ மங்கைநல்லீர்
வானந் தொழுந்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
ஆனந்தக் கூத்த னருள்பெறி னு மவ்வணமே
ஆனந்த மாகிநின் றாடாமோ தோணோக்கம். (அ)

எண்ணுடை மூவ ரிராக்கதர்க ளெரிபிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலைமு னின்றதற்பின்
எண்ணிலி யிந்திர ரெத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் டோணோக்கம். (கூ)

பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்க ணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாந் தோணோக்க மாடாமோ. (ம)

காம னுடலுயிர் காலன்பற் காய்கதிரோன்
நாமக ளுசி சிரம்பிரமன் கரமெரியைச்
சோமன் கலைதலை தக்கனையும் மெச்சனையும்
தூய்மைகள் செய்தவா தோணோக்க மாடாமோ. (கக)

பிரம னரியென் றிருவருந்தம் பேதைமையால்
பரம மியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க

---

இழிவை இழிவென்றுணர்ந்தால் உயர்வை எவருந் தேடுவர் என்னுங் கருணையே. தட்டுளுப்புப்பட்டு - தடுமாற்றமடைந்து; சித்தம் சிவமாக்கி - சித்தத்தை அன்பு மயமாகச்செய்து. (எ) மாணி - பிரமசாரி, தண்டியடிகள்; சிவகருமம் - சிவபூசை; பாதகம் - பாவம்; சோறு - அறம், சிவபுண்ணியம். (அ) மதி - அறிவு; ஆனந்தம்ஆகி - இன்பவடிவாகி (ஆன்மா சார்ந்ததின் வண்ணம் சாரும் இயல்புடையதாகலின்).(கூ) எண் - மதிப்பு; எரி - நெருப்பு; கடைத்தலை-முதல் வாயில். (ம) பங்கயம் - தாமரை; இடந்து - தோண்டி; பரவி - துதித்து, பரவச்செய்து. (கக) எரி - அக்கினிதேவன்; (கஉ)

அரனு ரழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்க மாடாமோ. (௧௨)

ஏழைத் தொழும்பனே னெத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந் தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்க மாடாமோ. (௧௩)

உரைமாண்ட வுள்ளொளி யுத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட விந்திரியப் பறவை யிரிந்தோடத்
துரைமாண்ட வாபாடித் தோணோக்க மாடாமோ. (௧௪)

திருச்சிற்றம்பலம்.



---

பதைப்பு - பதற்றம், துடிப்பு. (௧௩) தொழும்பன் - தொண்டன்; பாழுக்கு - பாழ்நிலத்துக்கு, வீணுக்கு; சிந்தாத - அழியாத; நல்மணி- சிறந்த மாணிக்கம் போன்ற சிவபிரான்; தாழை - தாளை, வேரை. (௧௪) உரைமாண்ட - சொல்லிறந்த; கரைமாண்ட - கரையற்ற; இரைமாண்ட - இரையாகிய புலன்களை (விடயங்களை) அற்ற; இரிந்து ஓட - அஞ்சியோட; துரை - துறை, (தங்குவதற்கு) இடம்.

# திருப்பொன்னூசல்.

அருட்சுத்தி

## எ - து. அருளோடுகலத்தல்.



தில்லையிலருளிச் செய்யப்பட்டது.

ஒப்புமைபற்றிவந்த ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

சீரார் பவளங்கான் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை யேறி யினிதமர்ந்து
நாரா யணனறியா நாண்மலர்த்தா ளடியேற்
கூராகத் தந்தருளு முத்தர கோசமங்கை
ஆரா வமுதி னருட்டா ளிணைபாடிப்
போரார்வேற் கண்மடவீர் பொன்னூச லாடாமோ. (க)

மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்றங்கு தேவர்களுங் காணா மலரடிகள்
தேன்றங்கித் தித்தித் தமுதூறித் தான்றெளிந்தங
கூன்றங்கி நின்றுருக்கு முத்தர கோசமங்கைக்
கோன்றங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூச லாடாமோ. (உ)

(க) கான் - கால்; முத்தம் - முத்துமாலை; நாள்மலர் - புதிதாகிய தாமரை மலர்; அருள்தாள் - அருளுருவாகிய திருவடி; போர் ஆர் - போர்த் தொழிலமைந்த. (உ) அங்குஇலங்கு - அவ்விடத்து விளங்கா நின்ற; தேன் - தேனின் சுவை; ஊன் - உடம்பு; குலம் - மேன்மை; அனநடை - அன்னம் போன்ற நடை. (ங) மூன் -

முன்னீறு மாதியு மில்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி யிமையோர்க டாநிற்பத்
தன்னீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி யுத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (ங)

நஞ்சமர் கண்டத்த னண்டத் தவர்நாதன்
மஞ்சுதோய் மாடமணி யுத்தர கோசமங்கை
அஞ்சொலா டன்னோடுங் கூடி யடியவர்கள்
நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் றூய புகழ்பாடிப்
புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூச லாடாமோ. (ச)

ஆனை வலியோ வரிவையோ வென்றிருவர்
காணாக் கடவுள் கருணையினாற் றேவர்குழாம்
நாணாமே யுய்யவாட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக வுண்டருளு முத்தர கோசமங்கைக்
கோணார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூச லாடாமோ. (ரு)

மாதாடு பாகத்த னுத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையா னடியாருள்
கோதாட்டி நாயேனை யாட்கொண்டென் றொல்பிறவித்
தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பால்
போதாடு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (சு)

---

நினைக்கின்ற; பலநூறு - பலநூறு; மன் ஊறமன்னும் - பெருமை வளரும்படி நிலைபெற்ற; மணி - அழகாகிய; மின்எறு - ஒளிமிகுந்த; வியன் - மேன்மை; பொன்எறு - தேமல்படர்ந்த. (ச) மஞ்சு - மேகம்; சொல்லாள் - மொழியாளாகிய உமாபிராட்டியார்; துஞ்சல் - இறத்தல்; புஞ்சம்ஆர் - கூட்டமாகப் பொருந்திய; வெள்வளை - சங்கவளையல். (ரு) நாணாமே - அஞ்சாமே; கோண் - கோணல் (வளைவு); வனம் - அழகு. (சு) ஆடு - தங்கு; போது - தாமரையின் பேரரும்பு. (எ) பன்னி - சொல்லி; பொன் - திருமகள். (அ) குடுமி-

உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் றன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி யாடு மணிமயில்போல்
என்னத்த னென்னையுமாட் கொண்டா னெழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (எ)

கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால வமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து
ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்
சீலந் திகழுந் திருவுத்தர கோசமங்கை
மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்
பூலித் தகங்குழைந்து பொன்னூச லாடாமோ. (அ)

தெங்குலவு சோதித் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொள்வான்
பங்குலவு கோதையுந் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவு பூண்முலையீர் பொன்னூச லாடாமோ. (கூ)

திருச்சிற்றம்பலம்.



உச்சி, சிகரம்; குவலயம் - பூமண்டலம்; தாழ் - ஆழ்ந்த; பூலித்து - பூரித்து (உடல் புளகித்து). (கூ) தெங்குஉலவு - விர்த்தியடைகிற தெங்கு; தங்குஉலவு - தங்கி விளங்குகிற; எம்தரமும் - எங்கள் இனத்தையும்; கோதை - பூமாலையணிந்த உமாதேவி; கொங்கு - மணம்; குணம் - கலியாண குணம்; பொங்கு - விளக்கம், பிரகாசம்.

# * அன்னைப் பத்து.

## ஆத்தும பூரணம்

## எ - து. ஆன்மா சிவனுடனே நிறைதல்.



தில்லையிலருளிச் செய்யப்பட்டது.

கலி விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வேத மொழியர் வெண்ணீற்றர் செம்மேனியர்
நாதப் பறையின ரன்னே யென்னும்
நாதப் பறையினர் நான்முகன் மாலுக்கு
நாதரிந் நாதனா ரன்னே யென்னும். (க)

கண்ணஞ் சனத்தர் கருணைக் கடலினர்
உண்ணின் றுருக்குவ ரன்னே யென்னும்
உண்ணின் றுருக்கி யுலப்பிலா வானந்தக்
கண்ணீர் தருவரா லன்னே யென்னும். (உ)

நித்த மணாளர் நிரம்ப வழகியர்
சித்தத் திருப்பரா லன்னே யென்னும்
சித்தத் திருப்பவர் தென்னன் பெருந்துறை
அத்தரா னந்தரா லன்னே யென்னும். (ங)

ஆடரப் பூணுடைத் தோல்பொடிப் பூசிற்றோர்
வேட மிருந்தவா றன்னே யென்னும்
வேட மிருந்தவா கண்டுகண் டென்னுள்ளம்
வாடுமிது வென்னை யன்னே யென்னும். (ச)

---

* இந்தத் திருப்பத்து ஒரு பெண் தன் தாய்க்குச் சொல்லியதாகக் கூறப்பட்டது. (க) நாதப்பறையினர்-நாததத்துவமாகிய முரசையுடையவர்; என்னும் - என்பாள்; (உ) அஞ்சனம் - மை; உலப்பு இலா - அழிவில்லாத. (ங) நித்தம் - எப்பொழுதும்; மணாளர் - மணவாளர்; நிரம்ப அழகியர் - பூரண அழகுடையவர், (எம்முருகனைப்

நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்
பாண்டிநன் னாடரா லன்னே யென்னும்
பாண்டி நன்னாடர் பரந்தெழு சிந்தையை
ஆண்டன்பு செய்வரா லன்னே யென்னும். (ரு)

உன்னற் கரியசீ ருத்தர மங்கையர்
மன்னுவ தென்னெஞ்சி லன்னே யென்னும்
மன்னுவ தென்னெஞ்சின் மாலயன் காண்கிலார்
என்ன வதிசய மன்னே யென்னும். (சு)

வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிரு முண்டத்தர்
பள்ளிக்குப் பாயத்த ரன்னே யென்னும்
பள்ளிக்குப் பாயத்தர் பாய்பரி மேல்கொண்டென்
உள்ளங் கவர்வரா லன்னே யென்னும். (எ)

தாளி யறுகினர் சந்தனச் சாந்தினர்
ஆளெம்மை யாள்வரா லன்னே யென்னும்
ஆளெம்மை யாளு மடிகளார் தங்கையில்
தாள மிருந்தவா றன்னே யென்னும். (அ)

தையலோர் பங்கினர் தாபத வேடத்தர்
ஐயம் புகுவரா லன்னே யென்னும்
ஐயம் புகுந்தவர் போதலு மென்னுள்ளம்
நையுமது வென்னே யன்னே யென்னும். (கூ)

கொன்றை மதியமுங் கூவிள மத்தமும்
துன்றிய சென்னிய ரன்னே யென்னும்
துன்றிய சென்னியின் மத்தமுன் மத்தமே
இன்றெனக் கானவா றன்னே யென்னும். (ய)

திருச்சிற்றம்பலம்.

---

போல்). (ச) ஆடுஅரபூண் - ஆடுகின்ற பாம்பு ஆபரணம். (ரு) நெறி தரு - நெறிந்த; குஞ்சி - சடை. (எ) கலிங்கம் - பட்டாடை; வெண் திருமுண்டத்தர் - அழகிய வெண்தலையையுடையவர்; பள்ளி குப்பா யத்தர் - ஆனந்த நித்திரை என்னும் மேற்போர்வையையுடையவர். (அ) தாளி - தாளிக்கொடி; சாந்து - கலவை. (கூ) தாபதவேடம் - தவவேடம். (ய) மதியம் - பிறை; கூவிளம் - வில்வம்; மத்தம் - ஊமத்தம்; துன்றிய - பொருந்திய; உன்மத்தம் - மயக்கம்.

# குயிற்பத்து.

## ஆத்துமவிரக்கம்

## எ - து. சிவனைக்கண்டிரங்குதல்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கீத மினிய குயிலே கேட்டியே லெங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவிற் பாதாள மேழினுக் கப்பால்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தொன்மை
ஆதிகுண மொன்று மில்லா னந்தமி லான்வரக் கூவாய். (க)

ஏர்தரு மேழுல கேத்த வெவ்வுரு வுந்தன் னுருவாய்
ஆர்கலி சூழ்தென் னிலங்கை யழகமர் வண்டோ தரிக்குப்
பேரரு ளின்ப மளித்த பெருந்துறை மேய பிரானைச்
சீரிய வாயாற் குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய். (உ)

நீல வுருவிற் குயிலே நீண்மணி மாட நிலாவும்
கோல வழகிற் றிகழுங் கொடிமங்கை யுள்ளுறை கோயில்
சீலம் பெரிது மினிய திருவுத் தரகோச மங்கை
ஞாலம் விளங்க விருந்த நாயக னைவரக் கூவாய். (ங)

---

(க) ஆதிகுணம் - முதலும் பிரகிருதிகுணங்களும். (உ) ஏர்தரும் - அழகைச்செய்கிற; ஆர்கலி - கடல்; வண்டோதரி - இராவணன்மனைவி. (ங) உரு - நிறம்; கோலம்அழகின் - பேரழகோடு; கொடிமங்கை - திருமகள்; சீலம் - குணம். (ச) பயிலும் - சஞ்சரிக்

தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயிலே யிதுகேணீ
வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட வள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென் னுணர்வது வாய வொருத்தன்
மான்பழித் தாண்ட மென்னோக்கி மணாளனை நீவரக் கூவாய். (௪)

சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசை யறுப்பான்
முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய். (௫)

இன்பந் தருவன் குயிலே யேழுலகும் முழு தாளி
அன்ப னமுதளித் தூறு மானந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச் சுவடொத்த நற்பரி மேல்வரு வானைக்
கொம்பின் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய். (௬)

உன்னை யுகப்பன் குயிலே யுன்றுணைத் தோழியு மாவன்
பொன்னை யழித்த நன்மேனிப் புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங் கன்வரக் கூவாய். (௭)

வாவிங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் றேடி
ஓவிய வுன்னி நிற்ப வொண்டழல் விண்பிளந் தோங்கி
மேவியன் றண்டங் கடந்து விரிசுடராய் நின்ற மெய்யன்
தாவிவரும் பரிப்பாகன் றாழ்சடை யோன்வரக் கூவாய். (அ)

காருடைப் பொன்றிகழ் மேனிக் கடிபொழில் வாழுங் குயிலே
சீருடைச் செங்கம லத்திற் றிகழுரு வாகிய செல்வன்

---

கும்; வான் - விண்ணுலகம்; மான் - மானினதுநோக்கம்; மெல் நோக்கி - மென்மையாகிய நோக்கத்தையுடைய உமாதேவி. (௫) சுந்தரத்து - அழகினால்; சுடர் - கிரணம்; ஆசு - குற்றம்; சிந்துரம் - சிவப்பு. (௬) ஆளி - ஆள்வோன்; சுவடு - தழும்பு; மிழற்றும் - குழறிப்பேசும். (௭) பொன்னையழித்த - பொன்னைத் தோற்கடித்த, பொன்னினும் மிக்க ஒளியுள்ள; புயங்கன் - புயங்கம்என்னும் கூத்துடையவன். (அ) ஓவி - (தேடுந்தொழிலினின்று) நீங்கி; உன்னி - தியானித்து; ஒண்தழல் - ஒட்பமாகிய நெருப்பு; மெய்யன் - திருமேனியுடையவன். (கூ) கார்உடை - கருநிறத்தையுடைய; கடி -

பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாச மறுத்தெனை யாண்ட
ஆருடை யம்பொனின் மேனி யமுதினை நீவரக் கூவாய். (௯)

கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயி லேயிது கேணீ
அந்தண னாகிவந் திங்கே யழகிய சேவடி காட்டி
எந்தம ராமிவ னென்றிங் கென்னையு மாட்கொண் டருளும்
செந்தழல் போற்றிரு மேனித் தேவர் பிரான்வரக் கூவாய். (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# திருத்தசாங்கம்.

## அடிமைகொண்ட முறைமை

## எ - து. பத்து அடையாளத்தாலுண்டமை.

அவையாவன:—தலைவனது நாமம், நாடு, பதி, ஆறு, மலை, வாகனம், ஆயுதம், முரசு, தார், கொடி என்பனவாம்.

நேரிசைவெண்பா.

---

திருச்சிற்றம்பலம்.

ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமந் தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான் செப்புவபோல்
எம்பெருமான் றேவர்பிரா னென்று. (௧)

---

மணம்; ஆர் – ஆத்திமாலை. (௰) கொந்துஅணவும் - பூங்கொத்துக்கள் பொருந்திய; தமர் - அன்பர்.

(௧) செம்பெருமான் - சிவந்தமேனியையுடைய உருத்திரமூர்த்தி; வெண்மலரான் - வெண்மையானதாமரைமலரை ஆசனமாகவுடைய பிரமதேவன்; பால்கடலான் - பாற்கடலையுடைய திருமால்; (பரமசிவத்தை எம்பெருமானேயென்று துதித்தல் மிகச்சிறப்புடைத்து). (௨) ஏதம் - குற்றம்; மரகதமே - பச்சைக்கிளியே;

ஏதமிலா வின்சொன் மரகதமே யேழ்பொழிற்கும்
நாதனமை யாளுடையா னூடுரையாய்—காதலவர்க்
கன்பாண்டு மீளா வருள்புரிவா னூடென்றுந்
தென்பாண்டி நாடே தெளி. (உ)

தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்
மாதாடும் பாகத்தன் வாழ்பதியென்—கோதாட்டிப்
பத்தரெல்லாம் பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்
உத்தரகோ சமங்கை யூர். (ங)

செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீநஞ் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையா னாறுரையாய்—தையலாய்
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காணுடையா னாறு. (ச)

கிஞ்சுகவா யஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவு மலைபகராய்—நெஞ்சத்
திருளகல வாள்வீசி யின்பமரு முத்தி
அருளுமலை யென்பதுகா ணுய்ந்து. (ரு)

இப்பாடே வந்தியம்பு கூடுபுக லென்கிளியே
ஒப்பாடாச் சீருடையா னூர்வதென்னே—எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண் ணேத்திசைப்ப
வான்புரவி யூரு மகிழ்ந்து. (சு)

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய்—ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயும்
கழுக்கடைகாண் கைக்கொள் படை. (எ)

---

அன்புஆண்டு - கருணையினால் ஆட்கொண்டு. (ங) தாது - மகரந்தம்; தத்தாய் - கிள்ளையே; என் - என்றுசொல். (ச) செல்வி - செல்வியே (பெண்கிளியே); ஆறு - நதி; வான்வந்த-பெருமையமைந்த. (ரு) கிஞ்சுகம் - முருக்கம்பூ; அம்சுகமே - அழகியகிளியே; மஞ்சன்-அழகன். (சு) இபாடே - இவ்விடத்தே; ஊர்வது - ஊர்தி; புரையும் - நிகர்க்கும்; பெண் - மாதர்; வான் - சிதாகாசம். (எ) கோல்தேன் - கொம்பிற்கட்டியதேன்; கிள்ளாய் - கிள்ளையே; படை -

இன்பான் மொழிக்கிள்ளா யெங்கள் பெருந்துறைக்கோன்
முன்பான் முழங்கு முரசியம்பாய்—அன்பால்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை. (அ)

ஆய மொழிக்கிள்ளா யள்ளூறு மன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தாரென்—தீயவினை
நாளுமணு காவண்ண நாயேனை யாளுடையான்
தாளியறு காமுவந்த தார். (கூ)

சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி யேர்காட்டுங்
கோதிலா வேறுங் கொடி. (ய)

திருச்சிற்றம்பலம்.



---

ஆயுதம்; ஏற்றார் – எதிர்த்தவர்; கழுக்கடை – சூலம். (அ) இன்பால் – இனியபால்; முன்பால் – சந்நிதியில்; முரசு – பேரிகை; பருமிக்க – பெருமைமிகுந்த. (கூ) பால் – இடத்து; மெய்த்தார் – உண்மையான மாலை. (ய) நீர் – குணம்; கோலம்பொலியும் – அழகுமிகுந்த; கொடி – துவசம்; ஏதிலார் – பகைவர்; துண்ணென்ன – அஞ்சும்படி; ஏறு – ரிஷபம்.

# * திருப்பள்ளியெழுச்சி.

## திரோதானசுத்தி

### எ - து. ஏகமாகிய திரோதாயி மறைப்பான மலத்தை நீக்கல்.



திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் றிருமுகத் தெமக்கருண் மலரும்
எழினகை கொண்டுநின் றிருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (க)

அருணனிந் திரன்றிசை யணுகின னிருள்போய்
அகன்றது வுதயநின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரிய னெழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணும்

---

* **இந்தத்திருப்பதிகத்தைத் தினந்தோறும்** அதிகாலையில் பாராயணஞ்செய்வோர் சிவப்பிரசாதத்துக்குப் பாத்திரராவார். ஆணவமலமும் அணுவணுவாகத் தேய்ந்துபோம்.

(க) போற்றி - நமஸ்காரம்; வாழ்முதல் - பேரின்ப வாழ்வுக்கு முதற்காரணம்; புலர்ந்தது - பொழுதுவிடிந்தது; இணை - இரண்டு; துணை - ஒப்பு; ஏற்றி - துதித்து; நகை - முறுவல்; பள்ளி - சயனம். (உ) அருணன் - சூரியன்; இந்திரன்திசை - கீழ்த்திசை; எழஎழ -

திரணிரை யறுபத முரல்வன விவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
அருணிதி தரவரு மானந்த மலையே
அலைகட லேபள்ளி யெழுந்தரு ளாயே. (௨)

கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுக ளியம்பின வியம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழற் றாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரு மறிவரியா யெமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (௩)

இன்னிசை வீணைய ரியாழின ரொருபால்
இருக்கொடு தோத்திர மியம்பின ரொருபால்
துன்னிய பிணைமலர்க் கையின ரொருபால்
தொழுகைய ரழுகையர் துவள்கைய ரொருபால்
சென்னியி லஞ்சலி கூப்பின ரொருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையு மாண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (௪)

பூதங்க டோறுநின் றாயெனி னல்லால்
போக்கிலன் வரவில னெனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுத லாடுத லல்லால்
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச்

---

உதித்தெழ; மலர - விரிய; அண்ணல் - பெருமை; திரள்நிறை அறுபதம் - கூட்டமான வரிசையாகிய வண்டுகள்; ஓர் - உணர்; அருள்நிதி - அருட்செல்வம். (௩) குருகுகள் - பறவைகள்; இயம்பின - ஒலித்தன; சங்கம்இயம்பின - சங்கங்கள் முழங்கின; தாரகை- நட்சத்திரங்கள்; ஒளிஓவின - ஒளிமழுங்கின; ஒளி-சூரியன்; தேவ - தேவனே; செறி - நெருங்கிய. (௪) இருக்கு - வேதம்; தோத்திரம்- திராவிடதுதி; பிணைமலர்-தொடுக்கப்பட்டமலர்மாலை; துவள்கையர் - அசைதலையுடையவர். (௫) பூதங்கள்-உயிர்கள்; ஏதங்கள்-குற்றங்கள்.

சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்மரி யாயெங்கண் முன்வந்
தேதங்க ளறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (ரு)

பப்பற வீட்டிருந் துணருநின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றாரணங் கின்மண வாளா
செப்புறு கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (சு)

அதுபழச் சுவையென வமுதென வறிதற்
கரிதென வெளிதென வமரரு மறியார்
இதுவவன் றிருவுரு விவனவ னெனவே
எங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (எ)

முந்திய முதனடு விறுதியு மானாய்
மூவரு மறிகில ரியாவர்மற் றறிவார்
பந்தணை விரலியு நீயுநின் னடியார்
பழங்குடி லொறுமெழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. (அ)

---

(சு) பப்புஅற-ஒப்பில்லாத; வீடு-மனத்துறவு; பந்தனை-பிறவிப் பிணிப்பு; மைப்புஉறுகண்-மைதீட்டியகண்; அணங்கு - உமாதேவி; செப்புஉறு - பெருமையாகச் சொல்லப்படுகிற. (அ) மூவர்-பிரமன்,

விண்ணகத் தேவரு நண்ணவு மாட்டா
விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்டிருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. (௯)

புவனியிற் போய்ப்பிற வாமையி னாணாம்
போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவு மலரவ னாசைப்
படவுநின் னலர்ந்தமெய்க் கருணையு நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

விஷ்ணு, உருத்திரன்; பந்துஅணைவிரலி - பந்தை ஏந்திய விரலையுடைய உமாதேவி; அந்தணன் - அழகியதட்பத்தையுடையவன், அருளுடையோன், அறவோன். (௯) விழுப்பொருளே - மேலான பொருளே; தொழுப்பு - தொழும்பு; எண் அகத்தாய் - மனதின்கண் உள்ளவனே. (௰) புவனி - பூமி; நாள்நாம் போக்குகின்றோம் - நாம் நாள் கழிக்கின்றோம்; அவமே - வீணே; ஆறு - வழி (இங்கே இடம்); மலரவன் - பிரமன்; அலர்ந்த - பரந்த; கருணை - கருணை சக்தி; அவனி - பூமி. (ஈண்டு பூமியைச்சிறப்பித்துக்கூறிய காரணம் இம்மைமறுமைப் பயன்களையடைவதற்கு மூர்த்தி, தலம், தீர்த்தம் சாதனமாதலானும், பரமுத்தியையடைவதற்குச் சரியையாதி சன்மார்க்க வழிபாடுகள் காரணமாதலானும் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டுச் சிவபெருமான் ஆட்கொள்ளுமிடம் இதுவேயாகலின் பூமி மற்ற உலகங்களைவிடச் சிறப்புடைத்தாயிற்று).

# கோயின்மூத்த திருப்பதிகம்.

## அநாதியாகிய சற்காரியம்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உடையா ளுன்ற னடுவிருக்கு முடையா ணடுவு ணீயிருத்தி
அடியே னடுவு ளிருவீரு மிருப்ப தானா லடியேனுன்
அடியார் நடுவு ளிருக்குமரு ளைப்புரியாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும் வண்ண முன்னின்றே.(க)

முன்னின் றாண்டா யெனைமுன்ன மியானு மதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன் பிற்பட் டொழிந்தேன் பெம்மா
என்னின் றருளி வரநின்று போந்தி டென்னா விடிலடியார் [னே
உன்னின் றிவனா ரென்னாரோ பொன்னம் பலக்கூத் துகந்தானே.

(க) உடையாள் உன்றன் நடுவிருக்கும் - பஞ்சகிருத்திய அதிகாரத்தினின்றும் நீங்கிச் சுத்த அறிவாய்ப் புறப்பொருளை நோக்காது நிற்கும் உண்மை நிலையில் (சொரூபலக்ஷணத்தில்) தேவரீர் வசப்பட்டு அருட்சத்தி நிற்கும்; உடையாள் நடுவுள் நீயிருத்தி - புறப்பொருளைநோக்கி உலகெலாமாய், வேறாய், உடனுமாய் உயிர்களின் வழிநிற்குநிலையில் (தடஸ்தலக்ஷணத்தில்) அருட்சத்தியின் வசம் தேவரீர் இருப்பீர்; அடியேன்நடுவுள்.........புரியாய் - நீங்களிருவரும் அருள்வசப்பட்டு அதுவாயிருக்கின்ற என்வசத்தில் இருக்கப்பெறின் அடியேன் அடியார் வசப்பட்டு நிற்றல் திண்ணமாதலின் அத்தகைய கருணையைத்தேவரீர் புரிந்தருளவேண்டும். இதன் ரகஸியப்பொருளை **இருதலைமாணிக்கம்** என்னும் ஸ்ரீ பஞ்சாக்ஷரமந்திரத்தில் குருமுகமாயறிந்து தெளிக. இந்தச்செய்யுளே திருவாசக ஹிருதய மந்த்ர சுலோகமென்று வழங்கப்பெறும். (உ) முன்னின்றாண்டாய்......ஒழிந்தேன் - இவ்விரண்டடியும் **இருதலை மாணிக்கம்** என்னும் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை விளக்கவெழுந்தது. எவ்

உகந்தா னேயன் புடையடிமைக் குருகா வுள்ளத் துணர்விலியேன்
சகந்தா னறிய முறையிட்டாற் றக்க வாறன் றென்னாரோ
மகந்தான் செய்து வழிவந்தார் வாழ வாழ்ந்தா யடியேற்குன் [லே.
முகந்தான் றாரா விடின்முடிவேன் பொன்னம் பலத்தெம் முழுமுத

முழுமுத லேயைம் புலனுக்கு மூவர்க்கு மென்றனக்கும்
வழிமுத லேநின் பழவடி யார்திரள் வான்குழுமிக்
கெழுமுத லேயரு டந்திருக்க விரங்குங் கொல்லோவென்
றழுமது வேயன்றி மற்றென் செய்கேன் பொன்னம் பலத்தரைசே.

வாறெனின், தேவரீரே முன்னின்று என்னைப் பின்னே வைத்து ஆண்டீர். நானும் பின்னேயிருந்து தேவரீர் அருள்வழி நின்றேன். பின்னர் நானுமொழிந்து தேவரீரே ஆனேன். இதனை இன்னும் விளக்கின், **அஹம் ப்ரஹ்மம்** (நான் பிரமம்) என்னும் வாக்கியத்தில் பிரமத்தையன்றி அஹமெனும் பதார்த்தமில்லையாயினும், அஹம் முற்பட்டிருத்தலின் ஆன்ம அறிவே எப்போதும் முனைத்துத் தோன்றிக்கொண்டிருக்கும். **ப்ரஹ்மாஹம்** (பிரமம்நான்), **சிவோஹம்** (சிவம்நான்) என்னும் வாக்கியங்களில் பிரமம் முற்பட்டிருத்தலின் முதல்வனறிவே எப்போதும் முனைத்துத் தோன்றிக்கொண்டிருக்கும். அப்போது யாவும் இன்பமயமாய் விளங்கும். ஆதலின் மயக்கவாக்கியமாகிய நான்பிரமம் என்று பாவிப்பதினும் தெளி வாக்கியமாகிய பிரமம் நானென்று பாவிப்பதே சாலச்சிறப்புடைத்தாம். என்னை! துன்பத்தைப் பாவித்தலால் துன்பமயமாயும், இன்பத்தைப்பாவித்தலால் இன்பமயமாயும் இருப்பதுபோல பிரமத்தை நான் என்று பாவிப்பதால் பிரம்மமாவது திண்ணம். கண்ணை ஆதித்தனென்று பாவிக்கின் அந்தகாரம் நீங்காது. அதுபோல **அஹத்**தைப் பிரமமென்று பாவிக்கின் அஞ்ஞானவாசனை நீங்காது. ஆத்மானந்தம் ஒன்றே பிராப்தமாகும். ஏனெனின், ஆத்மா ஆணவமலத்தால் அறிவுகெட்டு, கன்மமலத்தால் மருளடைந்து, மாயாமலத்தால் மயங்கிக்கிடப்பதன்றோ. ஆகலின் எப்போதும் பின்னிற்பதே பிரம்மானந்தத்துக்கு ஏதுவாம். இதனைத் தன்கண் ணிகழும் அநுபவ நிகழ்ச்சியாலறிந்தடங்குக. முயல்வுற்று - முயன்று; என்னின்று - என்னை நீயாகநின்று; அருளிவர - அருட்செய்யும்பொருட்டு; நின்று - கண்ணெதிரேநின்று; போந்திடு - வா; உன்னின்று - உன்னைப் பார்த்துநின்று. (ரு) தக்கஆறு - தகுந்தவழி; மகம் - யாகம்; வழிவந்தார் - வழிவழியாய்வந்தோர்; முடிவேன் - இறப்பேன். (௬) ஐம்புலன் - பஞ்சேந்திரியம்; வான்குழுமி - விண்ணுலகத்தில் கூடி; கெழுமுதலே-அநுபவியாநின்ற முதற்பொருளே; அருள்தந்திருக்க-

அரைசே பொன்னம் பலத்தாடு மமுதே யென்றுன் னருளுக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபக லேசற் றிருந்தே வேசற்றேன்
கரைசே ரடியார் களிசிறப்பக் காட்சி கொடுத்துன் னடியேன்பால்
பிரைசேர் பாலி னெய்போலப் பேசா திருந்தா லேசாரோ. (ரு)

ஏசா நிற்ப ரென்னையுனக் கடியா னென்று பிறரெல்லாம்
பேசா நிற்ப ரியான்றானும் பேணா நிற்பே னின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந் திருவோ லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடு மெந்தா யினித்தா னிரங்காயே. (சு)

இரங்கு நமக்கம் பலக்கூத்த னென்றென் றேமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டா யாள்வா ரிலிமா டாவேனோ
நெருங்கு மடியார் களுநீயு நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரவெங்கள் வாழ்வே வாவென் றருளாயே. (எ)

அருளா தொழிந்தா லடியேனை யஞ்சே லென்பா ராரிங்குப் [த்தா
பொருளா வென்னைப் புகுந்தாண்ட பொன்னே பொன்னம் பலக்கூ
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து வருந்து வேனை வாவென்றுன்
றெருளார் கூட்டங் காட்டாயேற் செத்தே போனாற் சிரியாரோ. (அ)

சிரிப்பார் களிப்பார் தேனிப்பார் திரண்டு திரண்டுன் றிருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார் வெவ்வே றிருந்துன் றிருநாமம்
தரிப்பார் பொன்னம் பலத்தாடுந் தலைவா வென்பா ரவர்முன்னே
நரிப்பாய் நாயே னிருப்பேனோ நம்பி யினித்தா னல்காயே. (கூ)

---

அருள்புரிய. (ரு) தேர் - தேடு; ஏசற்று - துக்கித்து; வேசற்றேன் - மெலிந்தேன்; கரை - முத்திக்கரை; பிரைசேர்பாலில் நெய்போல - பிரைகலந்தபாலில் நெய் மறைந்திருத்தல்போல; ஏசாரோ - வையாரோ. (சு) பேணா - விரும்பா; நேசர் - அன்பர். (எ) என்று என்று - என்றுசொல்லி; கற்பனை - புதியமுறை; மாடாவேனோ - மாடு போல்வேனோ; நிலாவி - விளங்கி; மருங்கே - பக்கத்தே. (அ) மருள் ஆர் - மயக்கம்நிறைந்த; தெருள் - தெளிவு. (கூ) தேனிப்பார் - தியானிப்பார்; தரிப்பர் - உச்சரிப்பர்; நரிபாய் நாயேன் இருப்பேனோ - நரியைப் பாய்கின்ற நாய்போன்று நான் இருப்பேனோ. (ய) நீர் மல்கா - நீர்நிரம்பி; வாழ்த்தா - வாழ்த்தி; குழறு - குழறி; வணங்கா - வணங்கி; ஒல்காநிற்கும் - தளராநிற்கும்.

நல்கா தொழியா னமக்கென்றுன் ஞமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறு வணங்கா மனத்தா னினைந்துருகிப்
பல்கா லுன்னைப் பாவித்துப் பரவிப் பொன்னம் பலமென்றே
ஒல்கா நிற்கு முயிர்க்கிரங்கி யருளா யென்னை யுடையானே. (ய)

திருச்சிற்றம்பலம்.

# கோயிற்றிருப்பதிகம்.

## அநுபோகவிலக்கணம்

## எ - து. சிவானுபூதிக்கடையாளம்.



தில்லையிலருளிச் செயப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
        புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னு ளெழுபரஞ் சோதி
        உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் றெளிவே சிவபெரு மானே
        திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்களியாவையுங் கடந்த
        இன்பமே யென்னுடை யன்பே. (க)

அன்பினா லடியே னாவியோ டாக்கை
        ஆனந்த மாய்க்கசிந் துருக

(க) மாறிநின்று - பகைத்துநின்று; தேறல் - தேன்; பதங்கள் யாவையும் - பதவிகளனைத்தையும். அவை ஸ்ரீ கண்டருத்ரபதம், அனந்தேசுரபதம், சதாசிவமூர்த்தி பதம், பரசிவபதம் ஆகிய இந்

என்பர மல்லா வின்னரு டந்தாய்
யானிதற் கிலனொர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே. (௨)

அரைசனே யன்பர்க் கடியனே னுடைய
அப்பனே யாவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னு மமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே
யானுன்னை யுரைக்குமா றுணர்த்தே. (௩)

உணர்ந்தமா முனிவ ரும்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா வுயிர்கட்கு முயிரே
எனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே
திணிந்ததோ ரிருளிற் றெளிந்ததூ வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கடா மில்லா வின்பமே யுன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே. (௪)

---

நான்குபதங்கள். (௨) என்பரம் - என்பொறுப்பு; பரந்த - வியாபித்த; முத்தனே - மலரகிதனே. (௩) புரைபுரைகனிய - உட்டுளைதோறும் கனியும்படி; பொய்இருள் - முனைத்துநில்லாத ஆணவம், (அதைப்பொய்யென்று சொன்னது பெத்த காலத்திலே மேற்பட்டு நின்று தன்றொழிலைச்செய்த அது, முத்திகாலத்திலே ஒளி முன்னிருள்போலத்தனது சத்தியடங்கிச்சூனியம்போல் நின்றமையான்) திரைபொரா - அலையெறியாநின்ற; தெண்கடலே - தெளிவாகிய சாகரமே; உரை உணர்வுஇறந்து - சொல்லும்மனமும் அற்று; உணர்வே - அறிவுருவே. (௪) உணர்ந்த - ஸர்வகலைகளையும் ஐயந்திரிபற உணர்ந்த; ஒழிந்தார் - மற்றையோரும்; இணங்குஇலி - ஒப்

குறைவிலா நிறைவே கோதிலா வமுதே
　　ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
　　மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறு நீர்போற் சிந்தைவாய்ப் பாயும்
　　திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்
　　இனியுன்னை யென்னிரக் கேனே. (ரு)

இரந்திரந் துருக வென்மனத் துள்ளே
　　எழுகின்ற சோதியே யிமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச்சே வடியாய்
　　திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்தவா காய நீர்நிலந் தீகா
　　லாயவை யல்லையா யாங்கே
கரந்ததோ ருருவே களித்தன னுன்னைக்
　　கண்ணுறக் கண்டுகொண் டின்றே. (சு)

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
　　தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தேன்
　　நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்
　　திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
　　யாருன்னை யறியகிற் பாரே. (எ)

---

பில்லாதவனே; திணிந்தது - செறிந்தது; ஆவெளியே - சிதா காசமே; குணங்கள் - பிரகிருதி குணங்கள். (ரு) மன்னே - இறைவனே; சிறைபெறு - கரைகோலப்பெறுத; நீர் - வெள்ளம்; சிந்தைவாய் - மனதில். (சு) நிரந்த - நிறைந்த; கண்ணுறக்கண்டு - கண்ணாரக்கண்டு. (எ) இருள் - அறியாமை, ஆணவமலசக்தி; ஞாயிறு - சூரியன்; தன்மை - விதம், அதுபடலம் நீங்கினகண்ணுக்கு ஆதித்தன் விளக்குவதுபோல் மலம் நீங்கின டக்குவான்மாவுக்கு ஆசிரியர் அறிவுறுத்துந்தன்மை; சென்றுசென்று அணுவாய் தேய்ந்து

பார்பத மண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதே லரிய
நின்மலா நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரய லுள்ளார்
ஆனந்த மாக்குமென் சோதீ. (அ)

சோதியாய்த் தோன்று முருவமே யருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே யந்தமே பந்த
மறுக்குமா னந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் னிணையடி தந்தே. (கூ)

---

தேய்ந்து ஒன்றும் - தத்துவதாத்வீகங்களனைத்தையும் கொஞ்சங் கொஞ்சமாகவிட்டு நீங்கிச் சேடமாய் நின்ற ஆன்மஅறிவு முழுமுதற் பரமபொருளையே நோக்கிச் சென்று சென்று, கற்பூரதீபத்தைப் போல அப்பரம்பொருளினது அறிவு மேலிடமேலிட, அணு அணு வாகத்தேய்ந்து, (போயொளித்து), முடிவில் தானும் எதிருங் கழன்று அவ்வறிவுருவாய் நிற்றலாகிய பரிபூரண ஏகமாம். இதைத் தான் தன்மை முன்னிலையற்ற ஆனந்தமயமான ஒரே அகண்ட சொரூபமென்பர். இவ்வுண்மை முத்தியில் முதல்வன் ஆன்மா என்னும் இருபொருளுமுண்டென்று கூறும் சித்தாந்த சைவத்துக்கு முரணாகாதோவெனின்! ஆகாது. அவ்விடத்து அவ்விருபொருளிருப்பினும் பிரிக்கக்கூடாமைபற்றியும், எண்குணங்களும் விளங்கித் தோன்று முறைமைபற்றியும் அவை ஏகமாம். யானாகியவென்னை விழுங்கி வெறுந்தானாக நின்றது தற்பரமன்றோ. (அ) பார் - பூமி; பதம் - அந்தரிட்சம், அது ஆகாயமும், அதிலுள்ள உலகங்களும்; அண்டம் - சுவர்க்கலோகங்கள்; பரந்து - வியாபித்து; நீர் உறு தீயே - நீரிற்பொருந்திய அக்கினிபோன்றவனே; நின்மலா - மலரஹிதனே. (ய) தந்தது உன்றன்னை - உன்னறிவையும், உன்னருளையும், உன் ஐந்தெழுத்தையுங்கொடுத்தாய்; கொண்டது என்றன்னை -

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா வார்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றேன்
இயாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா வுடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனொர்கைம் மாறே. (ய)

திருச்சிற்றம்பலம்.

# செத்திலாப்பத்து.

## சிவானந்தமளவறுக்கொணுமை

## எ - து. சிவானந்தமணுகிச் சேயிக்கப்படாமை.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யனே னகநெகப் புகுந்தமு தூறும்
புதுமலர்க்கழ லிணையடி பிரிந்தும்
கையனே னின்னுஞ் செத்திலே னந்தோ
விழித்திருந் துள்ளக் கருத்தினை யிழந்தேன்

---

என்னுயிரையும், என்னுடலையும், என்பொருளையும் ஏற்றுக்கொண்டாய்; சதுரர் - சாமர்த்தியமுள்ளவர்; உடலிடங்கொண்டாய் - உடம்பையே இடமாகக்கொண்டருளினீர். அதனல் என்னுடைய சிந்தையும்செயலும் நின்னுடையனவே. "நாமற்றபின் நாதன்தன் செயல்தானே" எனவும், "தன்னையே தந்தான்" எனவுங்கூறிய அருண்மொழியைச் சிந்திக்க.

(க) அகம்நெக - மனம் நெகிழும்படி; கையனேன் - சிறுமை

ஐயனே யரசே யருட்பெருங் கடலே
அத்த னேயயன் மாற்கறி யொண்ணச்
செய்யமே னியனே செய்வகை யறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (க)

புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டியா யண்ட வாணரும் பிறரும்
வற்றி யாருநின் மலரடி காண
மன்ன வென்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றிஞய் பதையேன் மனமிக வுருகேன்
பரிகி லேன்பரி யாவுட றன்னைச்
செற்றி லேனின்னுந் திரிதரு கின்றேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (உ)

புலைய னேனையும் பொருளென நினைந்துன்
அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்
தலையி ஞனடந் தேன்விடைப் பாகா
சங்கரா வெண்ணில் வானவர்க் கெல்லாம்
நிலைய னேயலை நீர்விட முண்ட
நித்த னேயடை யார்புர மெரித்த
சிலைய னேயெனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (ந)

அன்ப ராகிமற் றருந்தவ முயல்வார்
அயனு மாலுமற் றழலுறு மெழுகாம்
என்ப ராய்நினை வாரெ னைப்பலர்
நிற்க விங்கெனை யெற்றினுக் காண்டாய்
வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை
மரக்க ணென்செவி யிரும்பினும் வலிது

யேன். (உ) அண்டவாணர்-விண்ணுலகத்தில் வாழுந்தேவர்; வற்றி-உடம்புமெலிந்து; மன்ன-இறைவனே; பரிகிலேன்-வருந்துகிலேன்; பரியாஉடல் - தாங்கவொண்ணத உடம்பு; செற்றிலேன் - வருந்திலேன். (ந) நிலையனே-இருப்பிடமானவனே; அடையார்-பகைவர்; சிலையனே-வில்லையுடையவனே. (ச) என்பர்ஆய்-என்பையுடையராய்; வல்பராய்முருடு - வலியபராய்க்கட்டை; தென் - அழகிய.

தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (ச)

ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐய னேயென்றுன் னருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரு நாடரும் பொருளே
நாத னேயுனைப் பிரிவுறு வருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர்பி ரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (ரு)

அறுக்கி லேனுட லுணிபடத் தீப்புக்
கார்கி லேன்றிரு வருள்வகை யறியேன்
பொறுக்கி லேனுடல் போக்கிடங் காணேன்
போற்றி போற்றியென் போர்விடைப் பாகா
இறக்கி லேனுனைப் பிரிந்தினி திருக்க
என்செய் கேனிது செய்கவென் றருளாய்
சிறைக்க ணேபுன னிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (சூ)

மாய னேமறி கடல்விட முண்ட
வான வாமணி கண்டத்தெம் மமுதே

---

(ரு) ஆட்டுத்தேவர் - ஆட்டப்பட்டதேவர், அவர் மும்மூர்த்திகள் முதலாயினோர்; விதி - நியமனம்; நாட்டுத்தேவர் - பூசுரர்; காயம் மாயம் - உடம்பாகிய பொய்ப்பொருள்; சேட்டைத்தேவர் - பெருமையையுடைய தேவர்கள். (இந்தத் திருப்பாட்டில் கரும்பு ஒன்று யிருக்கினும் பகுதிபற்றி சாரமும் பலனும் வேறுபடுதல்போலச் சகல தேவதைகளும் பரம்பொருளொன்றின் உறுப்புக்களாகக் கூறப் படினும் அவர்களின் தன்மைப்பற்றி பலன் வேறுபடுகின்றமையால் அவர்களையொழித்து அருள்வழி நிற்பேன் என்று அறிவுறுத்தினர்).
(சூ) ஆர்கிலேன் - தங்கிலேன்; பொறுக்கிலேன் - தாங்கமாட்டேன்; சிறைக்கணே - கரைகோலின இடங்களிலே; புனல்நிலவிய - நீர்நிலை பெற்ற. (எ) மறிகடல் - அலைகள்மறிக்கின்றகடல்; மணிகண்டம் - நீலகண்டம்; பேயன் - பேய்த்தன்மையுடையவன். அது சிவபெருமானைத்தரிசிக்க உத்தேசித்தமாத்திரத்திலே செல்வேன் செல்வேண்

நாயி னேனுனை நினையவு மாட்டேன்
நமச்சி வாயவென் றுன்னடி பணியாப்
பேய ஞகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய ஞகிநின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (எ).

போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
புரந்த ராதிக ணிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள் கென்றுநின் றொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
அடிய னேனிடர்ப் படுவது மினிதோ
சீத வார்புன னிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (அ).

ஞால மிந்திர ஞன்முகன் வானவர்
நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்
கால ஞருயிர் கொண்டபூங் கழலாய்
கங்கை யாயங்கி தங்கிய கையாய்
மாலு மோலமிட் டலறுமம் மலர்க்கே
மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்

---

என்றியம்பும் **ஆசைப்பேயும்**, தரிசித்த வழிச் செல்வேனென்று செப்பிச் செல்லுதலின்றித் தனது சத்தி அணுவணுவாகத் தேய்ந்து செல்லும் **ஆணவப்பேயும்**, தரிசித்தும் விரோதமின்றிச் சிலகாலமிருந்து செல்லும் **பிராரத்துவப்பேயும்**, இதனேடு யானுஞ்சேல்வேனென்று இரந்துநிற்கும் **மாயைப்பேயும்** ஆகிய இவற்ருல் பீடிக்கப்பட்டுள்ளபேயன். பெருநெறி - முத்திநெறி; பிறைகுலாம் - பிறைவிளங்கும்; பிஞ்ஞகன் - தலைக்கோலமுடையவன், அதாவது பிறை, கங்கை, சர்ப்பம், கொன்றைமாலை, கொக்கினிறகு முதலியவற்றைச் சடை முடியிலணிந்தவன். இறைவன் இத்தகைய கோலங்களைத் தரித்தது ஆன்மாக்கள்மீது கொண்ட கருணையினலேயே. (அ) பொரு - அலைமோதுகின்ற; கோதும்ஆட்டி - சீராட்டி; குறிக்கொள்க என்று - உறுதியாய்ப்பிடியென்று; வார்புனல் - பெருநீர். (கூ) ஓலமிட்டு - அச்சத்தாற்கதறி; சேலும்நீலமும்-கயல்மீன்களும்.

சேலு நீலமு நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. (௯)

அளித்து வந்தெனக் காவவென் றருளி
அச்சந் தீர்த்தநின் னருட்பெருங் கடலில்
திளைத்துந் தேக்கியும் பருகியு முருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவ னறியா
வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

# அடைக்கலப்பத்து



## பக்குவ நிண்ணயம்

## எ - து. வித்துமங்தரமும் போல வென்றல்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

கலவைப் பாட்டு.

---

திருச்சிற்றம்பலம்.

செழுக்கமலத் திரளனநின் சேவடி சேர்ந்தமைந்த
பழுத்தமனத் தடியருடன் போயினர்யான் பாவியேன்
புழுக்கணுடைப் புன்குரம்பைப் பொல்லாக்கல்வி ஞானமிலா
அழுக்குமனத் தடியே னுடையாயுன் னடைக்கலமே. (௧)

---

நீலமலர்களும். (௰) அளித்து - கருணைசெய்து; ஆவஎன்று - ஐயோவென்று; திளைத்தும் - குளித்தும்; தேக்கியும் - ஏப்பமிட்டும்; வளை- சங்கு. (௧) அமைந்த - அமைவுபெற்ற; பழுத்த - கனிந்த; நுடை -

வெறுப்பன வேசெய்யு மென்சிறு மையைநின் பெருமையினல்
பொறுப்பவ னேயராப் பூண்பவ னேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவ னேநின் றிருவரு ளாலென் பிறவியைவேர்
அறுப்பவ னேயுடை யாயடி யேனுன் னடைக்கலமே. (உ)

பெரும்பெருமா னென்பிறவியை வேரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெருமான் சதுரப் பெருமானென் மனத்தினுள்ளே
வரும்பெருமான் மலரோ னெடுமாலறி யாமனின்ற
அரும்பெருமா னுடையா யடியேனுன் னடைக்கலமே. (ங)

பொழிகின் றதுன்பப்பு யல்வெள்ளத்தினின் கழற்புணைகொண்
டிழிகின்ற வன்பர்களேறி னர்வான்யா னிடர்க் கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த்திரை பொரக்காமச் சுறவெறிய
அழிகின் றனனுடையா யடியேனுன் னடைக்கலமே. (ச)

சுருள்புரி கூழையர் சூழலிற் பட்டுன் றிறமறந்திங்
கிருள்புரி யாக்கையி லேகிடந் தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மானன்ன நோக்கிதன் பங்கவிண் ணோர்பெருமான்
அருள்புரி யாயுடை யாயடி யேனுன் னடைக்கலமே. (ரு)

மாழைமைப் பாவிய கண்ணியர் வன்மத் திடவுடைந்து
தாழியைப் பாவு தயிர்போ ற்றளர்ந்தேன் றடமலர்த்தாள்
வாழியெப் போதுவந் தெந்நாள் வணங்குவன் வல்வினையேன்
ஆழியப் பாவுடை யாயடி யேனுன் னடைக்கலமே. (சா)

மின்கணினா் நுடங்குமிடையார் வெகுளிவலையி லகப்பட்டுப்
புன்கணனய்ப் புரள்வேனைப் புரளாமற் புகுந்தருளி

---

னெளி; புன்குரம்பை – இழிவாகிய உடல்; உன் அடைக்கலமே – உனக்கு அடைக்கலப்பொருளே. (உ) செறுப்பவனே – அடக்கின வனே. (ங) சதுரம் – சாதுரியம். (ச) வான் – முத்தியுலகம்; கடல் வாய் – கடலில்; சுழிசென்று – சுழிகளிற்சிக்கி; பொர – மோத; சுறவு – மகரமீன். (ரு) சுருள்புரி – சுருளாகச்செய்யப்பட்ட; கூழை யர் – கூந்தலையுடையமாதர்; சூழல் – கூட்டம்; வெருள்புரி – அச் சத்தையுண்டுபண்ணும். (சா) மாழை–அழகு; மைபாவிய–மைபரந்த; வன்மத்திட – வலியமத்திட்டுக்கடைய; உடைந்து – சிதறி; தாழி – மிடா,பானை; ஆழிஅப்பா–கருணைக்கடலாகிய அப்பனே. (எ) நுடங் கும்இடை – துவளுகின்றஇடை; புன்கண்ணன் ஆய் – துன்பத்தை

என்கணிலே யமுதூறித் தித்தித்தென் பிழைக்கிரங்கும்
அங்கணனே யுடையா யடியேனுன் னடைக்கலமே. (எ)

மாவடு வகிரன்ன கண்ணிபங் காநின் மலரடிக்கே
கூவிடுவாய் கும்பிக்கே யிடுவாய்நின் குறிப்பறியேன்
பாவிடை யாடுகுழல் போற்கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடுவே னுடையா யடியேனுன் னடைச்கலமே. (அ)

பிறிவறி யாவன்பர் நின்னருட் பெய்கழற் றாளிணைக்கீழ்
மறிவறி யாச்செல்வம் வந்துபெற் றாருன்னை வந்திப்பதோர்
நெறியறி யேனின்னை யேயறி யேனின்னை யேயறியும்
அறிவறி யேனுடை யாயடி யேனுன் னடைக்கலமே. (கூ)

வழங்குகின் றாய்க்குன் னருளா ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேனென் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர்பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின்றே னுடையா யடியேனுன் னடைக்கலமே. (ய)

திருச்சிற்றம்பலம்.



---

யுடையவனாய்; ஊறி - சுரந்து; அம்கண்ணனே - கிருபைக்கண்ணனே. (அ) மாவடு - மாம்பிஞ்சு; வகிர்அன்ன - பிளவுபோன்ற; கும்பி - நரகம்; பாஇடை - பாவினிடத்து; குழல்-நெய்வோர்கருவி; ஆ - ஐயோ. (கூ) கழல்பெய் - வீரக்கழலணிந்த; மறிவுஅறியா - தடைப்படுதலில்லாத; செல்வம் - முத்திச்செல்வம். (ய) விதி - நல்லூழ்; தழங்கு - சப்திக்கின்ற; அழுங்குகின்றேன் - வருந்தாநின்றேன்.

# ஆசைப்பத்து.

## ஆத்துமவிலக்கணம்

## எ - து. ஆன்ம ரூபத்தை யறிதல்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருடக் கொடியோன் காணமாட்டாக் கழற்சே வடியென்னும்
பொருளைத் தந்திங் கென்னை யாண்ட பொல்லா மணியேயோ
இருளைத் துரந்திட் டிங்கே வாவென் றங்கே கூவும்
அருளைப் பெறுவா னாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (க)

மொய்ப்பா னரம்பு கயிறாக மூளை யென்பு தோல்போர்த்த
குப்பா யம்புக் கிருக்ககில்லேன் கூவிக் கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க்கு மப்பா லாமென் னாரமு தேயோ
அப்பா காண வாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (உ)

---

(க) பொல்லா மணி-பொள்ளாமணி (தொளைக்சப்படாத மணி). அம்மான்-தந்தை. **இந்தத் திருப்பாட்டில்** ஒவ்வொருவரும் அருளைப் பெறவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. கண்ணொளியானது விளக்கொளியோடு கலந்து அதனோடுகூட ஒருருவைக் கலந்தாலொழிய அவ்வுருவங்காணப்படாது. அதுபோல, அறிவிக்க அறியும் இயல்பினையுடைய ஆன்மா அருளோடு கலந்து அதனோடு சிவத்தைக் கலந்து நின்றாலொழிய சிவாநந்தாநுபவம் எய்தமுடியாது. ஆதலின், முதன்மையான அருளை முதலிற் பெறவேண்டியது அவசியம். "அருளா லெவையும் பாரென்றான்" என்றதுமிது பற்றியே. "அருள்கொண்டறியா ரறியுந்தரமோ" என்றதையுஞ் சிந்திக்க. (உ) மொய்ப்பு ஆன் - நெருக்கத்தையுடைய; குப்பாயம் - சட்டை, மேற்போர்வை; கூவிக்கொள் - அழைத்துக் கொள்; எப்பாலவர்க்கும் - எப்பகுதியோருக்கும். (ங) சீவார்ந்து -

சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ் சிறுகுடி லிதுசிதையைக்
கூவாய் கோவே கூத்தா காத்தாட் கொள்ளுங் குருமணியே
தேவா தேவர்க் கரியானே சிவனே சிறிதென் முகநோக்கி
ஆவா வென்ன வாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (௩)

மிடைந்தெலும் பூத்தை மிக்கழுக் கூறல் வீறிலி நடைக்கூடந்
தொடர்ந்தெனைநலியத்துயருறுகின்றேன்சோத்தமெம்பெருமானே
உடைந்துநைந் துருகியுன்னொளி நோக்கி யுன்றிரு மலர்ப்பாதம்
அடைந்து நின்றிடுவா னாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (௪)

அளிபுண் ணகத்துப் புறந்தோன்மூடி யடியே னுடையாக்கை
புளியம் பழமொத் திருந்தே னிருந்தும் விடையாய்ப் பொடியாடீ
எளிவந் தென்னை யாண்டு கொண்ட வென்னா ரமுதேயோ
அளியே னென்ன வாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (௫)

எய்த்தே னாயே னினியிங் கிருக்க கில்லே னிவ்வாழ்க்கை
வைத்தாய் வாங்காய் வானோ ரறியா மலர்ச்சே வடியானே
முத்தா வுன்றன் முகவொளி நோக்கி முறுவன் னகைகாண
அத்தா சால வாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (௬)

பாரோர் விண்ணோர் பரவி யேத்தும் பரனே பரஞ்சோதீ
வாராய் வாரா வுலகந் தந்து வந்தாட் கொள்வானே
பேரா யிரமும் பரவித் திரிந்தெம் பெருமா னெனவேத்த
ஆரா வமுதே யாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (௭)

கையாற் றொழுதுன் கழற்சே வடிகள் கழுமத் தழுவிக்கொண்
டெய்யா தென்றன் றலைமேல் வைத்தெம்பெருமான் பெருமானென்

---

சீயொழுகி; குடில் - குடிசை; இது சிதைய - இந்த உடல் அழிய. (௪) எலும்பு மிடைந்து - எலும்புகள் நெருங்கி; அழுக்கு ஊறல் - அழுக்கு ஊற்று; வீறுஇலி - பெருமையில்லாத; நடைகூடம் - நடைவீடு; சோத்தம் - அஞ்சலி; உடைந்து - மனமுடைந்து- (௫) அகத்து அளி புண் - உள்ளே கனிந்த புண்; இருந்தேன் - பற்றற் றிருந்தேன்; அளியேன் - கிருபையுடையவன்; என்ன - என்று நீ சொல்லும்வண்ணம். (௬) வாங்காய் - அழைத்துக் கொள்வாய்; முறுவல்நகை - பல்லொளி. (௭) வாராஉலகம் - மீட்டும் பிறவிக்கு வராத முத்தியுலகம், மஹா சிவலோகம். (௮) கழும - பொருந்த; எய்யாது - இளைக்காமல்; பெருமான் - பெருமையுடையவனே,

றையா வென்றன் வாயா லரற்றி யழல்சேர் மெழுகொப்ப
ஐயாற் றரசே யாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (அ)

செடியா ராக்கைத் திறமற வீசிச் சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டென் கண்ணிணை களிகூரப்
படிதா னில்லாப் பரம்பர னேயுன் பழவடி யார்கூட்டம்
அடியேன் காண வாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (கூ)

வெஞ்சே லனைய கண்ணார்தம் வெகுளி வலையி லகப்பட்டு
நைஞ்சே னேயேன் ஞானச் சுடரே நானோர் துணைகாணேன்
பஞ்சே ரடியாள் பாகத் தொருவா பவளத் திருவாயால்
அஞ்சே லென்ன வாசைப் பட்டேன் கண்டா யம்மானே. (ய)

திருச்சிற்றம்பலம்.



---

பெருமையுடையா ரெல்லாருள்ளும் பெருமையுடையோனே. (கூ) செடி ஆர் - குற்றம்நிறைந்த; திறம் - தன்மை; கடி ஆர் - விளக்கம் நிறைந்த; படி-ஒப்பு. (ய) நைஞ்சேன் - நைந்தேன்; துணை- உதவி.

# அதிசயப்பத்து.

## முத்தியிலக்கணம்

## எ - து. மோட்சத்தினடையாளம்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வைப்புமாடென்றுமாணிக்கத்தொளியென்றுமனத்திடையுருகாதே
செப்பு நேர்முலைமடவா லியர் தங்கடி றத்திடை நைவேனை
ஒப்பி லாதன வுவமனி லிறந்தன வொண்மலர்த் திருப்பாதத்
தப்ப னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (க)

நீதி யாவன யாவையு நினைக்கிலே னினைப்பவ ரொடுங்கூடேன்
ஏத மேபிறந் திறந்துழல் வேன்றனை யென்னடி யானென்று
பாதி மாதொடுங் கூடிய பரம்பர னிரந்தர மாய்நின்ற
ஆதி யாண்டுதன் னடியரிற் கூட்டியவதிசயங் கண்டாமே. (உ)

முன்னை யென்னுடைவல்வினை போயிட முக்கண துடையெந்தை
தன்னை யாவரு மறிவதற் கரியவ னெளியவ னடியார்க்குப்
பொன்னை வென்றதோர் புரிசடைமுடிதனி லிளமதி யதுவைத்த
அன்னையாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (ங)

பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர் காரண மிதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் றிருவருட் கூடிடு முபாயம தறியாமே

---

(க) வைப்பு - புதையல்; மாடு - பொன்; மடவாலியர் - மாதர்கள்; திறத்திடை - குணங்களால். (உ) ஏதம் - குற்றம்; நிரந்தரம் - எப்பொழுதும். (ச) ஒத்து - இணங்கி; அருநாகு - சகித்தற்கரிய

செத்துப் போயரு நரகிடை வீழ்வதற் கொருப்படு கின்றேனை
அத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (௪)

பரவு வாரவர் பாடுசென் றணைகிலேன் பன்மலர் பறித்தேற்றேன்
குரவு வார்குழ லார்திறத் தேநின்று குடிகெடு கின்றேனை
இரவு நின்றெரி யாடிய வெம்மிறை யெரிசடை மிளிர்கின்ற
அரவ னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (௫)

எண்ணி லேன்றிரு நாமவஞ் செழுத்துமென் னேழைமை யதனாலே
நண்ணி லேன்கலை ஞானிகடம்மொடு நல்வினை நயவாதே
மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற் கொருப்படு கின்றேனை
அண்ண லாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (௬)

பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும் பொழுகிய பொய்க்
[கூரை
இத்தைமெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணிமாணிக்க வயிரத்த பவளத்தின் முழுச்சோதி
அத்தனாண்டுதன் னடியரிற்கூட்டிய வதிசயங் கண்டாமே. (௭)

நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பையிற் புகப்பெய்து
நோக்கிநுண்ணியநொடியனசொற்செய்துநுகமின்றிவிளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத் தெழுதருசுடர்ச்சோதி
ஆக்கி யாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (௮)

உற்ற வாக்கையி னுறுபொரு ணறுமல ரெழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொரு ளப்பொருள் பாராதே
பெற்ற வாபெற்ற பயனது நுகர்ந்திடும் பித்தர்சொற் றெளியாமே
அத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே. (௯)

இருடிணி ந்தெழுந் திட்டதோர் வல்வினைச் சிறுகுடி லிதுவித்தைப்
பொருளெ னக்களித் தருநா கத்திடை விழப்புகு கின்றேனைத்

---

நரகு. (௫) அவர்பாடு - அவரிடத்தே; குரவு - குராமலர். (௬) ஏழைமை - பேதமை; நண்ணிலேன் - சேர்ந்திலேன். (௭) பொத்தை - பருமை; அசும்பு-கசிவு; பொய்க்கூரை - நிலையில்லாதசிறுவீடு. (௮) குரம்பை - உடம்பு; சொல்செய்து - சொல்லைச்சொல்லி; நுகம் இன்றி - நுகத்தடியில்லாமல்; விளாக்கைத்து தூக்கி - கைப்பற்றி யெடுத்து; துகள் - குற்றம். (௯) எழுதரு - உண்டாகாநின்ற; பற்

தெருளு மும்மதி ஞெடிவரை யிடிதரச் சினப்பதத் தொடு செந்தீ
அருளு மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய வதிசயங் கண்டாமே. (ய)

திருச்சிற்றம்பலம்.

# புணர்ச்சிப் பத்து.



## அத்துவிதவிலக்கணம்

## எ - து. பதியும் பசுவும் ஒன்றிரண்டல்லவென்றல்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சுடர்பொற் குன்றைத் தோளா முத்தை
வாளா தொழும்புகந்து
கடைபட் டேனை யாண்டுகொண்ட
கருணாலயனைக் கருமால்பிரமன்
தடைபட் டின்னுஞ் சாரமாட்டாத்
தன்னைத் தந்த வென்னாரமுதைப்
புடை பட்டிருப்ப தென்று கொல்லோ வென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. (க)

---

றல்ஆவது - பற்றுதற்கேற்றதாகிய. (ய) இருள் - ஆணவவிருள்; திணிந்து - நெருங்கி; இது - இந்தஉடம்பு; இத்தை - இதனை; தெருளும் - தெளிந்த; நொடிவரை - நொடிப்பொழுதில்; இடிதர - இடிந்தழிய; சினப்பதத்தொடு - கோபக்குறியோடு; செந்தீஅருளும் - சிவந்தநெருப்பை அருள்செய்த; மெய்ந்நெறி - உண்மைநெறிப் பயனாயுள்ள சிவபிரான்.

(க) கருணாலயனை - கருணைக்கு உறைவிடமாயிருப்பவனை; தடைபட்டு - தடைசெய்யப்பட்டு; புடைபட்டிருப்பது - அருகிலிருப்பது; என்றுகொல்லோ - எப்பொழுதோ. (உ) விருப்புஇல்

ஆற்றகில்லே னடியேனரசே
 யவனி தலத்தைம் புலனுய
சேற்றி லழுந்தாச் சிந்தைசெய்து
 சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணற்போ னெக்குநெக் குள்ளே
 யுருகி யோலமிட்டுப்
போற்றிநிற்ப தென்று கொல்லோவென்
 பொல்லா மணியைப் புணர்ந்தே. (௨)

நீண்டமாலு மயனும் வெருவ
 நீண்டநெருப்பை விருப்பி லேனை
ஆண்டு கொண்டவென்னா ரமுதை
 யள்ளூ றுள்ளத் தடியார்முன்
வேண்டுந் தனையும் வாய்விட் டலறி
 விரையார் மலர் தூவிப்
பூண்டு கிடப்ப தென்றுகொல்லோவென்
 பொல்லாமணியைப் புணர்ந்தே. (௩)

அல்லிக் கமலத் தயனுமாலு
 மல்லாதவரு மமரர் கோனும்
சொல்லிப்பரவு நாமத்தானைச்
 சொல்லும் பொருளு மிறந்தசுடரை
நெல்லிக்கனியைத் தேனைப் பாலை
 நிறையின் னமுதை யமுதின்சுவையைப்
புல்லிப் புணர்வதென்று கொல்லோவென்
 பொல்லாமணியைப் புணர்ந்தே. (௪)

திகழத்திகழு மடியுமுடியுங்
 காண்பான் கீழ்மே லயனும் மாலும்
அகழப்பறந்துங் காணமாட்டா
 வம்மா னிம்மா னில முழுதும்

லேனை - அன்பில்லாத என்னை; வேண்டுந்தனையும் - வேண்டுமளவும்; பூண்டு - அடைந்து. (௪) இறந்த - கடந்த; புல்லிப்புணர்வது - நெருங்கித்தழுவுவது. (௫) திகழத்திகழும் - அதிகமாய் விளங்குகின்ற; அகழபறந்தும் - அகழ்ந்தும்பறந்தும்; நிகழ-விளங்க; நீர்மை -

நிசழப்பணிசொண் டென்னையாட்கொண்
டாவா வென்ற நீர்மையெல்லாம்
புகழப்பெறுவ தென்றுகொல்லோ வென்
பொல்லாமணியைப் புணர்ந்தே. (௫)

பரிந்துவந்து பரமானந்தம்
பண்டே யடியேற் கருள் செய்யப்
பிரிந்துபோந்து பெருமா நிலத்தி
லருமா லுற்றே னென்றென்று
சொரிந்தகண்ணீர் சொரியவுண்ணீ
ருரோமஞ் சிலிர்ப்ப வுகந்தன்பாய்
புரிந்துநிற்ப தென்று கொல்லோ வென்
பொல்லாமணியைப் புணர்ந்தே. (௬)

நினையப்பிறருக் கரியநெருப்பை
நீரைக் காலை நிலனை விசும்பைத்
தனையொப்பாரை யில்லாத்தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்தகண்டம்
கனையக்கண்ணீ ரருவிபாயக்
கையுங்கூப்பிக் கடி மலரால்
புனையப்பெறுவ தென்று கொல்லோ வென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. (௭)

நெக்குநெக்கு ளுருகியுருகி
நின்று மிருந்துங் கிடந்து மெழுந்தும்
நக்குமழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானா விதத்தாற் கூத்துநவிற்றிச்
செக்கர்போலுந் திருமேனி
திகழ நோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்குநிற்ப தென்றுகொல்லோ வென்
பொல்லாமணியைப் புணர்ந்தே. (௮)

---

குணம்; புகழப்பெறுவது – புகழக்கிடைப்பது. (௬) பிரிந்துபோந்து– பிரிந்துவந்து; மால் – மயக்கம்; சொரிந்தகண்ணீர்சொரிய–பொழிந்த கண்ணீர் பொழிந்தபடியிருக்க; உள்நீர் – உள்ளன்பு; புரிந்துநிற்பது– விரும்பிநிற்பது. (௭) தழைத்து – களித்து; தழுத்த – தழுதழுத்த;

தாதாய் மூவே ழுலகுக்குந்
தாயே நாயேன் றனையாண்ட
பேதாய்பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன்பில்க வெப்போதும்
மேதாமணியே யென்றென்றேத்தி
யிரவும் பகலு மெழிலார் பாதப்
போதாய்ந்தணைவ தென்று கொல்லோ வென்
பொல்லாமணியைப் புணர்ந்தே. (கூ)

காப்பாய் படைப்பாய் கரப்பாய்முழுதுங்
கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கெல்லாம்
மூப்பாய்மூவா முதலாய் நின்ற
முதல்வா முன்னே யெனையாண்ட
பார்ப்பானேயெம் பரமாவென்று
பாடிப் பாடிப் பணிந்து பாதப்
பூப்போதணைவ தென்று கொல்லோ வென்
பொல்லாமணியைப் புணர்ந்தே. (௰)

திருச்சிற்றம்பலம்.



---

கண்டம்களைய-கண்டங்களைத்தலுண்டாக. (அ) நெக்கு-நெகிழ்ந்து நக்கும் - சிரித்தும்; நவிற்றி - செய்து; செக்கர் - செவ்வானம்; திகழ நோக்கி - விளங்கப்பார்த்து. (கூ) தாதாய் - தந்தையே; பேதாய் - எளியையாய்; பில்க - சிந்த; மேதாமணியே - ஞானமணியே; ஆய்ந்து அணைவது - ஆராய்ந்து அணுகப்பெறுவது. (௰) கண் ஆர் - இடம் நிறைந்த; மூப்பாய் - முதியோனே; பூபோது-அழகிய தாமரைமலர்.

# வாழாப் பத்து.

## முத்தியுபாயம்

## எ - து. பிரபஞ்சமயனீங்கி பரபோகத்தைக் கூடுதற்குபாயம்.



திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாரொடு விண்ணாய்ப் பரந்தவெம்பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஆரொடு நோகே னார்க்கெடுத்துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரியாயே. (க)

வம்பனேன் றன்னை யாண்டமாமணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரு மறியா வொருவனேயிருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவும்

(க) நான்மற்றுபற்றுஇலேன் - நான்வேறு பற்றுடையேனல்லேன்; பொலிவாய்-விளங்குவோனே; வார்கடல்உலகில்-நெடியகடல்சூழ்ந்த உலகத்தில்; வருகஎன்று அருள்புரியாய்-வாவென்று அருள்செய்வாயாக. "வருகவென்றழைத்தாலன்றி வாழ்வுண்டோ" என்றருளிச் செய்ததும் இக்கருத்துபற்றியே. (உ) உணர்வுஇறந்து --

செம்பெரு மானே சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே யென்னையாள்வானே
என்னைநீ கூவிக்கொண் டருளே. (உ)

பாடிமால் புகழும் பாதமேயல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ யாண்டாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஊடுவ துன்னோ டுவப்பதுமுன்னை
உணர்த்துவ துனக்கெனக் குறுதி
வாடினே னிங்கு வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. (௩)

வல்லைவா ளரக்கர் புரமெரித்தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எல்லைமூ வுலகு முருவியன்றிருவர்
காணுநா ளாதியீ றின்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. (௪)

பண்ணினேர் மொழியாள் பங்கநீயல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே யாண்டாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே யுடல்வாய் மூக்கொடுசெவிகண்
என்றிவை நின்கணே வைத்து

---

(அவர்களுடைய) அறிவைக்கடந்து. (௩) ஊடுவது - பிணங்குவது; உவப்பதும் - விரும்புவதும்; உணர்த்துவதும் - விண்ணப்பஞ்செய்வதும். (௪) வல்லை-விரைவு; வாளரக்கர்-வாளேந்திய அசுரர் (திரிபுராதியர்கள்); எல்லைஉருவி-எல்லைகடந்து; வல்லையாய் - சமர்த்தனாய்.

மண்ணின்மே லடியேன் வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. (௫)

பஞ்சின்மெல் லடியாள் பங்கநீயல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே யாண்டாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினே னாயே னாண்டுநீயளித்த
அருளினை மருளினான் மறந்த
வஞ்சனே னிங்கு வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. (௬)

பரிதிவா ழொளியாய் பாதமேயல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துளமுருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனே னுலகில் வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. (எ)

பந்தணை விரலாள் பங்கநீயல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத்தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அந்தமி லமுதே யரும்பெரும்பொருளே
ஆரமு தேயடி யேனை
வந்துய வாண்டாய் வாழ்கிலேன்கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. (அ)

---

(௫) திண்ணமே - உண்மையாகவே. (௬) செஞ்சவே - செம்மையாகவே; மருளினால் - மயக்கத்தினால். (எ) பரிதிவாழ் ஒளியாய் - ஆதித்தனில் உறைகின்ற ஒளியுருவினனே; திருஉயர்கோலம் - செல்வத்தாற்சிறந்த அழகு. (க) முழங்குஅழலாய் - சப்திக்கின்ற

பாவநா சாவுன் பாதமே யல்லால்
　　பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவே சிவபுரத் தரசே
　　திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ விருவர்கீழ் மேலாய்
　　முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
　　வருகவென் றருள்புரி யாயே. (கூ)

பழுதிறொல் புகழாள் பங்கநீ யல்லால்
　　பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி யணிந்தாய் சிவபுரத் தரசே
　　திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ வெனக்கோர்
　　துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடையானே வாழ்கிலேன் கண்டாய்
　　வருகவென் றருள்புரி யாயே. (ய)

திருச்சிற்றம்பலம்.



அக்கினிவடிவாய்; மாஉரியானே - யானைத்தோலை உடையவனே
(ய) பழுதுஇல்தொல் - குற்றமற்றபழமை; மழவிடையானே - இளமையாகிய இடபவாகனனே.

# அருட்பத்து.

## மகாமாயாசுத்தி

## எ - து. மாயையினின்றும் விலகுதல்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே யடியே னாதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றருளாயே. (க)

நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே யுன்னை யோலமிட் டலறி
உலகெலாந் தேடியுங் காணேன்

(க) சுரிகுழல் - சுழற்சியையுடைய கூந்தல்; பால்கொள் - பால்நிறத்தைக்கொண்ட; அதெந்துவே - அஞ்சாதே. (உ) ஒருத்தனே - ஏகனே; திருத்தமாம்பொய்கை - தீர்த்தத்தின்பெயர்; அது தன்னிடத்து மூழ்குவோருடைய பாவங்களைப் போக்குந்தூய்மை பொருந்திய புண்ணிய நீரையுடைய தீர்த்தம்; அருத்தனே -

திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே யடியே னுதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (உ)

எங்கணு யகனே யென்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமாரிருவர்
தங்கணு யகனே தக்கநற் காமன்
றனதுட றழலெழ விழித்த
செங்கணு யகனே திருப்பெருந் துறையில்
செழுமலர்க்குருந்தமே வியசீர்
அங்கணு வடியே னுதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (ங)

கமலநான் முகனுங் கார்முகி னிறத்துக்
கண்ணனு நண்ணுதற் கரிய
விமலனே யெமக்கு வெளிப்படா யென்ன
வியன்றழல் வெளிப்பட்ட வெந்தாய்
திமிலநான் மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே யடியே னுதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (௪)

துடிகொணே ரிடையாள் சுரிகுழன் மடந்தை
துணைமுலைக் கண்கடோய் சுவடு
பொடிகொள்வான் றழலிற் புள்ளிபோ லிரண்டு
பொங்கொளி தங்குமார் பினனே

செல்வனே. (ங) ஏலம்வார் - மயிர்ச்சாந்தணிந்த நீண்ட; குழலிமார்இருவர் - கூந்தலையுடைய இரண்டு தேவிமார் (பார்வதி, கங்கை); தக்கநல் - தகுதியாகிய அழகிய; செங்கண்-செம்மையாகிய அக்கினிக்கண்; அம்கண்ணை - கிருபைக்கண்ணனே. (௪) வியன் தழல் - பெரியநெருப்பு; திமிலம் - பேரொலி. (ரு) துடிகொள் - உடுக்கையின் உருவமைந்த; நேர்இடை - நேரியஇடை; துணை - இரண்டு; சுவடு - தழும்பு; பொடி - நீறு; பொங்குஒளி - விளங்குகின்றஒளி; செடிகொள் - ஒளியைக்கொண்ட. (சு) துப்பனே -

செடிகொள்வான் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே யடியே ஞதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (ரு)

துப்பனே தூயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்
தொப்பனே யுன்னை யுள்குவார் மனத்தின்
உறுசுவை யளிக்குமா ரமுதே
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே யடியே ஞதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (சு)

மெய்யனே விகிர்தா மேருவேவில்லா
மேவலர் புரங்கண்மூன்றெரித்த
கையனே காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்
செய்யனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே யடியே ஞதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (எ)

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யும்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே யடியே ஞதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (அ)

---

அறிவுடையோனே; துதைந்து - படிந்து; துளங்குஒளி - விளக்கமாகியஒளி; உறுசுவை - மிகுந்தசுவை. (எ) விகிர்தா - பொய்யனே; மேவலர் - பகைவர்; காய்ந்த - கோபித்த; கடுதழல் பிழம்புஅன்ன - வேகமாகிய அக்கினித்தூண்போன்ற. (அ) முத்தனே - இயல்பா

மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவம்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந்துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே யடியே னதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. (க)

திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையில்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
இருந்தவா றெண்ணி யேசரு நினைந்திட்
டென்னுடை யெம்பிரா னென்றன்
றருந்தவா நினைந்தே யாதரித் தழைத்தால்
அலைகட லதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி யிதுகாண்
போதரா யென்றரு ளாயே. (ய)

திருச்சிற்றம்பலம்.



கவே பாசங்களினின்றும் நீங்கினவனே; மொட்டுஅரு - முகிழ்த் தன்மை நீங்காத; பரகதி - முத்தி. (க) மருளனேன் - மருட்சியை யுடையேன்; பொருளனே - பெருஞ்செல்வனே; நீர் - நதி; ஆத ரித்து - அன்புசெய்து. (ய) திருந்து - திருந்திய; வார் - நீண்ட; அருந்து அவாநினைந்து-அநுபவிக்கும் ஆசையினாலே கருதி; அலை கடல் அதன் உள்ளேநின்று - அலைகடற்கு உள்ளிடமாகிய உலகத்தி னின்று; பொருந்த வா - (என்னை) அடையவருவாயாக; போதராய் என்று - வருகவென்று.

# திருக்கழுக்குன்றப்பதிகம்.



## குருதரிசனம்

## எ - து. பசுத்துவங் கேட்டவிடம்.

திருக்கழுக்குன்றத்தி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பிணக்கிலாத பெருந்துறைப் பெருமானுன் னாமங்கள் பேசுவார்க்
கிணக்கிலாத தோரின்பமே வருந் துன்பமே துடைத் தெம்பிரான்
உணக்கிலாத தோர் வித்துமேல்விளையாம லென்வினை யொத்தபின்
கணக்கிலாத் திருக்கோலநீ வந்துகாட்டினாய் கழுக் குன்றிலே. (க)

பிட்டுநேர்பட மண் சுமந்த பெருந்துறைப் பெரும் பித்தனே
சட்டநேர்பட வந்தி லாத சழக்கனே னுனைச் சார்ந்திலேன்
சிட்டனே சிவலோகனே சிறு நாயினுங் கடை யாயவெங்
கட்டனேனையு மாட்கொள்வான் வந்து காட்டினாய் கழுக் குன்றிலே.

மலங்கினேன் கண்ணி னீரைமாற்றி மலங் கெடுத்த பெருந்துறை
விலங்கினேன் வினைக்கேடனே னினி மேல் விளைவ தறிந்திலேன்

(க) பிணக்கு - மாறுபாடு; இணக்கு - ஒப்பு; உணக்கு-கெடுதி; வித்து - பிறவிவித்து; வினை ஒத்தபின் - நல்வினை தீவினைகள் சமமான பின்பு. அதுவே இருவினையொப்பு. அது நல்வினையால் வரும் இன்பத்திலும், தீவினையால் வரும் துன்பத்திலும் முறையே விருப்பும் வெறுப்புமின்றிச் சமபுத்தி பண்ணுவது. (ஓடும் பொன்னும், உறவும் பகையும், கேடுஞ் செல்வமும், கீர்த்தியும் நிந்தையும், வீடுங் கானமும் ஒப்ப நோக்குவதாம்). கணக்கு - அளவு; காட்டினாய் - குருவடிவைத் தரிசிப்பித்தாய். (உ) பிட்டுநேர்பட - பிட்டினைப் பெற; சட்டநேர்பட - செம்மையாய **சத்து** கோசரமாக; சிட்டனே - பெரியோனே ; வெம்கட்டனேனையும் - கொடிய துன்பத்தையுடையேனாகிய என்னையும். (ங) மலங்கினேன்-கலங்கினேன்;

இலங்குகின்ற நின் சேவடிக ளிரண்டும் வைப்பிட மின்றியே
கலங்கினேன் கலங் காமலே வந்து காட்டினாய் கழுக் குன்றிலே.(௩)

பூணொணாததொ ரன்பு பூண்டு பொருந்தி நாடொறும் போற்றவும்
நாணொணாததொர் நாண மெய்தி நடுக்கடலு ளழுந்தி நான்
பேணொணாத பெருந்துறைப் பெருந் தோணி பற்றி யுகைத்தலும்
காணொணாத் திருக்கோலநீ வந்து காட்டினாய் கழுக் குன்றிலே. (௪)

கோலமேனி வராகமே குண மாம் பெருந்துறைக் கொண்டலே
சீலமேது மறிந்திலாத வென் சிந்தை வைத்த சிகாமணி
ஞாலமே கரியாக நானுனை நச்சி நச்சிட வந்திடும்
காலமேயுனை யோத நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே. (௫)

பேதமில்லதொர் கற்பளித்த பெருந்துறைப் பெருவெள்ளமே
ஏதமேபல பேசநீ யெனை ஏதிலார் முன மென்செய்தாய்
சாதல்சாதல் பொல்லாமை யற்ற தனிச்சரண் சரணா மெனக்
காதலா லுனை யோதநீ வந்து காட்டினாய் கழுக் குன்றிலே. (௬)

இயக்கிமா ரறுபத்து நால்வரை எண்குணஞ் செய்த வீசனே
மயக்கமாய தொர்மும் மலப்பழ வல்வினைக்கு ளழுந்தவும்
துயக்கறுத் தெனையாண்டு கொண்டுநின் றூய்மலர்க் கழ றந்தெனைக்
கயக்கவைத் தடியார்முனே வந்து காட்டினாய்க் கழுக் குன்றிலே.(௭)

திருச்சிற்றம்பலம்.

---

விலங்கினேன் - விட்டு விலகினேன்; கேடனேன் - கெடுதியை யுடையேன்; சேவடிகள் இரண்டும் - அருளுருவாகிய ஞானசத்தி கிரியாசத்தி என்னும் இரண்டு திருவடிகளையும்; வைப்பிடம்-வைத்தற்குரிய இடம், அதாவது என்னுடைய ஞானசத்தி கிரியாசத்திகள் அடங்கி ஒன்றுபட்டு நிற்குமிடம், அது திருவருட்பூரண நிறைவு. (௪) பூண் ஒணாதது - அடையப்பெற வொண்ணாதது; நாண் ஒணாதது - மதிக்க வொண்ணாதது; பேண் ஒணாத - விரும்புதற்கரிய. (௫) கோலம் - அழகு; வராகமே - மலைமீய; குணம் - எண்குணம்; சீலம் - நல்லொழுக்கம்; வைத்த - அமைத்த; ஞாலம் - உலகத்திலுள்ளோர்; கரி - சாக்ஷி; நச்சிநச்சிட - மிகவும் விரும்ப; காலமே - காலதத்துவக்கடவுளே. (௬) கற்பு - கல்வி; ஏதம் - குற்றம்; ஏதிலார் - அயலார்; சரண் - (முன்னையது) திருவடி, (பின்னையது) அடைக்கலம்; (௭) செய்த - அடையச் செய்த; துயக்கு - தளர்வு; கயக்க வைத்த - மெலிய வைத்த.

# கண்டபத்து.

## நிருத்ததரிசனம்.

தில்லையிலருளிச் செயப்பட்டது,

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

இந்திரிய வயமயங்கி யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோ யருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா வானந்த மணிகொடில்லை கண்டேனே. (க)

---

(க) "இந்திரியவயமயங்கி இறப்பதற்குக் காரணம்" என்பது எப்பொழுதும் பிரபஞ்ச விஷயங்களை இந்திரியங்கள் வாங்கிக் கொடுக்க, அவற்றை மனம் பற்ற, அவற்றை அகங்காரம் உள்ளே கொண்டு செல்ல, அவற்றைப் புத்தி தத்துவம் குணத்துக்கேற்ப சுகமாகவோ, துக்கமாகவோ, மோகமாகவோ நிச்சயிக்க, அவற்றை வித்தைவாயிலாக ஆன்மா அறிந்து, அவற்றின் வசப்பட்டு, மயங்கி இறப்பதுவே ஆன்மாவின் தொழிலாதலின் அவ்வாறு கூறப்பட்டது. அன்றியும், மும்மலச் சுழலிற்பட்டு மயங்கி வருந்துதல் காட்சிப்புலனாதலின்று. காட்சிப்புலனாய் எளிதில் அறியப்படுவது ஐம்பொறிச் சுழலாதலின் அவ்வண்ணமுரைக்கப்பட்டது. அந்தரமே - வேறுபட்டே; சிவம் ஆக்கி - சிவத்துவத்தை விளக்கி; ஆனந்தம் - ஆனந்த நடராஜமூர்த்தி. இவர் உருத்திரமஹேசுவர மூர்த்திகளுக்கு அப்பாற்பட்டவர். திருவருளே திருமேனியாகக்கொண்டு ஆனந்த நிருத்தஞ் செய்யும் சம்புபக்ஷத்து அதிதெய்வமாயிருப்பவர். இவருடைய சிற்கன வடிவம் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தால் அமைந்தது. இவர் முக்தான்மாக்கள் ஆனந்தாநுபவம் பெறும்பொருட்டே ஐந்தொழில் நிகழ்த்துவர். இவரைப் **பஞ்சப்பிரஹ்மஷடங்க** மந்திரங்களைக்கொண்டு பாவிக்கப்படாது. (மற்றவை எமது தனி விஷய சூசனத்தில் காண்க); தில்லை - தில்லையம்பலம், அதாவது பரையின் வடிவாய் விளங்கும் ஞானமன்றாகிய சிற்சபை. (உ) இணைஇலி - உவமை

வினைப்பிறவி யென்கின்ற வேதனையி லகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப்பெரிது மாட்கொண்டென் பிறப்பறுத்த விணையிலியை
அனைத்துலகுந் தொழுந்தில்லை யம்பலத்தே கண்டேனே. (உ)

உருத்தெரியாக் காலத்தே யுள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தி யூன்புக்குக் கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத் தித்திக்குஞ் சிவபதத்தை
அருத்தியினா னையடியே னணிகொடில்லை கண்டேனே. (ங)

கல்லாத புல்லறிவிற் கடைபட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து வனப்பெய்தி யிருக்கும்வண்ணம்
பல்லோருங் காணவென்றன் பசுபாச மறுத்தானை
எல்லோரு மிறைஞ்சுதில்லை யம்பலத்தே கண்டேனே. (ச)

சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை யல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம் யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக் குலாவுதில்லை கண்டேனே. (ரு)

பிறவிதனை யறமாற்றிப் பிணிமூப்பென் றிவையிரண்டும்
உறவினொடு மொழியச்சென் றுலகுடைய வொருமுதலைச்

---

யிலான்; அனைத்து உலகம் - மண்முதல் நாதமீறாகச்சொல்லப்பட்ட தத்துவங்களில் கோப்புண்டு கிடக்கின்ற எல்லாவுலகங்களும். (ங) மன்னி - நிலைபெற்று; கரு - பிறவிக்குக் காரணமாகியவினை; ஊன்- உடம்பு; அருத்தி - ஆசை. (ச) வல்லாளன் - வன்மையுடையவன்; வனப்பு - சிவதேஜசு; எல்லோரும் - பாரார், விசும்புளார், பாதாளத்தார், புறத்தார் ஆகிய இவர்களெல்லோரும். (ரு) (சாதி, குலம், பிறப்பு ஆகியவிவற்றின் விசேடம் உண்மையறிவதற்கு வேண்டியதில்லை. அவை பெருங்கட்டாம். ஆதலாற்றான் சைவத்தினெய்தி அதன் முடிபாகிய சித்தாந்த நெறியுணர்ந்து சிவத்தை வழிபட வேண்டுமென்று வைதிக சைவம் பகர்கின்றது. சமயப்பற்று, சாதிப்பற்று மேல் நிலையில் அநாவசியம். ஞானப்பற்றொன்றே வேண்டும்). ஆதம் இலி - ஆதரவில்லாதன்; அல்லல் - துன்பம்; பேதைகுணம் - பேதைமைக் குணம்; குலாவு - யாவராலுங் கொண்டாடுகிற. (சா) அறமாற்றி - முழுதும் ஒழித்து; மறையவர் -

செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்றம் பலமன்னி
மறையவரும் வானவரும் வணங்கிடநான் கண்டேனே. (௬)

பத்திமையும் பரிசுமிலாப் பசுபாச மறுத்தருளிப்
பித்தனிவ னெனவென்னை யாக்குவித்துப் போமே
சித்தமெனுந் திண்கயிற்றாற் றிருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல் விளங்குதில்லை கண்டேனே. (௭)

அளவிலாப் பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன் றறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக்
களவிலா வானந்த மளித்தென்னை யாண்டானைக்
களவிலா வானவருந் தொழுந்தில்லை கண்டேனே. (௮)

பாங்கினொடு பரிசொன் றறியாத நாயேனை
ஓங்கியுளத் தொளிவளர வுலப்பிலா வன்பருளி
வாங்கிவினை மலமறுத்து வான்கருணை தந்தானை
நான்குமறை பயிறில்லை யம்பலத்தே கண்டேனே. (௯)

பூதங்க ளைந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப் பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட கிளரொளியை மரகதத்தை
வேதங்க டொழுதேத்தும் விளங்குதில்லை கண்டேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.



---

வேதியர். (௭) பரிசு - நல்லொழுக்கம்; வித்தகனார் - சிற்கனமூர்த்தி. (௮) பாவகம் - எண்ணம்; விளைவு - மேல்விளைய இருப்பது; வெறுவியன் - வெறுமையயன்; களவு - கள்ளம். (௯) பாங்கு - முறைமை; பரிசு - குணம்; உலப்பு இல்லா - கெடுதலில்லாத; வாங்கிவினை - வினையை நீக்கி; வான் - மேலான. (௰) பேதங்கள் - வேறுபாடுகள்; கேதங்கள் கெடுத்து - துன்பங்களை அழித்து; மரகதம் - பச்சை.

# பிரார்த்தனைப்பத்து.

## சதாமுத்தி

## எ-து. ஆன்மாக்களுக்கு முத்திநிச்சயம் பண்ணுதல்.



திருப்பெருந்துறையிலருளிச் செய்யப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கலந்து நின்னடி யாரோ டன்று வாளா களித்திருந்தேன்
புலர்ந்து போன காலங்கள் புகுந்து நின்ற திடர்பின்னாள்
உலர்ந்து போனே னுடையானே யுலவா வின்பச் சுடர்காண்பான்
அலந்து போனே னருள்செய்யா யார்வங் கூர வடியேற்கே. (க)

அடியார் சிலருன் னருள்பெற்றா ரார்வங் கூர யானவமே
முடையார் பிணத்தின் முடிவின்றி முனிவாலடியேன்மூக்கின்றேன்
கடியேனுடைய கடுவினையைக் களைந்துன்கருணைக்கடல்பொங்க
உடையா யடியே னுள்ளத்தே யோவா துருக வருளாயே. (உ)

அருளா ரமுதப் பெருங்கடல்வா யடியா ரெல்லாம் புக்கழுந்த
இருளா ராக்கை யிதுபொறுத்தே யெய்த்தேன்கண்டா யெம்மானே
மருளார்மனத் தோருன்மத்தன் வருமாலென்றிங் கெனைக்கண்டார்
வெருளாவண்ண மெய்யன்பை யுடையாய்பெற நான்வேண்டுமே.

---

(க) புலர்ந்து - கழிந்து; இடர் - துன்பம்; உலர்ந்து - வாடி; உலவா - கெடாத; அலந்து - துன்பப்பட்டு; ஆர்வங்கூர-அன்புமிக. (உ) அவமே - வீணே; முடைஆர் - நாற்றம்பொருந்திய; மூக்கின்றேன் - முதிர்கின்றேன்; கடியேன் - கடுமையையுடையேன்; ஓவாது - இடையறாது. (ந) ஆர் - அரிய; புக்குஅழுந்த - புகுந்து

வேண்டும் வேண்டு மெய்யடியா ருள்ளே விரும்பியெனையருளால்
ஆண்டா யடியே னிடர்களைந்த வமுதே யருமா மணிமுத்தே
தூண்டாவிளக்கின் சுடரனையாய் தொண்டனேற்குமுண்டாங்கொல்
வேண்டாதொன்றும் வேண்டாது மிக்கவன்பே மேவுதலே. (ச)

மேவு முன்ற னடியாருள் விரும்பி யானு மெய்ம்மையே
காவி சேருங் கயற்கண்ணாள் பங்கா வுன்றன் கருணையினால்
பாவி யேற்கு முண்டாமோ பரமானந்தப் பழங்கடல்சேர்ந்
தாவி யாக்கை யானெனதென் றியாதுமின்றி யறுதலே. (ரு)

அறவே பெற்றார் நின்னன்ப ரந்த மின்றி யகநெகவும்
புறமே கிடந்து புலைநாயேன் புலம்புகின்றே னுடையானே
பெறவே வேண்டு மெய்யன்பு பேரா வொழியாப் பிரிவில்லா
மறவா நினையா வளவிலா மாளா வின்ப மாகடலே. (சு)

கடலே யனைய வானந்தங்கண்டா ரெல்லாங்கவர்ந்துண்ண
விடரேபெருக்கி யேசற்றிங் கிருத்த லழகோ வடிநாயேன்
உடையாய் நீயே யருளுதியென் றுணர்த்தா தொழிந்தே கழிந் [தொழிந்தேன்
சுடரா ரருளா லிருணீங்கச் சோதி யினித்தான் றுணியாயே. (எ)

துணியா வுருகா வருள்பெருகத்தோன்றுந்தொண்டரிடைப்புகுந்து
திணியார் மூங்கிற் சிந்தையேன் சிவனே நின்று தேய்கின்றேன்

---

மூழ்க; இருள்ஆர் - அறியாமைநிறைந்த; மெய்யன்பைபெறவேண்டும் - உள்ளன்பைப் பெறுதல்வேண்டும். எனெனின், உள்ளன்பென்னும் நிலத்தைக்கோலி, அருளென்னும்வித்திட்டு, அதிற்றோன்றுவதாகிய சிவஞானமென்னும் விருக்ஷத்தை வளர்த்துப், பின்னர் அதிற்பழுக்கும் முத்திப்பழத்தையுண்டு வாழவேண்டியிருத்தலின் அடிகளார் அவ்வாறு கூறியருளினர். (ச) வேண்டும்வேண்டும் - பலகாலும் வேண்டுகிற; வேண்டாது ஒன்றும் வேண்டாது - விரும்பப்படாத எதையும் விரும்பாமல்; மேவுதல் - பொருந்துதல். (ரு) காவி - நீலமலர்; அறுதல் - அற்றொழிதல். (சு) அறவே-(இன்பம்) முழுமையும்; பேரா - நிலைபெயராத; ஒழியா - அழியாத; பிரிவுஇல்லா - நீங்காத; மறவா - மறவாத; நினையா - நினையாத; அளவுஇல்லா - அளவுஇல்லாத; மாளா-குறையாத; இன்பம்-ஆனந்தம். (எ) உண்ண - அநுபவிக்க; எசற்று - துக்கித்து; கழிந்து - பிரிந்து; சுடர்ஆர் அருளால் - அரியஅருட்சுடரால்; துணியாய் - நிச்சயிப்பாயாக. (அ)

அணியா ரடியா ருனக்குள்ள வன்புந் தாரா யருளளியத்
தணியா தொல்லை வந்தருளித் தளிர்ப்பொற் பாதந் தாராயே. (அ)

தாராவ ருளொன் றின்றியே தந்தா யென்றுன் றமரெல்லாம்
ஆரா நின்றா ரடியேனு மயலார் போல வயர்வேனோ
சீரா ரருளாற் சிந்தனையைத் திருத்தி யாண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை வைக்க வேண்டும் பெருமானே. (கூ)

மானோர் பங்கா வந்திப்பார் மதுரக் கனியே மனநெகா
நானோர்தோளாச் சுரையொத்தா னம்பி யித்தால் வாழ்ந்தாயே
ஊனே புகுந்த வுனையுணர்ந்தே யுருகிப் பெருகு முள்ளத்தைக்
கோனே யருளுங் காலந்தான் கொடியேற் கென்றோ கூடுவதே. (௰)

கூடிக் கூடி யுன்னடியார் குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடி வாடி வழியற்றேன் வற்றன் மரம்போ னிற்பேனோ
ஊடி யூடி யுடையாயொடு கலந் துள்ளுருகிப் பெருகிநெக்
காடி யாடி யானந்த மதுவே யாக வருள்கலந்தே. (கக)

திருச்சிற்றம்பலம்.



துணியா - துணிந்து; உருகா - உருகி; திணிஆர் - வலிமைபொருந்திய; தேய்கின்றேன் - மெலிகின்றேன்; உனக்குஉள்ள - உனக்குச் செய்கின்ற; அருள்அளிய - அருள்கனிய; தணியாது - தாழ்க்காமல். (கூ) தாரா-தரவொண்ணாத; ஒன்றுஇன்றி-முழுதும்; ஆராநின்றார் - அநுபவியாநின்றார். (௰) தோளா - தொளைக்காத. (கக) குனிப்பார்-கூத்தாடுவார்; ஆ - ஆகியிருக்க; வற்றல் - உலர்ந்த; ஊடிஊடி - பிணங்கிப்பிணங்கி; ஒடு - உன்னோடு; நெக்கு - நெகிழ்ந்து; ஆனந்த மதுவேயாக - ஆனந்தவுருவமாகும்படி; கலந்து அருள் - (என்னைக்) கூடி அருள்செய்.

# குழைத்தபத்து.

## ஆத்துமநிவேதனம்

## எ-து. நேயத்தோடோன்றல்.

திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய் காவாயுடையாய் கொடு
வினையேன், உழைத்தா லுறுதி யுண்டோதா னுமையாள் கணவா
வெனையாள்வாய், பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ பிறைசேர்
சடையாய் முறையோவென், றழைத்தா லருளா தொழிவதே யம்
மானே யுன்னடியேற்கே. (க)

அடியே னல்ல லெல்லாமுன் னகல வாண்டா யென்றிருந்தேன்
கொடியே ரிடையாள் கூறுவெங் கோவே யாவா வென்றருளிச்
செடிசே ருடலைச் சிதையாத தெத்துக் கெங்கள் சிவலோகா, உடை
யாய் கூவிப் பணிகொள்ளா தொறுத்தா லொன்றும் போதுமே. (உ)

ஒன்றும் போதா நாயேனை யுய்யக் கொண்ட நின்கருணை
இன்றே யின்றிப் போய்த்தோதா னேழை பங்கா வெங்கோவே
குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீகொண்டால்
என்றான் கெட்ட திரங்கிடா யெண்டோண் முக்க ணெம்மானே.

---

(க) குழைத்தால் - மெலிவித்தால்; பண்டை - பழைய, அது ஜன்மாந்தரங்களில் செய்த; வினைநோய் - வினைகளும்நோய்களும்; உழைத்தால் - வருத்தினால்; உறுதி - நன்மை; உமையாள் - உமாதேவி, அது உயிர்கண்மேல் வைத்த இரக்கமாகிய அருள். (உ) கொடிஏர் - பூங்கொடிபோலும்; செடி - பாவம்; ஒறுத்தால் - வருத்தினால். (ங) போதா - பற்றாத; போய்த்தோ - இல்லாதுபோய்விட்டதோ;

மானேர் நோக்கி மணவாளா மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகவென் றனைநூக்கி யுழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனா லடியே னறியாமை யறிந்துநீயே யருள் செய்து
கோனே கூவிக் கொள்ளுநா ளென்றென் றுன்னைக் கூறுவதே. (௪)

கூறு நாவே முதலாகக் கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை மெய்ம்மையுன்னை விரித்துரைக்கின்
தேறும் வகையென் சிவலோகா திகைத்தாற் றேற்ற வேண்டாவோ.

வேண்டத் தக்க தறிவோய்நீ வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டு மயன்மாற் கரியோய்நீ வேண்டி யென்னைப் பணிகொண்
டாய், வேண்டி நீயாதருள் செய்தா யானுமதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னி லதுவு முன்றன் விருப்பன்றே.

அன்றே யென்ற னாவியு முடலு முடைமை யெல்லாமும்
குன்றே யனையா யென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ
இன்றோரிடையூறெனக்குண்டோவெண்டோண்முக்கணெம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய் நானோ விதற்கு நாயகமே. (எ)

நாயிற் கடையா நாயேனை நயந்துநீயே யாட் கொண்டாய்
மாயப் பிறவி யுன்வசமே வைத்திட் டிருக்கு மதுவன்றி
ஆயக் கடவே னானோதா னென்ன தோவிங் கதிகாரம்
காயத் திடுவா யுன்னுடைய கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே. (அ)

கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா திரவும் பகலுநா னவையே யெண்ணு மதுவல்லால்

---

குணம் - நன்மை; என்தான்கெட்டது - என்னத்தான் கெட்டுப் போயிற்று. (௪) நூக்கி - தள்ளி; கூறுவது - புகழ்வது. (ரு) கூறும் - (உன்னைப்) புகழ்கின்ற; தேறும் - தெளியும்; பரிசு - வகை; ஒன்று - சிறிதும்; தேற்ற - தெளிவிக்க. (௬) பரிசு - தன்மை; உன்றன் விருப்பு - உன்னுடைய விருப்பம். அதாவது ஞானிகள் வழிபாடு எப்போதும் அருள்துணையாகவே நடப்பது. அது தம்மை விழுங்கிய அருளுக்குள்ளே தாமடங்கியொடுங்கியிருத்தல். ஆதலின் ஏதாவதோர் விருப்பம்நிகழுமாயின் அது இறைவனுடைய விருப்பமேயாம். (எ) அன்றே - குருமூர்த்தமாயெழுந்தருளி ஆட்கொண்ட அன்றைய தினமே; ஆயக்கடவேன் - ஆராயக்கடவேன். (அ) களிகூரகண்

மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணு வெண்ணக் கடவேனே வடிமை சால வழகுடைத்தே. (௯)

அழகே புரிந்திட் டடிநாயே னரற்று கின்றே னுடையானே
திகழா நின்ற திருமேனி காட்டி யென்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதமெனக்குப் புராண நீதந் தருளாதே
குழகா கோல மறையோனே கோனே யென்னைக் குழைத்தாயே.

திருச்சிற்றம்பலம்.

---

# உயிருண்ணிப்பத்து.

## சிவானந்தமேலிடுதல்

## எ-து. நேயமேலிடுதல்.

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

**கலிவிருத்தம்.**

---

திருச்சிற்றம்பலம்.

பைந்நாப்பட வரவேரல்கு லுமைபாகம தாயென்
மெய்ந்நா டொறும் பிரியாவினைக் கேடாவிடைப்பாகா
செந்நாவலர் பரசும் புகழ்த் திருப்பெருந்துறை யுறைவா
எந்நாட்களித் தெந்நாளிறு மாக்கேனினி யானே. (௧)

---

டேன் - களிப்புமிகும்படிகண்டேன். (உடல், பொருள், ஆவியாகிய மூன்றையுந் தத்தஞ்செய்த ஞானனுபவிக்குக் குருபாத ஸ்மரணைத் தவிர வேறொன்றுமில்லையாதலால் அவ்வாறு கூறினர்.)(ய)அரற்றுகின்றேன் - அழாநின்றேன்; பதம் - திருவடி; புராண - பழையோனே; குழகா - சுந்தரனே.

(௧) பைநா - பசியநா; ஏர்-அழகிய; மெய் - சரீரம் (இங்கு உள்ளம்); செந்நாவலர் - செவ்விய நாவன்மையுள்ளவர் (அறிஞர்); பரசும் - துதிக்கும் ; இறுமாக்கேன் - இறுமாந்திருப்பேன், (இது திரு

நானாடி யணைவானொரு நாய்க்குத்தவி சிட்டிங்
கூனாருடல் புகுந்தானுயிர் கலந்தானுளம் பிரியான்
தேனார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை யுறைவான்
வானோர்களு மறியாததோர் வளமீந்தன னெனக்கே. (உ)

எனைநானென்ப தறியேன்பக லிரவாவது மறியேன்
மனவாசகங் கடந்தானெனை மத்தோன் மத்தனாக்கிச்
சினமால்விடை யுடையான்மன்னு திருப்பெருந்துறை யுறையும்
பனவனெனைச் செய்தபடி றறியேன்பரஞ் சுடரே. (௩)

வினைக்கேடரு முளரோபிறர் சொல்லீர்விய னுலகில்
எனைத்தான்புகுந் தாண்டானென தென்பின்புரை யுருக்கிப்
பினைத்தான்புகுந் தெல்லேபெருந் துறையிலுறை பெம்மான்
மனத்தான்கண்ணி னகத்தான்மறு மாற்றத்திடை யானே. (௪)

பற்றாங்கவை யற்றீர்பற்றும் பற்றாங் கதுபற்றி
நற்றாங்கதி யடைவோமெனிற் கெடுவீரோடி வம்மின்
தெற்றார்சடை முடியான்மன்னு திருப்பெருந்துறை யிறைசீர்
கற்றாங்கவன் கழல்பேணின ரொடுங் கூடுமின் கலந்தே. (௫)

---

வருளை யடைந்ததனால் உண்டாகிய செருக்கு). (உ) அணைவான் - அணையும்பொருட்டு; தேன் - வண்டுகள்; வளம் - செல்வம். (௩) எனை - ஆன்மசொரூபத்தை; மனவாசகங் கடந்தான் - மனம்வாக்குக்கு எட்டாதவன்; மத்தோன் மத்தன் ஆக்கி-மிகவும் களிப்புடையவனாகச்செய்து; பனவன் - வேதியன்; படிறு - வஞ்சகம். (௪) கேடர் - கெடுப்பவர்; புரை - உட்டுளை; பினைத்தான் - மறுபடியும்; எல்லே - பகிரங்கமாக. (௫) பற்று - விடவேண்டிய பற்றுக்கள்; பற்றும்பற்று - பற்றுதற்குரிய பற்று; அது - இறைவன்பற்று; நற்றுஆம் - நல்லதாகிய; தெற்றுஆர் - அழகினை யுடையதாகிய அரிய; கலந்துகூடுமின் - கூடிக்கலந்திருங்கள். **இந்தத் திருப்பாட்டில்** இரண்டுவித பற்றுக்கள்கூறி ஒன்றைவிட வேண்டுமென்றும் மற்றொன்றைப்பற்றி வாழ வேண்டுமென்றுங் கூறியிருக்கின்றது. அதை விளக்கின், ஆன்மா எதையெதைப் பற்றுகிறதோ அதை யதைப்பற்றி வாழும் இயல்புடையது. உடம்பும், உலகவாழ்க்கையும், இன்பதுன்பங்களும், தொடர்பாய் வரும் பிறப்பிறப்புக்களும் ஆகிய இவையெல்லாம் பற்றினாலே வந்ததும் வருவதுமாயுள்ளன. ஆன்மாவுக்கு முதல்முதல் **ஆணவமலத்தில்** பற்றுண்டாயிற்று. அது

கடலின்றிரை யதுபோல்வரு கலக்கமல மறுத்தென்
உடலும்மென துயிரும்புகுந் தொழியாவண்ண நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய திருப்பெருந்துறை யுறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள் பரன்ருன்செய்த படிறே. (௬)

வேண்டேன்புகழ்வேண்டேன்செல்வம் வேண்டேன்மண் ணும்விண்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம் வேண்டார் தமைநாளும் [ணும்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு திருப்பெருந் துறையிறை
பூண்டேன்புறம் போகேனினிப்புறம்போகலொட்டேனே. [தாள்(எ)

கோற்றேனெனக் கென்கோகுரை கடல்வாயமு தென்கோ
ஆற்றேனெங்க ளரனேயரு மருந்தேயென தரசே
சேற்ருர்வயல் புடைசூழ்தரு திருப்பெருந்துறை யுறையும்
நீற்ருர்தரு திருமேனிநின் மலனேயுனை யானே. (அ)

எச்சம்மறி வேனுனெனக் கிருக்கின்றதை யறியேன்
அச்சோவெங்க ளரனேயரு மருந்தேயென தமுதே

முதலில்வந்த தீங்கு. இரண்டாவது **மாயையில்** பற்றுண்டாயிற்று. அது இரண்டாவது வந்த தீங்கு. மூன்ருவது **கன்மத்தில்** பற்றுண்டாயிற்று. அது மூன்ருவது வந்த தீங்கு. இந்த மூன்றினுலே மற்ற எல்லாப் பற்றுக்களுமுண்டாயின. எல்லாத் தீங்குகளும் வந்து பொருந்தின. இந்தப்பற்றுக்களை யொழிப்பதென்ருல் இலேசான காரியமன்று. மலங்களின் வலி மிகவும் பெரிது. அதைத் தானே ஒழித்துக்கொள்ள ஆன்மாவுக்கு வன்மையில்லை. அதனுற் ருன் அதில் சிக்கி யுழல்கின்றது. மலங்களாகிய பற்றுக்களை யொழிக்க வேண்டுமானுல் அம்மலங்களின் வலியைக்காட்டிலும் பேராற்றல்பெற்ற ஒருவர் துணைவேண்டும். அப்படிப்பட்ட ஆற்றல் வகித்தவர் கருக்குழிநாற்றறங் கமழப்பெருத **சிவபிரானுரு வரே.** அவருடைய ஆற்றலுக்குமுன்னே ஆணவமலம் வலிபெருது அடங்கிவிடும். மாயாமலம் இருந்தவிடந் தெரியாது மறைந்து போகும். கன்மமலம் வறுத்தவித்தாய்ச் செயலற்றுவிடும். ஆதலால் அவருடைய புகழைக்கற்று அவரடியாரோடு கலந்திருக்க வேண்டுமென்று அடிகளார் ஆணை தந்துள்ளார்.

(௬) கலக்கம் மலம் - கலங்குவதற்கேதுவாகிய மலம்; சுடரும் சுடர் மதி - விளங்குகின்ற ஒளியையுடைய பிறை ; படிறு - வஞ்சகம். (எ) புறம்போகல் ஒட்டேன் – (திருத்தாளை) புறத்துச்செல்லவு மொட்டேன். (அ) கோல்தேன் – கொம்பிற்கட்டிய தேன் ; நீற்று

செச்சைமலர் புரைமேனியன் றிருப்பெருந்துறை யுறைவான்
நிச்சம்மென நெஞ்சின்மன்னி யாஞகிநின் ருனே. (௯)

வான்பாவிய வுலகத்தவர் தவமேசெய வவமே
ஊன்பாவிய வுடலைச்சுமந் தடவிமர மானேன்
தேன்பாயமலர்க் கொன்றைமன்னு திருப்பெருந்துறை யுறைவாய்
நான்பாவிய ளுனலுனே நல்காயென லாமே. (ய)

திருச்சிற்றம்பலம்.

# அச்சப்பத்து.

## ஆனந்தமுறுதல்

## எ - து. நேயத்திலேயோன்றுபட்டுச் சிக்கேன அழுந்தினமை.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வா ளரவுமஞ்சேன் பொய்யர்தம் மெய்யுமஞ்சேன்
கற்றைவார் சடையெம்மண்ணல் கண்ணுதல் பாதநண்ணி
மற்றுமோர் தெய்வந்தன்னை யுண்டென நினைந்தெம் பெம்மான்
கற்றிலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சுமாறே. (க)

ஆர்தரு - திருவெண்ணீற்றால் நிறைந்த. (௯) எச்சம் - குறை; செச்சையலர் - வெட்சிமலர்; நிச்சம்என - அனவரதமும் என்னுடைய; யாஞகிநின்ருன் - (ஆன்மவறிவு முனைத்திடாதபடி) நானேயாய் நின்ருன். (ய) வான்பாவிய உலகத்தவர் - விண்ணினுள்ள உலகத்தவராகிய தேவர்கள்; அடவிமரம் - காட்டுமரம்.

(க) மெய்யும் - மெய்ச்சொற்களையும்; கற்றைவார் - திரட்சியாகிய நீண்ட; எம்பெம்மான் கற்றிலாதவர் - எம்மிறைவனுடைய புகழைக் கல்லாதவர்; நாம் அஞ்சும் ஆறு - நாம் அஞ்சும் வகையா

வெருவரேன் வேட்கைவந்தால் வினைக்கடல் கொளினுமஞ்சேன்
இருவரான் மாறுகாணு வெம்பிரான் றம்பிரானும்
திருவுரு வன்றிமற்றோர் தேவரெத் தேவரென்ன
அருவரா தவரைக்கண்டா லம்மாநா மஞ்சுமாறே. (௨)

வன்புலால் வேலுமஞ்சேன் வளைக்கையார் கடைக்கணஞ்சேன்
என்பெலா முருகநோக்கி யம்பலத் தாடுகின்ற
என்பொலா மணியையேத்தி யினிதருள் பருகமாட்டா
அன்பிலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (௩)

கிளியனார் கிளவியஞ்சே னவர்கிறி முறுவலஞ்சேன்
வெளியநீ றாடுமேனி வேதியன் பாதநண்ணித்
துளியுலாங் கண்ணராகித் தொழுதழு துள்ளநெக்கிங்
களியிலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (௪)

பிணியெலாம் வரினுமஞ்சேன் பிறப்பினோ டிறப்புமஞ்சேன்
துணிநிலா வணியினான்றன் றொழும்பரோ டழுந்தியம்மால்
திணிநிலம் பிளந்துங்காணுச் சேவடி பரவிவெண்ணீ
றணிகிலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (௫)

வாளுலா மெரியுமஞ்சேன் வரைபுரண் டிடினுமஞ்சேன்
தோளுலா நீற்றனேற்றன் சொற்பதங் கடந்தவப்பன்
தாளதா மரைகளேத்தித் தடமலர் புனைந்துநையும்
ஆளலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (௬)

தகைவிலாப் பழியுமஞ்சேன் சாதலைமுன்ன மஞ்சேன்
புகைமுகந் தெரிகைவீசிப் பொலிந்த வம்பலத்துளாடும்

---

யிராநின்றது. (௨) வெருவரேன் - பயப்படேன்; வேட்கை - காமவிச்சை; கொளினும் - சூழ்ந்து கொண்டாலும்; எத்தேவர் என்ன - என்ன தேவர்களென்று; அருவராதவர் - அருவருக்காதவர். (௪) கிளியனார் – கிளிபோன்றமாதர்; கிளவி – சொல்; கிறி–வஞ்சகம்; வேதியன் - வேதப்பிரதிபாத்தியன்; துளிஉலாம் – துளிசிந்துகின்ற; அளியிலாதவர் - கனிந்து உருகாதவர். (௫) துணிநிலா - துண்டப்பிறை. (௬) வாள்உலாம் எரி – ஒளிவீசுகின்ற நெருப்பு; வரை – மலை; ஏற்றன் – ரிஷபத்தை யுடையவன்; சொல்பதம் - சொல்லளவு; புனைந்து – அலங்கரித்து; நையும் – மனமுருகும்; ஆள்–அடிமை. (எ) தகைவுஇலா-தடுத்தற்கரிய; புகைமுகந்த எரி–

முகைநகைக் கொன்றைமாலை முன்னவன் பாதமேத்தி
அகநெகா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (எ)

தறிசெறி களிறுமஞ்சேன் றழல்விழி யுழுவையஞ்சேன்
வெறிகமழ் சடையனப்பன் விண்ணவர் நண்ணமாட்டாச்
செறிதரு கழல்களேத்திச் சிறந்தினி திருக்கமாட்டா
அறிவிலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (அ)

மஞ்சுலா முருமுமஞ்சேன் மன்னரோ டுறவுமஞ்சேன்
நஞ்சமே யமுதமாக்கு நம்பிரா னெம்பிரானைச்
செஞ்சவே யாண்டுகொண்டான் றிருமுண்டந் தீட்டமாட்டா
தஞ்சுவா ரவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (கூ)

கோணிலா வாளியஞ்சேன் கூற்றுவன் சீற்றமஞ்சேன்
நீணிலா வணியினானை நினைந்துநைந் துருகிநெக்கு
வாணிலாங் கண்கள்சோர வாழ்த்திநின் றேத்தமாட்டா
ஆணலா தவரைக்கண்டா லம்மநா மஞ்சுமாறே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

புகையைக் கொண்ட நெருப்பு, அது மழுப்படை; முகை-மொட்டு; நகை - ஒளி. (அ) தறி-கட்டுத்தறி; களிறு - யானை; உழுவை-புலி. (கூ) மஞ்சு - மேகம்; உரும் - இடி; திரு - விபூதி; முண்டம் - நெற்றி. **இந்தத் திருப்பாட்டில்** விபூதி தாரணம் அவசியமென்று கூறப்பட்டுள்ளது. ஏனெனின், விருப்பு வெறுப்பற்ற பரனையடையவேண்டுமாயின் அவனுடைய திருநீற்றின் தொண்டின் வழியன்றி வேறு எவ்வழியானும் அடையமுடியாது. சூரியனைக் காணவேண்டுமாயின் அவனது கிரணங்களின் உதவிவேண்டும். அதுபோல சிவபெருமானைப் பெறவேண்டின் அவனது திருநீறு இன்றியமையாதது. திருநீறு திருவருண்மயமன்றோ! "நீற்றுப்பதிகம் நிகழ்த்துங்காலை மாற்றுப்பரையின் வரலாறுகும்." என்றதையோர்க. திருவெண்ணீறு அவனது தடஸ்தத்திருமேனியில் இயற்கையாகப் பூத்தது. இதன் விரிவெல்லாம் எமது விபூதி ருத்ராக்ஷ மஹத்வ விளக்கத்தில் காண்க. (ய) கோண் - கோணுதல்; வாளி - அம்பு; சீற்றம் - கோபம்; வாள்நிலாம் - ஒளி நிலைபெற்றிருக்கிற; சோர - நீரொழுக; ஆண் அலாதவர் - ஆண்மையில்லாதவர்.

# திருப்பாண்டிப்பதிகம்.



## சிவானந்தவிளைவு

## எ - து. சுகமேலீடு

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

பருவரை மங்கைதன் பங்கரைப் பாண்டியற் காரமுதாம்
ஒருவரை யொன்றுமி லாதவரைக்கழற் போதிறைஞ்சித்
தெரிவர நின்றுருக்கிப் பரிமேற்கொண்ட சேவகனார்
ஒருவரை யன்றி யுருவறியாதென்றனுள்ளமதே. (க)

சதுரைமறந்தறி மால்கொள்வர் சார்ந்தவர் சாற்றிச்சொன்னோம்
கதிரை மறைத்தன்ன சோதிகழுக்கடை கைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்து கூடிடுமேற் குடிகேடுகண்டீர்
மதுரையர் மன்னன் மறுபிறப்போட மறித்திடுமே. (உ)

நீரின்பவெள்ளத்து நீந்திக் குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர்
பாரின்பவெள்ளங் கொளப்பரி மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்பவெள்ளத் துருக்கொண்டு தொண்டரையுள்ளங் கொண்டார்
பேரின்பவெள்ளத்துட் பெய்கழலே சென்று பேணுமினே. (௩)

(க) பருவரை - பருத்தமலை (இமையமலை). ஒன்றும் - உருவம், அருவம், அருவுருவம் ஆகிய இவற்றில் ஒன்றும்; கழற்போது - திருவடித்தாமரை; தெரிவரநின்று - தோன்றும்படிநின்று; உருவறியாது - வேறொருதெய்வத்தின் உருவறியமாட்டாது. (உ) சதுர் - திறம்; அறிமால்கொள்வர் - அறிவுமயங்கப்பெறுவர்; சாற்றி - பறையறைந்து; கதிர் - சூரியன்; கழுக்கடை - ஈட்டி (குதிரைவீரர்கையிலுள்ளது ஈட்டியே); குடிகேடு - குடிக்குக்கெடுதி; மறித்திடும் - மீண்டும்வராதபடி தடுக்கும். (௩) கொண்டார்-கவர்ந்தார். (௪) ஆனந்.

செறியும் பிறவிக்கு நல்லவர்செல்லன்மின் றென்னனன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக்காலமெக் காலத்துள்ளும்
அறிவொண் கதிர்வா ளுறைகழித்தானந்த மாக்கடவி
எறியும் பிறப்பை யெதிர்ந்தார் புரளவிருநிலத்தே. (ச)

காலமுண் டாகவே காதல்செய் துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்பிரான்றன் னடியவர்க்கு
மூலபண்டாரம் வழங்கு கின்றான்வந்து முந்துமினே. (ரு)

ஈண்டியமாயா விருள்கெட வெப்பொருளும் விளங்கத்
தூண்டிய சோதியை மீனவனுஞ்சொல்ல வல்லனல்லன்
வேண்டியபோதே விலக்கிலைவாய்தல் விரும்புமின்றாள்
பாண்டியனாருள் செய்கின்றமுத்திப் பரிசிதுவே. (சு)

மாயவனப்பரி மேல்கொண்டு மற்றவர் கைக்கொளலும்
போயறுமிப்பிறப் பென்னும் பகைகள் புகுந்தவருக்
காயவரும்பெருஞ் சீருடைத் தன்னருளே யருளும்
சேயநெடுங் கொடைத் தென்னவன்சேவடி சேர்மின்களே. (எ)

அழிவின்றி நின்றதொ ரானந்தவெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன்பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடையே சென்று முந்துமினே. (அ)

விரவிய தீவினை மேலைப்பிறப்பு முந்நீர்கடக்கப்
பரவிய வன்பரை யென்புருக்கும்பரம் பாண்டியனார்

---

தம் மா கடவி - ஆனந்தப்பரியைச்செலுத்தி. (ரு) மூலபண்டாரம் - மூலபொக்கிஷம், அதாவது முத்திச்செல்வம். இந்தச்செல்வமிருக்கு மிடம் நமக்குத்திருமுறைகளே. இவை சிவனடியார்களின் உள்ளத் தின்கட் கிடக்கப்பெறுதலின் இவர்களுக்கும் **பண்டாரம்** எனப் பெயர் போந்தது. (சு) ஈண்டிய - நெருங்கிய; விலக்கு இல்லை - தடையில்லை; தாள்வாய்தல்விரும்புமின் - திருவடிப்பேறு கிடைத்தலை விரும்புங்கள்; முத்திப்பரிசு - முத்தித்திறம். (எ) மாய - மாயமாகிய; கைக்கொள லும் - ஏற்றுக்கொள்ளுதலும்; புகுந்தவருக்கு - சரணடைந்தவருக்கு; சீர்உடை - சிறப்பையுடைய; சேய்நெடும் - மிகப்பெரிய. (அ) கழிவுஇல் - நீங்குதலில்லாத; பெரும்பதம் - பெரியஇடம். (கூ) விர

புரவியின் மேல்வரப் புந்திகொளப்பட்ட பூங்கொடியார்
மரவியன் மேல்கொண்டு தம்மையுந்தாமறி யார்மறந்தே. (௬)

கூற்றைவென் றாங்கைவர் கோக்களையும் வென்றிருந்தழகால்
வீற்றிருந்தான் பெருந்தேவியுந் தானுமோர் மீனவன்பால்
ஏற்றுவந்தா ருயிருண்டதிற லொற்றைச் சேவகனே
தேற்றமிலாதவர் சேவடி சிக்கெனச் சேர்மின்களே. (௭)

திருச்சிற்றம்பலம்.



---

விய - கலந்த; தீவினை - கொடியஇருவினைகள்; முந்நீர் - கடல்; பரம் - மேலான; புந்திகொளப்பட்ட - அறிவுஇழந்த; பூங்கொடியார் - பூங்கொடிபோன்ற மாயாசத்திகள்; மரஇயல் - மரப்பான்மை. (சிவபிரான் ஒப்பற்ற வேதப்புரவியின்மீது பல்லோருங்காணச் சேவகனாய் வந்தமையின், மாயையும் அவள் புத்திரிகளாகிய தத்துவங்களும் மிக்க ஏக்கங்கொண்டு இனி நாமென்ன செய்யப்போகிறோம், இதுகாறும் ஆன்மாக்களைக் கருவிற்றள்ளி பெருந்துன்பத்துக்கு ஆளாக்கிவைத்தோம், இனியவ்வாறு செய்யமுடியாமற்போகுமே என்று மரப்பான்மையெய்தித் தம்மைமறந்தார்கள்). (௭) ஐவர்கோக்கள் - ஐம்புலன்கள்; ஏற்றுவந்தார் - எதிர்த்துவந்தார்; தேற்றமில்லாதவர் - தெளிவில்லாதவர்; சிக்கென - உறுதியாக.

# பிடித்தபத்து.

## முத்திக்கலப்புரைத்தல்

## எ-து. மற்றுள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின் சுகத்தைச் சொல்லியது.



திருத்தோணிபுரத்தி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த
யோகமே யூற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (க)

விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடைய மெய்ப்பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து

(க) ஒழிவுஅற - நீக்கமற; ஊற்றையேன் - அழுக்குடம் புடையேன்; வம்பு - புதுமை; பழுத்து - கனிந்து, இரங்கி; வாழ்வுஅற - பிறப்பற; செம்பொருள் துணிவே - செவ்விய நூற்பொருளின் துணிவே; சிக்கென - உறுதியாக. (உ) விடை - ரிஷபம்; முடை - புலால்நாற்றம்; மூத்து - முதிர்ந்து; அற - மிகவும்; குரம்பை - கூடு;

கடைபடா வண்ணங் காத்தெனை யாண்ட
 கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
 எங்கெழுந் தருளுவ தினியே. (உ)

அம்மையே யப்பா வொப்பிலா மணியே
 அன்பினில் விளைந்தவா ரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
 புழுத்தலைப் புலையனேன் றனக்குச்
செம்மையே யாய சிவபத மளித்த
 செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
 எங்கெழுந் தருளுவ தினியே. (ங)

அருளுடைச் சுடரே யளிந்ததோர் கனியே
 பெருந்திற லருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
 போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
 செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
 எங்கெழுந் தருளுவ தினியே. (ச)

ஒப்புனக் கில்லா வொருவனே யடியேன்
 உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே
மெய்ப்பத மறியா வீறிலி யேற்கு
 விழுமிய தளித்ததோ ரன்பே

---

கடைபடா - கடையாகாத. (ங) அம்மையே - தாயே, தனக்கொரு தாயைவேண்டாது தானே யாவர்க்குந்தாயாயுள்ளவனே; அப்பா - தந்தையே, தனக்கொரு அப்பனைவேண்டாது தானே யாவர்க்கும் அப்பனுயுள்ளவனே; பொய்ம்மையே - பொய்த்தொழில்களையே; பொழுது - வாழ்நாள்; அலைபுலையன் - அலைந்து திரிகின்ற நீசன். (ச) அளிந்தது - கனிந்தது; பெருந்திறல் - பேராற்றல்; கலையே - நூலே; போகமே - இன்பமே; தெருள் இடத்து - தெளிவுள்ள; இருள்இடத்து - அஞ்ஞானவிருள் செறிந்த இவ்வுலகில். (ரு) வீற

செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (ரு)

அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா வானந்த மருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியவெம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே யடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (சு)

பாசவே ரறுக்கும் பழம்பொரு டன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (எ)

அத்தனே யண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே யாதுமீ றில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே யெல்லா வுயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை யல்லையாய் நிற்கும்
எத்தனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. (அ)

---

இலியேற்கு - பெருமையில்லாதவெனக்கு; விழுமியது - சிறந்த பதம், முத்திப்பேறு; எய்ப்பு இடத்து - இளைத்தவிடத்தில். (சு) அறவையேன் - ஆதரவற்றவன்; திறவிலே - பகிரங்கத்திலே; இறவிலே - இறுதியிலே. (அ) அண்டர் - உலகத்துயிர்கள்; அண்

பாலினை் தூட்டுந் தாயினுஞ் சாலப்
　　பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி யுள்ளொளி பெருக்கி
　　உலப்பிலா வானந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
　　செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
　　எங்கெழுந் தருளுவ தினியே. (௯)

புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
　　பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலா முருக்கி யெளியையா யாண்ட
　　ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்பொடு மயக்காந்
　　தொடக்கெலா மறுத்த நற்சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
　　எங்கெழுந் தருளுவ தினியே. (௰)

திருச்சிற்றம்பலம்.



---

டம் - உலகம்; யாதும் - சிறிதும்; சித்தனே - ஞானவுருவனே; பிழைத்து - தவறி; அவை அல்லை ஆய் - அவை யல்லவுமாய்; எத்தனே - உபாயமுடையவனே. (௯) உலப்புஇலா - அழிவில்லாத; புறம்புறம் திரிந்த - காக்கும்பொருட்டுத் தாயைப்போல நான்கு பக்கங்களிலும் பிரியாமல் பின்னோடி அங்குமிங்குமாகச் சுற்றித் திரிந்த. (௰) புலால்யாக்கை - புலாலுடம்பை; புரைபுரை கனிய - உட்டுளைகள்தோறும் அளிய; தொடக்கு - கட்டு.

# திருவேசறவு.

## சுட்டறிவொழித்தல்

## எ - து. தன்செயலறநிற்றல்.

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தெ னென்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே. (க)

பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் னாளானார்க்
குண்ணார்ந்த வாரமுதே யுடையானே யடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய்நீ வாவென்னக்
கண்ணார வுய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே. (உ)

ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னு மருநரகில்
ஆர்தமரு மின்றியே யழுந்துவேற் காவாவென்
றோதமலி நஞ்சுண்ட வுடையானே யடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேயெம் பரம்பரனே. (ங)

பச்சைத்தா லரவாட்டீ படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே யடியேனை யுய்யக்கொண்

---

(க) தரு-போன்ற; ஈர்த்து ஈர்த்து-இழுத்து இழுத்து; ஒருங்கு-ஒருங்கே; திரை - அலை, (அன்று, ஏ-அசைகள்). (உ) உண் ஆர்ந்த-உண்பதற்குரிய; மண்ணார்ந்த - பூமியில் பிறந்த. (ங) ஆதம் இலி - ஆதரவு இல்லாதவன்; ஆர் தமரும் இன்றியே - உற்றார் ஒருவரு மில்லாமல்; ஓதம்மலி - கடலில் பெருகிய. (ச) தாலு - நாக்கு;

டெச்சத்தார் சிறுதெய்வ மேத்தாதே யச்சோவென்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேயுன் றிறநினைந்தே. (ச)

கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகே னாயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிறுமாந் திருந்தேனெம் பெருமானே யடியேற்குப்
பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே. (ரு)

பஞ்சாய வடிமடவார் கடைக்கண்ணா லிடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவே னின்னருளால்
உய்ஞ்சேனெம் பெருமானே யுடையானே யடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேயம் பலத்தமுதே. (சு)

என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கு மறியவொண்ணாத்
தென்பாலைத் திருப்பெருந் துறையுறையுஞ் சிவபெருமான்
அன்பாணீ யகநெகவே புகுந்தருளி யாட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேயெம் பெருமானே. (எ)

மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஓத்தானே பொருளானே யுண்மையுமா யின்மையுமாய்ப்
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தே நீ யாண்டவா றன்றேயெம் பெருமானே. (அ)

மருவினிய மலர்ப்பாத மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமா னென்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே யிடங்கொண்ட வம்மானே. (கூ)

படர் - விரிந்த; உச்சத்தார் - உயர்ந்தவர்களாகிய தேவர்கள்; எச்சத்துஆர் - குறைகள் பொருந்திய; அச்சோ - அதிசயமோ; சித்தத்து ஆறு-சித்தத்தின்படி; திறன்-தன்மை. (ரு) வாக்கு இயலால் - வாக்கின் இயல்பால்; வந்துற்று - வந்தடைந்து; பொன் தவிசு - பொற்பீடம்; பொன் அருள் - அழகிய அருள், அது பசுத்துவம் நீக்கிப் பதித்துவம் பயக்கும் தெய்வத்திருவருள். (சு) ஆய-போன்ற; கூர - அதிகரிக்க. (எ) என்பால் பிறப்பு - என்பாற்பட்ட பிறவித்தளை; தென்பால் - தென்திசை; என்பாலே நோக்கியஆறு - என்னிடத்தே நோக்கம் வைத்தபடி. (அ) மூத்தானே - மூத்தவனே; ஓத்தானே - வேதப்பிரதிபாத்தியனே; பொருளானே - எல்லாப் பொருள்களையும் உடைமையாக உடையவனே; பூத்தானே -

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தான்
ஊனாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே. (ய)

திருச்சிற்றம்பலம்.



---

பொலிந்தவனே. (கூ) மரு - மணம்; பருகிய-பருக; படிவுஆம்ஆறு - படியும் வண்ணம். (ய) சிவாயநம - சூக்ஷ்மபஞ்சாக்ஷரம். அது ஒருதலைமாணிக்கம். அது சிவம், அருள், ஆன்மா, திரோதம், மலம் என்று எழுத்துவகையால் ஐம்பொருளாயுள்ளது. பதி, பசு, பாசம் என்னும் பதவகையால் முப்பதங்களாயுள்ளது. சிவம், சத்திஎன்னும் பொருள் வகையால் இருபொருளாயுள்ளது. சிவம் என்னும் அநுபவ வகையால் ஒரே பொருளாயுள்ளது. அதனுள்ளீட்டைக் குருநாதனிடத்து உபதேசக்கிரமத்தாலுணர்ந்து, பின்னர் ஓதுமுறையினும் உணருமுறையினும், நிற்குமுறையினும் சலியாது நின்று சிவத்தினருளால் சிவமாந்தன்மையடையப் பெறுதலாம். அதுவே முத்திசாதனமாயும், முத்திநிலையாயும், முத்தியநுபவமாயுமுள்ளது. அதைத்தான் "அறிவாகிச்சற்றே நின்றாற்றெரியும்" என்று சொன்னது. (அறிவு - சிவம்). அன்றியும், "அஞ்செழுத்தி னுண்மையதுவான வப்பொருளை - நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்குநா ளெந்நாளோ" என்றதையு மோர்க. ஆய் - போல; ஊன்ஆரும் - உடம்போடு கூடிய; ஒறுத்து - (உபவாச முதலியவற்றால்) வருத்தி.

# திருப்புலம்பல்.

## சிவானந்தமுதிர்வு

## எ-து. சிவாநந்தம் பேறுவிச்சை.

திருவாரூரிலருளிச் செயப்பட்டது.

கொச்சகக் கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூங்கமலத் தயனொடுமா லறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறுவெண் ணீறுடீ
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே யடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகழேனே. (க)

சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையா யடியேனுன்
உடையானே யுனையல்லா துறுதுணைமற் றறியேனே. (உ)

---

(க) பூ-அழகிய; நெறி - வழி; கோங்கு அலர் - கோங்கரும்பு; பூகழல் - பொலிவாகிய திருவடி; எவை - வேறெவற்றை; யாதும்-சிறிதும். (உ) சடையானே - ஜடாபாரத்தை யுடையவனே, (இறைவனைப்பற்றிப் பேசும்போதெல்லாம் வேணி வர்ணனையே விசேஷமென்று வேதங்கூறுகிறது. வேணியில் உரோமங்கள் எப்படி பின்னியிருக்கின்றனவோ அப்படியே அவனிடத்தில் மெய்யன்பு பின்னியிருக்க வேண்டுமென்றும், அப்பொழுதுதான் அவன் பேருளுண்டாகுமென்றும் அது தெரிவிக்கின்றது). தழலாடீ - அழலாடியே; தயங்கும் - விளங்குகின்ற; பசுபதீ - ஆன்மாக்களுக்குத் தலைவனே. (ஆன்மாவுக்குப் பாச சம்பந்தம் பற்றியே பசுவென வழக்குண்டானமையின், பசு வென்றதனால் பசுபாசம் இரண்டும் கொள்ளக்கிடக்கின்றன. அதனால் சேதனம் அசேதனமுமான எல்லாப்பொருள்களுக்கும் சிவபெருமானே பதியாவர்); மழவு-இளமை.

உற்றாரை யான்வேண்டே னூர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. (௩)

திருச்சிற்றம்பலம்.



(௩) அமையும்-போதும்; குரைகழல்கே - ஒலிக்கின்ற வீரகண்டையணிந்த திருவடிக்கே; கற்றா - கன்றுஆ, கன்றையுடைய பசு. அது தன்கன்றை நினைத்துக் கதறுவதுபோல் சிற்றறிவும், சிறுதொழிலும், சின்னாளும், பல பிணியோடுங்கூடிய ஆன்மா, உள்ளமுதலிய தத்துவங்களெல்லாம் ஒன்றவுருகி, **அம்மா அப்பா**வென்றலறினல் உடனே பரங்கருணைத் தடங்கடலாகிய பரமசிவம் அம்மையோடும் ஓடிவந்து மார்ச்சாலத்தைப் போல (மார்ச்சாலம் - பூனை) தாமே வலிந்து பற்றிக்கொண்டு, தேகமுள்ளளவும் பால் நினைந்தூட்டும் அன்னையைப் போலப் பிரியாமல் புறம்புறஞ்சுற்றித் திரிந்து காப்பாற்றி, **வீட்டை வேண்டாதிருக்கவும் தாமே தூயகதியினிற்** சேர்ப்பன். ஆதலின் கசிந்துருகும் அன்பின் அடிமைத்திறமே வேண்டுமென்றனர் அழுது அழுது அடியடைந்த அன்பர். ஆனை இவ்வாறிருக்க, ஒரு சாரார் உள்ள முதலியன மாயாகாரியங்களாதலின் அவற்றின் தொடக்கு ஆகாவெனவிட்டு, அருளையும் மறந்து, சேவலம் ஞானத்தினலேயே பிரம்மமேயாய் நிற்கப்பெறுவோமென்பர். அது எவ்வளவு உண்மையோ அவர்கள் சுவாநுபவத்துக்குத்தான் வெளிச்சம். அவர்களது ஆன்ம நிறைவு பிரம்ம நிறைவன்று. "நின்னிறைவே தாரகமாய் நின்று சுகமெய்தாமல் - என்னிறைவே பாவித்தேனென்னே பராபரமே" என்றதும் இதுபற்றியே.

# குலாப்பத்து.

## அநுபவமிடையீடுபடாமை

## எ-து. விட்டுப்பற்றுமல் ஒருதன்மையாயது.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

கொச்சகக்கலிப்பா.

---

திருச்சிற்றம்பலம்.

ஓடுங் கவந்தியுமே யுறவென் றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே யெனத்தெளிந்து
கூடு முயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (க)

துடியே ரிடுகிடைத் தூய்மொழியார் தோணசையால்
செடியேறு தீமைக ளெத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவே னெனைத்தனதாண் முயங்குவித்த
அடியேன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (உ)

என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்க ளேய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (ங)

---

(க) ஓடும் கவந்தியும் - ஓட்டையும் கோவணத்தையும்; உறவென்றிட்டு - உறவென்றுதுணிந்து; கூடும் - உடலும்; குமண்டையிட - நிறைந்துதெவிட்ட; குனித்து - நடித்து; குலாத்தில்லை - விளங்குகின்ற சிதம்பரம்; கொண்டன்று - பற்றினேன். (உ) துடி - உடுக்கை; இடுகு - சுருங்கிய; நசை-விருப்பம்; செடி - குற்றம், பாவம்; முடியேன் - இறவேன்; தாள்முயங்குவித்த - திருவடிகளைத் தழுவும்படிச்செய்த. (ங) ஈடு-பெருமை; துவந்துவங்கள் - சார்புகள்;

குறியு நெறியுங் குணமுமிலார் குழாங்கடமைப்
பிறியு மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்
செறியுங் கருத்தி லுருத்தமுதாஞ் சிவபதத்தை
அறியுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௪)

பேருங் குணமும் பிணிப்புறுமிப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாம்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௫)

கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடல மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ண நானணுகும்
அம்பொன் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௬)

மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் றோணெரிய
மிதிக்குந் திருவடி யென்றலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாச மொன்றுமிலோ மெனக்களித்திங்
கதிர்க்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (எ)

இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே
நடக்குந் திருவடி யென்றலைமே னட்டமையால்
கடக்குந் திறலைவர் கண்டகர்தம் வல்லாட்டை
அடக்குங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (அ)

பாழ்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்
கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்
தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்றலையால்
ஆட்செய் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (௯)

---

முன்புஉள்ளவற்றை - இனிமேல்வருவனவற்றை. (௪) குறி-அடையாளம்; நெறி - வழி; குழாங்கள் - பாசக்கூட்டங்கள்; பெற்றியனை - தன்மையுடையவனை; செறியும்கருத்து-நெருங்கியமனம்; உருத்து-உருக்கொண்டிருந்த. (௫) தூரும்பரிசு - நிரவும்வண்ணம்; துரிசு அறுத்து - பற்றறுத்து. (௬) வம்பு - வீணே; உடலம் - உடம்பு. (எ) கதிக்கும் - பெருகும்; அதிர்க்கும் - ஆரவாரிக்கும். (அ) இடக்கும் - இடக்குச்செய்யும்; ஏனம் - பன்றி; கானகம் - காடு; கடக்கும்-வெல்லும்; ஐவர்கண்டகர் - ஐம்பொறிகளென்னுந்துஷ்டர்கள்; வல்

கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தாற் றிருப்பணிகள் செய்வேனுக்
கிம்மை தரும்பய னித்தனையு மீங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. (ம)

திருச்சிற்றம்பலம்.

---

# அற்புதப்பத்து.



## அநுபவமாற்றாமை.

## எ - து. அநுபவமுற்றுதல்பொறுமைவிம்முதல்.



திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்

---

திருச்சிற்றம்பலம்.

மையலா யிந்த மண்ணிடை வாழ்வெனு மாழியு ளகப்பட்டுத்
தையலா ரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான் றலைதடு மாறாமே
பொய்யெ லாம்விடத் திருவரு டந்துதன் பொன்னடி யிணைகாட்டி
மெய்யனாய் வெளிகாட்டி முன்னின்ற தோரற்புதம் விளம்பேனே.

எய்ந்தமா மலரிட்டுமுட் டாததோரியல்பொடும் வணங்காதே
சாந்தமார் முலைத் தையனல் லாரொடுந்தலைதடு மாறாகிப்
போந்தியான் றுயர்புகாவண மருள்செய்து பொற்கழலிணைகாட்டி
வேந்தனாய் வெளியே யென்முனின்ற தோரற்புதம் விளம்பேனே.

---

ஆட்டை - வலியஆட்டத்தை. (கூ) செய்-வயல்: விளாவி - சேர்ந்து; கீழ்செய் - முன்செய்த; கிழியீடு - பொற்கிழி; சைவன் - சிவப்பிராமணன், அநாதிசைவன். (ம) கொம்மைவரி - திரட்சியாகிய தேமல்; கூறன் - பாகன்; அம்மை - அன்னை.

(க) மையல்ஆய் - மயக்கங்கொண்டு; ஆழி - கடல்; தலைப்பட்டு- சிக்கி. (உ) எய்ந்த - (இறைவனுக்கு) ஏற்ற; முட்டாதது - தடை

நடித்துமண் ணிடைப்பொய்யினைப்பலசெய்துநானெனதெனுமாயக்
கடித்தவாயிலே நின்றுமுன்வினை மிகக்கழறியே திரிவேனைப்
பிடித்துமுன்னின்றப் பெருமறைதேடிய வரும்பொருளடியேனை
அடித் தடித்துவக் காரமுன் றீற்றியவற்புத மறியேனே. (௩)

பொருந்துமிப்பிறப்பிறப்பிவைநினையாது பொய்களேபுகன்றுபோ[ய்க்
கருங் குழலினார் கண்களா லேறுண்டு கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத்திருவொடு மகலாதே
அருந்துணைவனாயாண்டு கொண்டருளியவற்புத மறியேனே. (௪)

மாடுஞ் சுற்றமு மற்றுள போகமுமங்கையர் தம்மோடும்
கூடி யங்குள குணங்களா லேறுண்டுகுலாவியே திரிவேனை
வீடுதந்தென்றன் வெந்தொழில்வீட்டிட மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோரற்புத மறியேனே. (௫)

வணங்கு மிப்பிறப்பிறப்பிவைநினையாதுமங்கையர் தம்மோடும்[னைக்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்பித்தனாய்த்திரிவே
குணங்களுங்குறிகளுமிலாக்குணக்கடல்கோமளத்தொடுங்கூடி
அணைந்து வந்தெனையாண்டு கொண்டருளியவற்புத மறியேனே.

இப்பிறப்பினிலிணைமலர்கொய்துநா ணியல்பொடஞ்செழுத்தோதித்
தப்பிலாதுபொற் கழல்களுக் கிடாதுநான் றடமுலையார்தங்கள்
மைப்புலாங் கண்ணா லேறுண்டுகிடப்பேனை மலரடியிணைகாட்டி
அப்பனென்னைவந் தாண்டுகொண்டருளிய வற்புதமறியேனே. (௭)

ஊச லாட்டுமிவ் வுடலுயிராயின விருவினை யறுத்தென்னை
ஓசை யாலுணர்வார்க் குணர்வரியவ னுணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன் பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய வற்புதமறியேனே. (௮)

---

படாதது, குற்றமற்ற. (௩) மாயம் - மாயப்பாம்புகள்; வாயில் - இடத்தில்; அக்காரம் - சர்க்கரை; தீட்டிய - ஊட்டின. (௪) ஏறுண்டு - கலக்கப்பட்டு; திருஒடும் - உமாதேவியாரோடும். (௫) மாடு - பொன்; போகம் - செல்வம்; குலாவி - கொண்டாடி; வீடுதந்து - விடுவித்து. (௬) பிணைந்து - கலந்து; கோமளம் - உமாதேவி; அணைந்து - தழுவி. (௭) இணைமலர் - தொடுத்தற்குரியமலர்கள்; இயல்பொடு - ஓதுமுறையோடு; மைப்புஉலாம் - கருமைபொருந்திய. (௮) ஆயின -

பொச்சையான விப்பிறவியிற் கிடந்து நான்புழுத்தலை நாய்போல
இச்சை யாயின வேழையர்க்கே செய்தங் கிணங்கியே திரிவேனை
இச்சகத் தரியயனுமெட் டாததன் விரைமலர்க் கழல்காட்டி
அச்ச னென்னையு மாண்டுகொண் டருளியவற்புத மறியேனே. (௬)

செறியு மிப்பிறப் பிறப்பிவை நினையாது செறிகுழலார் செய்யும்
கிறியுங்கீழ்மையுங் கெண்டையங் கண்களு முன்னியே கிடப்பேனை
இறைவ னெம்பிரானெல்லை யில்லாததன் னிணைமலர்க்கழல்காட்டி
அறிவுதந்தெனை யாண்டுகொண் டருளிய வற்புத மறியேனே. (௭)

திருச்சிற்றம்பலம்.



காரணமான; பரம் - மேன்மையான. (௬) பொச்சைஆன - காடு போன்ற, பலவகையான; இச்சைஆயின - விருப்பமானகாரியங்கள்; ஏழையர்க்கே-ஏழைகளுக்கே; அச்சன்-அத்தன், தந்தை. (௭) கிறி-பொய் யொழுக்கம்; கெண்டை அம்கண்கள்-கெண்டைமீன்போலும் அழகியகண்கள்.

# சென்னிப்பத்து.

## சிவவிளைவு

## எ - து. சீவனுக்குநிச்சயப்படுத்தல்.

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேவதேவன் மெய்ச்சேவகன் றென்பெருந்துறை நாயகன்
மூவராலு மறியொணுமுத லாயவானந்த மூர்த்தியான்
யாவராயினு மன்பரன்றி யறியொணுமலர்ச் சோதியான்
தூயமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னிச் சுடருமே. (க)

அட்டமூர்த்தி யழகனின்னமு தாயவானந்த வெள்ளத்தான்
சிட்டன்மெய்ச்சிவ லோகநாயகன் றென்பெருந்துறைச் சேவகன்
மட்டுவார்குழன் மங்கையாளையோர் பாகம்வைத்த வழகன்றன்
வட்டமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னி மலருமே. (உ)

(க) சேவகன்-வீரன்; முதல்ஆய-முதல்வனுகிய; மா-பெருமை; சென்னி - தலை; மன்னிசுடரும் - பொருந்தி ஒளிசெய்யும். இந்தப் பாட்டின்மூன்ருமடியில் குறிப்பிட்டது எத்தகைய மேலோராயினும் **அன்பு** என்பதை வேரோடழித்து முதல்வனிடத்து அன்பு செய்யவல்லாராயின் அவரிடத்து எவ்வித ஞானமுடையோராலும் காண்பதற்கரிய முழுமுதல் முன்னிலைப்படுமெனவும், அவர்களே அம்முதலையறிவரெனவும் வற்புறுத்தினமையாம். அன்பை வேண்டுவோர் வீட்டையும் வேண்டார். அதுதானுகவே வந்து பொருந்தும் என்பது ஒருதலை. (உ) தென் - தென்றிசை; மட்டு - தேன்; வட்டம்ஆம் - வட்டவடிவாகிய; பொலியும் - விளங்கும். (ச) சித்தர் -

நங்கைமீரெனை நோக்குமின்னங்க ணுதனம்பணி கொண்டவன்
தெங்குசோலைகள் சூழ்பெருந்துறை மேயசேவக னுயகன்
மங்கைமார்கையில் வளையுங்கொண்டெம் முயிருங்கொண்டெம் பணி
[கொள்வான்
பொங்குமாமலர்ச்சேவடிக்கணஞ் சென்னிமன்னிப்பொலியுமே.

பத்தர்சூழப் பராபரன் பாரில்வந்து பார்ப்பானெனச்
சித்தர்சூழச் சிவபிரான் றில்லைமூதூர் நடஞ்செய்வான்
எத்தனுகிவந் தில்புகுந்தெமை யாளுங்கொண்டெம் பணிகொள்வான்
வைத்தமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னி மலருமே. (சு)

மாயவாழ்க்கையை மெய்யென்றெண்ணி மதித்திடா வகைநல்கினுன்
வேயதோளுமை பங்கனெங்க டிருப்பெருந்துறை மேவினுன்
காயத்துள்ளமு தூறவூறநீ கண்டுகொள் ளென்று காட்டிய
சேயமாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னி மலருமே. (ரு)

சித்தமேபுகுந் தெம்மையாட்கொண்டு தீவினைகெடுத் துய்யலாம்
பத்திதந்துதன் பொற்கழற்கணே பன்மலர்கொய்து சேர்த்தலும்
முத்திதந்திந்த மூவுலகுக்கு மப்புறத்தெமை வைத்திடும்
அத்தன்மாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னி மலருமே. (சு)

பிறவியென்னுமிக் கடலைநீந்ததன் பேரருடந் தருளினுன்
அறவையென்றடி யார்கடங்க ளருட்குழாம்புக விட்டுநல்
உறவுசெய்தெனை யுய்யக்கொண்ட பிரான்றனுண்மைப்பெருக்கமாம்
திறமைகாட்டிய சேவடிக்கணஞ் சென்னிமன்னித் திகழுமே. (எ)

---

அறிஞர்; எத்தன் - எய்க்கிறவன்; ஆளும்கொண்டு - ஆளாகவுங் கொண்டு. (ரு) ஊறஊற - சுரக்கச் சுரக்க. (சு) உய்யலாம் - உய்தற்குரியதாகிய; இந்த மூவுலகுக்கு அப்புறத்து - இந்தப் பிரகிருதிமாயை, அசுத்தமாயை, சுத்தமாயை ஆகியவிம்மூன்றில் கோப்புண்டு கிடக்கின்ற எல்லாவுலகங்களுக்கும் அப்பாற்பட்ட **அத்வைதாநந்த முத்தி** என்னும் சிவாநந்தாநுபவமாகிய சுவாநுபவநிலையில். இதனல் எவ்விதமாயையின் ஓர் பகுதியும் மோக்ஷநிலையாகாதெனவும், மாயையின் ஓர் பகுதியை முத்திநிலையாகக்கூறும் எத்தகைய சமயமும் மோக்ஷத்துக்கு நேர்வாயிலல்லவெனவும் தெரிவித்ததாயிற்று. அன்றியும், இந்தப்பூமி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம் ஆகிய மூன்றுக்கும் அப்பாற்பட்ட ஸோமலோகமெனவும் ஒருசாரார் கூறுப. (எ) அறவை -

புழுவினாற்பொதிந் திடுகுரம்பையிற் பொய்தனையொழி வித்திடும்
எழில்கொள்சோதி யெம்மீசனெம்பிரா னென்னுடையப்ப னென்
றென்று, தொழுதகையின ராகித்தூய்மலர்க்கண்கணீர்மல்குந்தொண்
டர்க்கு, வழுவிலாமலர்ச் சேவடிக்கணஞ் சென்னிமன்னி மலருமே.

வம்பனாய்த்திரி வேனைவாவென்று வல்வினைப்பகை மாய்த்திடும்
உம்பரானுல கூடறுத்தப் புறத்தனாய்நின்ற வெம்பிரான்
அன்பரானவர்க் கருளிமெய்யடி யார்கட்கின்பந் தழைத்திடுஞ்
செம்பொன்மாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னிமன்னித்திகழுமே.(கூ)

முத்தனை முதற்சோதியை முக்க ணப்பனை முதல் வித்தினைச்
சித்தனைச் சிவலோகனைத் திருநாமம்பாடித் திரிதரும்
பத்தர்கா ளிங்கே வம்மி னீருங்கள் பாசந்தீரப் பணிமினோ
சித்தமார்தருஞ் சேவடிக்கணஞ் சென்னிமன்னித் திகழுமே. (ம)

திருச்சிற்றம்பலம்.



---

அநாதை; பேரருள் - பெரியஅருட்புணை. (கூ) உம்பரான் - மேலிடத்தையுடையவன்; உலகு ஊடு அறுத்து - ஸர்வவுலகங்களையும் ஸம்ஹாரஞ்செய்து அவற்றைக் கடந்து சென்று; அப்புறத்தனாய் - பரமாகாசத்திலிருப்பவனாய்; நின்ற - தனித்துநின்ற. (ம) முத்தனை - இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கினவனை; முதல்வித்தினை - மூலவித்தினை; சித்தனை - அறிவுருவனை; சித்தம் ஆர்தரும் - உண்மைநிறைந்த. **இந்தத் திருப்பதிகத்தில்** மலர்ச்சேவடிக்கண் நம்சென்னி (மன்னிச்சுடருமே), (மன்னிமலருமே), (மன்னிப்பொலியுமே), (மன்னித்திகழுமே) என்றுசொன்னது சித்தசித்துப் பிரபஞ்சங்களாகவிரிந்த திருவருள் நிறைவில் தாம் தாடலை போல் இரண்டற்று அடங்கியிருத்தலை.

# திருவார்த்தை.

## அறிவித்தன்புறுதல்

## எ-து. நின்னாலறியப்படாததுரைக்க அறிவையென்றது.



திருப்பெருந்துறையி லருளிச்செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

---

திருச்சிற்றம்பலம்.

மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கருணை யடியார்
குலாவுநீதி குணமாக நல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்
தாதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறிவா ரெம்பிரானுவாரே. (க)

மாலயன் வானவர் கோனும்வந்து
வணங்க வவர்க்கருள் செய்தவீசன்

---

(க) மாதுஇவர் - மாதுதங்கிய; மலர்-இருதயமலர்; மேய-தங்கிய; கருணை - அருள்வடிவு; குலாவுநீதி - கைப்பற்றின முறைமைகள்; போது-அரும்புகள்; இழிந்துவந்து-இறங்கிவந்து; ஆதிப்பிரமம்-முதற்பொருளாகியபிரமம். அதுமங்களமும் இன்பமுமான பொருள். சிவம் பிரமமாகவே, சிவசக்தியைப் பிரமக்கிழத்தியென்று சித்தாந்த சாஸ்திரங்கூறும்; அருள் - கருணையின்தன்மை. (உ) மணிஅணி - மணி

ஞால மதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலந்திகழும்
கோல மணியணி மாடநீடு
குலாவு மிடைவை மடநல்லாட்குச்
சீலமிகக் கருணை யளிக்குந்
திறமறிவா ரெம்பிரா னாவாரே. (உ)

அணிமுடி யாதி யமரர்கோமான்
ஆனந்தக் கூத்த னறுசமயம்
பணிவகை செய்து படவதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறையெம்
பேரரு ளாளன்பெண் பாலுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறிவா ரெம்பிரா னாவாரே. (௩)

வேடுரு வாகி மகேந் திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட விருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆடலமர்ந்த பரிமா வேறி
ஐயன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர்களை யெங்குமாண்டு கொண்ட
இயல்பறிவா ரெம்பிரா னாவாரே. (௪)

வந்திமை யோர்கள் வணங்கியேத்த
மாக்கருணைக் கடலா யடியார்
பந்தனை விண்டற நல்குமெங்கள்
பரமன் பெருந்துறை யாதியந்நாள்

---

களால் அலங்கரி; இடைவை - திருவிடைமருதூர். (௩) அணிமுடி ஆதி - அலங்கரிக்கப்பட்ட சென்னியையுடைய முதல்வன்; படவு-தெப்பம்; பெண்பால் - பெண்பாகம். (௪) மிகுகுறைவானவர் - மிகுந்தகுறைகளையுடைய தேவர்கள்; ஆடல் - வெற்றி; ஏடர்கள் - தோழர்கள். (௫) விண்டுஅற - நீங்கிஒழிய; உந்துதிரை - எழுகின்ற

உந்து திரைக்கட லைக்கடந்தன்
 றோங்குமதி லிலங்கை யதனில்
பந்தணை மெல்விர லாட்கருளும்
 பரிசறிவா ரெம்பிரா னவாரே. (௫)

வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
 வேடுவனாய்க் கடிநாய்கள் சூழ
ஏவற் செயல்செய்யுந் தேவர்முன்னே
 யெம்பெருமான் றானியங்கு காட்டில்
ஏவுண்ட பன்றிக் கிரங்கியீசன்
 எந்தை பெருந்துறை யாதியன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
 கிடப்பறிவா ரெம்பிரா னவாரே. (௬)

நாத முடைய தோர் நற்கமலப்
 போதினி னண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த
 ஒளிவளர் சோதியெம் மீசன் மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
 புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை
 அறியவல்லா ரெம்பிரா னவாரே. (௭)

பூவலர் கொன்றைய மாலைமார்பன்
 போருகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாளுமை மங்கைபங்கன்
 வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புக ழெங்களீசன்
 இருங்கடல் வாணற்குத் தீயிற்றோன்றும்

---

அலைகள்; மெல்விரலாள் - மென்மையாகிய விரலையுடையவள் (வண்டோதரி). (௬) கடிநாய்-வேகத்தையுடைய நாய்கள்; ஏஉண்ட-அம்புதைத்த; கேவலம் - அற்பமாகிய; கேழல் - பன்றி; கிடப்பு-வகை. (௭) நல்நுதலார் - அழகிய நெற்றியையுடையவர் (திருமகள், கலைமகள்); பேதம் கெடுத்து - (அவர்களுடைய) வேறுபாட்டை யழித்து. (௮) உகிர்-நகம்; கடல்வாணற்கு-வருணனுக்கு; ஓவியம்-

ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறிவா ரெம்பிரா னுவாரே. (அ)

தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதி மகேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்தவீசன்
தென்னன் பெருந்துறை யாளியன்று
காதல் பெருகக் கருணை காட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதங் கெடுத்தென்னை யாண்டருளுங்
கிடப்பறிவா ரெம்பிரா னுவாரே. (கூ)

அங்கண னெங்களமரர் பெம்மான்
அடியார்க் கமுத னவனிவந்த
எங்கள் பிரானிரும் பாசந்தீர
இகபர மாயதோ ரின்பமெய்தச்
சங்கங் கவர்ந்து வண்சாத்தி னோடும்
சதுரன் பெருந்துறை யாளியன்று
மங்கையர் மல்கு மதுரைசேர்ந்த
வகையறிவா ரெம்பிரா னுவாரே. (ய)

திருச்சிற்றம்பலம்.



சித்திரம். (கூ) பதம்-திருவடி; கேதம் - துன்பம்; கிடப்பு - இருப்பு, நிலைமை. (ய) அங்கணன் - கிருபைக்கண்ணன்; பெம்மான் - பெருமான்; சங்கம் - வளையல்; கவர்ந்து - எடுத்து; சாத்து-தலைக்கோலம்; மல்கும் - நிறைந்த.

# எண்ணப்பதிகம்.

## ஒழியாவின்பத்துவகை

## எ-து. தேகமுதலாகிய ஆசையையறுத்தல்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாருருவாய பிறப்பறவேண்டும் பத்திமையும் பெறவேண்டும்
சீருருவாய சிவபெருமானே செங்கமல மலர்போல்
ஆருருவாய வென்னாரமுதேயுன் னடியவர் தொகைநடுவே
ஓருருவாய நின்றிருவருள்காட்டியென்னையு முய்யக்கொண்டருளே..

உரியேனல்லேனுனக்கடிமையுன்னைப்பிரிந்திங்கொருபொழுதும்
தரியேனாயே னின்னதென்றறியேன் சங்கரா கருணையினால்
பெரியோனொருவன்கண்டுகொளென்றுன்பெய்கழலடிகாட்டிப்
பிரியேனென்றென் றருளியவருளும்பொய்யோஎங்கள்பெருமானே.

என்பே யுருக நின்னருளளித்துன் னிணைமல ரடிகாட்டி
முன்பேயென்னை யாண்டுகொண்ட முனிவா முனிவர் முழுமுதலே
இன்பேயருளி யெனையுருக்கி யுயிருண்கின்ற வெம்மானே
நண்பேயருளா யென்னுயிர்நாதா நின்னருணாணுமே. (௩)

பத்திலனேனும்பணிந்திலனேனுமுன்னுயர்ந்தபைங்கழல்காணப்
பித்திலனேனும் பிதற்றிலனேனும் பிறப்பறுப்பா யெம்பெருமானே

---

(க) பார்உருஆய - பூமியில் உருக்கொண்ட; ஆர்உருஆய-அரிய உருவாகிய; தொகை - கூட்டம். (உ) ஒருபொழுதும் - சிறிதுபொழுதும்; பெய்கழல் அடி - வீரக்கழலணிந்த திருவடி. (௩) நண்பே -

முத்தனையானே மணியனையானே முதல்வனே முறையோவென்
றெத்தனையானும் யான்றொடர்ந்துன்னை யினிப்பிரிந்தாற்றேனே.

காணுமதொழிந்தே னின்றிருப்பாதங் கண்டுகண் களிகூரப் [னே
பேணுமதொழிந்தேன் பிதற்றுமதொழிந்தேன்பின்னையெம்பெருமா
தாணுவேயழிந்தேனின் னினைந்துருகுந்தன் மையென்புன்மைகளாற்
காணுமதொழிந்தே னீயினிவரினுங் காணவு நாணுவனே. (௫)

பாற்றிருநீற்றெம் பரமனைப்பரங் கருணையோடு மெதிர்ந்து, தோற்றி
மெய்யடியார்க்கருட்டுறையளிக்குஞ் சோதியைநீதியிலேன்,போற்றி
யென்னமுதே யெனநினைந்தேத்திப் புகழ்ந்தழைத்தலறி யென்னுள்
ளே, ஆற்றுவனாக வுடையவனேயெனை யாவவென்றருளாயே. (௬)

திருச்சிற்றம்பலம்.



---

நட்பையே; நாணுமே - கூசாமல். (௫) பின்னை-மேலும்; தாணுவே - ஸ்திரமாயுள்ளவனே. அடிகளார் இந்தப் பாசுரத்தில் தம்மைப்பசுத் தன்மையுடையராய்க் கூறிக்கொண்டார். அது உபசாரமே. அவர் எப் பொழுதுஞ் சிவசொரூபியே. அவரது கருவிகரணாதிகளுமப்படியே. அவர் **அவறம்** (நான்) என்பதையறிந்தவரன்று. **சிவத்தையே** முத லென்றறிந்தவர். **எனதென்பதை**யறிந்தவரன்று. **அருளென்பதையே** யுணர்ந்தவர். அவர் சதா சிவச்செயலும் சிவத்தன்மையுமே யுடைய வர். அப்படியிருந்தும் தாம்கொண்டகோலத்திற்கேற்ப பெருமாயைச் சுழலில் அகப்பட்டு வருந்தும் ஆன்மாக்கள் அருளைக்கொள்ளை கொள்ளும் விதமாக வழிகாட்டினர். அத்தனையும் அவரது கருணைப் பெருக்கே. (௬) பால் - வெண்மை; தோற்றி - காணப்பட்டு; ஆற்று வன் ஆக - உறுதிசெய்வேனாக.

# யாத்திரைப்பத்து.

## அநுபவாதீதமுரைத்தல்

### ௪௫. அநுபவத்தேட்டாமையையறிவுறுத்தல்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார் சென்னி மன்னனெம் புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வா யுருக்கும்வெள்ளக் கருணையினால்
ஆவா வென்னப் பட்டன்பா யாட்பட்டீர்வந் தொருப்படுமின்
போவோங்காலம்வந்ததுகாண்பொய்விட்டுடையான் கழல்புகவே. (க)

புகவே வேண்டா புலன்களினீர் புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவேநினைமின் மிக்கவெல்லாம் வேண்டா போகவிடுமின்கள்
நகவேஞாலத் துள்புகுந்து நாயேயனைய நமையாண்ட
தகவேயுடையான் றனைச்சாரத் தளராதிருப்பார் தாந்தாமே. (௨)

தாமேதமக்குச் சுற்றமுந் தாமேதமக்கு விதிவகையும்
யாமா ரெமதார் பாசமா ரென்னமாய மிவைபோகக் [கொண்டு
கோமான் பண்டைத் தொண்டரொடு மவன்றன் குறிப்பேகுறிக்
போமா றமைமின் பொய்நீக்கிப் புயங்கனாள்வான் பொன்னடிக்கே.

(க) பூ - கொன்றைப்பூ; புயங்கம் - பாம்பு, புயங்கமென்னும் ஓர் கூத்து; ஓவாது - நீங்காமல்; உணர்வுஆய் - அறிவுருவாகி; வந்தது - நேர்ந்தது; பொய் - உடம்பு; கழல்புக - திருவடிநிழலில் புகுத. (௨) புகவே - நுழையவே; மிக்க எல்லாம் - மற்றைய எல்லாப் பொருள்கள்; நகவே - சிரிக்கவே; நாயேஅனைய - நாயே நிகர்த்த; தகவே - கிருபையையே. (௩) தாமே - சிவபிரான் தாமே; தமக்கு - எமக்கு; விதிவகை - விதிமுறை; என்னமாயம் - என்ன

அடியாரானீ ரெல்லீரு மகலவிடுமின் விளையாட்டைக்
கடிசேரடியே வந்தடைந்துகடைக்கொண்டிருமின் றிருக்குறிப்பைச்
செடிசேருடலைச் செலநீக்கிச் சிவலோகத்தே நமைவைப்பான்
பொடிசேர்மேனிப் புயங்கன்றன் பூவார்கழற்கே புகவிடுமே. (ச)

விடுமின்வெகுளி வேட்கைநோய் மிகவோர்கால மினியில்லை [மின்
உடையானடிக்கீழ்ப்பெருஞ்சாத்தோடுடன்போவதற்கேயொருப்படு
அடைவோநாம்போய்ச் சிவபுரத்து ளணியார்கதவ தடையாமே
புடைபட்டுருகிப் போற்றுவோம் புயங்கனாள்வான் புகழ்களையே.

புகழ்மின் றொழுமின் பூப்புனைமின் புயங்கன்றாளே புந்திவைத்திட்
டிகழ்மினெல்லா வல்லலையு மினியோரிடையூ றடையாமே
திகழுஞ்சீரார் சிவபுரத்துச் சென்றுசிவன்றாள் வணங்கிநாம்
நிகழுமடியார் முன்சென்று நெஞ்சமுருகி நிற்போமே. (சு)

நிற்பார்நிற்க நில்லாவுலகி னில்லோ மினிநாஞ் செல்வோமே
பொற்பாலொப்பாந் திருமேனிப் புயங்கனாள்வான் பொன்னடிக்கே
நிற்பீரெல்லாந் தாழாதே நிற்கும்பரிசே யொருப்படுமின்
பிற்பானின்று பேழ்கணித்தாற் பெறுதற்கரியன் பெம்மானே. (எ)

பெருமான்பேரா னந்தத்துப் பிரியாதிருக்கப் பெற்றீர்காள்
அருமாலுற்றுப் பின்னைநீ ரம்மாவழுங்கி யரற்றாதே
திருமாமணிசேர் திருக்கதவந் திறந்தபோதே சிவபுரத்துத்
திருமாலறியாத் திருப்புயங்கன் றிருத்தாள்சென்று சேர்வோமே. ()

---

மாயமாயிருக்கின்றது; இவைபோக - இவை போகட்டுமே; குறிக்கொண்டு - உறுதியாகக்கொண்டு; அமைமின் - அமையுங்கள். (ச) கடி - வாசனை; கடைக்கொண்டு - கடைப்பிடித்து; புகவிடும் - புகவிடுவன். (ரு) வெகுளி - கோபம்; நோய் - விருப்பாகிய நோய்; சாத்து - திருவிழா; அணிஆர் - அழகுபொருந்திய; புடைபட்டு - பக்கத்திருந்து. (சு) புந்திவைத்திட்டு - மனதில்வைத்து; அல்லல் - துன்பம்; நிகழும் அடியார் - (சிவபுரத்தில்) வாழ்கின்ற அடியார்கள், முக்தான்மாக்கள்; (எ) நிற்பார்-(பொய்யுலகத்தில்) நிற்பவர்; நில்லா - அநித்தியமாகிய; பொற்பால்-அழகினால்; ஒப்புஆம்-(தனக்குத்தானே) சமானமாகிற; பரிசே - தன்மைக்கே; பின்பால் - பின்னிடத்தே; பேழ்கணித்தால் - விழித்தால். (அ) அருமால் உற்று - அரிய மயக்கமடைந்து; பின்னை - பிறகு; அழுங்கி - துன்பப்பட்டு; திருமாமணி -

சேரக்கருதிச் சிந்தனையைத் திருந்தவைத்துச் சிந்திமின்
போரிற்பொலியும் வேற்கண்ணாள் பங்கன்புயங்க னருளமுதம்
ஆரப்பருகி யாராத வார்வங்கூர வழுந்துவீர்
போரப்புரிமின் சிவன்கழற்கே பொய்யிற்கிடந்து புரளாதே. (கூ)

புரள்வார் தொழுவார் புகழ்வாரா யின்றேவந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னைமதிப்பாரார் மதியுட்கலங்கி மயங்குவீர்
தெருள்வீராகி லிதுசெய்மின் சிவலோகக்கோன் றிருப்புயங்கன்
அருளார் பெறுவா ரகலிடத்தே யந்தோவந்தோவந்தோவே. (௰)

திருச்சிற்றம்பலம்.

# திருப்படையெழுச்சி.

## பிரபஞ்சப்போர்

## எ · து. மலவிளைவற்றது.



தில்லையிலருளிச் செயப்பட்டது.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

ஞானவா ளேந்து மையர்நாதப் பறையறைமின்
மானமா வேறுமையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற்றுக் கவச மடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோநா மாயப் படைவாராமே. (க)

அழகும் பெருமையுமுள்ள மணி. (கூ) ஆர-நிறைய; ஆராத-தெவிட்டாத; ஆர்வம்கூர - அன்புமிக; அழுந்துவீர் - மூழ்குவீர்; பொய் - பொய்யுலகத்தில்; போரப்புரிமின் - மிகவும் அன்பு செய்யுங்கள். (௰) ஆள் ஆகாதீர் - அடிமையாகாதவர்களே; தெருள்வீர் ஆகில் - (அம் மயக்கம் நீங்கி) தெளிவீராகில்; அகல் இடத்து - அகன்ற பூமியில்.

தொண்டர்கா டேசெல்லீர் பத்தர்காள் சூழப்போகீர்
ஒண்டிறல் யோகிகளே பேரணியுந் தீர்கள்
திண்டிறற் சித்தர்களே கடைக் கூழைசென்மின்கள்
அண்டர்நா டாள்வோநா மல்லற் படைவாராமே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

(க) மானம் மா - பெருமை பொருந்திய யானை; மதி - பூர்ணசந்திரன்; ஆன - முத்தியைத் தருவதான; கவசம்-சட்டை; அடைய-முழுதும்; வானவூர் - உயர்ந்த உலகம்; கொள்வோம் - கைக்கொள்வோம்; மாயப்படை-மாயா காரியங்களாகிய சேனை. (உ) தூசி-முற்படை, கொடிப்படை; பேரணி - பெரியபடை வகுப்பு; உந்தீர்கள் - செலுத்துங்கள்; கடைக்கூழை-பிற்படை, பின்னணி; அண்டர்நாடு-முத்தியுலகம்; அல்லல்படை - சர்வவித துன்பங்களுக்கும் மூலமாயிருக்கிற மும்மலப் படை.

இவ்விரண்டு **திருவெண்பாக்களும்** பிரபஞ்சத்தோடு போர் செய்தலைச் செப்புகின்றன. அதாவது ஆன்மாக்களுக்கு எந்தக் காலத்திலும் பகைவர்களாயுள்ளவர்கள் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூவர்கள். அவர்களை வெல்ல அவர்களுக்குப் போதிய சக்தியில்லை. ஆதலின் மலரஹிதராயுள்ள சிவபெருமான் கருணை மேலீட்டால் தனது ஆதிசத்தியின் பேதமாகிய ஆரணி, ஜனனி, ரோத்யித்ரி என்னும் மூன்று சக்திகளைக்கொண்டு ஐந்து தொழிலாகிய யுத்தத்தைச் செய்கின்றனர். ஆன்மா அவரை உள்ளன்போடு வழிபடின் முதல் யுத்தத்தில் மாயாசேனை ஸம்ஹரிக்கப்படும். இரண்டாவதில் கன்மமல சேனை நாசமடையும். மூன்றாவதாகிய கடைசிபோரில் ஆணவமல சக்திகள் அடியோடு மாண்டுபோம். இவ்வாறு மும்மலச் சேனையும் அற்றொழிய இறைவரது நாதப் பறையைக் கொட்டுங்கள். சுத்த ஸத்துவகுணத்தை ஏந்திக்கொள்ளுங்கள். திருவெண்ணீற்றுக் கவசத்துக்குள் முழுதும் புகுங்கள். அவ்வாறு செய்யின் முத்தியுலகத்தைக் கைக்கொள்ளலாம், அதையாளலாம், என அடிகளார் வற்புறுத்தியருளினர்.

# திருவெண்பா.

## அணைந்தோர்தன்மை

### எ - து. பரிசவேதிபோல என்றது.



திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகா தென்செய்கேன்—செய்ய
திருவார் பெருந்துறையான் றேனுந்து செந்தீ
மருவா திருந்தேன் மனத்து. (க)

ஆர்க்கோ வரற்றுகோ வாடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே யென்செய்கேன்—தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்று மத்தன் பெருந்துறையான்
தானென்பா ராரொருவர் தாழ்ந்து. (உ)

செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையி னுயிர்ப்பறியேன்—வையத்
திருந்துறையுள் வேன்மடுத்தென் சிந்தனைக்கே கோத்தான்
பெருந்துறையின் மேய பிரான். (௩)

முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்

---

(க) மெய் - உடல்; பொய் - பொய்யொழுக்கங்கள்; செய்ய - செவ்விய; செந்தீ - சிவந்ததீயையொத்ததிருமேனி. (உ) ஆர்க்கோ— ஆரவாரஞ்செய்யவோ; தீர்ப்புஅரிய - நீக்குதற்கரிய; தாழ்ந்து - வணங்கி. (௩) உயிர்ப்பு - உயிர்வாழ்தல்; வேல்மடுத்து-வேலெடுத்து.

பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரந் தீர்க்கு மருந்து. (௪)

அறையோ வறிவார்க் கனைத்துலகு மீன்ற
மறையோனு மாலுமால் கொள்ளும்—இறையோன்
பெருந்துறையுண் மேய பெருமான் பிரியா
திருந்துறையு மென்னெஞ்சத் தின்று. (௫)

பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை—அத்தன்
பெருந்துறையா னாட்கொண்டு பேரருளா னோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து. (௬)

வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா வமுதா யமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையா னென்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கு மொளி. (௭)

யாவர்க்கு மேலா மளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழா மடியேனை—யாவரும்

---

(௪) பேர்ஆளன் - திருநாமமுடையவன். (௫) அறையோ - முறையோ. (௬) பேச்சுஅரிதுஆம் - பேசுதல் அருமையாகிய; மத்தம்ஆக்கும் - உன்மத்தமாக்கும்; பேரின்பம் - நித்தியானந்தம், நிரதிசயானந்தம், நிர்மலானந்தம். இது சிற்றின்பத்துக்கு வேறாயது. சிற்றின்பத்துக்கும் இதற்குமுள்ள பேதம் யாதெனின், **சிற்றின்பம்** - கருவிகரணங்களால் நுகரப்படுவது. **பேரின்பம்** அறிவினால் அநுபவிக்கப்படுவது. **சிற்றின்பம்** - உடம்போடு கூடியநுபவிக்கப்படுவது. **பேரின்பம்** ஆன்மாநேரே அநுபவிப்பது. **சிற்றின்பம்** - ஏகதேச அறிவால் அநுபவிக்கப்படுவது. **பேரின்பம்** ஆன்மவியாபக முழுதும் விளங்கியுள்ள பூரணஞானத்தால் அநுபவிக்கப்படுவது. **சிற்றின்பம்** - தற்போதங்கொண்டு அநுபவிக்கப்படுவது. **பேரின்பம்** தற்போதயற்று சிவபோதங்கொண்டு சிவானந்தத்துள்ளழுந்தி அநந்நியமாய்நின்று அநுபவிக்கப்படுவது. **சிற்றின்பம்** - இடையிடையே விட்டுவிட்டு நீங்கி மாறிமாறிவருவது. **பேரின்பம்** - சாசுவதமாய் நித்தியமாய் நிலைபெற்றுள்ளது. (௭) வாராவழி - மீட்டும்பிறவிக்குவாராத முத்திநெறி; மாறுஇன்றி - மாறுபடுதலின்றி; அமைந்தன்று - அமைந்தது; பெருக்கும்ஒளி - பெருகச்செய்கிற ஞானவொளி. (அ) வைத்

பெற்றறியா வின்பத்துள் வைத்தாய்க்கென் னெம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. (அ)

மூவரு முப்பத்து மூவரு மற்றொழிந்த
தேவருங் காணாச் சிவபெருமான்—மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே யின்ப மிகும். (கூ)

இருந்தென்னை யாண்டா னிணையடியே சிந்தித்
திருந்திரந்து கொண்ணெஞ்சே யெல்லாந்—தருங்காண்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவா யென்மனத்தே வந்து. (ய)

இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான்றும்
துன்பந் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையா னென்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டா னுவந்து. (கக)

திருச்சிற்றம்பலம்.



தாய்க்கு - வைத்தஉனக்கு; செய்யும் - (கைம்மாறு) செய்யும். (கூ) முப்பத்துமூவர் - ஆதித்தர் - கஉ, அசுவினிதேவர் - உ, உருத்திரர் - கக, வசுக்கள் - அ. மாஏறி-குதிரையேறி; மெய்அகத்தே - உண்மையாகிய சித்தத்தின்கண்ணே. (ய) தொடர்வு - பற்று.

# பண்டாய நான்மறை.

## அநுபவத்துக்கைய மின்மையுரைத்தல்.

திருப்பெருந்துறையிலருளிச் செயப்பட்டது.

### நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும்
கண்டாரு மில்லைக் கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை. (௧)

உள்ள மலமூன்று மாய வுகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த—வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு. (௨)

காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாக னம்வினையை—வீட்டி
அருளும் பெருந்துறையா னங்கமல பாதம்
மருளுங் கெடநெஞ்சே வாழ்த்து. (௩)

வாழ்ந்தார்க ளாவாரும் வல்வினையை மாய்ப்பாருந்
தாழ்ந்துலக மேத்தத் தருவாருஞ்—சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்துந் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்து நமர். (௪)

---

(௧) பண்டுஆய - பழமையாகிய. (௨) உள்ள - உள்ளதாகிய; உகு - சிந்துகின்ற; வள்ளன் - வள்ளல்; கருவும்கெடும் - வேரோடு அழியும். (௩) வலைவாணன் - வலையன்; வீட்டி - கெடுத்து; மருளும் கெட - பிறவிமயக்கம்அழிய. (௫) கழியாதுஇருந்தவன் - நீங்காதிருந்

கண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக்கரசைப்—பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண். (௫)

காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்
பேணு மடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையி லென்றும்
பிரியானை வாயாரப் பேசு. (௬)

பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசின்மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தே னல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து. (௭)

திருச்சிற்றம்பலம்.



தவன். (எ) இலக்குஇதம்ஆம் - இலக்காயும் இதமாயும் இருக்கிற; மாசுஇல்மணி - மாசிலாமணியாகிய சிவபிரான்; மணி-திரு; மருந்தின் அடி - மருந்துபோல்பவனது திருவடி.

# திருப்படையாட்சி.

## சீவோபாதியொழிதல்

## எ - து. கிரியாசூனியம்.*

தில்லையிலருளிச் செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கண்க ளிரண்டு மவன்கழல் கண்டு களிப்பன வாகாதே
காரிகை யார்கடம் வாழ்விலென் வாழ்வு கடைப்படு மாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு மறந்திடு மாகாதே
மாலறியா மலர்ப் பாத மிரண்டும் வணங்குது மாகாதே
பண்களிகூர்தரு பாடலொ டாடல் பயின்றிடு மாகாதே
பாண்டி நன் னாடுடை யான்படை யாட்சிகள் பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து வெளிப்படு மாயிடிலே. (க)

ஒன்றினொடொன்றுமோ ரைந்தினொ டைந்து முயிர்ப்பது மாகாதே
உன்னடி யாரடி யாரடி யோமென வுய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த கணக்கது வாகாதே
காரண மாகு மனாதி குணங்கள் கருத்துறு மாகாதே

* இதன்கருத்து யாதெனின், ஞானாநந்த வஸ்துவாகிய சிவத்தைத் தரிசித்தவர்கள் தூயஞானநாட்டம் பெற்றவர்களாதலின் அவர்களுக்கு வேறு விவகாரங்கள் நிகழலாகாவென்பதாம்.

(க) காரிகையார்கள் - மாதர்கள்; பண்களிகூர்தரு - பண்களின் களிப்பு மிகுந்த; வேதகம் - வேறுபடுத்தல், அதாவது ஆன்மாவின் சீவத்துவத்தை நீக்கி சிவத்துவத்தையருளல். ஈண்டுஅது சிவபிரானுக்காயிற்று. (உ) ஒன்றினொடுஒன்று - ஒன்றோடொன்று, அதா

நன்றிது தீதென வந்த நடுக்க நடந்தன வாகாதே
நாமுமே லாமடி யாருட னேசெல நண்ணுது மாகாதே
என்றுமெ னன்பு நிறைந்த பராவமு தெய்துவ தாகாதே
ஏறுடை யானெனை யாளுடை நாயக னென்னுள் புகுந்திடிலே. (௨)

பந்த விகார குணங்கள் பறிந்து மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த பராவமு தாகாதே
அந்த மிலாத வகண்டமு நம்மு ளகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுட ரண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை சிந்திடு மாகாதே
சேலன கண்க ளவன்றிரு மேனி திளைப்பன வாகாதே
இந்திர ஞால விடர்ப் பிறவித்துய ரேகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய வீச னெதிர்ப்படு மாயிடிலே. (௩)

என்னணி யார்முலை யாக மளைந்துட னின்புறு மாகாதே
எல்லையின் மாக்கரு ணைக்கட லின்றினி தாடுது மாகாதே
நன்மணி நாத முழங்கி யெனுள்ளுற நண்ணுவ தாகாதே
நாத னணித்திரு நீற்றினை நித்தலு நண்ணுவ தாகாதே
மன்னிய வன்பரி லென்பணி முந்துற வைகுவ தாகாதே
மாமறை யும்மறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
இன்னியற் செங்கழு நீர்மல ரென்றலை யெய்துவ தாகாதே
என்னை யுடைப் பெருமா னருளீச னெழுந்தருளப் பெறிலே. (௪)

மண்ணினின் மாயை மதித்து வகுத்த மயக்கறு மாகாதே
வானவ ரும்மறி யாமலர்ப் பாதம் வணங்குது மாகாதே
கண்ணிலி கால மனைத்தினும் வந்த கலக்கறு மாகாதே
காதல்செ யும்மடி யார்மன மின்று களித்திடு மாகாதே
பெண்ணலி யாணென நாமென வந்த பிணக்கறு மாகாதே
பேரறி யாத வனேக பவங்கள் பிழைத்தன வாகாதே

---

வது சித்துஅசித்து; ஐந்திரேடுஐந்து - பத்து, அதாவது தசேந்திரியங்கள்; உயிர்ப்பதும் - பிழைத்திருத்தலும்; கணக்கது - முறைமை; நண்ணுதும் - மனதிற்கொள்ளுதலும். (௩) பந்தம் - பிறவிக்கட்டு; பறிந்துமறிந்திடும் - வெளிப்பட்டு மீளுதலும்; அண்ணுவது-அணுகுவது; திளைப்பன - அநுபவிப்பன; ஏந்துவது - ஒழிந்துபோவது. (௪) ஆகம் - மார்பு; இயல் - குணம். (௫) கண் இலி - நினைத்தற்கரிய;

எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை யெய்துவ தாகாதே
என்னை யுடைப் பெருமா னருளீச னெழுந்தருளப் பெறிலே. (ரு)

பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து பொழிந்திடு மாகாதே
மின்னிய னுண்ணிடை யார்கள் கருத்து வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழு மோசையி லின்ப மிகுத்திடு மாகாதே
தன்னடி யாரடி யென்றலை மீது தழைப்பன வாகாதே
தானடி யோமுட னேயுய வந்து தலைப்படு மாகாதே
இன்னிய மெங்கு நிறைந்தினி தாக வியம்பிடு மாகாதே
என்னமு துடைய யீச னெனத்த னெழுந்தருளப் பெறிலே. (சு)

சொல்லிய லாதெழு தூமணி யோசை சுவைதரு மாகாதே
துண்ணென வென்னுள மன்னிய சோதி தொடர்ந்தெழு மாகாதே
பல்லியல் பாய பரப்பற வந்த பராபர மாகாதே
பண்டறி யாத பராநு பவங்கள் பரந்தெழு மாகாதே
வில்லிய னன்னுத லார்மயலின் றுவிளைந் திடு மாகாதே
விண்ணவ ரும்மறி யாத விழுப்பொரு ளிப்பொரு ளாகாதே
எல்லையி லாதன வெண்குண மானவை யெய்திடு மாகாதே
இந்து சிகாமணி யெங்களை யாள வெழுந்தருளப் பெறிலே. (எ)

சங்கு திரண்டு முரன்றெழு மோசை தழைப்பன வாகாதே
சாதி விடாத குணங்க ணம்மோடு சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனு மாயை யடங்கிடு மாகாதே
ஆசை யெலாமடி யாரடி யோமெனு மத்தனை யாகாதே
செங்கய லொண்கண் மடந்தையர் சிந்தை திளைப்பன வாகாதே
சீரடி யார்கள் சிவாநு பவங்க டெரிந்திடு மாகாதே

---

பவங்கள் - பிறவிகள்; பிழைத்தன - தப்புவன. (சு) பொன் இயலும் - பொன்னிறம்பொருந்திய; தலைப்படும் - கலத்தலும்; இயம் - வாத்தியங்கள். (எ) துண்ணென - விரைவாக; பரப்பு - (விஷய நுகர்ச்சியில்) விரைவு; வில்இயல் - வில்லைநிகர்த்த; இந்து - சந்திரன். (அ) முரன்று - சப்தித்து; ஓசை - பிராணவாயுவானது சுழிமுனை வாயிலாக மேற்சென்று துவாதசாந்தத்தையடைந்தபோது அவ்விடத்திலெழும் நடனச்சிலம்போசை. அத்தனை - சிறிதும்; திளைப்பன - நுகர்வன.

எங்கு நிறைந்தமுதூறு பரஞ்சுட ரெய்துவ தாகாதே
ஈறறியா மறையோனெனை யாள வெழுந்தருளப் பெறிலே. (அ)

திருச்சிற்றம்பலம்.

---

# ஆனந்தமாலை.

## சிவாநுபவவிருப்பம்

## எ-து. சிவானந்தமேலீட்டில் கிரியாசத்தி யழிவுரைத்தல்.

தில்லையிலருளிச் செயப்பட்டது.

### ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னேரனைய பூங்கழல்க ளடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னேரனைய மலர்கொண்டு போற்றாநின்ற ரமரரெல்லாம்
கன்னேரனையமனக்கடையாய்க் கழிப்புண்டவலக் கடல்வீழ்ந்த
என்னேரனையே னினியுன்னைக் கூடும்வண்ண மியம்பாயே. (க)

என்னாலறியாப் பதந்தந்தா யானதறியா தேகெட்டேன்
உன்னாலொன்றுங்குறைவில்லையுடையா யடிமைக்காரென்பேன்
பன்னாளுன்னைப் பணிந்தேத்தும் பழையவடிய ரொடுங்கூடா
தென்னாயகமே பிற்பட்டிங் கிருந்தேனேய்க்கு விருந்தாயே. (உ)

---

(க) ஏர் - அழகு; வியன்உலகம் - பெரிய பிரபஞ்சமாயை; அவலம் - துன்பம்; என்நேர்அனையேன் - எனக்கு நானே நிகர்த்தவனாகிய நான். (உ) பதம் - அத்துவிதமாயியைந்து ஒன்றுபட்டு நிற்கும் நிலை. பழைய அடியாரொடுங்கூடாது—(வெளிப்படை) தொண்டர் கூட்டுறவு எற்றுக்கெனின், முத்தியை நல்குவதுஞானம். அதைக்கெடுப்பது மலம். அம்மலவாசனை ஞானநிஷ்டை கூடினு

சீலமின்றி நோன்பின்றிச் செறிவேயின்றி யறிவின்றித்
தோலின்பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்றுவிழுந்து கிடப்பேனை
மாலுங்காட்டி வழிகாட்டி வாராவுலக நெறியேறக்
கோலங்காட்டி யாண்டானைக் கொடியேனென்றோ கூடுவதே. (௩)

கெடுவேன்கெடுமாகெடுகின்றேன்கேடிலாதாய்பழிகொண்டாய்
படுவேன் படுவதெல்லாநான் பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமாநரகத் தழுந்தாமே காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய்நில்லா தொழிந்தக்கா னன்றோ வெங்கணாயகமே. (௪)

தாயாய்முலையைத் தருவானே தாராதொழிந்தாற் சவலையாய்
நாயேன்கழிந்து போவேனோ நம்பியினித்தா னல்குதியே
தாயேயென்றுன் றாளடைந்தேன் தயாநீயென்பா லில்லையே
நாயேனடிமை யுடனாக வாண்டாய் நான்றான் வேண்டாவோ. (௫)

கோவேயருள வேண்டாவோ கொடியேன் கெடவேயமையுமே
ஆவாவென்னா விடிலென்னை யஞ்சேலென்பா ராரோதான்
சாவாரெல்லா மென்னளவோ தக்கவாறன் றென்னாரோ
தேவேதில்லை நடமாடீ திகைத்தே னினித்தான் றேற்றாயே. (௬)

கரியைக்குதிரைப் பரியாக்கி ஞாலமெல்லா நிகழ்வித்துப்
பெரியதென்னன் மதுரையெல்லாம்பிச்சதேற்றும்பெருந்துறையாய்
அரியபொருளே யவநாசியப்பா பாண்டி வெள்ளமே
தெரியவரிய பரஞ்சோதீ செய்வதொன்று மறியேனே. (௭)

திருச்சிற்றம்பலம்.

---

ரிடத்தும் பிராரத்துவ தேகமுள்ளவரை யாதானுமோர் வழியால் நுழைந்து, அவரது நல்லுணர்ச்சியைச் சிதைத்துப், பிறவிக்கேதுவாகிய உபாதியையுண்டுபண்ணுமாதலின், அம்மலத்தை நிர்மூலப் படுத்த அருட்டுணையும் தொண்டர் கூட்டுறவும்வேண்டும். (௩) சீலம் - ஒழுக்கம்; நோன்பு - விரதம்; செறிவு - அடக்கம்; தோலின் பாவை - தோலினாற்செய்த பிரதிமை; மாலும் - விருப்பமும்; வழி - நன்னெறி; வாராஉலகம் - மீளாவுலகம் (முத்தியுலகம்); நெறிஏற - முறையுடனேற. (௪) கெடும் மா - கெடும்வண்ணம். (௫) சவலை - மெலிந்தகுழந்தை; நாயேன் அடிமை - நாயினேனும் எனது அடிமைத் திறமும்; நான்தான் - நான்மாத்திரம்; தேற்றாய் - தெளிவிப்பாய்.

# அச்சோப்பதிகம்.

## அநுபவ வழியறியாமை

## எ - து. அநுபவத்ததிசயம்.



தில்லையிலருளிச் செயப்பட்டது.

கலிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமல மறுவித்துச் சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (க).

நெறியல்லா நெறிதன்னை நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்று மில்லாத கூத்தன்றன் கூத்தையெனக்
கறியும்வண்ண மருளியவா றார்பெறுவா ரச்சோவே. (உ)

---

(க) நெறி - மார்க்கம்; மூர்க்கர் - அகங்காரிகள், கீழ்மக்கள்; முயல்வேனை - முயன்று திரிகின்ற என்னை; பத்திநெறி - அன்பு மார்க்கம்; பாறும் - நீங்கும்; மலம்அறுத்து - பாசக்ஷயஞ் செய்வித்து; சிவம்ஆக்கி - சிவத்துவத்தையளித்து, அதாவது ஸர்வஞ்ஞத்வாதி குணங்களை நல்கி; அத்தன் - ஸர்வ உயிர்களுக்கும் தந்தையாயுள்ள ...ன், ஸர்வசேதநா சேதனப் பொருள்களையுமுடையவன், ஸர்வ ...வதாகமப் பொருளாயுள்ளவன், எனக்குப் பொற்குவையா யிருப்ப...ர்; அருளியஆறு - அளித்தவிதம். அளித்தது திருவடி. திருவடி ...து அருள். அதைப்பெற்றுத் தானும் எதிருங்கழன்று அறி...வாயிருத்தலே முத்தி. அத்தகைய முத்தியை யளித்தவிதம்; ...சா - அதிசயம். (உ) நெறியல்லாநெறி - தீயநெறிகள்; சிறு...கள் - அன்பு மார்க்கமில்லாத பிறசமயங்கள்; குறி - அடையா...

பொய்யெல்லா மெய்யென்று புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான் றன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௩)

மண்ணதனிற் பிறந்தெய்த்து மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா வன்பருளி யெனையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத் தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணலெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௪)

பஞ்சாய வடிமடவார் கடைக்கண்ணு லிடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர நிற்பேனுன் னருள்பெற்றேன்

ளம். (௩) புணர் - நெருங்கிய; மையல்உற - மயக்கமுக. (௪) எய்த்து - இளைத்து; எண்ணம் இல்லா - அளவில்லாத; சுண்ணம் - பொடி; தூய்நெறி - பரிசுத்தம் பொருந்திய **சமரசநெறி**. அது சித்தாந்த சைவநெறி, சைவத்திறம், சைவத்துறை, அருள்நெறி. அது தூய்மையாவது எங்ஙனமெனின், சுருங்கச்சொல்லின், பிறந்திறந்துழலாதது எதுவோ அதுவே **பதி**யென்னுங் **கடவுள்**. பிறந்திறந்துழல்வது எதுவோ அதுவே **பசு**வென்னும் **ஆன்மா**. அவ்வான்மா பிறந்திறந்துழல்வதற்குக் காரணமாயிருப்பது எதுவோ அதுவே **பாசம்** என்னும் **மும்மலம்.** அவைதான் அம்மூன்றுக்குமுள்ள முக்கிய பேதம். அவற்றைத் தெளிவாக விளக்கிக்காட்டுவதே மெய்ச்சமயம். அச்சமயம் கடவுளருளைப் பெறுவதற்கு உண்மையான **அன்பின் தொண்டே** முக்கிய சாதனமெனப்பகரும். அவ்வன்பின்றி சரீரபழக்கத்தாற் செய்யும் அநுஷ்டானம், ஜபம், ஆலயந்தொழுதல், பணியாற்றல், பிறகிரியைகளும் அவ்வருளையுண்டாக்க மாட்டாதென்று முடித்துப்பேசும். சாதாரணமாய் அன்பின்றித்தரும் உணவினைச் சிற்றறிவினராகிய நாமே அங்கீகரிக்கமாட்டோமென்றால், அன்பில்லாமற் செய்யுங் கிரியைகளை முற்றறிவினையுடைய முதல்வன் எவ்வாறங்கீகரிப்பன். ஆகையினாலே கசிந்துருகும் அடிமைத்திறத்தை யுணர்த்தும் மெய்யன்பின் தொண்டின் நெறியே தூய்நெறியாம். அதுதான் இங்கு குறிப்பிக்கப்பட்டது. அதைச் சித்தாந்த நூல்கள் சித்தாந்தமாய்க் கூறினபடியால் அடிகளாரும் அதனையே தமது மதுரவாசகத்தின் இறுதிப்பதிகத்தில் சித்தாந்தப் படுத்தினார். முத்தாந்தத்துக்கு நேர் **இராஜவீதி** அதுவே. அதுவே வேதாந்தத்தின் முடிபிலுள்ள சித்தாந்தம். அப்படிக்கின்றி கேவலாத்வைத வேதாந்தத்தையும், சுத்தாத்வைத சித்தாந்தத்தையும் ஒன்றெனக் குழப்பி அதுவே **சமரசம்** என்றுகூறுவோரது கொள்கை அடாது. **வேதாந்த.**

உய்ஞ்சேனு னுடையானே யடியேனை வருகவென்
றஞ்சேலென் றருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௫)

வெந்துவிழு முடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழற் கோல்வளையார் குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு பரிசறவென் றுரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௬)

தையலார் மையலிலே தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட் டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௭)

சாதல்பி றப்பென்னுந் தடஞ்சுழியிற் றடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார் கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான் றன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௮)

செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை
மும்மைமல மறுவித்து முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா றார்பெறுவா ரச்சோவே. (௯)

திருச்சிற்றம்பலம்.

---

**முடிபே வேதாந்த சித்தாந்தம்.** ஒரும்வேதாந்த மென்றுச்சியிற் பழுத்த ஆராவின்ப வருங்கனியைப் பிழிந்த சாரமிதுதான். கடைப்பிடிக்க. (௫) உய்ஞ்சேன் நான்-உய்ந்தேன். (௬) கொந்துகுழல்-பூங்கொத்து அணிந்த குழல்; பரிசு - பிரகிருதி குணங்கள்; துரிசு - மலக்குற்றம்; அந்தம் - முடிவான பொருள். (௭) தையலார் - அழகுடைய மாதர்; உருவி - வாங்கி; ஓங்காரத்து உட்பொருள்-சிவம், சத்தாகிய வஸ்து, பிரமம். (௮) அணி இழையார் - ஆபரணங்களை யணிந்தவர். (௯) **செம்மைநலம் - ஞானங்கனிந்த அன்பு** ; சிதடர் - அறிவில்லாதவர்; சிவிகை - பல்லக்கு, உன்னதமான இடம். அது ஆன்மபோதமுங் கண்ணொளியும் போலச் சிவமும் ஆன்மாவும் இரண்டறவொற் றுமைப்பட்டு கேவலம் அறிவாய்நிற்கும் நிலை. அதுவே ஞானிக ளிடம். அருள்நிலயம். அந்நிலயம் பெற்றாரே பிறவாமை பெற்றார்.

ஆகத்திருப்பதிகங்கள் - ௫௧. அகவலோடு செய்யுள் - ௬௫௮.

**திருவாசகம் முற்றுப்பெற்றது.**

---

திருச்சிற்றம்பலம்.

**மாணிக்கவாசக சுவாமிகள்**

# திருக்கோவையார் செய்யுட்டிரட்டு.

## நூற்சிறப்பு.

* ஆரணங் காணென்ப ரந்தணர் யோகிய ராகமத்தின்
காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர்
ஏரணங் காணென்ப ரெண்ண ரெழுத்தென்ப ரின்புலவோர்
சீரணங் காயசிற் றம்பலக் கோவையை செப்பிடினே.

திருச்சிற்றம்பலம்.

## காட்சி.

திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வம்
மருவளர் மாலையோர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே. (௧)

## பாங்கனை நினைதல்.

பூங்கனை யார்புனற் றென்புலி யூர்புரிந் தம்பலத்துள்
ஆங்கெனை யாண்டுகொண் டாடும்பி ரானடித் தாமரைக்கே
பாங்கனை யானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தால்
ஈங்கெனை யார்தடுப் பார்மடப் பாவையை யெய்துதற்கே (௨)

---

* **இச்செய்யுள்** பிற்காலத்தான்றோராற் செய்யப்பட்டது.

(௧) திரு - அழகு; காவிகள் - நீலமலர்கள்; குரு - வரைப்பு, எல்லை; ஒல்கி - நுடங்கி. (௨) கனை - சப்தித்தல்; பாங்கனை - உரிமையுள்ளவனை; பண்பனை - இயல்பையுடையவனை. (௩) ஒருத்தன் - ஒப்பிலாதவன்; குடுமி - உச்சி; திருத்தம் - தீர்த்தம், புண்ணியநீர்; கூய் - அழைத்து. (௪) திமில் - மரக்கலம்; மடுக்கோ -

**வாட்டம் வினுதல்.**

நிருத்தம் பயின்றவன் சிற்றம் பலத்துநெற் றித்தனிக்கண்
ஒருத்தன் பயிலுங் கயிலை மலையி னுயர்குடுமித்
திருத்தம் பயிலுஞ் சுனைகுடைந் தாடிச் சிலம்பெதிர்கூய்
வருத்தம் பயின்றுகொல் லோவல்லி மெல்லியல் வாடியதே. (௩)

**துறையுற்று நிற்றல்.**

மடுக்கோ கடலின் விடுதிமி லன்றி மறிதிரைமீன்
படுக்கோ பணிலம் பலகுளிக் கோபரன் றில்லைமுன்றில்
கொடுக்கோ வளைமற்று நும்மையர்க் காயகுற் றேவல்செய்கோ
தொடுக்கோ பணியி ரணியீர் மலர்நுஞ் சுரிகுழற்கே (௪)

**பிறைதொழ கென்றல்.**

மைவார் கருங்கண்ணி செங்கரங் கூப்பு மறந்துமற்றப்
பொய்வா னவரிற் புகாதுதன் பொற்கழற் கேயடியேன்
உய்வான் புகவொளிர் தில்லைநின் றோன்சடை மேலதொத்துச்
செவ்வா னடைந்த பசுங்கதிர் வெள்ளைச் சிறுபிறைக்கே. (௫)

**ஆற்ற துரைத்தல்.**

பொருளா வெனைப்புகுந் தாண்டு புரந்தரன் மாலயன்பால்
இருளா யிருக்கு மொளிநின்ற சிற்றம் பலமெனலாம்
சுருளார் கருங்குழல் வெண்ணகைச் செவ்வாய்த் துடியிடையீர்
அருளா தொழியி னொழியா தழியுமென் னாருயிரே. (௬)

**தழைகொண்டு சேறல்.**

தேமென் கிளவிதன் பங்கத் திறையுறை தில்லையன்னீர்
பூமென் றழையுமம் போதுங்கொள் ளீர்தமி யேன்புலம்ப
ஆமென் றருங்கொடும் பாடுகள் செய்துநுங் கண்மலராம்
காமன் கணைகொண் டலைகொள்ள வோமுற்றக் கற்றதுவே. (எ)

செலுத்துவேனோ; பணிலம் - சங்கு; வளை - சங்கவளைகள்; பணியீர்- சொல்லுமின். (௫) மைவார் - மையையுடைய; பொய்வானவர் - பிறப்பிறப்புக்களையுடைய தேவர், அவர் அயன்மால் முதலினோர். (௬) துடி - உடுக்கை. (எ) தேமென் கிளவி - தேன்போலும் மெல்லியமொழி; அன்னீர் - ஒப்பீர்; கொடும்பாடுகள் - கொடுமைகள்.

### இரவுக் குறிவேண்டல்.

மருந்துநம் மல்லற் பிறவிப் பிணிக்கம் பலத்தமிர்தாய்
இருந்தனர் குன்றினின் றேங்கு மருவிசென் றேர்திகழப்
பொருந்தின மேகம் புதைந்திரு ளேங்கும் புனையிறும்பின்
விருந்தினன் யானுங்கள் சீறு ரதனுக்கு வெள்வளையே. (அ)

### மணமுரசு கூறல்.

பிரசந் திகழும் வரைபுரை யானையின் பீடழித்தார்
முரசந் திகழும் முருகிய நீங்கு மெவர்க்குமுன்னும்
அரசம் பலத்துநின் றாடும்பி ரானருள் பெற்றவரில்
புரைசந் தமேகலை யாய்துயர் தீரப் புகுந்துநின்றே. (௯)

### பிரிவறிவித்தல்.

மூப்பா னிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்
வீப்பான் வியன்றில்லை யானரு ளால்விரி நீருலகம்
காப்பான் பிரியக் கருதுகின் றார்நமர் கார்க்கயற்கண்
பூப்பா னலமொளி ரும்புநி தாழ்குழற் பூங்கொடியே. (௰)

### வாட்டங் கூறல்.

முனிவரு மன்னரு முன்னுவ பொன்னான் முடியுமெனப்
பனிவருங் கண்பர மன்றிருச் சிற்றம் பலமனையாய்
துணிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப
நனிவரு நாளிது வோவென்று வந்திக்கு நன்னுதலே. (௧௧)

---

(அ) ஏர் - அழகு; புனைஇறும்பு - செய்காடு; சீறூர் - வேடரூர்; வெள்வளை - வெண்மையாகிய வளையல்களையுடையவள். (௯) பிரசம் - தேன்; பீடு - வலி; முருகியம் - குறிஞ்சிநிலப்பறை; எவர்க்கும்முன்னும் அரசு - திரிமூர்த்திகளுக்கும் முற்பட்ட இறைவன். (௰) மூப்பான் - எல்லார்க்கும் மூத்தவன்; இளையவன் - என்றும் நிலைபெற்ற இளமையையுடையவனாதலின் எல்லார்க்கும் இளையவன், (எம்முருகனைப்போல்); பூப்பால்-பூவின்கண்; நலம் - நறுநாற்றமாகிய நன்மை. (௧௧) முனிவரும் - துறந்தாரும்; பொன்னால் - பொருளால்; துனி - துன்பம்; அளிப்ப - தலையளிசெய்ய; நன்னுதல் - நல்ல நெற்றியையுடையவள்.

**ஊதிய மெடுத்துரைத் தூடல் தீர்த்தல்.**

காரணி கற்பகங் கற்றவர் நற்றுணை பாணரொக்கல்
சீரணி சிந்தா மணியணி தில்லைச் சிவனடிக்குத்
தாரணி கொன்றையன் றக்கோர்தஞ் சங்க நிதிவிதிசேர்
ஊருணி யுற்றவர்க் கூரன்மற்றியாவர்க்கு மூதியமே. (கஉ)

திருச்சிற்றம்பலம்.

## திருக்கோவையார் செய்யுட்டிரட்டு முற்றுப்பெற்றது.

---

**அபியுக்தர்.**

உருவாருந் தமிழ்ச்சங்கத் தடம்பொய்கைத் தோன்றி
உயர்ந்தோங்கு மெய்ஞ்ஞான வொளியை யுடைத்தாகி
மருவாருங் கிளவியிதழ் நானூ றகி
மதுப்பொருள்வாய் மதிப்புலவர் வண்டா யுண்ணத்
தருவாரும் புலியூரி னுலகுய்யக் குனிப்போன்
தடங்கருணை யெனுமிரவி தன்கதிரா லலரும்
திருவாத வூராளி திருச்சிற்றம் பலவன்
திருவடித்தா மரைச்சாத்துந் திருவளர் தாமரையே.

**இலக்கணக் கோத்துரை.**

பல்காற் பழகினுந் தெரியா வுளவேல்
தொல்காப் பியந்திரு வள்ளுவர் கோவையார்
மூன்றினு முழங்கு மாண்டினு மிலையேல்
வடமொழி வெளிபெற வழங்கு மென்க.

---

(கஉ) கார் - மேகம்; ஒக்கல் - சுற்றம்; உற்றவர் – சுற்றத்தார்;
ஊதியம் - பயன்.

உ

# திருவாசகப்
# பாட்டு முதற்குறிப் பகராதி.

முற்றிற்று.

# திருக்கோவையார் பாட்டு முதற் குறிப்பகராதி.







உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# ஒன்பதாந் திருமுறை

என்னும்

# திருவிசைப்பா திருப்பல்லாண்டு.



## திருவிசைப்பா.

(க) திருமாளிகைத்தேவர். (உ) சேந்தனார். (ங) கருவூர்த்தேவர். (ச) பூந்துருத்திநம்பி காடநம்பி. (ரு) கண்டராதித்தர். (சு) வேணாட்டடிகள். (எ) திருவாலியமுதனார். (அ) புருடோத்தம நம்பி. (கூ) சேதிராயர் ஆகிய ஒன்பதின்மர் அருளிச்செய்த திருமுறை.

---

## திருப்பல்லாண்டு.

சேந்தனார் அருளிச்செய்தது.

திருச்சிற்றம்பலம்.



## ஒன்பதின்மர் திருநாமமும், திருப்பதிக வகையும், பண்ணின் வகையும் தெரியுமடைவு.

செம்பொன்மணி யம்பலத்து நிருத்த ஞர்க்குத்
திருவிசைப்பா வுரைத்தவர்தந் திருப்பேர் சொல்லில்
பம்புபுகழ் செறிதிருமா ளிகைமெய்த் தேவர்
பரிவுடைய சேந்தனர் கருவூர்த் தேவர்
நம்பிகா டவர்கோனற் கண்டரா தித்தர்
நன்குயர்வே ணாட்டடிக டிருவாலி யமுதர்
அம்புவியோர் புகழ்புருடோத் தமர்சேதி ராயர்
ஆகவிவ ரொன்பதின்மர் தாமுறைகண் டடைவே. (௧)

அடைவுறுமா ளிகைத்தேவர் நான்கு சேந்தர்
அன்புறுபல் லாண்டொன்ரு டிசைப்பா மூன்று
திடமுடைய கருவூரர் பத்து வீறில்
சிறந்தகா டவிரண்டு கண்டர்வே ணாடர்
படிபுகழொவ் வொன்றுதிரு வாலி நான்கு
பன்னுபுரு டோத்தமஞ ரிரண்டுசேதி ராயர்
உடையதிருக் கடைக்காப்பொன் ருகவிரு பத்தொன்
பானேது செய்யுண்முந்நூற்றறுபதினே டைந்தே. (௨)

ஐந்துடனல் வருமுரைத்த திருக்கடைக்காப் பிற்பண்
அறையின்மா ளிகைத்தேவர் நான்கிலொன்றுகாந்தாரம்
முந்துகரு வூரர்பத்தி னிரண்டுபுற நீர்மை
மொழிந்திடுகாந் தாரமொன்று காடவர்கோ னிரண்டின்
நந்தலில்சா ளரபாணி யொன்றுவேணாட் டடிகள்
நவின்றதொன்று புறநீர்மை திருவாலி யமுதர்
பந்தமறச் சொன்னன்கி னென்றுநட்ட ராகம்
பகர்ந்திடினென் றிந்தளமற் றெவையும்பஞ் சமமே. (௩)

சில திருப்பதிகங்களிலே

சில திருப்பாசுரங்கள் இறந்து விட்டன.

உ

சிவமயம்.

# திருவிசைப்பா.

## திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா.

### க. கோயில்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் றிரண்மணிக் குன்றே
சித்தத்துட் டித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
அம்பல மாட ரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே. (க)

இடர்கெடுத் தென்னை யாண்டுகொண் டென்னுள்
இருட்பிழம் பறவெறிந் தெழுந்த
சுடர்மணி விளக்கி னுள்ளொளி விளங்கும்
தூயநற் சோதியுட் சோதீ
அடல்விடைப் பாகா வம்பலக் கூத்தா
அயனொடு மாலறி யாமைப்
படரொளி பரப்பிப் பரந்துநின் றாயைத்
தொண்டனேன் பணியுமா பணியே. (உ)

---

(க) ஒன்றே - ஒப்பற்றபொருளே; தெளி - தூய்மை; அளி - அன்பு; அரங்கு - சபை; விளம்புமாறு - புகழுமாறு. (உ) பிழம்பு -

தற்பரம் பொருளே சசிகண்ட சிகண்டா
சாமகண் டாவண்ட வாணா
நற்பெரும் பொருளா யுரைகலந் துன்னை
என்னுடை நாவினா னவில்வான்
அற்பனென் னுள்ளத் தளவிலா வுன்னைத்
தந்தபொன் னம்பலத் தாடீ
கற்பமா யுலகா யல்லையா னாயைத்
தொண்டனேன் கருதுமா கருதே. (௩)

பெருமையிற் சிறுமை பெண்ணொடா ணாயென்
பிறப்பிறப் பறுத்தபே ரொளியே
கருமையின் வெளியே கயற்கணா ளிமவான்
மகளுமை யவள்களை கண்ணே
அருமையின் மறைநான் கோலமிட் டாற்றும்
அப்பனே யம்பலத் தமுதே
ஒருமையிற் பலபுக் குருவினின் றாயைத்
தொண்டனே னுரைக்குமா றுரையே. (௪)

கோலமே மேலை வானவர் கோவே
குணங்குறி யிறந்ததோர் குணமே
காலமே கங்கை நாயகா வெங்கள்
காலகா லாகாம நாசா
ஆலமே யமுதுண் டம்பலஞ் செம்பொன்
கோயில்கொண் டாடவல் லானே
ஞாலமே தமியே னற்றவத் தாயைத்
தொண்டனே னணுகுமா நணுகே. (௫)

நீறணி பவளக் குன்றமே நின்ற
நெற்றிக்கண் ணுடையதோர் நெருப்பே

திரட்சி; பணியே - நியமித்தருள்வாயாக. (௩) சசிகண்ட - சந்திரனைக் காத்தவீர; சிகண்டா - ஸ்ரீகண்டனே; சாமகண்டா - நீலகண்டத்தையுடையவனே; அண்டவாணா - சிதாகாசத்திலுறைபவனே; உரை - சொற்கள்; கற்பமாய் - ஊழிகாலமாய். (௪) வெளியே - ஒளியே; களைகண்ணே - ஆதாரமே. (௫) நல்தவத்தாயை - நல்ல யோகியாகிய உன்னை. (௬) வேறுஅணி - வெவ்வேறாகிய அழகு; போகமே-போகவஸ்துக்களா யிருப்பவனே. (௭) தனதன்-குபேரன்;

வேறணி புவன போகமே யோக
வெள்ளமே மேருவில் வீரா
ஆறணி சடையெம் மற்புதக் கூத்தா
அம்பொன்செ யம்பலத் தரசே
ஏறணி கொடியெம் மீசனே யுன்னைத்
தொண்டனே னிசையுமா றிசையே. (௬)

தனதனற் றோழா சங்கரா சூல
பாணியே தாணுவே சிவனே
கனகநற் றூணே கற்பகக் கொழுந்தே
கண்கண்மூன் றுடையதோர் கரும்பே
அனகனே குமர விநாயக சனக
அம்பலத் தமரசே கரனே
உனகழ லிணையென் னெஞ்சினு ளினிதாத்
தொண்டனே னுகருமா றுகரே. (௭)

திறம்பிய பிறவிச் சிலதெய்வ நெறிக்கே
திகைக்கின்றேன் றனைத்திகை யாமே
நிறம்பொன்னு மின்னு நிறைந்தசே வடிக்கீழ்
நிகழ்வித்த நிகரிலா மணியே
அறம்பல திறங்கண் டருந்தவர்க் கரசாய்
ஆலின்கீ ழிருந்தவம் பலவா
புறஞ்சமண் புத்தப் பொய்கள்கண் டாயைத்
தொண்டனேன் புணருமா புணரே. (அ)

தக்கனற் றலையு மெச்சன்வன் றலையும்
தாமரை நான்முகன் றலையும்
ஒக்கவிண் டுருள வொண்டிருப் புருவம்
நெறித்தரு ளியவுருத் திரனே
அக்கணி புலித்தோ லாடைமே லாட
ஆடப்பொன் னம்பலத் தாடும்

---

அனகனே - பரிசுத்தனே; சனக - பிதாவே; சேகரனே - சிகா மணியே; இனிதுஆ - இனிதாகவிருக்க. (அ) திறம்பிய - வரம்பு கடந்த; கண்டாயை - உண்டாக்கிய உன்னை. (௯) விண்டு உருள - அற்று உருளும்படி; சொக்கனே - அழகனே. (௰) மடங்கலாய் -

சொக்கனே யெவர்க்குந் தொடர்வரி யாயைத்
தொண்டனேன் றொடருமா தொடரே. (கூ)

மடங்கலாய்க் கனகன் மார்புகீண் டானுக்
கருள்புரி வள்ளலே மருளார்
இடங்கொண்முப் புரம்வெந் தவியவை திகத்தேர்
ஏறிய வேறுசே வகனே
அடங்கவல் லரக்க னருட்டிரு வரைக்கீழ்
அடர்த்தபொன் னம்பலத் தரசே
விடங்கொள்கண் டத்தெம் விடங்கனே யுன்னைத்
தொண்டனேன் விரும்புமா விரும்பே. (ω)

மறைகளு மமரர் கூட்டமு மாட்டா
தயன்றிரு மாலொடு மயங்கி
முறைமுறை முறையிட் டோர்வரி யாயை
மூர்க்கனேன் மொழிந்தபுன் மொழிகள்
அறைகழ லரன்சீ ரறிவிலா வெறுமைச்
சிறுமையிற் பொறுக்குமம் பலத்துள்
நிறைதரு கருணை நிலயமே யுன்னைத்
தொண்டனே னினையுமா நினையே. (கக)

திருச்சிற்றம்பலம்.



---

நரசிங்கனாய்; கனகன் - இரணியன்; அடங்க - ஒடுங்கும்படி; விடங்கனே - அழகனே. (கக) மாட்டாது - அறியமாட்டாமல்; ஓர்வு அறியாயை - அறிதற்கரியவுன்னை; வெறுமை - பயனின்மை.

## ௨. கோயில் - உயர்கொடியாடை.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்

உயர்கொடி யாடை மிடைபட லத்தின்
ஓமதூ மப்பட லத்தின்
பெயர்நெடு மாடத் தகிற்புகைப் படலம்
பெருகிய பெரும்பற்றப் புலியூர்ச்
சியரொளி மணிக ணிரந்துசேர் கனகம்
நிறைந்தசிற் றம்பலக் கூத்தா
மயர்வறு மமரர் மகுடந்தோய் மலர்ச்சே
வடிகளென் மனத்துவைத் தருளே. (க)

கருவளர் மேகந் தகடுதோய் மகுடக்
கனகமா ளிகைகலந் தெங்கும்
பெருவளர் முத்தீ நான்மறைத் தொழில்சால்
எழின்மிகு பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் தெய்வப் பதிவதி நிதியம்
திரண்டசிற் றம்பலக் கூத்தா
உருவள ரின்பச் சிலம்பொலி யலம்பும்
உன்னடிக் கீழதென் னுயிரே. (௨)

வரம்பிரி வாளை மிளிர்மடுக் கமலம்
கரும்பொடு மாந்துமே திகள்சேர்
பரம்பிரி செந்நெற் கழனிச்செங் கழுநீர்ப்
பழனஞ்சூழ் பெரும்பற்றப் புலியூர்ச்

(க) ஆடை - சீலைகள்; மிடைபடலம் - நெருங்கினகூட்டம்; ஓமதூமம் - ஓமப்புகை; சியர் - சிறந்த; நிரந்துசேர் - வரிசையாய்ச் சேர்ந்த; மயர்வுஅறும் - மயக்கமற்ற. (௨) அகடு - வயிறு, நடு; சால் - மிகுந்த; வதி - பொருந்திய; உருவளர் - அழகு மிகுந்த. (௩) இரி வாளை - துள்ளிவிழுகின்ற வாளைமீன்கள்; மிளிர் - மிகுதியாயுள்ள; மாந்தும் - மேய்கின்ற; மேதிகள் - எருமைகள்; பரம்புஇரி - பரம்பு அடித்த; பழனம் - வயல்கள்; முடிபுணர் - முடிதரித்த; நிரந்தரம் -

சிரம்புனர் முடிவா னவரடி முறையால்
இறைஞ்சுசிற் றம்பலக் கூத்தா
நிரந்தர முனிவர் நினைதிருக் கணைக்கால்
நினைந்துநின் றொழிந்ததென் னெஞ்சே. (௩)

தேர்மலி விழவிற் குழலொலி தெருவில்
கூத்தொலி யேத்தொலி யோத்தின்
பேரொலி பரந்து கடலொலி மலியப்
பொலிதரு பெரும்பற்றப் புலியூர்ச்
சீர்நில விலயத் திருநடத் தியல்பின்
திகழ்ந்தசிற் றம்பலக் கூத்தா
வார்மலி முலையாள் வருடிய திரண்மா
மணிக்குறங் கடைந்ததென் மதியே. (௪)

நிறைதழை வாழை நிழற்கொடி நெடுந்தெங்
கிளங்கமு குளங்கொணீள் பலமாப்
பிறைதவழ் பொழில்சூழ் கிடங்கிடைப் பதணம்
முதுமதிற் பெரும்பற்றப் புலியூர்ச்
சிறைகொணீர்த் தரளத் திரள்கொணித் திலத்த
செம்பொற்சிற் றம்பலக் கூத்த
பொறையணி நிதம்பப் புலியத ளாடைக்
கச்சுநூல் புகுந்ததென் புகலே. (௫)

அதுமதி யிதுவென் றலந்தலை நூல்கற்
றழைப்பொழிந் தருமறை யறிந்து
பிதுமதி வழிநின் றொழிவிலா வேள்விப்
பெரியவர் பெரும்பற்றப் புலியூர்ச்

---

எப்பொழுதும். (௪) ஓத்து - வேதம்; குறங்கு - தொடை; மதி - அறிவு; நிழல் - ஒளி. (௫) பலம் - பழங்கள்; மாபிறை - அழகிய சந்திரன்; கிடங்கு - அகழி; பதணம் - உள்மேடை; சிறை - காவல்; தரளத்திரள்கொள் - அசைவைக்கொண்ட திரட்சியையுடைய; நித்திலம் - முத்து; பொறைஅணி - பாரத்தையுடைய; நிதம்பம் - அரை; புலிஅதள் - புலித்தோல். (௬) மதி - அறிவு; பிதுமதிவழி - பிதாவாகிய மநு நூலின்வழி; (மக்கள் மநுவின்வழி வந்தவர்களாதலின் அவர்களுக்குமநுடர், மாநுடர், மனிதர், மாநவர் முதலிய

செதுமதிச் சமணுந் தேரருஞ் சேராச்
செல்வச்சிற் றம்பலக் கூத்த
மதுமதி வெள்ளத் திருவயிற் றுந்தி
வளைப்புண்டென் னுண்மகிழ்ந் ததுவே. (௬)

பொருவரைப் புயத்தின் மீமிசைப் புலித்தோல்
பொடியணி பூணநூ லகலம்
பெருவரை புரைதிண் டோளுடன் காணப்
பெற்றவர் பெரும்பற்றப் புலியூர்த்
திருமரு வுதரத் தார்திசை மிடைப்ப
நடஞ்செய்சிற் றம்பலக் கூத்த
உருமரு வுதரத் தனிவடந் தொடர்ந்து
கிடந்ததென் னுணர்வுணர்ந் துணர்ந்தே. (௭)

கணியெரி விசிறு கரந்துடி விடவாய்க்
கங்கணஞ் செங்கைமற் றபயம்
பிணிகெட விவைகண் டரன்பெரு நடத்தில்
பிரிவிலார் பெரும்பற்றப் புலியூர்த்
திணிமணி நீல கண்டத்தென் னமுதே
சீர்கொள்சிற் றம்பலக் கூத்த
அணிமணி முறுவற் பவளவாய்ச்செய்ய
சோதியு ளடங்கிற் றென் னறிவே. (௮)

திருநெடு மாலிந் திரனயன் வானோர்
திருக்கடைக் காவலி னெருக்கிப்
பெருமுடி மோதி யுகுமணி முன்றில்
பிறங்கிய பெரும்பற்றப் புலியூர்ச்

பெயர்களுண்டு); செதுமதி - தாழ்ந்தஅறிவு; மதுமதிவெள்ளம் - தேன்போலும் இனிய அறிவின்பெருக்கம். (௭) அகலம் - மார்பு; உதரத்தார் - உதரமாலை; மிடைப்ப - தடுக்க; உருமருவு - அழகு பொருந்திய; உதரவடம் - உதரபந்தனம், அரைப்பட்டிகை. (௮) கணிஎரிவிசிறு - மழுவானது அக்கினியை வீசுகிற; துடி-உடுக்கை; திணிமணி - செறிந்தநீலமணி; அணிமணி-அழகியமுத்து; முறுவல் - பல். (௯) திருக்கடைக்காவல் - கோயிலின் வாயிற்படி; பிறங்கிய - விளங்கிய; கருவடி - பிறவிக்கடல்வற்ற; குழை - குண்டலம்.

செருநெடு மேரு வில்லின்முப் புரந்தீ
விரித்தசிற் றம்பலக் கூத்த
கருவடி குழைக்கா தமலச்செங் கமல
மலர்முகங் கலந்ததென் கருத்தே. (கூ)

ஏர்கொள்கற் பகமொத் திருசிலைப் புருவம்
பெருந்தடங் கண்கண்மூன் றுடையோன்
பேர்களா யிரநூ றாயிரம் பிதற்றும்
பெற்றியோர் பெரும்பற்றப் புலியூர்ச்
சீர்கொள்கொக் கிறகுங் கொன்றையுந் துன்று
சென்னிச்சிற் றம்பலக் கூத்த
நீர்கொள்செஞ் சடைவாழ் மதிபுது மத்தம்
நிகழ்ந்தவென் சிந்தையு ணிறைந்தே. (௰)

காமனைக் காலன் றக்கன்மிக் கெச்சன்
படக்கடைக் கணித்தவ னல்லாப்
பேய்மனம் பிறிந்த தவப்பெருந் தொண்டர்
தொண்டனேன் பெரும்பற்றப் புலியூர்ச்
சேமநற் றில்லை வட்டங்கொண் டாண்ட
செல்வச்சிற் றம்பலக் கூத்த
பூமல ரடிக்கீழ்ப் புராணபூ தங்கள்
பொறுப்பரென் புன்சொலின் பொருளே. (கக)

திருச்சிற்றம்பலம்.



(௰) நீர்-கங்கை; மதி-பிறை; மத்தம்-ஊமத்தமலர். (கக) பட - மடிய; கடைக்கணித்தவன் - கடைக்கண்ணுற் பார்த்தவன்; சேமம் - காவல்; பூ - பொலிவாகிய, அழகிய.

## ௩ - கோயில் - உறவாகியயோகம்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உறவா கியயோகமும் போக முமாய்
உயிராளி யென்னுமென் பொன்னொ ருநாள்
சிறவா தவர்புரஞ் செற்ற கொற்றச்
சிலைகொண்டு பன்றிப்பின் சென்று நின்ற
மறவா வென்னும்மணி நீர ருவி
மகேந்திர மாமலை மேலு றையும்
குறவா வென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௧)

காடாடு பல்கணஞ் சூழக் கேழல்
கடும்பின் னெடும்பகற் கான டந்த
வேடாம கேந்திர வெற்பா வென்னும்
வினையேன் மடந்தை விம்மா வெருவும்
சேடாவென் னுஞ்செல்வர் மூவா யிரம்
செழுஞ்சோ தியந்தணர் செங்கை தொழும்
கோடாவென் னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௨)

கானே வருமுர ணேன மெய்த
களியார் புளினநற் காளா யென்னும்
வானே தடவு நெடுங்கு டுமி
மகேந்திர மாமலை மேலி ருந்த

---

(௧) உயிர்ஆளி - உயிர்களை ஆள்பவனே; பொன் - பொன் போன்ற மகள்; சிறவாதவர் - கீழ்மக்கள்; கொற்றம்சிலை - வெற்றி வில்; மறவா - வேடனே. (௨) கேழல் - பன்றி; விம்மாவெருவும் - விம்மிஅஞ்சுகிறுள்; சேடா - பெருமையுடையோனே, எல்லாம் அழிந்தகாலத்தும் அழியாது எஞ்சிநிற்பவனே; கோடா - முடிந்த பொருளே. (௩) களி-செருக்கு; புளினக்காளாய் - வேடக்காளையே; குடுமி - சிகரம்; திருவாளர் - சிற்பரச்செல்வர். (௪) வெறிஏறு -

தேனே யென்னுந் தெய்வவாய் மொழியார்
திருவாளர் மூவா யிரவர் தெய்வக்
கோனே யென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௩)

வெறியேறு பன்றிப்பின் சென்றொரு நாள்
விசயற் கருள்செய்த வேந்தே யென்னும்
மறியேறு சாரன் மகேந் திரமா
மலைமே லிருந்த மருந்தே யென்னும்
நெறியேயென் னுநெறி நின்ற வர்கள்
நினைக்கின்ற நீதி வேதாந் தநிலைக்
குறியேயென் னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௪)

செழுந்தென்ற லன்றிலித் திங்கள் கங்குல்
திரைவீரை தீங்குழல் சேவின் மணி
எழுந்தின்றென் மேற்பகை யாட வாடும்
எனைநீ நலிவ தென்னே யென்னும்
அழுந்தா மகேந்திரத் தந்த ரப்புட்
கரசுக் கரசே யமரர் தனிக்
கொழுந்தே யென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௫)

வண்டார் குழலுமை நங்கை முன்னே
மகேந்திரச் சாரல் வராகத் தின்பின்
கண்டார் கவலவில் லாடி வேடர்
கடிநா யுடன்கை வளைந்தா யென்னும்
பண்டாய மலரயன் றக்க னெச்சன்
பகலோன் றலைபற் பசுங்கண்
கொண்டா யென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௬)

---

கோபம்மிகுந்த; மறிஏறு - மான்கள் மிகுந்த; குறியே - லக்ஷியமே. (௫) அன்றில் - கிரவுஞ்சபக்ஷி; கங்குல் - இரவு; வீரை - கடல்; தீங்குழல் - இனிமையான குழலோசை. (௬) கவல - கவலைப்படும்படி;

கடுப்பாய்ப் பறைகறங்கக் கடுவெஞ் சிலையும்
கருணையுங் கவணுங் கைக்கொண்
டுடுப்பாய் தோல்செருப் புச்சு ரிகை
வராகமுன் னோடி விளியு ளைப்ப
கடப்பாய் மகேந்திர நாதநா தாந்தத்
தரையா வென்பார்க்கு நாதாந் தபதங்
கொடுப்பா யென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (எ)

சேவேந்து வெல்கொடி யானே யென்னும்
சிவனேயென் சேமத் துணையே யென்னும்
மாவேந்து சாரன் மகேந்தி ரத்தில்
வளர்நாய காவிங்கே வாரா யென்னும்
பூவேந்தி மூவா யிரவர் தொழப்
புகழேந்து மன்று பொலிய நின்ற
கோவேயென் னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (அ)

தரவார் புனஞ்சு னைதா ழருவித்
தடங்கல் லுறையு மடங்க லமர்
மரவார் பொழிலெழில் வேங்கை யெங்கும்
மழைசூழ் மகேந்திர மாம லைமேல்
சுரவா வென்னுஞ் சுடர்நீண்முடி மாலயன்
இந்தி ரன்முதற் றேவர்க் கெல்லாம்
குரவா வென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௯)

---

வில்ஆடி-வில்லையேந்தி; கைவளைந்தாய்-கைவளைத்தவனே; கொண்டாய் - வாங்கினவனே. (எ) கடுப்பாய் - கடுமையாய்; கவண் - கல்லெறிகயிறு; உடுப்பாய் - தரித்தவனாய்; சுரிகை - சிறுகத்தி; விளி உளைப்ப - கூக்குரல்முழங்க; அரையா - அரசனே. (அ) சே - இடபம்; மா - பெருமை; மன்று - அம்பலம். (௯) தரவு - பயன்றருதல்; தாழ்அருவி - இழிந்துவருகின்றஅருவி; கல் - கற்பாறை; மடங்கல் - சிங்கம்; மழை - மேகம்; சுரவா - தேவனே; குரவா - ஆசிரியனே.

திருநீ றிடாவுருத் தீண்டே னென்னும்
திருநீறு மெய்த்திரு முண்டத் திட்டுப்
பெருநீ லகண்டன் றிறங்கொண் டிவள்
பிதற்றிப் பெருந்தெ ருவே திரியும்
வருநீ ரருவி மகேந்தி ரப்பொன்
மலையின் மலைமக ளுக்க ருளும்
குருநீ யென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௰)

உற்றா யென் னுமுன்னை யன்றி மற்றொன்
றுணரே னென்னு முணர்வுகள் கலக்கப்
பெற்றாய வைந்தெ ழுத்தும் பிதற்றிப்
பிணிதீர வெண்ணீ றிடப்பெற்றே னென்னும்
சுற்றாய சோதி மகேந்தி ரஞ்சூழ
மனத்திருள் வாங்கிச் சூழாத நெஞ்சிற்
குற்றாயென் னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௧௧)

வேறா கவுள்ளத் துவகை விளைத்
தவனிச் சிவலோக வேத வென்றி
மாறா தழுவா யிரவரையு மெனையும்
மகிழ்ந் தாள வல்லா யென்னும்
ஆறூர் சிகர மகேந்தி ரத்துன்
அடியார் பிழைபொ றுப்பாய் மாதோர்
கூறா யென்னுங்குணக் குன்றே யென்னும்
குலாத்தில்லை யம்பலக் கூத்த னையே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

(௰) முண்டம் - நெற்றி; பொன் - அழகிய. (௧௧) பிதற்றி - இடையறாது ஜபித்து; உற்றாய் - பொருந்தினவனே. (௧௨) அவனி - பூமி; வென்றி - வெற்றி, மேம்பாடு; ஆறுஆர் - அருவியாறுகள் நிறைந்த.

## ச - கோயில் - இணங்கிலாவீசன்.

---

### பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

இணங்கிலா வீச னேசத் திருந்தசித் தத்தி னேற்கு
மணங்கொள்சீர்த் தில்லை வாணன் மணவடி யார்கள் வண்மைக்
குணங்களைக் கூறா வீறிற் கோறைவாய்ப் பீறற் பிண்டப்
பிணங்களைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (க)

எட்டுரு விரவி யென்னை யாண்டவ னீண்டு சோதி
விட்டிலங் கலங்கற் றில்லை வேந்தனைச் சேர்ந்தி லாத
துட்டரைத் தூர்த்த வார்த்தைத் தொழும்பரைப் பிழம்பு பேசும்
பிட்டரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (உ)

அருட்டிரட் செம்பொற் சோதி யம்பலத் தாடு கின்ற
இருட்டிரட் கண்டத் தெம்மா னின்பருக் கன்பு செய்யா
அரட்டரை யரட்டுப் பேசு மழுக்கரைக் கழுக்க ளாய
பிரட்டரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௩)

துணுக்கென வயனு மாலுந் தொடர்வருஞ் சுடரா யிப்பால்
அணுக்கருக் கணிய செம்பொ னம்பலத் தாடிக் கல்லாச்
சிணுக்கரைச் செத்தற் கொத்தைச் சிதம்பரைச் சீத்தை யூத்தைப்
பிணுக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (ச)

திசைக்குமிக் குலவு சீர்த்தித் தில்லைக்கூத் துகந்து தீய
நசிக்கவெண் ணீற தாடு நமர்களை நணுகா நாய்கள்

---

(க) இணங்கு - ஒப்பு; வண்மைக்குணம் - உதாரகுணம்; வீறு இல் - மேன்மையில்லாத; பீறல் பிண்டம் - தொளைகளையுடைய உடம்பு. (உ) எட்டு உரு - அஷ்ட மூர்த்தம்; ஈண்டு - மிகுந்த; விட்டு - வீசி; பிழம்பு - இடம்பம்; பிட்டர் - பிரஷ்டர். (௩) இருள் திரள் - இருள்திரண்ட; அரட்டர் - காட்டில் வசிக்கின்றவர்கள்; அரட்டுப்பேசும் - அச்சமுண்டாகும்படி பேசும்; பிரட்டர் - பிரஷ்டர். (ச) அணுக்கருக்கு - அணுகினவருக்கு; சிணுக்கர், சிதம்பர், பிணுக்கர் ஆகிய இவர்கள் கீழ்மக்கள் (நீசர்). (ரு) அசிக்க - வெறுக்கத்தக்க; ஆரியங்கள் ஓதும் - பெருமைகள் பேசும்; ஆதரை - அறி

அசிக்கவா ரியங்க ளோது மாதரைப் பேத வாதப்
பிசுக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௫)

ஆடர வாட வாடு மம்பலத் தமிர்தே யென்னும்
சேடர்சே வடிகள் சூடத் திருவிலா வுருவி னரைச்
சாடரைச் சாட்கை மோடச் சழக்கரைப் பிழக்கப் பிட்கப்
பேடரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௬)

உருக்கியென் னுள்ளத் துள்ளே யூறலந் தேறன் மாறாத்
திருக்குறிப் பருளுந் தில்லைச் செல்வன்பாற் செல்லுஞ் செல்வில்
அருக்கரை யள்ளல் வாய கள்ளரை யவியாப் பாவப்
பெருக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௭)

செக்கரொத் திரவி நூறா யிரத்திர ளொப்பாந் தில்லைச்
சொக்கரம் பலவ ரென்னுஞ் சுருதியைக் கருத மாட்டா
எக்கரைக் குண்ட மிண்ட வெத்தரைப் புத்த ராதிப்
பொக்கரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௮)

எச்சனைத் தலையைக் கொண்டு செண்டடித் திடப மேறி
அச்சங்கொண் டமர ரோட நின்றவம் பலவற் கல்லாக்
கச்சரைக் கல்லாப் பொல்லாக் கயவரைப் பசுநூல் கற்கும்
பிச்சரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௯)

விண்ணவர் மகுட கோடி மிடைந்தொளிர் மணிகள் வீசும்
அண்ணலம் பலவன் கொற்ற வரசனுக் காசை யில்லாத்
தெண்ணரைத் தெருளா வுள்ளத் திருளரைத் திட்டைமுட்டைப்
பெண்ணரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (௰)

---

விலிகளை; பிசுக்கரை - பொய்யர்களை. (௬) சேடர் - அடியார்; திருஇல்லா - பாக்கியமில்லாத; சாடர், சழக்கர், பேடர் ஆகிய இவர்கள் கொடுமை செய்கிறவர்கள். (௭) தேறல் - தேன்; அருக்கரை - குறுகிய மனத்தையுடையவரை; பெருக்கரை - மிகுதியுடையவரை. (௮) செக்கர் - செவ்வானம், அந்திவானம்; எக்கரை - இறுமாப்புடையவரை; எத்தரை - ஏய்க்கிறவரை; பொக்கரை - பொய்யுடையவரை. (௯) கச்சரை - துணிவுடையவரை; கயவரை-கீழ்மக்களை; பசு நூல் - பசுக்களைப் பதியென்று கூறும் நூல்; பிச்சரை - பித்தரை. (௰) தெண்ணரை - தெளிவில்லாதவரை; திட்டைமுட்டைப்பெண்ணரை - வம்புகள் பேசும் பெண்தன்மையுடைய

சிறப்புடை யடியார் தில்லைச் செம்பொனம் பலவற் காளாம்
உறைப்புடை யடியார் கீழ்க்கீ ழுறைப்பர்சே வடிநீ றாடார்
இறப்பொடு பிறப்பி னுக்கே யினியராய் மீண்டு மீண்டும்
பிறப்பவரைக் காணா கண்வாய் பேசாதப் பேய்க ளோடே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## சேந்தனார் திருவிசைப்பா.

### க-திருவீழிமிழலை.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

ஏகநா யகனை யிமையவர்க் கரசை
என்னுயிர்க் கமுதினை யெதிரில்
போக நாயகனைப் புயல்வணற் கருளிப்
பொன்னெடுஞ் சிவிகையா வூர்ந்த
மேக நாயகனை மிகுதிரு வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்
யோக நாயகனை யன்றிமற் றொன்றும்
உண்டென வுணர்கிலேன் யானே. (க)

கற்றவர் விழுங்குங் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணை மாகடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்

---

வரை. (கக) உறைப்பு - மனவுறுதி; சேஅடிநீறு - சிறந்ததிருவருள் நீறு. (க) போக நாயகன் - ஆன்மாக்களுக்கும் போகங்களை யூட்டு வதில் முதன்மையானவன்; மேகநாயகன் - மேகம்போலும் கைம்மாறு கருதாது அருளைப் பொழிகின்ற நாயகன்; யோகநாயகன் - யோகங்களுக்குத் தலைவன் (பிரதமாசாரியன்). (உ) கற்றவர் - திரி யதார்த்த லக்ஷணங்களை உள்ள உள்ளவாறு உணர்ந்த உண்மையறி



செற்றவர் புரங்கள் செற்றவெஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளங்
குளிரவென் கண்குளிர்ந் தனவே. (உ)

மண்டலத் தொளியை விலக்கியா னுகர்ந்த
மருந்தையென் மாறிலா மணியைப்
பண்டல ரயன்மாற் கரிதுமா யடியார்க்
கெளியதோர் பவளமால் வரையை
விண்டலர் மலர்வாய் வேரிவார் பொழில்சூழ்
திருவீழி மிழலையூ ராளும்
கொண்டலங் கண்டத் தெங்குரு மணியைக்
குறுகவல் வினைகுறு காவே. (ங)

தன்னடி நிழற்கீ ழென்னையுந் தகைத்த
சசிகுலா மவுலியைத் தானே
என்னிடைக் கமல மூன்றினுட் டோன்றி
எழுஞ்செழுஞ் சுடரினை யருள்சேர்
மின்னெடுங் கடலுள் வெள்ளத்தை வீழி
மிழலையுள் விளங்கு வெண்பளிங்கின்
பொன்னடிக் கடிமை புக்கினிப்போக
விடுவனோ பூண்டுகொண் டேனே. (ச)

இத்தெய்வ நெறிநன் றென்றிருண் மாயப்
பிறப்பறு விந்திர சாலப்
பொய்த்தெய்வ நெறிநான் புகாவகை புரிந்த
புராணசிந் தாமணி வைத்த
மெய்த்தெய்வ நெறிநான் மறையவர் வீழி
மிழலைவிண் ணிழிசெழுங் கோயில்

---

வுடையோர்; மற்றவர் - கற்றவரல்லாதவர். (ங) மண்டலத்து ஒளியை - பிரபஞ்ச வாசனையை; மாறு இல்லா - ஒப்பில்லா; மால் - பெரிய; விண்டு - வெடித்து; வேரி - தேன்; கொண்டல் - மேகம். (ச) தகைத்த - தடுத்தாட்கொண்ட; சசிகுலாம்மவுலி - சந்திரன் விளங்குகிற திருமுடி, சந்திரசேகரன்; கமலம் மூன்று - இருதயம், நேத்திரம், துவாதசாந்தம் ஆகிய மூன்று கமலங்கள். (ரு) புராணம் -

அத்தெய்வ நெறியிற் சிவமலா தவமும்
அறிவரோ வறிவுடை யோரே. (௫)

அக்கனா வனைய செல்வமே சிந்தித்
தைவரோ டழுந்தி யானவமே
புக்கிடா வண்ணங் காத்தெனை யாண்ட
புனிதனை வனிதைபா கனையெண்
திக்கெலாங் குலவும் புகழ்த்திரு வீழி
மிழலையான் றிருவடி நிழற்கீழ்ப்
புக்குநிற் பவர்தம் பொன்னடிக் கமலப்
பொடியணிந் தடிமைபூண் டேனே. (௬)

கங்கைநீ ரரிசிற் கரையிரு மருங்கும்
கமழ்பொழி றழுவிய கழனித்
திங்கணேர் தீண்ட நீண்டமா ளிகைசூழ்
மாடநீ டுயர்திரு வீழித்
தங்குசீர்ச் செல்வத் தெய்வத்தான் றோன்றி
நம்பியைத் தன்பெருஞ் சோதி
மங்கையோர் பாகத் தென்னரு மருந்தை
வருந்திநான் மறப்பனோ வினியே. (௭)

ஆயிரங் கமல ஞாயிறு யிரமுக்
கண்முக கரசர ணத்தோன்
பாயிருங் கங்கை பனிநிலாக் கரந்த
படர்சடை மின்னுபொன் முடியோன்
வேயிருந் தோளி யுமைமண வாளன்
விரும்பிய மிழிலைசூழ் பொழிலைப்
போயிருந் தேயும் போற்றுவார் கழல்கள்
போற்றுவார் புரந்தரா திகளே. (அ)

---

பழைமை; அவமும் - அவமாய தேவரையும். (௬) அ கனா அனைய - அந்தச் சொப்பனத்தை நிகர்த்த; ஐவர் - ஐம்பொறிகள்; வனிதை - பெண், உமாதேவி; பொடி - துகள். (௭) அரிசில்கரை - அரிசில் என்னும் நதியின் கரை; தான் தோன்றி நம்பியை-தானேயுண்டான சுயம்புமூர்த்தியை. (அ) அரக்கன் - இராவணன்; கரி-கயமுகாசுரன்;

எண்ணில்பல் கோடி சேவடி முடிகள்
எண்ணில்பல் கோடிதிண் டோள்கள்
எண்ணில்பல் கோடி திருவுரு நாமம்
ஏர்கொண்முக் கண்முக மியல்பும்
எண்ணில்பல் கோடி யெல்லைக்கப் பாலாய்
நின்றைஞ்ஞூற் றந்தண ரேத்தும்
எண்ணில்பல் கோடி குணத்தரோர் வீழி
இவர்நம்மை யாளுடை யாரே. (க)

தக்கன்வெங் கதிரோன் சலந்தரன் பிரமன்
சந்திர னிந்திர னெச்சன்
மிக்கநெஞ் சரக்கன் புரங்கரி கருடன்
மறலிவே ளிவர் மிகை செகுத்தோன்
திக்கெலா நிறைந்த புகழ்த்திரு வீழி
மிழலையான் றிருவடி நிழற்கீழ்ப்
புக்கிருந் தவர்தம் பொன்னடிக் கமலப்
பொடியணிந் தடிமைபூண் டேனே. (ம)

உளங்கொள மதுரக் கதிர்விரித் துயிர்மேல்
அருள்சொரி தருமுமா பதியை
வளங்கிளர் நதியு மதியமுஞ் சூடி
மழவிடை மேல்வரு வானை
விளங்கொளி வீழி மிழலைவேந் தேயென்
றுந்தனைச் சேந்தன்றா தையையான்
களங்கொள வழைத்தாற் பிழைக்குமோ வடியேன்
கைக்கொண்ட கனககற் பகமே. (கக)

பாடலங் காரப் பரிசில்கா சருளிப்
பழுத்தசெந் தமிழ்மலர் சூடி
நீடலங் காரத் தெம்பெரு மக்கள்
நெஞ்சினு ணிறைந்துநின் றானை

---

மறலி - எமன்; வேள் - மன்மதன்; மிகை - வரம்பு கடந்த நடக்கை; செகுத்தோன்-அழித்தவன். (கக) சேந்தன் - முருகன்; ஆந்தனை - ஆமளவும்; கலம்கொள் - வாய்நிறைய; பிழைக்குமோ - தவறுமோ.

வேடலங் காரக் கோலத்தி னமுதைத்
திருவிழி மிழலையூ ராளும்
கேடிலங் கீர்த்திக் கனககற் பகத்தைக்
கெழுமுதற் கெவ்விடத் தேனே. (கஉ)

திருச்சிற்லம்பலம்;

## உ - திருவாவடுதுறை.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யாத வேதியர் சாந்தைமெய்ப் புகழா ளராயிரம் பூசுரர்
மெய்யே திருப்பணி செய்சீர் மிகுகா விரிக்கரை மேய
ஐயா திருவா வடுதுறை யமுதே யென்றுன்னை யழைத்தக்கால்
மையார் தடங்கண்மடந்தைக்கொன்றருளாதொழிவது மாதிமையே.

மாதி மணங்கம ழும்பொழின் மணிமாட மாளிகை வீதிசூழ்
சோதி மதிலணி சாந்தைமெய்ச் சுருதி விதிவழி யோர்தொழும்
ஆதி யமரர்பு ராணனு மணியா வடுதுறை நம்பிநின்ற
நீதி யறிகிலள் பொன்னெடுந் திண்டோள் புணரநி னைக்குமே. (உ)

நினைக்கு நிரந்தர னேயென்னு நிலாக்கோலச் செஞ்சடைக்கங்கைநீர்
நனைக்கு நலங்கிளர் கொன்றைமே னயம்பேசு நன்னுத னங்கைமீர்
மனக்கின்ப வெள்ள மலைமகண் மணவாள நம்பிவண் சாந்தையூர்
தனக்கின்ப னாவடு தண்டுறைத் தருணேந்து சேகர னென்னுமே.

(கஉ) காசு-பொற்காசு; பெருமக்கள்-பெரியோர் (திருத்தொண்டர்); வேடு - வேடுவன்; கெழுமுதற்கு - அடைவதற்கு.

(க) சாந்தை - சாந்தையூர்; பூசுரர் - வேதியர்; மடந்தைக்கு - என் மகளுக்கு; ஒன்று - ஒரு வார்த்தை; மாதிமையே - அழகோ. (உ) மாதி - அழகு; சுருதி விதிவழியோர் - வேதம் விதித்த நெறியில் நிற்போர், வேதியர்; அமரர் புராணன் - தேவர்களுக்கு முன்னோன் (பழையோன்). (ஙு) நினைக்கும் - நினைப்பாள்; நிரந்தரனே - என்றுமுள்ளவனே; நிலாக்கோலம் - சந்திரிகையின் அழகு; நலம் - அழகு; நயம் - விருப்பம்; தருண இந்துசேகரன் - இளஞ்சந்திரனைத்

தருணேந்துசேகரனேயெனுந்தடம்பொன்னித்தென்கரைச்சாந்தை யூர்ப், பொருணேர்ந்தசிந்தையவர்தொழப்புகழ்செல்வமல்குபொற் கோயிலுள், அருணேர்ந்தமர்திருவாவடுதுறையாண்டவாண்டகை யம்மானே, தெருணேர்ந்தசித்தம்வலியவாதிலகநுதலிதிறத்திலே.

திலக நுதலுமை நங்கைக்குந் திருவா வடுதுறை நம்பிக்கும், குலக வடியவர்க் கென்னையாட் கொடுத்தாண்டுகொண்டகுணக்கடல், அல தொன்றறிகின்றிலேமெனுமணியும் வெண்ணீறஞ்செழுத்தால், வல தொன்றிலளிதற்கென்செய்கேன்வயலந்தண் சாந்தையர்வேந்தனே.

வேந்தன் வளைத்தது மேருவில் லரவுநாண்வெங்கணைசெங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம் பொடியாட வேதப் புரவித்தேர்
சாந்தை முதலயன் சாரதி கதியரு ளென்னுமித் தையலை
ஆந்தண் டிருவா வடுதுறை யான்செய்கை யாரறிகிற்பாரே. (சு)

கிற்போ மெனத்தக்கன் வேள்விபுக் கெடுத்தோடிக் கெட்டவத்தேவர் கள், சொற்போலுமெய்ப்பயன்பாவிகாளென்சொல்லிச் சொல்லுமித் தூமொழி, கற்போன்மனங்கனிவித்தவெங்கருணாலயாவந்திடாயெ ன்றால், பெற்போபெருந்திருவாவடுதுறையாளி பேசாதொழிவதே.

ஒழிவொன் றிலாவுண்மை வண்ணமு முலப்பில ளூறின்ப வெள்ள மும், மொழிவொன் றிலாப்பொன்னித் தீர்த்தமு முனிகோடி கோ டியா மூர்த்தியும், அழிவொன் றிலாச்செல்வச் சாந்தையூரணியாவடு துறையாடினாள், இழிவொன் றிலாவகை யெய்திநின் றிறுமாக்கு மென்னிள மானனே. (அ)

---

தரித்த திருமுடியை யுடையவன். (ச) பொன்னி - காவிரிநதி; பொருள்நேர்ந்த - மெய்ப்பொருள் சேர்ந்த; அருள்நேர்ந்து - அரு ளோடுகூடி; வலியவா-வலிதாயிருந்தவிதம்யாது; நுதலிதிறத்திலே- நெற்றியையுடையவளாகிய என் பெண் விஷயத்திலே. (ரு) குலக அடியவர் - கூட்டமாகிய தொண்டர்; ஒன்று - வேறொன்று; வல் லது - செய்யவல்லது. (சு) கணை - அம்பு; போந்த - உண்டாகிய. (எ) கிற்போம் - வல்லோம்; எடுத்து ஓடிகெட்ட - ஓட்டெடுத்து அழிந்த; சொல் - புகழ்; மெய்ப்பயன் - உடலின்பயன்; கருணாலயா- கருணைக்கு இருப்பிடமாயுள்ளவனே; பெற்போ - அழகோ. (அ) உலப்பிலள் - கெடுதலில்லாதவள்; முனி மூர்த்தியும் - முனிவருவங்

மானேர் கலைவளை யுங்கவர்ந் துளங்கொள்ளை கொள்ளவழக்குண்டே
தேனே யமுதேயென் சித்தமே சிவலோக நாயகச் செல்வமே
யானே யலம்புபு னற்பொன்னி யணியா வடுதுறை யன்பர்தங்
கோனேநின் மெய்யடி யார்மனக் கருத்தை முடித்திடுங் குன்றமே.

குன்றேந்தி கோகன கத்தய னறியா நெறியென்னைக் கூட்டினாய்
என்றேங்கி யேங்கிய ழைக்கின்றா ளிளவல்லி யெல்லைக டந்தனள்
அன்றேய லம்புபு னற்பொன்னி யணியா வடுதுறை யாடினாள்
நன்றே யிவணம் பரமல்ல ணவலோக நாயகன் பாலளே. (ய)

பாலு மமுதமுந் தேனுமா யானந்தந் தந்துள்ளே பாலிப்பான்
போலுமெ னாருயிர்ப் போகமாம் புரகால காமபு ராந்தகன்
சேலுங் கயலுந் திளைக்குநீர்த் திருவா வடுதுறை வேந்தனோ
டாலு மதற்கே முதலுமா மறிந்தோ மரிவைபொய் யாததே. (யச)

திருச்சிற்றம்பலம்.



---

களும்; இளமான்அனே - இளமான் போல்பவளாகிய பெண். (கூ) மான் - பெண்; வழக்கு உண்டே - நியாயமுண்டோ; ஆனே - இடபமே; அலம்புபுனல் - சப்திக்கின்றநீர். (ய) கோகனகத்து - தாமரைமலரை ஆசனமாகவுடைய; இளவல்லி - இளங்கொடி போல்பவளாகிய பெண்; ஆடினாள் - அடைந்தாள்; நவம்-நூதனம். (கக) புரகாலகாம புராந்தகன் - முப்புரம், யமன், காமன் ஆகிய இவர்களுக்கு யமன்; ஆலுமதற்கே - விளையாடுதற்கே; முதலுமாம்-முந்துவாளாம்; அரிவை - பெண்.

## ௩ - திருவிடைக்கழி.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மாலுலா மனந்தந் தென்கையிற் சங்கம்
வவ்வினான் மலைமகண் மதலை
மேலுலாந் தேவர் குலமுழு தாளும்
குமரவேள் வள்ளிதன் மணாளன்
சேலுலாங் கழனித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேலுலாந் தடக்கை வேந்தனென் சேந்தன்
என்னுமென் மெல்லிய லிவளே. (௧)

இவளைவா ரிளமென் கொங்கைபீர் பொங்க
எழில்கவர்ந் தானிளங் காளை
கவளமா கரிமேற் கவரிசூழ் குடைக்கீழ்க்
கனகக்குன் றெனவருங் கள்வன்
திவளமா ளிகைசூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குவளைமா மலர்க்க ணங்கையா னைக்குங்
குழகனல் லழகனங் கோவே. (உ)

கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள்சூழ் கோழிவெல் கொடியோன்

---

(௧) மால் உலாம் - ஆசையுடைய; மனம்தந்து - மனத்தைக் கொடுத்து; சங்கம் - சங்கவளையல்; மேல் உலாம் - விண்ணுலகத்தில் வாழ்கின்ற; வேல் உலாம் - வேலேந்திய; சேந்தன் - (சேந்து - சிவப்பு) சிவந்த அக்கினி வடிவன், செந்நிறமுடையோன், முருகன்; மெல்லியல் - மெல்லிய சாயையுடையவள். (உ) வார்இள - கச்சணிந்த இளமை பொருந்திய; பீர் - பசலைநிறம்; மாகரி - பெரியயானை; திவள - விளங்க; நங்கை யானைக்கும் - பெண்ணாகிய தெய்வயானைக்கும்; குழகன் - மணாளன். (௩) பவளம் குழ - பவளம் போன்ற இளமையாகிய; காவல் நற்சேனை - சேனாபதி; தேவின் - தெய்வங்களுக்கு; தூவி - இறகு; பீலி - தோகை.

காவனற் சேனை யென்னக்காப் பவனென்
பொன்னைமே கலைகவர் வானே
தேவினற் றலைவன் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தூவிநற் பீலி மாமயி லூருஞ்
சுப்பிர மண்ணியன் றானே. (௩)

தானமர் பொருது வானவர் சேனை
மடியச்சூர் மார்பினைத் தடிந்தோன்
மானமர் தடக்கை வள்ளறன் பிள்ளை
மறைநிறை சட்டறம் வளரத்
தேனமர் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கோனமர் கூத்தன் குலவிளங் களிறென்
கொடிக்கிடர் பயப்பதுங் குணமே. (௪)

குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை
படுமிடர் குறிக்கொளா தழகோ
மணமணி மறையோர் வானவர் வையம்
உய்யமற் றடியனேன் வாழத்
திணமணி மாடத் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கணமணி பொருநீர்க் கங்கைதன் சிறுவன்
கணபதி பின்னிளங் கிளையே. (௫)

கிளையிளஞ் சேயக் கிரிதனைக் கீண்ட
வாண்டகை கேடில்வேற் செல்வன்
வளையிளம் பிறைச்செஞ் சடையரன் மதலை
கார்நிற மாறிரு மருகன்

(௪) அமர் பொருது - போர்செய்து; தடிந்தோன் - பிளந்தவன்; மான் அமர் - மானேந்திய; சட்ட - செம்மையாகிய; தேன் - வண்டு; குலம் இளங்களிறு - மேன்மை பொருந்திய இளையயானை; குணமே - குணமோ. (௫) அணிகுருளை - அழகிய சிறுமி; மணம் அணி - மணத் திணலழகு பெற்ற; திண் அம் - உறுதியாகிய அழகிய; பொரும் - கொழிக்கின்ற. (௬) கிளை - அடியார்க்கு உறவாயிருப்பவன்; அக்கிரி

திளையிளம பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
முளையிளங் களிறென் மொய்குழற் சிறுமிக்
கருளுங்கொன் முருகவேள் பரிந்தே. (சு)

பரிந்தசெஞ் சுடரோ பரிதியோ மின்னோ
பவளத்தின் குழவியோ பசும்பொன்
சொரிந்தசிந் தூரமோ தூமணித் திரளோ
சுந்தரத் தரசிது வென்னத்
தெரிந்தவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வரிந்தவெஞ் சிலைக்கை மைந்தனை யஞ்சொன்
மையல்கொண் டையுறும் வகையே. (எ)

வகைமிகு மசுரர் மாளவந் துழிஞை
வானமர் விளைத்ததா ளாளன்
புகைமிகு மனலிற் புரம்பொடி படுத்த
பொன்மலை வில்லிதன் புதல்வன்
திகைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தொகைமிகு நாமத் தவன்றிரு வடிக்கென்
துடியிடை மடவொருடங் கினளே. (அ)

தொடங்கினண் மடலென் றணிமுடித் தொங்கல்
புறவித ழாகிலு மருளான்
இடங்கொளக் குறத்தி திறத்திலு மிறைவன்
மறத்தொழில் வார்த்தையு முடையன்
திடங்கொள்வை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற

---

தனைக் கீண்ட - அந்தக் கிரவுஞ்சமலையைப் பிளந்த; திளை - நிறைந்த. (எ) பரிந்த - இரக்கங்கொண்ட; பரிதி - சூரியன்; அம் சொல் - அழகிய சொல்லையுடையவளாகிய பெண். (அ) வகை - வகுப்பு; உழிஞை - உழிஞைமாலை; தாளாளன் - முயற்சியையுடையோன்; மிகுகீர்த்தி - கடந்தபுகழ்; மடல் - மடலேற. (கூ) தொங்கல் - மாலை; மறத்தொழில் - கோபத்தொழில்; பன்னிரு நயனம் -

மடங்கலை மலரும் பன்னிரு நயனத்
தறுமுகத் தமுதினை மருண்டே. (௯)

மருண்டுறை கோயின் மல்குநன் குன்றப்
பொழில்வளர் மகிழ்திருப் பிடவூர்
வெருண்டமான் விழியார்க் கருள்செயா விடுமே
விடலையே யெவர்க்குமெய் யன்பர்
தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குருண்டபூங் குஞ்சிப் பிறைச்சடை முடிமுக்
கண்ணுடைக் கோமளக் கொழுந்தே. (௰)

கொழுந்திரள் வாயார் தாய்மொழி யாகத்
தூய்மொழி யமரர்கோ மகனைச்
செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்
வாய்ந்தசொல் லிவைசுவா மியையே
செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
எழுங்கதி ரொளியை யேத்துவார் கேட்பார்
இடர்கெடு மாலுலா மனமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.



மலர்ந்த பன்னிரண்டு கண்கள். (௰) மல்கும் - நிறைந்த; குருண்ட - சுருண்ட; குஞ்சி - மயிர்; விடலையே - காளைப்பருவமுடையவனே; கோமளக் கொழுந்தே - முருகவேளே. (௧௧) கோமகனை - இறைவனை; சுவாமியை - கந்தசுவாமியை, சுப்பிரமணியரை; மால்உலாம் மனம் - மயக்கத்தையுடைய மனம்.

# கருவூர்த்தேவர் திருவிசைப்பா.

## க - கோயில்.

### பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

கணம்விரி குடுமிச் செம்மணிக் கவைநாக்
கறையுணற் கட்செவிப் பகுவாய்ப்
பணம்விரி துத்திப் பொறிகொள்வெள் ளெயிற்றுப்
பாம்பணி பரமர்தங் கோயில்
மணம்விரி தருதே மாம்பொழின் மொழுப்பில்
மழைதவழ் வளரிளங் கமுகம்
திணர்நிரை யரும்பு பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே. (க)

இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்தும்
ஏழையேற் கென்னுடன் பிறந்த
ஐவரும் பகையே யார்துணை யென்றால்
அஞ்சலென் றருள்செய்வான் கோயில்
கைவரும் பழனங் குழைத்தசெஞ் சாலிக்
கடைசியர் களைதரு நீலம்
செய்வரம் பரும்பு பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே. (உ)

---

(க) குடுமி - உச்சி; கவைநா - பிளவுபட்ட நாவு; கறை அணல்-விடம்பொருந்திய மேல்வாய்; பகுவாய் - பிளந்தவாய்; பணம் விரி - விரிந்த படம்; எயிறு - பல்; விரிதரு - பரவிய; மொழுப்பில் - உச்சியில்; மழை - மேகம்; திணர் - தாறுகள்; நிரை அரும்பு - வரிசையாய் அரும்புகிற. (உ) பௌவம் - கடல்; ஐவர் - ஐம்பொறிகள்; கைவரும் - பழகிய; பழனம் - வயல்; குழைத்த - செழித்த; செய் - கழனி; வரம்பு-வரப்பு. (ங) மணி முருக்கு அலர-அழகிய முருக்கம்

தாயினே ரிரங்குந் தலைவவோ வென்றும்
 தமியனேன் றுணைவவோ வென்றும்
நாயினே னிருந்து புலம்பினு லிரங்கி
 நலம்புரி பரமர்தங் கோயில்
வாயினே ரரும்பு மணிமுறுக் கலர
 வளரிளஞ் சோலைமாந் தளிர்செந்
தீயினே ரரும்பு பெரும்பற்றப் புலியூர்த்
 திருவளர் திருச்சிற்றம் பலமே. (ங)

துந்துபி குழல்யாழ் மொந்தைவா ளியம்பத்
 தொடர்ந்திரு டியர்கணந் துதிப்ப
நந்திகை முழவ முகிலென முழங்க
 நடம்புரி பரமர்தங் கோயில்
அந்தியின் மறைநான் காரணம் பொதிந்த
 அரும்பெறன் மறைப்பொருண் மறையோர்
சிந்தையி லரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
 திருவளர் திருச்சிற்றம் பலமே. (ச)

கண்பனி யரும்பக் கைகண்மொட் டித்தென்
 களைகணே யோலமென் றோலிட்
டென்பெலா முருகு மன்பர்தங் கூட்டத்
 தென்னையும் புணர்ப்பவன் கோயில்
பண்பல தெளிதேன் பாடிநின் றாடப்
 பனிமலர்ச் சோலைசூழ் மொழுப்பில்
செண்பக மரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
 திருவளர் திருச்சிற்றம் பலமே. (ரு)

நெஞ்சிட ரகல வகம்புகுந் தொடுங்கும்
 நிலைமையோ டிருள்கிழித் தெழுந்த

---

பூமலர. (ச) மொந்தை - ஓர் கட்பறை; ஆரணம் பொதிந்த-ஆரணங்களோடு கூடின (ஆரணம்-வேதத்தின் ஞானபாகம்); அரும்பும்-விட்டு நீங்காதிருக்கும். (ரு) மொட்டித்து - குவிந்து, அஞ்சலிசெய்து; களைகணே - ஆதரவே; தெளிதேன் - தேர்ந்த வண்டுகள்; ஆட - விளையாட. (சு) வெம்சுடர் - வெப்பமாகிய சூரிய கிரணங்கள்; சுடர்வ-

வெஞ்சுடர் சுடர்வ போன்றொலி துளும்பும்
விரிசடை யடிகடங் கோயில்
அஞ்சுடர்ப் புரிசை யாழிசூழ் வட்டத்
தகம்படி மணிநிரை பரந்த
செஞ்சுட ரரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே. (சு)

பூத்திர ளுருவஞ் செங்கதிர் விரியாப்
புந்தியில் வந்தமால் விடையோன்
தூத்திரட் பளிங்கிற் றோன்றிய தோற்றம்
தோன்றநின் றவன்வளர் கோயில்
நாத்திரண் மறையோர்ந் தோமகுண் டத்து
நறுநெயான் மறையவர் வளர்த்த
தீத்திர ளரும்பு பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே. (எ)

சீர்த்ததிண் புவன முழுவது மேனைத்
திசைகளோ டண்டங்க ளனைத்தும்
போர்த்ததம் பெருமை சிறுமைபுக் கொடுங்கும்
புணர்ப்புடை யடிகடங் கோயில்
ஆர்த்துவந் தமரித் தமரரும் பிறரும்
அலைகட லிடுதிரைப் புனிதத்
தீர்த்தநீ ரரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
திருவளர் திருச்சிற்றம் பலமே. (அ)

பின்னுசெஞ் சடையும் பிறைதவழ் மொழுப்பும்
பெரியதங் கருணையுங் காட்டி
அன்னதேன் கலந்தின் னமுதுகந் தளித்தாங்
கருள்புரி பரமர்தங் கோயில்

---

பிரகாசிப்பது; அம்சுடர் - அழகிய ஒளி; புரிசை - மதில்; பரந்த நிறைந்த; அரும்பும் - வீசும். (எ) கதிர் - ஒளி; ஓர்ந்து - அறிந்து. (அ) சீர்த்த - சிறப்புப் பொருந்திய; அமரித்து - பொருந்தி. (கூ) மொழுப்பு - திருமுடி; பொழில் அகம் - சோலைகளிடத்து; பொறி-

புன்னைதேன் சொரியும் பொழிலகங் குடைந்து
 பொறிவரி வண்டினம் பாடும்
தென்னதே னரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
 திருவளர் திருச்சிற்றம் பலமே. (கூ)

உம்பர்நா டிம்பர் விளங்கியாங் கெங்கும்
 ஒளிவளர் திருமணிச் சுடர்கான்
றெம்பிரா னடஞ்செய் சூழலங் கெல்லாம்
 இருட்பிழம் பறவெறி கோயில்
வம்புலாங் கோயில் கோபுரங் கூடம்
 வளர்நிலை மாடமா ளிகைகள்
செம்பொனா லரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
 திருவளர் திருச்சிற்றம் பலமே. (ய)

இருந்திரைத் தரளப் பரவைசூ ழகலத்
 தெண்ணிலங் கண்ணில்புன் மாக்கள்
திருந்துயிர்ப் பருவத் தறிவுறு கருவூர்த்
 துறைவளர் தீந்தமிழ் மாலை
பொருந்தருங் கருணைப் பரமர்தங் கோயில்
 பொழிலகங் குடைந்துவண் டுறங்கச்
செருந்திநின் றரும்பும் பெரும்பற்றப் புலியூர்த்
 திருவளர் திருச்சிற்றம் பலமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

புள்ளி; கீற்று - வரி; தென்ன-அழகுடைய. (ய) கான்று-உமிழ்ந்து; சூழல் அங்கு எல்லாம் - இடங்களெல்லாம்; பிழம்பு - கூட்டம்; வம்பு உலாம் - புதுமை பொருந்திய; அரும்பும் - செய்யப்பட்ட. (கக) தரளம் - முத்து; அகலத்து - உலகில்; கண் - அறிவு; பொருந்து அரு- பெறுதற்கரிய; குடைந்து - கிண்டி; செருந்தி - செருந்திமரங்கள்.

## உ - திருக்களந்தையாதித்தேச்சரம்.

### பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

கலைகடம் பொருளு மறிவுமா யென்னைக்
கற்பினிற் பெற்றெடுத் தெனக்கே
முலைகடந் தருளுந் தாயினு நல்ல
முக்கணு னுறைவிடம் போலும்
மலைகுடைந் தனைய நெடுநிலை மாடம்
மருங்கெலா மறையவர் முறையோத்
தலைகடன் முழங்கு மந்தணீர்க் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (க)

சந்தன களபந் துதைந்தநன் மேனித்
தவளவெண் பொடிமுழு தாடும்
செந்தழ லுருவிற் பொலிந்துநோக் குடைய
திருநுத லவர்க்கிடம் போலும்
இந்தன விலங்க லெறிபுனந் தீப்பட்
டெரிவதொத் தெழுநிலை மாடம்
அந்தண ரழலோம் பலைபுனற் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (உ)

கரியரே யிடந்தான் செய்யரே யொருபால்
கழுத்திலோர் தனிவடஞ் சேர்த்தி
முரிவரே முனிவர் தம்மொடா னிழற்கீழ்
முறைதெரிந் தோருடம் பினராம்
இருவரே முக்க ணாற்பெருந் தடந்தோள்
இறைவரே மறைகளுந் தேட
அரியரே யாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (௩)

(க) கற்பினில் - கற்பு நெறியால்; மருங்கு - இடங்கள்; ஒத்து - வேதங்கள்; களந்தை - களத்தூர். (உ) துதைந்த - பூசப்பட்ட; நோக்கு - கண்; இந்தனம் - விறகு; விலங்கல் - மலை. (௩) முரிவர் -

பழையராந் தொண்டர்க் கெளியரே மிண்டர்க்
கரியரே பாவியேன் செய்யும்
பிழையெலாம் பொறுத்தென் பிணிபொறுத் தருளாப்
பிச்சரே நச்சரா மிளிரும்
குழையராய் வந்தென் குடிமுழு தாளுங்
குழகரே யொழுகுநீர்க் கங்கை
அழகரே யாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (௪)

பவளமே மகுடம் பவளமே திருவாய்
பவளமே திருவுடம் பதனில்
தவளமே களபந் தவளமே புரிநூல்
தவளமே முறுவலா டரவம்
துவளுமே கலையுந் துகிலுமே யொருபால்
துடியிடை யிடமருங் கொருத்தி
அவளுமே யாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (௫)

நீலமே கண்டம் பவளமே திருவாய்
நித்தில நிரைத்திலங் கினவே
போலுமே முறுவ னிறையவா னந்தம்
பொழியவே திருமுக மொருவர்
கோலமே யச்சோ வழகிதே யென்று
குழைவரே கண்டவ ருண்ட
தாலமே யாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (௬)

திக்கடா நினைந்து நெஞ்சிடிந் துருகுந்
திறத்தவர் புறத்திருந் தலச
மைக்கடா வனைய வென்னையாள் விரும்பி
மற்றொரு பிறவியிற் பிறந்து

விளங்குவர்; முறை - மௌனநிலை. (௪) மிண்டர் - துஷ்டர்; குழகர் - அழகர். (௫) களபம் - விபூதி; தவளமே - வெண்மையே; துவளுமே - தொங்குமே; துடி - உடுக்கை. (௬) முறுவல் - நகை; ஒரு

பொய்க்கடா வண்ணங் காத்தெனக் கருளே
புரியவும் வல்லரே யெல்லே
அக்கடா வாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (எ)

மெய்யரே மெய்யர்க் கிடுதிரு வான
விளக்கரே யெழுதுகோல் வளையாண்
மையரே வையம் பலிதிரிந் துறையும்
மயானரே யுளங்கலந் திருந்தும்
பொய்யரே பொய்யர்க் கடுத்தவான் பளிங்கின்
பொருள்வழி யிருள்கிழித் தெழுந்த
ஐயரே யாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (அ)

குமுதமே திருவாய் குவளையே களமும்
குழையதே யிருசெவி யொருபால்
விமலமே கலையு முடையரே சடைமேல்
மிளிருமே பொறிவரி நாகம்
கமலமே வதனங் கமலமே நயனம்
கனகமே திருவடி நிலைநீர்
அமலமே யாகி லவரிடங் களந்தை
அணிதிக ழாதித்தேச் சரமே. (கூ)

நீரணங் கசும்பு கழனிசூழ் களந்தை
நிறைபுக ழாதித்தேச் சரத்து
நாரணன் பரவுந் திருவடி நிலைமேல்
நலமலி கலைபயில் கருவூர்
ஆரண மொழிந்த பவளவாய் சுரந்த
அமுதமூ றியதமிழ் மாலை

---

வர்கோலமே – ஒப்பற்றவரது அழகோ. (எ) திக்குஅடர் – திசைகளில் அடுத்து; மைகடா – கரிய எருமைக்கடா. (அ) கோல்வளை ஆண்மையாரே – அழகிய வளையலணிந்த உமாதேவியை யாள்பவரே. (கூ) குமுதம் – செவ்வல்லிமலர்; களம் – கண்டம்; பொறி – புள்ளி; வதனம் – முகம்; நீர் - குணம். (௰) அணங்கு அசும்பு - அழகாகச் சுரக்கிற; இருள் – அஞ்ஞானம்.

ஏரணங் கிருநான் கிரண்டிவை வல்லோர்
இருள்கிழித் தெழுந்தசிந் தையரே. (ம)

திருச்சிற்றம்பலம்.

---

## ங - திருக்கீழ்கோட்டூர்மணியம்பலம்.

---

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

தளிரொளி மணிப்பூம் பதஞ்சிலம் பலம்பச்
சடைவிரித் தலையெறி கங்கைத்
தெளிரொளி மணிநீர்த் திவலைமுத் தரும்பித்
திருமுக மலர்ந்துசொட் டட்டக்
கிளரொளி மணிவண் டறைபொழிற் பழனம்
கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர்
வளரொளி மணியம் பலத்துணின் றாடும்
மைந்தனென் மனங்கலந் தானே. (க)

தூண்டவெண் பிறையும் படர்சடை மொழுப்பும்
சுழியமுஞ் சூலமு நீல
கண்டமுங் குழையும் பவளவா யிதழும்
கண்ணுதற் றிலகமுங் காட்டிக்
கெண்டையுங் கயலு முகளுநீர்ப் பழனம்
கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர்
வண்டறை மணியம் பலத்துணின் றாடும்
மைந்தனென் மனங்கலந் தானே. (உ)

திருநுதல் விழியும் பவளவா யிதழும்
திலகமு முடையவன் சடைமேல்

---

(க) சொட்டு அட்ட - துளிசிந்த, கெழுவுகம்பலை - பொருந்திய ஆரவாரம்; மைந்தன் - திண்ணியன், அழியாதவன். (உ) மொழுப்பு - மகுடம்; சுழியம் - உச்சிக்கொண்டை; உகளும் - குதிக்

புரிதரு மலரின் றாதுநின் றூதப்
போய்வருந் தும்பிகா ளிங்கே
கிரிதவழ் முகிலின் கீழ்த் தவழ்மாடம்
கெழுவுகம் பலசெய்கீழ்க் கோட்டூர்
வருதிறன் மணியம் பலவனைக் கண்டென்
மனத்தையுங் கொண்டு போதுமினே. (௩)

தெள்ளுநீ றவனீ றென்னுடல் விரும்பும்
செவியவ னறிவுநூல் கேட்கும்
மெள்ளவே யவன்பேர் விளம்பும்வாய் கண்கள்
விமானமே நோக்கிவெவ் வுயிர்க்கும்
கிள்ளைபூம் பொதும்பிற் கொஞ்சிமாம் பொழிற்கே
கெழுவுகம் பலசெய்கீழ்க் கோட்டூர்
வள்ளலே மணியம் பலத்துணின் றாடும்
மைந்தனே யென்னுமென் மனனே. (௪)

தோழியாஞ் செய்த தொழிலெனெம் பெருமான்
துணைமலர்ச் சேவடி காண்பான்
ஊழிதோ றூழி யுணர்ந்துளங் கசிந்து
நெக்குநைந் துளங்கரைந் துருக்கும்
கேழலும் புள்ளு மாகிநின் றிருவர்
கெழுவுகம் பலசெய்கீழ்க் கோட்டூர்
வாழிய மணியம் பலவனைக் காண்பான்
மயங்கவு மாலொழி யோமே. (௫)

என்செய்கோந் தோழி தோழிநீ துணையாய்
இரவுபோம் பகல்வரு மாகில்
அஞ்சலோ வென்னா னாழியுந் திரையும்
அலமரு மாறுகண் டயர்வன்
கிஞ்சுக மணிவா யரிவையர் தெருவில்
கெழுவுகம் பலசெய்கீழ்க் கோட்டூர்

---

கும். (௪) நீறுஅவன் - நீற்றையுடையவன் ; வெவ்வுயிர்க்கும் - வெய்துயிர்க்கும். (௫) கேழல் - பன்றி; புள் - அன்னம்; மால் - ஆசை. (௬) அலமரும் - கலங்கும்; கிஞ்சுகம் - முருக்கமலர்; மஞ்சு -

மஞ்சணி மணியம் பலவவோ வென்று
மயங்குவன் மாலையம் பொழுதே. (௬)

தழைதவழ் மொழுப்புந் தவளநீற் றொளியும்
சங்கமுஞ் சகடையின் முழக்கும்
குழைதவழ் செவியுங் குளிர்சடைத் தெண்டும்
குண்டையுங் குழாங்கொடு தோன்றும்
கிழைதவழ் கனகம் பொழியுநீர்ப் பழனம்
கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர்
மழைதவழ் மணியம் பலத்துணின் றாடும்
மைந்தர்தம் வாழ்வுபோன் றதுவே. (௭)

தன்னக மழலைச் சிலம்பொடு சதங்கை
தமருகந் திருவடி திருநீ
றின்னகை மழலை கங்கைகோங் கிதழி
இளம்பிறை குழைவள ரிளமான்
கின்னர முழவ மழலையாழ் வீணை
கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர்
மன்னவன் மணியம் பலத்துணின் றாடும்
மைந்தனென் மனத்துள் வைத்தனனே. (௮)

யாதுநீ நினைவ தெவரையா முடைய
தேவர்களும் யாவையுந் தானாய்ப்
பாதுகை மழலைச் சிலம்பொடு புகுந்தென்
பணிமலர்க் கண்ணுணின் றகலான்
கேதகை நிழலைக் குருகென மருவிக்
கெண்டைகள் வெருவுகீழ்க் கோட்டூர்
மாதவன் மணியம் பலத்துணின் றாடு
மைந்தனென் மனம்புகுந் தானே. (௯)

---

அழகு. (எ) மொழுப்பு - சிகை ; சகடை - ஓர்வாச்சியம்; தெண்டும் - முடியும்; குண்டை - எருது; குழாம் கொடு - திரளாக; கிழைதவழ் - ஒளியுள்ள; மழை - மேகம். (அ) மழலை - மெல்லிய; இதழி-கொன்றை ; முழவம் - மத்தளம். (கூ) கேதகை - தாழம்பூ; மாதவன் - உமைபாகன். (ய) அங்கு - அந்திவானம்; அலங்கல் - அலை;

அந்திபோ லுருவு மந்தியிற் பிறைசேர்
அழகிய சடையும்வெண் ணீறும்
சிந்தையா னினையிற் சிந்தையுங் காணேன்
செய்வதென் றெளிபுன லலங்கல்
கெந்தியா வுகளுங் கெண்டைபுண் டரீகம்
கிழிக்குந்தண் பணைசெய்கீழ்க் கோட்டூர்
வந்தநாண் மணியம் பலத்துணின் றாடும்
மைந்தனே யறியுமென் மனமே. (ம)

கித்திநின் றாடு மரிவையர் தெருவில்
கெழுவுகம் பலைசெய்கீழ்க் கோட்டூர்
மத்தனை மணியம் பலத்துணின் றாடும்
மைந்தனை யாரணம் பிதற்றும்
பித்தனேன் மொழிந்த மணிநெடு மாலை
பெரியவர்க் ககலிரு விசும்பின்
முத்தியா மென்றே யுலகரேத் துவரேல்
முகமலர்ந் தெதிர்கொளுந் திருவே. (மக)

திருச்சிற்றம்பலம்.



புண்டரீகம் - தாமரை; வந்த – எழுந்தருளிய; நாள் – புதிய. (கக)
கித்தி – மகளிர் விளையாட்டிலொன்று.

## ௪ - திருமுகத்தலை.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

புவனநா யகனே யகவுயிர்க் கமுதே
பூரணா வாரணம் பொழியும்
பவளவாய் மணியே பணிசெய்வார்க் கிரங்கும்
பசுபதீ பன்னகா பரணா
அவனிஞா யிறுபோன் றருள்புரிந் தடியேன்
அகத்திலு முகத்தலை மூதூர்த்
தவளமா மணிப்பூங் கோயிலு மமர்ந்தாய்
தனியனேன் றனிமைநீங் குதற்கே. (௧)

புழுங்குதீ வினையேன் வினைகெடப் புகுந்து
புணர்பொரு ளுணர்வுநூல் வகையால்
வழங்குதேன் பொழியும் பவளவாய் முக்கண்
வளரொளி மணிநெடுங் குன்றே
முழங்குதீம் புனல்பாய்ந் திளவரா லுகளும்
முகத்தலை யகத்தமர்ந் தடியேன்
விழுங்குதீங் கனியா யினியவா னந்த
வெள்ளமா யுள்ளமா யினையே. (௨)

கன்னெகா வுள்ளக் கள்வனே னின்கட்
கசிவிலேன் கண்ணினீர் சொரியேன்
முன்னகா வொழியே னாயினுஞ் செழுநீர்
முகத்தலை யகத்தமர்ந் துறையும்
பன்னகா பரணா பவளவாய் மணியே
பாவியே னாவியுள் புகுந்த
தென்னகா ரணநீ யேழைநா யடியேற்
கெளிமையோ பெருமையா வதுவே. (௩)

(௨) உணர்வுநூல் - அறிவுநூல், வீட்டுநூல். (௩) கல்நெகா - உருகாதகல்; நகாஒழியேன் - சிரித்து நீங்கேன்; அமர்ந்து - விரும்பி.

கேடிலா மெய்ந்நூல் கெழுமியுஞ் செழுநீர்க்
 கிடையனா ருடையவென் னெஞ்சில்
பாடிலா மணியே மணியுமிழ்ந் தொளிரும்
 பரமனே பன்னகா பரணா
மேடெலாஞ் செந்நெற் பசுங்கதிர் விளைந்து
 மிகத்திகழ் முகத்தலை மூதூர்
நீடினா யெனினு முள்புகுந் தடியேன்
 நெஞ்செலா நிறைந்துநின் றாயே. (ச)

அக்கனா வனைய செல்வமே சிந்தித்
 தைவரோ டென்னொடும் விளைந்த
இக்கலா முழுது மொழியவந் துள்புக்
 கென்னையா ளாண்டநா யகனே
முக்கணா யகனே முழுதுல கிறைஞ்ச
 முகத்தலை யகத்தமர்ந் தடியேன்
பக்கலானந்த மிடையறா வண்ணம்
 பண்ணினாய் பவளவாய் மொழிந்தே. (ரு)

புனல்பட வுருகி மண்டழல் வெதும்பிப்
 பூம்புனல் பொதிந்துயி ரளிக்கும்
வினைபடு நிறைபோ னிறைந்தவே தகத்தென்
 மனநெக மகிழ்ந்தபே ரொளியே
முனைபடு மதின்மூன் றெரித்தநா யகனே
 முகத்தலை யகத்தமர்ந் தடியேன்
வினைபடு முடனீ புகுந்துநின் றமையால்
 விழுமிய விமானமா யினதே. (சு)

விரியுநீ ராலக் கருமையுஞ் சாந்தின்
 வெண்மையுஞ் செந்நிறத் தொளியும்

---

(ச) கெழுமியும் - பழகியும்; கிடைஅனார் உடைய - சடை (தக்கை) போன்ற; பாடு - அழிவு; மேடு - மேட்டுநிலங்கள். (ரு) இ கலாம் - இந்தக் கலகம். (சு) மண்டு - அதிகம்; நிறை - தராசு; வேதகத்து - வேறுபாட்டினால்; முனைபடு - முனைந்துவந்த; வினைபடும் - வினையினாலெடுத்த. (எ) விரியுநீர் ஆலம் - கடல் நீரிற் பிறந்த ஆலகாலம்;

கரியுநீ றாடுங் கனலுமொத் தொளிரும்
கழுத்திலோர் தனிவடங் கட்டி
முரியுமா றெல்லா முரிந்தழ கியையாய்
முகத்தலை யகத்தமர்ந் தாயைப்
பிரியுமா றுளதே பேய்களோஞ் செய்த
பிழைபொறுத் தாண்டபே ரொளியே. (எ)

என்னையுன் பாத பங்கயம் பணிவித்
தென்பெலா முருகநீ யெளிவந்
துன்னையென் பால்வைத் தெங்குமெஞ் ஞான்றும்
ஒழிவற நிறைந்தவொண் சுடரே
முன்னையென் பாச முழுவது மகல
முகத்தலை யகத்தமர்ந் தெனக்கே
கன்னலும் பாலுந் தேனுமா ரமுதும்
கனியுமா யினியையா யினையே. (அ)

அம்பரா வனலா வனிலமே புவிநீ
அம்புவே யிந்துவே யிரவி
உம்பரா லொன்று மறியொணா வணுவாய்
ஒழிவற நிறைந்தவொண் சுடரே
மொய்ம்பராய் நலஞ்சொன் மூதறி வாளர்
முகத்தலை யகத்தமர்ந் தெனக்கே
எம்பிரா னாகி யாண்டநீ மீண்டே
எந்தையுந் தாயுமா யினையே. (கூ)

மூலமாய் முடிவாய் முடிவிலா முதலாய்
முகத்தலை யகத்தமர்ந் தினிய
பாலுமா யமுதாம் பன்னகா பரணன்
பனிமலர்த் திருவடி யிணைமேல்

---

சாந்து-திருநீறு; கரியும்-சுடப்பட்ட; முரியுமாறு எல்லாம் முரிந்து - தோற்றுவகையெல்லாவற்றையுந் தோற்றி. (அ) கன்னல் - சர்க்கரை, கருப்பஞ்சாறு. (கூ) அம்பரா - ஆகாயமாயுள்ளவனே; அனிலமே - வாயுவாயுள்ளவனே; அம்புவே - நீராயுள்ளவனே; இந்து - சந்திரனா யுள்ளவனே; இரவி - சூரியனாயுள்ளவனே; ஒன்றும் - சிறிதும்;

ஆலையம் பாகி னனையசொற் கருவூர்
அமுதுறழ் தீந்தமிழ் மாலை
சீலமாப் பாடு மடியவ ரெல்லாம்
சிவபதங் குறுகிநின் றாரே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

## ரு - திரைலோக்கிய சுந்தரம்.

---

பண் - கா ந் தா ர ம்.

திருச்சிற்றம்பலம்.

நீரோங்கி வளர்கமல நீர்பொருந்தாத் தன்மையன்றே
ஆரோங்கி முகமலர்ந்தாங் கருவினையேன் றிறமறந்தின்
றூரோங்கும் பழிபாரா துன்பாலே விழுந்தொழிந்தேன்
சீரோங்கும் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (க)

நையாத மனத்தினனை நைவிப்பா னித்தெருவே
ஐயாநீ யுலாப்போந்த வன்றுமுத லின்றுவரை
கையாரத் தொழுதருவி கண்ணாரச் சொரிந்தாலும்
செய்யாயோ வருள்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (உ)

அம்பளிங்கு பகலோன்பா லடைப்பற்று யிவண்மனத்தின்
முன்பளிந்த காதலுநின் முகந்தோன்ற விளங்கிற்றால்
வம்பளிந்த கனியேயென் மருந்தேநல் வளர்முக்கண்
செம்பளிங்கே பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (௩)

மைஞ்ஞின்ற குழலாடன் மனந்தரவும் வளைதாரா
திஞ்ஞின்ற கோவணவ னிவன்செய்த தியார்செய்தார்
மெய்ஞ்ஞின்ற தமர்க்கெல்லா மெய்ஞ்ஞிற்கும் பண்பினறு
செய்ஞ்ஞன்றி யிலன்கோடைத்திரைலோக்கிய சுந்தரனே. (ச)

---

மொய்ம்பர்ஆய் - மனவுறுதியுடையராய். (ய) ஆலைபாகு - கறுப்பஞ்சாறு; உறழ் - ஒத்த.

(க) ஆர்ஓங்கி - அருமைமிகுந்து; பழி - நிந்தை. (உ) நையாத - உருகாத; உலாப்போதல் - பவனிவருதல். (ச) செய்ஞ்ஞன்றி -

நீவாரா தொழிந்தாலு நின்பாலே விழுந்தேழை
கோவாத மணிமுத்துங் குவளைமலர் சொரிந்தனவால்
ஆவாவென் றருள்புரியா யமரர்கணந் தொழுதேத்தும்
தேவாதென் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (ரு)

முழுவதுநீ யாயினுமிம் மொய்குழலாண் மெய்ம்முழுதும்
பழுதெனவே நினைந்தோராள் பயில்வதுநின் னொருநாமம்
அழுவதுநின் றிறநினைந்தே யதுவன்றே பெறும்பேறு
செழுமதில்சூழ் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (சா)

தன்சோதி யெழுமேனித் தபனியப்பூஞ் சாய்க்காட்டாய்
உன்சோதி யெழில்காண்பா னேலிடவு முருக்காட்டாய்
துஞ்சாகண் ணிவளுடைய துயர்தீரு மாறுரையாய்
செஞ்சாலி வயற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (எ)

அரும்பேதைக் கருள்புரியா தொழிந்தாய்நின் னவிர்சடைமேல்
நிரம்பாத பிறைதுவு நெருப்பொடுநின் கையிலியாழ்
நரம்பாலு முயிரீர்ந்தாய் நளிர்புரிசைக் குளிர்வனம்பா
திரம்போது சொரிகோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (அ)

ஆறாத பேரன்பி னவருள்ளங் குடிகொண்டு
வேறாகப் பலர்சூழ வீற்றிருத்தி யதுகொண்டு
வீறாடி யிவளுன்னைப் பொதுநீப்பான் விரைந்தின்னம்
தேறாடென் பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (கூ)

சரிந்ததுகி றளர்ந்தவிடை யவிழ்ந்தகுழ லிளந்தெரிவை
இருந்தபரி சொருநாள்கண் டிரங்காயெம் பெருமானே
முரிந்தநடை மடந்தையர்த முழங்கொலியும் வழங்கொலியும்
திருந்துவிழ வணிகோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (ய)

---

செய்நன்றி. (ரு) குவளைமலர் - கண்கள். (சா) பழுது - நிலையில்லாதது; ஓராள் - ஆராயமாட்டாள். (எ) தபனியம் - பொன்; பூ சாய் - அழகியநிறம். (அ) ஈர்ந்தாய் - பிளந்தாய்; புரிசை - மதில்; வனம் - சோலை; பாதிரம் - பாதிரிமரம்; போது - பூக்கள். (கூ) வீறு ஆடி - மேன்மைஅடைந்து; பொது - பொதுத்தன்மையில். (ய) தளர்ந்த இடை - துவண்டஇடை; முரிந்தநடை-ஒடிந்தநடை, துள்ளுநடை;

ஆரணத்தேன் பருகியருந் தமிழ்மாலை கமழவரும்
காரணத்தி னிலைபெற்ற கருவூரன் றமிழ்மாலை
பூரணத்தா லீரைந்தும் போற்றிசைப்பார் காந்தாரம்
சீரணைத்த பொழிற்கோடைத் திரைலோக்கிய சுந்தரனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௬ - கங்கைகொண்ட சோளேச்சரம்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

அன்னமாய் விசும்பு பறந்தயன் றேட
அங்ஙனே பெரியநீ சிறிய
என்னையாள் விரும்பி யென்மனம் புகுந்த
எளிமையை யென்றுநான் மறக்கேன்
முன்னமா லறியா வொருவனு மிருவா
முக்கணு நாற்பெருந் தடந்தோள்
கன்னலே தேனே யமுதமே கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௧)

உண்ணெகிழ்ந் துடல நெக்குமுக் கண்ணு
ஓலமென் றோலமிட் டொருநாள்
மண்ணினின் றலறேன் வழிமொழி மாலை
மழலையஞ் சிலம்படி முடிமேல்
பண்ணிநின் றுருகேன் பணிசெயே னெனினும்
பாவியே னாவியுள் புகுந்தென்
கண்ணினின் றகலா னென்கொலோ கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௨)

அற்புதத் தெய்வ மிதனின்மற் றுண்டே
அன்பொடு தன்னையஞ் செழுத்தின்

(௧௧) காந்தாரம்இசைப்பார் - காந்தாரப்பண்ணோடு பாடுவோர்.

(௧) இருவா - பெருமையுடையோனே, இரண்டுருவாயிருப்பவனே (அர்த்தநாரீசுவரனே). (௩) சொற்பதத்துள் - சொல்லி

சொற்பதத் துள்வைத் துள்ளமள் ளூறுந்
தொண்டருக் கெண்டிசைக் கனகம்
பற்பதக் குவையும் பைம்பொன்மா ளிகையும்
பவளவா யவர்பணை முலையும்
கற்பகப் பொழிலு முழுதுமாங் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௩)

ஐயபொட் டிட்ட வழகுவா ணுதலும்
அழகிய விழியும்வெண் ணீறும்
சைவம்விட் டிட்ட சடைகளுஞ் சடைமேல்
தரங்கமுஞ் சதங்கையுஞ் சிலம்பும்
மொய்கொளெண் டிக்குங் கண்டநின் றொண்டர்
முகமலர்ந் திருகணீ ரரும்பக்
கைகண்மொட் டிக்கு மென்கொலோ கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௪)

சுருதிவா னவனுந் திருநெடு மாலாம்
சுந்தர விசும்பினிந் திரனும்
பரிதிவா னவனும் படர்சடை முக்கட்
பகவனு மகவுயிர்க் கமுதாம்
எருதுவா கனனு மெயில்கண்மூன் றெரித்த
ஏறுசே வகனுமாம் பின்னும்
கருதுவார் கருது முருவமாங் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௫)

அண்டமோ ரணுவாம் பெருமைகொண் டணுவோர்
அண்டமாஞ் சிறுமைகொண் டடியேன்
உண்டவூ னுனக்காம் வகையென துள்ளம்
உள்கலந் தெழுபரஞ் சோதி

---

ணிடத்து; அள்ளூறும் - களிக்கும்; பல்பத குவை - பல ஒளியுள்ள குவியல். (௪) ஐய - அழகையுடைய; சைவம்விட்டிட்ட - சிவசின்னமாகத் தொங்கவிடப்பட்ட; தரங்கம் - அலை (கங்கை); மொய்கொள் - நெருங்கிய; மொட்டிக்கும் - குவியும், கூம்பும். (௫) சுருதிவானவன் - பிரமன்; சுந்தரவிசும்பு - அழகிய சுவர்க்கலோகம்; பரிதிவானவன் - சூரியன். (௬) நாண்கொண்ட - நாண்பூட்டிய; குறுகலர் - பகைவர்;

கொண்டநாண் பாம்பாம் பெருவரை வில்லில்
குறுகலர் புரங்கண்மூன் றெரித்த
கண்டனே நீல கண்டனே கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௬)

மோதலைப் பட்ட கடல்வயி றுதித்த
முழுமணித் திரளமு தாங்கே
தாய்தலைப் பட்டங் குருகியொன் றாய
தன்மையி லென்னைமுன் னின்ற
நீதலைப் பட்டா லியானுமவ் வகையே
நிசிசர ரிருவரோ டொருவர்
காதலிற் பட்ட கருணையாய் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௭)

தத்தையங் கனையார் தங்கண்மேல் வைத்த
தயாவைநூ றாயிரங் கூறிட்
டத்திலங் கொருகூ றுன்கண்வைத் தவருக்
கமருல களிக்குநின் பெருமை
பித்தனென் றொருகாற் பேசுவ ரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்
கைத்தலம டியேன்சென் னிமேல்வைத்த கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௮)

பண்ணிய தழல்காய் பாலளா நீர்போல்
பாவமுன் பறைந்துபா லனைய
புண்ணியம் பின்சென் றறிவினுக் கறியப்
புகுந்ததோர் யோகினிற் பொலிந்து
நுண்ணியை யெனினு நம்பநின் பெருமை
நுன்னிடை யொடுங்கநீ வந்தென்
கண்ணினுண் மணியிற் கலந்தனை கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (௯)

---

கண்டனே - வீரனே. (௭) வயிறு - நடு; தாய்தலைப்பட்டு - தாயின் தன்மையடைந்து; நீதலைப்பட்டால் - நீவந்து பொருந்தினால்; நிசிசரர் - அவுணர். (௮) தத்தை - கிளி; அத்தில் - அதில். (௯) பண்ணிய - மூட்டிய; பால்அளாம் - பாலுடன்சேர்ந்த; முன்பறைந்து -

அங்கைகொண் டமரர் மலர்மழை பொழிய
அடிச்சிலம் பலம்பவந் தொருநாள்
உங்கைகொண் டடியேன் சென்னிவைத் தென்னை
உய்யக்கொண் டருளினை மருங்கில்
கொங்கைகொண் டனுங்குங் கொடியிடை காணில்
கொடியளென் றவிர்சடை முடிமேல்
கங்கைகொண் டிருந்த கடவுளே கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானே. (ய)

மங்கையோ டிருந்தே யோகுசெய் வானை
வளரிளந் திங்களை முடிமேல்
கங்கையோ டணியுங் கடவுளைக் கங்கை
கொண்டசோ ளேச்சரத் தானை
அங்கையோ டேந்திப் பலிதிரி கருவூர்
அறைந்தசொன் மாலையா லாழிச்
செங்கையோ டுலகி லரசுவீற் றிருந்து
திளைப்பதுஞ் சிவனருட் கடலே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## எ - திருப்பூவணம்.

---

பண்-பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

திருவருள் புரிந்தா ளாண்டுகொண் டிங்ஙன்
சிறியனுக் கினியது காட்டிப்
பெரிதருள் புரிந்தா னந்தமே தருநின்
பெருமையிற் பெரியதொன் றுளதே
மருதர சிருங்கோங் ககின்மரஞ் சாடி
வரைவளங் கவர்ந்திழி வைகைப்

---

முன்னேயோட்; யோகினில் - யோகம்போல. (ய) அனுங்கும் - அசையும்; அவிர் - பிரகாசிக்கின்ற. (கக) அரசு - சக்கரவர்த்தி; திளைப்பதும் - மூழ்குவதும்.

பொருதிரை மருங்கோங் காவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (௧)

பாம்பணைத் துயின்றோ னயன்முதற் றேவர்
பன்னெடுங் காலநிற் காண்பான்
எம்பலித் திருந்த வென்னுளம் புகுந்த
எளிமையை யென்றுநான் மறக்கேன்
தேம்புனற் பொய்கை வாளைவாய் மடுப்பத்
தெளிதரு தேறல்பாய்ந் தொழுகும்
பூம்பணைச் சோலை யாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (உ)

கரைகட லொலியிற் றமருகத் தரையில்
கையினிற் கட்டிய கயிற்றால்
இருதலை யொருநா வியங்கவந் தொருநாள்
இருந்திடா யெங்கள்கண் முகப்பே
விரிதிகழ் விழவின் பின்செல்வோர் பாடல்
வேட்கையின் வீழ்ந்தபோ தவிழ்ந்த
புரிசடை துகுக்கு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (௩)

கண்ணியன் மணியின் சூழல்புக் கங்கே
கலந்துபுக் கொடுங்கினேற் கங்ஙன்
நுண்ணியை யெனினு நம்பநின் பெருமை
நுண்ணிமை யிறந்தமை யறிவன்
மண்ணியன் மரபிற் றங்கிருண் மொழுப்பின்
வண்டினம் பாடநின் றாடும்
புண்ணிய மகளி ராவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (௪)

(௧) இனிது - இனிதாகிய பொருள்; சாடி - எறிந்துகொண்டு; மருங்கு - இருபுறம்; ஆவணவீதி - கடைவீதி. (உ) எம்பலித்து - அங்கலாய்த்து; தேம் - தேன்; வாய்மடுப்ப - வாயில்விழ; தேறல் - தேன்; பூம்பணை - அழகிய வயல்கள். (௩) இருதலை - இரண்டு பக்கம்; முகப்பே - எதிரே; துகுக்கும் - கட்டுகின்ற. (௪) கண் இயல் - கண்ணிற் பொருந்திய; சூழல் - உள்ளிடம்; இறந்தமை - அளவு

கடுவினைப் பாசக் கடல்கடந் தைவர்
கள்ளரை மெள்ளவே துரந்துன்
அடியிணை யிரண்டு மடையுமா றடைந்தேன்
அருள்செய்வா யருள்செயா தொழிவாய்
நெடுநிலை மாடத் திரவிருள் கிழிக்க
நிலைவிளக் கலகில்சா லேகம்
புடைகிடந் திலங்கு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (௫)

செம்மனக் கிழவோ ரன்புதா வென்றுன்
சேவடி பார்த்திருந் தலச
எம்மனங் குடிகொண் டிருப்பதற் கியானார்
என்னுடை யடிமைதா னியாதே
அம்மனங் குளிர்நாட் பலிக்கெழுந் தருள
அரிவைய ரவிழ்குழற் சுரும்பு
பொம்மென முரலு மாவண வீதிப்
பூவணங் கோயில்கொண் டாயே. (௬)

சொன்னவின் முறைநான் காரண முணராச்
சூழல்புக் கொளித்தநீ யின்று
கன்னவின் மனத்தென் கண்வலைப் படுமிக்
கருணையிற் பெரியதொன் றுளதே
மின்னவில் கனக மாளிகை வாய்தல்
விளங்கிளம் பிறைதவழ் மாடம்
பொன்னவில் புரிசை யாவண வீதிப் * *
பூவணங் கோயில்கொண் டாயே. (௭, ௮, ௯)

---

கடந்தமை; மொழுப்பின் - சோலைகளில். (௫) கடல் - பிறவிக்கடல்; இணை - தனக்குத்தானே நிகராயிருக்கிற; சாலேகம் - பலகணி, சன்னல். (௬) கிழவோர் - பெரியோர் (விஷயங்களிற் செல்லாமற் இறைவனிடத்தே பதிந்திருக்கின்ற நெஞ்சமுடையவர்); அலச - வருந்தாநிற்க; அடிமை - அடிமைத்திறம்; சுரும்பு - வண்டு. (௭) நவில் - உச்சரிக்கிற; ஆரணம் - வேதம்; சூழல் - இடம்; கல்நவில் - கல்லைநிகர்த்த; மின்நவில் - மின்னுதலைச் செய்கின்ற; வாய்தல் - முற்றம். * எட்டாம் ஒன்பதாங் திருப்பாசுரங்கள் இறந்துவிட்டன.

பூவணங் கோயில் கொண்டெனை யாண்ட
புனிதனை வனிதைபா கனைவெண்
கோவணங் கொண்டு வெண்டலை யேந்தும்
குழகனை யழகெலாநிறைந்த
தீவணன் றன்னைச் செழுமறை தெரியும்
திகழ்கரு வூரனே னுரைத்த
பாவணத் தமிழ்கள் பத்தும்வல் லார்கள்
பரமன துருவமா குவரே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

## அ - திருச்சாட்டியக்குடி.

---

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

பெரியவா கருணை யிளநிலா வெறிக்கும்
பிறைதவழ் சடைமொழுப் பவிழ்ந்து
சரியமா சுழியங் குழைமிளிர்ந் திருபால்
தாழ்ந்தவா காதுகள் கண்டம்
கரியவா தாமுஞ் செய்யவாய் முறுவல்
காட்டுமா சாட்டியக் குடியார்
இருகைகூம் பினகண் டலர்ந்தவா முகமேழ்
இருக்கையி லிருந்தவீ சனுக்கே. (க)

பாந்தள்பூ ணாரம் பரிகலங் கபாலம்
பட்டவர்த் தனமெரு தன்பர்
வார்ந்தகண் ணருவி மஞ்சன சாலை
மலைமகண் மகிழ்பெருந் தேவி

---

(ய) தீவண்ணன் தன்னை - தீ நிறத்தையுடையவனை; வண்ணம் - அழகு; பரமனது உருவம் - சிவசாரூபம்.

(க) பெரியவாறு, சரியுமாறு, கரியவாறு, காட்டுமாறு, அலர்ந்தவாறு ஆகிய இவற்றின் ஈற்றிலுள்ள றுகரம் தொகுத்தலாயிற்று.

(உ) பாந்தள் - பாம்பு; பூணாரம் - ஆபரணம்; பரிகலம் - பிக்ஷாபாத்

சாந்தமுந் திருநீ றருமறை கீதம்
 சடைமுடி சாட்டியக் குடியார்
எந்தெழி லிதயங் கோயின் மாளிகையேழ்
 இருக்கையு ளிருந்தவீ சனுக்கே. (உ)

தொழுதுபின் செல்வ தயன்முதற் கூட்டந்
 தொடர்வன மறைகணன் கெனினும்
கழுதுறு கரிகா டுறைவிடம் போர்வை
 கவந்திகை கரியுரி திரிந்தூண்
தழலுமி ழரவங் கோவணம் பளிங்கு
 செபவடஞ் சாட்டியக் குடியார்
இழுதுநெய் சொரிந்தோம் பழலொளி விளக்கேழ்
 இருக்கையி லிருந்த வீசனுக்கே. (ங)

பதிகஞன் மறைதும் புருவுநா ரதரும்
 பரிவொடு பாடுகாந் தர்ப்பர்
கதியெலா மரங்கம் பிணையன்மூ வுலகில்
 கடியிருட் டிருநடம் புரியும்
சதியிலார் கதியி லொலிசெயுங் கையில்
 தமருகஞ் சாட்டியக் குடியார்
இதயமாங் சமலங் கமலவர்த் தனையேழ்
 இருக்கையி லிருந்தவீ சனுக்கே. (ச)

திருமகன் முருகன் றேவியே லுமையாள்
 திருமகண் மருமகன் றாயாம்
மருமகன் மதனன் மாமனே லிமவான்
 மலையுடை யரையர்தம் பாவை

திரம்; பட்டவர்த்தனம் - பட்டவர்த்தனமென்னும் யானை; சாந்தமும் - பூச்சும்; சடை - சடை; முடி - மகுடம்; எந்துஎழில் - அழகு பொருந்திய. (ங) கழுதுஉறு - பேய்கள்சஞ்சரிக்கிற; கரிகாடு - சுடுகாடு; கவந்திகை - உணவு; திரிந்துஊண் - திரிந்துஏற்கும்பிக்ஷை; இழுதுநெய் - நெகிழ்வாகியநெய். (ச) காந்தர்ப்பர் - கந்தருவர்; கதி - இடம்; தமருகம்-உடுக்கை. (ரு) தாயாம் - தாயாகப்பெற்ற; மருமகன் - பொருந்தியபுதல்வன்; மதனன் - மன்மதன்; சிவபுரான் - சிவபிரான்; இருமுழங்கு - பெரிதும்ஒலிக்கின்ற. (கூ) அனலமே - நெருப்பே;

தருமலி வளனுஞ் சிவபுரன் றேழன்
தனபதி சாட்டியக்குடியார்
இருமுகங் கழன்மூன் றேழுகைத் தலமேழ்
இருக்கையி லிருந்தவீ சனுக்கே. (ரு)

அனலமே புனலே யனிலமே புவனி
அம்பரா வம்பரத் தளிக்கும்
கனகமே வெள்ளிக் குன்றமே யென்றன்
களைகணே களைகண்மற் றில்லாத்
தனியனே னுள்ளங் கோயில்கொண் டருளும்
சைவனே சாட்டியக் குடியார்க்
கினியதீங் கனியா யொழிவற நிறைந்தேழ்
இருக்கையி லிருந்தவா றியம்பே. (சு)

செம்பொனே பவளக் குன்றமே நின்ற
திசைமுகன் மான்முதற் கூட்டத்
தன்பரா னவர்கள் பருகுமா ரமுதே
அத்தனே பித்தனே னுடைய
சம்புவே யணுவே தாணுவே சிவனே
சங்கரா சாட்டியக் குடியார்க்
கின்பனே யெங்கு மொழிவற நிறைந்தேழ்
இருக்கையி லிருந்தவா றியம்பே. (எ)

செங்கணா போற்றி திசைமுகா போற்றி
சிவபுர நகருள்வீற் றிருந்த
அங்கணா போற்றி யமரனே போற்றி
அமரர்க டலைவனே போற்றி
தங்கணான் மறைநூல் சகலமுங் கற்றோர்
சாட்டியக் குடியிருந் தருளும்
எங்கணா யகனே போற்றியே ழிருக்கை
இறைவனே போற்றியே போற்றி (அ)

சித்தனே யருளாய் செங்கணா வருளாய்
சிவபுர நகருள்வீற் றிருந்த

அனிலமே - காற்றே; களைகணே - ஆதரவே. (கூ) தத்து - தாவு

அத்தனே யருளா யமரனே யருளாய்
அமரர்க ளதிபனே யருளாய்
தத்துநீர்ப் படுகர்த் தண்டலைச் சூழல்
சாட்டியக் குடியுளே ழிருக்கை
முத்தனே யருளாய் முதல்வனே யருளாய்
முன்னவா துயர்கெடுத் தெனக்கே. (கூ)

தாட்டரும் பழனப் பைம்பொழிற் படுகர்த்
தண்டலைச் சாட்டியக் குடியார்
ஈட்டிய பொருளா யிருக்குமே ழிருக்கை
இருந்தவன் றிருவடி மலர்மேல்
காட்டிய பொருட்கலை பயில்கரு வூரன்
கழறுசொன் மாலையீ ரைந்தும்
மாட்டிய சிந்தை மைந்தருக் கன்றே
வளரொளி விளங்குவா னுலகே. (ய)

திருச்சிற்றம்பலம்.

---

## கூ - தஞ்சையிராசராசேச்சரம்.

---

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

உலகெலாந் தொழவந் தெழுகதிர்ப் பரிதி
ஒன்றுநூ றாயிர கோடி
அலகெலாம் பொதிந்த திருவுடம் பச்சோ
அங்ஙனே யழகிதோ வரணம்

---

கின்ற; படுசர் - வயல்கள்; தண்டலை - சோலை. (ய) தாள்தரும்பழனம் - உழவுத்தொழில் செய்யப்பெற்ற வயல்கள்; படுகர் - குளங்கள்; தண்தலை - குளிர்ந்தஇடங்கள்; மாட்டிய - பதித்த; மைந்தர்-புருடர்.

(க) ஒன்று - பொருந்திய; அலகுஎலாம் - அளவுமுழுதும்; ஓவர் - சித்திரக்காரர்; அணஅம் - பொருந்திய அழகு; பல்குலாம் - பலவாய் விளங்குகிற; ஞாங்கர் - பக்கம்; பதணத்து - மதிலுண்

பலகுலாம் படைசெய் நெடுநிலை மாடம்
பருவரை ஞாங்கர்வெண் டிங்கள்
இலைகுலாம் பதணத் திஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (க)

நெற்றியிற் கண்ணென் கண்ணினின் றகலா
நெஞ்சினி லஞ்சிலம் பலைக்கும்
பொற்றிரு வடியென் குடிமுழு தாளப்
புகுந்தன போந்தன வில்லை
மற்றெனக் குறவேன் மறிதிரை வடபால்
வண்புனன் மதகில்வாழ் முதலை
எற்றுநீர்க் கிடங்கி லிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (உ)

சடைகெழு மகுடந் தண்ணிலா விரிய
வெண்ணிலா விரிதரு தரளக்
குடைநிழல் விடைமேற் கொண்டுலாப் போதும்
குறிப்பெனோ கோங்கிண ரனைய
குடைகெழு நிருபர் முடியொடு முடிதேய்ந்
துக்கநெஞ் சுடர்ப்படு குவையோம்
கிடைகெழு மாடத் திஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௩)

வாழியம் போதத் தருகுபாய் விடையம்
வரிசையின் விளக்கலி னடுத்த
சூழலம் பளிங்கின் பாசல ராதிச்
சுடர்விடு மண்டலம் பொலியக்
காழகில் கமழு மாளிகை மகளிர்
சுங்குல்வா யங்குலி கெழும
யாழொலி சிலம்பு மிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௪)

---

மேடையினிடத்து; இஞ்சி - மதில். (உ) அலைக்கும் - வருத்துகிற; போந்தன இல்லை - வெளிப்பட்டன இல்லை; எற்றும் - எறிகின்ற; கிடங்கு - அகழி. (௩) இணர் - கொத்து; நிருபர் - அசுரர்; உக்க - சிந்தின; படுகுவை - மணிக்குவியல்கள்; இடைகெழு - இடம்

எவருமா மறைக ளவையும்வா னவர்கள்
ஈட்டமுந் தாட்டிருக் கமலத்
தவருமா லவனு மறிவரும் பெருமை
அடலழ லுமிழ்தழற் பிழம்பர்
உவரிமா கடலி னொலிசெய்மா மறுகில்
உறுகளிற் றரசின் னீட்டம்
இவருமால் வரைசெ யிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௫)

அருளுமா றருளி யாளுமா றாள
அடிகட மழகிய விழியும்
குருளும்வார் காதுங் காட்டியான் பெற்ற
குயிலினை மயல்செய்வ தழகோ
தரளவான் குன்றிற் றண்ணிலா வொளியும்
தருகுவால் பெருகுவான் றெருவில்
இருளெலாங் கிழியு மிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௬)

தனிப்பெருந் தாமே முழுதுறப் பிறப்பின்
தளிரிறப் பிலையுதிர் வென்றால்
நினைப்பருந் தம்பாற் சேறலின் றேனும்
நெஞ்சிடித் தருகுவ தென்னே
சுனைப்பெருங் கலங்கற் பொய்கையங் கழுநீர்ச்
சூழன்மா ளிகைசுடர் வீசும்
எனைப்பெரு மணஞ்செ யிஞ்சூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௭)

பன்னெடுங் காலம் பணிசெய்து பழையோர்
தாம்பல ரேம்பலித் திருக்க
என்னெடுங் கோயி னெஞ்சுவீற் றிருந்த
எளிமையை யென்றுநான் மறக்கேன்

---

பொருந்திய. (௫) உவரி – உப்புச்சுவை; மறுகு - தெரு; ஈட்டம் – கூட்டம்; இவரும் - ஓங்கும். (௬) குருள் – புன்சடை; குவால் – குவியல்கள்; வான் - பெரிய. (௮) விலங்கல் – மலை. (௯) மங்குல் –

மின்னெடும் புருவத் திளமயி லனையார்
விலங்கல்செய் நாடக சாலை
இன்னடம் பயிலு மிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௮)

மங்குல்சூழ் போதி னொழிவற நிறைந்து
வஞ்சகர் நெஞ்சகத் தொளிப்பார்
அங்கழற் சுடரா மவர்க்கிள வேனல்
அலர்கதி ரனையவா ழியரோ
பொங்கெழிற் றிருநீ றழிபொசி வனப்பிற்
புனறுளும் பவிர்சடை மொழுப்பர்
எங்களுக் கினிய ரிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௯)

தனியரெத் தனையொ ராயிர வருமாந்
தன்மைய ரென்வயத் தினராம்
கனியரத் தருதீங் கரும்பர்வெண் புரிநூல்
கட்டிய ரட்டவா ரமிர்தர்
புனிதர்பொற் கழலர் புரிசடா மகுடர்
புண்ணியர் பொய்யிலா மெய்யர்க்
கினியரெத் தனையு மிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவர்க்கே. (௰)

சரளமந் தார சண்பக வகுள
சந்தன நந்தன வனத்தின்
இருள்விரி மொழுப்பி னிஞ்சிசூழ் தஞ்சை
இராசரா சேச்சரத் திவரை
அருமருந் தருந்தி யல்லறீர் கருவூர்
அறைந்தசொன் மாலையீ ரைந்தின்
பொருண்மருந் துடையோர் சிவபத மென்னும்
பொன்னெடுங் குன்றுடை யோரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

மேகம்; போதுஇன் - காலம்போல். (௰) அட்டஆர் - காய்ச்சின அரிய. (௧௧) சரளம் - சிவதை; வகுளம் - மகிழ்; அருமருந்து - அரிய தேவாமிர்தம்.

## ௰ - திருவிடைமருதூர்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வெய்யசெஞ் சோதி மண்டலம் பொலிய
வீங்கிரு ணடுநல்யா மத்தோர்
பையசெம் பாந்தள் பருமணி யுமிழ்ந்து
பாவியேன் காதல்செய் காதில்
ஐயசெம் பொற்றோட் டவிர்சடை மொழுப்பின்
அழிவழ கியதிரு நீற்று
மையசெங் கண்டத் தண்டவா ணவர்கோன்
மருவிடந் திருவிடை மருதே. (க)

இந்திர லோக முழுவதும் பணிகேட்
டிணையடி தொழுதெழத் தாம்போய்
ஐந்தலை நாக மேகலை யரையா
அகந்தொறும் பலிதிரி யடிகள்
தந்திரி வீணை கீதமும் பாடச்
சாதிகின் னரங்கலந் தொலிப்ப
மந்திர கீதந் தீங்குழ லெங்கும்
மருவிடந் திருவிடை மருதே. (உ)

பனிபடு மதியம் பயில்கொழுந் தன்ன
பல்லவம் வல்லியென் றிங்ஙன்
வினைபடு கனகம் போலயா வையுமாய்
வீங்குல கொழிவற நிறைந்து
துனிபடு கலவி மலைமக ளுடனாய்த்
தூங்கிருணடுநல்யா மத்தென்
மனனிடை யணுகி நுணுகியுள் கலந்தோன்
மருவிடந் திருவிடை மருதே. (௩)

(க) செஞ்சோதி - சூரியன்; வீங்கு - மிக்க; பைய - படத்தை யுடைய; செம்பாந்தள் - செம்பாம்பு; ஐய - அழகையுடைய. (உ) அரையா - அரையிற்கட்டப்பட்டு அசையாநிற்க. (௩) மதியம் -

அணியுமிழ் சோதி மணியினுள் கலந்தாங்
கடியனே னுள்கலந் தடியேன்
பணிமகிழ்ந் தருளு மரிவைபா கத்தன்
படர்சடை விடமிடற் றடிகள்
துணியுமி ழாடை யரையிலோ ராடை
சுடருமிழ் தரவத னருகே
மணியுமிழ் நாக மணியுமிழ்ந் திமைப்ப
மருவிடந் திருவிடை மருதே. (௪)

பந்தமும் பிரிவுந் தெரிபொருட் பனுவல்
படிவழி சென்றுசென் றேறிச்
சிந்தையுந் தானுங் கலந்ததோர் கலவி
தெரியினுந் தெரிவுறு வண்ணம்
எந்தையுந் தாயும் யானுமென் றிங்ஙன்
எண்ணில்பல் லூழிக ளுடனாய்
வந்தணு காது நுணுகியுள் கலந்தோன்
மருவிடந் திருவிடை மருதே. (௫)

எரிதருகரிகாட் டிடுபிண நிணமுண்
டேப்பமிட் டிலங்கெயிற் றழல்வாய்த்
துருகழ னெடும்பேய்க் கணமெழுந் தாடுந்
தூங்கிரு ணடுநல்யா மத்தே
அருள்புரி முறுவன் முகிழ்நிலா வெறிப்ப
அந்திபோன் றொளிர்திரு மேனி
வரியரா வாட வாடுமெம் பெருமான்
மருவிடந் திருவிடை மருதே. (௬)

எழிலையாழ் செய்கைப் பசுங்கலன் விசும்பின்
இன்றுளி படநனைந் துருகி
அழலையாழ் புருவம் புனலொடுங் கிடந்தாங்
காதனேன் மாதரார் கலவித்

---

பிறை; பல்லவம் - தளிர்; வல்லி - கொடி; வீங்கு - பெருத்த; துணி - சிறுபிணக்கு; தூங்குஇருள் - பேரிருள். (௫) பந்தம் - பிறவிக்கட்டு; பிரிவு - நீக்கம், வீடு; பனுவல்படிவழி - ஞானநூலின் வழியே;

தொழிலையாழ் நெஞ்ச மிடர்படா வண்ணம்
தூங்கிரு ணடுநல்யா மத்தோர்
மழலையாழ் சிலம்ப வந்தகம் புகுந்தோன்
மருவிடந் திருவிடை மருதே. (எ)

வையவாம் பெற்றம் பெற்றமே றுடையார்
மாதவர் காதல்வைத் தென்னை
வெய்யவாஞ் செந்தீப் பட்டவிட் டிகைபோல்
விழுமியோன் முன்புபின் பென்கோ
நொய்யவா றென்ன வந்துள்வீற் றிருந்த
நூறுநூ றாயிர கோடி
மையவாங் கண்டத் தண்டவா னவர்கோன்
மருவிடந் திருவிடை மருதே. (அ)

கலங்கலம் பொய்கைப் புனற்றெளி விடத்துக்
கலந்தமண் ணிடைக்கிடந் தாங்கு
நலங்கலந் தடியேன் சிந்தையுட் புகுந்த
நம்பனே வம்பனே னுடைய
புலங்கலந் தவனே யென்றுநின் றுருகிப்
புலம்புவா ரவம்புகா ரருவி
மலங்கலங் கண்ணிற் கண்மணி யனையான்
மருவிடந் திருவிடை மருதே. (௯)

ஒருங்கிருங் கண்ணி னெண்ணில்புன் மாக்கள்
உறங்கிரு ணடுநல்யா மத்தோர்
கருங்கணின் றிமைக்குஞ் செழுஞ்சுடர் விளக்கம்
கலந்தெனக் கலந்துணர் கருவூர்
தருங்கரும் பனைய தீந்தமிழ் மாலை
தடம்பொழின் மருதயா ழுதிப்ப
வருங்கருங் கண்டத் தண்டவா னவர்கோன்
மருவிடந் திருவிடை மருதே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

கலவி - கலப்பு. (௬) காிகாடு-சுடுகாடு; எயிறு-பல்; துரு-நெருங்கிய; முகிழ்நிலா-இளநிலா; அந்தி-செவ்வானம். (எ) ஆதனேன்-அறிவிலியாகிய நான்; தூங்கு - மிக்க. (அ) விட்டிகை-விட்டில்; மைஅவாம் - மேகங்கள் விரும்பும். (௯) கலந்த - பொருந்திய; கலம் - ஆபரணம்.

# பூந்துருத்திநம்பிகாடநம்பி திருவிசைப்பா.

## க - திருவாரூர்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கைக்குவான் முத்தின் சரிவளை பெய்து
    கழுத்திலோர் தனிவடங் கட்டி
முக்கண யகராய்ப் பவனிபோந் திங்கள்
    முரிவதோர் முரிவுமை யளவும்
தக்கசீர்க் கங்கை யளவுமன் றென்னே
    தம்மொருப் பாடுல கதன்மேல்
மிக்கசீ ராரூ ராதியாய் வீதி
    விடங்கராய் நடங்குலா வினரே. (க)

பத்தியா யுணர்வோ ரருளைவாய் மடுத்துப்
    பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந்
    திருவுரு விருந்தவா பாரீர்
சத்தியாய்ச் சிவமா யுலகெலாம் படைத்த
    தனிமுழு முதலுமா யதற்கோர்
வித்துமா யாரூ ராதியாய் வீதி
    விடங்கராய் நடங்குலா வினரே. (உ)

திருச்சிற்றம்பலம்.

---

(க) வால் - வெண்மையான; சரி - கூட்டம்; வடம் - ஆரம்; முரிவது - தோன்றுவது; முரிவு - தோற்றம்; ஒருப்பாடு - சம்மதம்; குலாவினர் - ஆடுகின்றனர். (உ) பத்தியாய் உணர்வோர் - அன்புடையவராகிய சிவஞானிகள்; வாய்மடுத்து - வாய்வைத்து.

# உ - கோயில்.

---

## பண் - சாளரபாணி.

திருச்சிற்றம்பலம்.

முத்து வயிரமணி மாணிக்க மாலைகண்மேல்
தொத்து மிளிர்வனபோற் றூண்டு விளக்கேய்ப்ப
எத்திசையும் வானவர்க ளேத்து மெழிற்றில்லை
அத்தனுக்கு மம்பலமே யாடரங்க மாயிற்றே. (௧)

கடியார் கணம்புல்லர் கண்ணப்ப ரென்றுன்
அடியா ரமருலக மாளநீ யாளாதே
முடியாமுத் தீவேள்வி மூவா யிரவரொடும்
குடிவாழ்க்கை கொண்டுநீ குலாவிக்கூத் தாடினையே. (௨)

அல்லியம் பூம்பழனத் தாமூர்நா வுக்கரசைச்
செல்ல நெறிவகுத்த சேவகனே தென் றில்லைக்
கொல்லை விடையேறிக் கூத்தா டரங்காகச்
செல்வ நிறைந்தசிற் றம்பலமே சேர்ந்தனையே. (௩)

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன் றன்னையுமாட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந் தானு மணி தில்லைச்
செம்பொன்செ யம்பலமே சேர்ந்திருக்கை யாயிற்றே. (௪)

களையா வுடலோடு சேரமா னாரூரன்
விளையா மதமாறா வெள்ளானை மேல்கொள்ள
முளையா மதிசூடி மூவா யிரவரொடும்
அளையா விளையாடு மம்பலநின் னாடரங்கே. (௫)

---

(௧) தொத்து - பூங்கொத்து; எய்ப்ப - நிகர்த்த; ஆடரங்கம் - நடனசபை. (௨) கடிஆர் - விளக்கம்பொருந்திய; முடியா - அழியாத. (௩) கொல்லை - கொல்லுந் தொழிலையுடைய அழகிய. (௪) அம்புஉந்து - அம்பு போன்ற. (௫) களையா - நீங்காத; முளை ஆம்மதி- பிறைச்சந்திரன்; அளையா - கலந்து. (௬) தற்சூழ - தன்னைச்

அகலோக மெல்லா மடியவர்க டற்சூழப்
புகலோக முண்டென்று புகுமிடநீ தேடாதே
புவலோக நெறிபடைத்த புண்ணியங்க ணண்ணியசீர்ச்
சிவலோக மாவதுவுந் தில்லைச்சிற் றம்பலமே. (௬)

களக மணிமாடஞ் சூளிகைசூழ் மாளிகைமேல்
அளக மதிநுதலா ராயிழையார் போற்றிசைப்ப
ஒளிகொண்ட மாமணிக ளோங்கிருளை யாங்ககற்றும்
தெளிகொண்ட தில்லைச்சிற் றம்பலமே சேர்ந்தனையே. (௭)

பாடகமு நூபுரமும் பல்சிலம்பும் பேர்ந்தொலிப்பச்
சூடகக் கைநல்லார் தொழுதேத்தத் தொல்லுலகில்
நாடகத்தின் கூத்தை நவிற்றுமவர் நாடோறும்
ஆடகத்தான் மேய்ந்தமைந்த வம்பலநின் னாடரங்கே. (௮)

உருவத் தெரியுருவா யூழிதோ றெத்தனையும்
பரவிக் கிடந்தயனு மாலும் பணிந்தேத்த
இரவிக்கு நேராகி யேய்ந்திலங்கு மாளிகைசூழ்ந்
தரவிக்கு மம்பலமே யாடரங்க மாயிற்றே. (௯)

சேட ருறைதில்லைச் சிற்றம் பலத்தான்றன்
ஆட லதிசயத்தை யாங்கறிந்து பூந்துருத்திக்
காடன் றமிழ்மாலை பத்துங் கருத்தறிந்து
பாடு மிவைவல்லார் பற்றுநிலை பற்றுவரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

சூழும்படி; உண்டு – உளது. (௭) களகம் – கழகம், கல்வி பயிலும் இடம்; சூளிகை – நிலாமுற்றம்; அளகம் – கூந்தல். (௮) நூபுரம் – பாதகிண்கிணி; சூடகம் – கைவளை; வேய்ந்து அமைந்த – மூடப்பட்டுள்ள. (௯) இரவி – சூரியன்; எய்ந்து – பொருந்தி; அரவிக்கும் – ஆரவாரஞ்செய்யும். (௰) சேடர் – அடியார் (சேடி – இறைவர்). வடமொழியில் சேஷ சேஷி என்று கூறப்படும்.

# கண்டராதித்தர் திருவிசைப்பா.

## கோயில்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மின்னா ருருவ மேல் விளங்க வெண்கொடி மாளிகைசூழப்
பொன்னார் குன்ற மொன்று வந்து நின்றது போலுமென்னாத்
தென்னா வென்று வண்டு பாடுந் தென்றில்லை யம்பலத்துள்
என்னா ரமுதை யெங்கள் கோவை யென்றுகொ லெய்துவதே. (க)

ஓவா முத்தீ யஞ்சு வேள்வி யாறங்க நான்மறையோர்
ஆவே படுப்பா ரந்த ணாள ராகுதி வேட்டுயர்வார்
மூவா யிரவர் தங்க ளோடு முன்னரங் கேறிநின்ற
கோவே யுன்றன் கூத்துக் காணக் கூடுவ தென்றுகொலோ. (உ)

முத்தீ யாளர் நான்ம றையர் மூவா யிரவர்நின்னோடு
ஒத்தே வாழுந் தன்மை யாள ரோதிய நான்மறையைத்
தெத்தே யென்று வண்டு பாடுந் தென்றில்லை யம்பலத்துள்
அத்தா வுன்ற னாடல் காண வணைவது மென்றுகொலோ. (௩)

மானைப் புரையு மட.மென் னோக்கி மாமலை யாளோடும்
ஆனைஞ் சாடுஞ் சென்னி மேலோ ரம்புலி சூடுமரன்
தேனைப் பாலைத் தில்லை மல்கு செம்பொனி னம்பலத்துக்
கோனை ஞானக் கொழுந்து தன்னைக் கூடுவ தென்றுகொலோ. (ச)

களிவா னுலகிற் கங்கை நங்கை காதல னேயருளென்
றொளிமான் முன்னே வரங்கி டக்க வுன்னடி யார்க்கருளும்
தெளிவா ரமுதே தில்லை மல்கு செம்பொனி னம்பலத்துள்
ஒளிவான் சுடரே யுன்னை நாயே னுறுவது மென்றுகொலோ. (ரு)

(க) மின்னார் - மாதர். (உ) ஆவேபடுப்பார் - பசுயாகஞ்செய்வோர். (ச) மடம் - இளமை; மேல் - மேன்மை; அம்புலி - சந்திரன். (ரு) வானுலகில் கங்கை - ஆகாயகங்கை. (எ) இலைஆர் - இலைவடிவு

பாரோர் முழுதும் வந்தி றைஞ்சப் பதஞ்சலிக் காட்டுகந்தான்
வாரார் முலையாண் மங்கை பங்கன் மாமறை யோர்வணங்கச்
சீரான் மல்கு தில்லைச் செம்பொ னம்பலத் தாடுகின்ற
காரார் மிடற்றெங் கண்ட னாரைக் காண்பது மென்றுகொலோ. (௬)

இலையார் கதிர்வே லிலங்கை வேந்த னிருபது தோளுமிற
மலைதா னெடுத்த மற்ற வற்கு வாளொடு நாள்கொடுத்தான்
சிலையாற் புரமூன் றெய்த வில்லி செம்பொனி னம்பலத்துக்
கலையார் மறிபொற் கையி னானைக் காண்பது மென்றுகொலோ. (௭)

வெங்கோல் வேந்தன் றென்ன னாடு மீழமுங் கொண்டதிறல்
செங்கோற் சோழன் கோழி வேந்தன் செம்பியன் பொன்னணிந்த
அங்கோல் வளையார் பாடி யாடு மணிதில்லை யம்பலத்துள்
எங்கோ னீச னெம்மி றையை யென்றுகொ லெய்துவதே. (௮)

நெடியா னோடு நான்மு கனும் வானவரு நெருங்கி
முடியான் முடிகண் மோதி யுக்க முழுமணி யின்றிரளை
அடியா ரலகி னாற்றி ரட்டு மணிதில்லை யம்பலத்துக்
கடியார் கொன்றை மாலை யானைக் காண்பது மென்றுகொலோ. (௯)

சீரான் மல்கு தில்லைச் செம்பொ னம்பலத் தாடிதன்னைக்
காரார் சோலைக் கோழி வேந்தன் றஞ்சையர் கோன்கலந்த
ஆரா வின்சொற் கண்டரா தித்த னருந்தமிழ் மாலைவல்லார்
பேரா வுலகிற் பெருமை யோடும் பேரின்ப மெய்துவரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

அமைந்த; நாள் - ஆயுள்; கலைஆர்மறி - மானின் இளங்கன்றை. (௮) வெங்கோல் - கொடுங்கோல்; கோழி - உறையூர்; அம்கோல் - அழகும்வளைவும். (௯) நெடியான் - திரிவிக்கிரமன்; உக்க - உதிர்ந்த; அலகு - துடைப்பம்; கடி - மணம். (௰) பேராஉலகு - எக்காலத்தும்அழியாத முத்தியுலகு.

# வேணாட்டடிகள் திருவிசைப்பா.

## கோயில்.

### பண் - புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

துச்சான செய்திடினும் பொறுப்பரன்றே யாளுகப்பார்
கைச்சாலுஞ் சிறுகதலி யிலைவேம்புங் கறிகொள்வார்
எச்சார்வு மில்லாமை நீயறிந்து மெனதுபணி
நச்சாய்காண் டிருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (க)

தம்பானை சாய்ப்பற்று ரென்னு முதுசொல்லும்
எம்போல்வார்க் கில்லாமை யென்னளவே யறிந்தொழிந்தேன்
வம்பானார் பணியுகத்தி வழியடியேன் றொழிலிறையும்
நம்பாய்காண் டிருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (உ)

பொசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளமென் றதுபோலத்
திசைநோக்கிப் பேழ்கணித்துச் சிவபெருமா னேயெனினும்
இசையானா லென்றிறத்து மெனையுடையா னுரையாடாள்
நசையானேன் றிருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௩)

ஆயாத சமயங்க ளவரவர்கண் முன்பென்னை
நோயோடு பிணிநலிய விருக்கின்ற வதனாலே
பேயாவித் தொழும்பனைத்தம் பிரானிகழு மென்பித்தாய்
நாயேனைத் திருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௪)

நின்றுநினைந் திருந்துகிடந் தெழுந்துதொழுந் தொழும்பனேன்
ஒன்றியொரு கானினையா திருந்தாலு மிருக்கவொட்டாய்

---

(க) துச்சான - இழிவானதொழில்கள்; ஆள் - அடிமை; நச்சாய் - விரும்பாய். (உ) வம்புஆனார் - புதியராயினார்; தொழில் - தொண்டு; இறையும் - அற்பமும். (௩) பேழ்கணித்து - வாயைத் திறந்து; நசை ஆனேன் - ஆசைப்பட்டேன். (௫) வரவுநில்லாய் -

கன்றுபிரி கற்றுப்போற் கதறுவித்தி வரவுநில்லாய்
நன்றிதுவோ திருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௫)

படுமதமு மிடவயிறு முடையகளி றுடையபிரான்
அடியறிய வுணர்த்துவது மகத்தியனுக் கோத்தன்றே
இடுவதுபுல் லோரெருதுக் கொன்றினுக்கு வையிடுதல்
நடுவிதுவோ திருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௬)

மண்ணோடு விண்ணளவு மனிதரொடு வானவர்க்கும்
கண்ணாவாய் கண்ணாகா தொழிதலுநான் மிகக்கலங்கி
அண்ணாவோ வென்றண்ணாந் தலமந்து விளித்தாலும்
நண்ணாயாற் றிருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௭)

வாடாவாய் நாப்பிதற்றி யுனைநினைந்து நெஞ்சுருகி
வீடாஞ்செய் குற்றேவ லெற்றேமற் றிதுபொய்யில்
கூடாமே கைவந்து குறுகுமா றியானுன்னை
நாடாயாற் றிருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௮)

வாளாமா லயன்வீழ்ந்து காண்பரிய மாண்பிதனைத்
தோளாரக் கையாரத் துணையாரத் தொழுதாலும்
ஆளோநீ யுடையதுவு மடியேனுன் றாள்சேரும்
நாளேதோ திருத்தில்லை நடம்பயிலு நம்பானே. (௯)

பாவார்ந்த தமிழ்மாலை பத்தரடித் தொண்டனெடுத்
தோவாதே யழைக்கின்றா னென்றருளி நன்றுமிகத்
தேவேதென் றிருத்தில்லைக் கூத்தாடீ நாயடியேன்
சாவாயு நினைக்காண்ட லினியுனக்குத் தடுப்பரிதே. (௰)

திருச்சிற்றம்பலம்.

வந்துஎதிரில் நிற்கவுமாட்டாய். (௬) மிட - மிடா; அடி - மூலம்; வை - வைக்கோல். (௭) கண் ஆகாது - ஆதரவுஇல்லாமல். (௮) வாடாவாய் - வாய்வாடி; எற்றே - எத்தன்மைத்தோ. (௯) வாளா - சும்மா. (௰) சாவாயும் - செத்தாலும்.

# திருவாலியமுதனர் திருவிசைப்பா.

## க - கோயில் - பாதாதிகேசம்.

### பண் — பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மையன்மாதொரு கூறன்மால்விடை யேறிமான்மறி யேந்தியதடங்
கையன்கார்புரை யுங்கறைக் கண்டன் கனன்மழுவான்
ஐயனாடல் லாடுவானணி நீர்வயற்றில்லை யம்பலத்தான்
செய்யபாதம் வந்தென் சிந்தையுள்ளிடங் கொண்டனவே. (க)

சலம்பொற்றாமரை தாழ்ந்தெழுந்த தடமுந்தடம்புனல் வாய்மலர்தழீ
அலம்பிவண் டறையுமணி யார்தில்லை யம்பலவன் [இ
புலம்பிவானவர் தானவர்புகழ்ந் தேத்தவாடுபொற் கூத்தனார்கழல்
சிலம்புகிங் கிணியென் சிந்தையுள்ளிடங் கொண்டனவே. (உ)

குருண்டவார்குழற் கோதைமார்குயில் போன்மிழற்றிய கோலமாளி [கை
திரண்ட தில்லைதன்னுட் டிருமல்கு சிற்றம்பலவன்
மருண்டுமாமலை யான்மகடொழ வாடுங்கூத்தன் மணிபுரைதரு
திரண்ட வான்குறங்கென் சிந்தையுள்ளிடங் கொண்டனவே. (ங)

போழ்ந்தியானை தன்னைப்பொருப்பன் மகளுமையச்சங் கண்டவன்
தாழ்ந்த தண்புனல்சூழ் தடமல்கு சிற்றம்பலவன்
சூழ்ந்தபாய்புலித் தோன்மிசைத்தொடுத்துவீக்கும்பொன் னூறன்னி
னொடு, தாழ்ந்த கச்சதன்றே தமியேனைத் தளர்வித்ததே. (ச)

---

(க) மையல் - மோகம்; மான்மறி — மான்கன்று. (உ) சலம் — நீர்; தாழ்ந்துஎழுந்த - தங்கிவிளங்குகிற; தடம்புனல்வாய் - மிக்கநீரினுள்ள; அலம்பி - கிண்டி; தானவர் — அசுரர். (ங) குருண்ட — சுருண்ட; மிழற்றிய - கொஞ்சிப்பேசுகிற; குறங்கு - தொடை. (ச) போழ்ந்து — பிளந்து; பொருப்பன் - மலையரசன்; தடம்மல்கு — தடாகங்கள்நிறைந்த; வீக்கும் — கட்டும்; பொன்நூல் - உபவீதம்.

பந்தபாச மெலாமறப்பசு பாசநீக்கிய பன்முனிவரோ
டந்தணர் வணங்கு மணியார்தில்லை யம்பலவன்
செந்தழல்புரை மேனியுந்திக ழுந்திருவயி றும்வயிற்றினுள்
உந்திவான்சுழி யென்னுள்ளத் துள்ளிடங் கொண்டனவே. (௫)

குதிரைமாவொடு தேர்பலகுவிந் தீண்டுதில்லையுட் கொம்பனாரொடு
மதுரவாய் மொழியார் மகிழ்ந்தேத்து சிற்றம்பலவன்
அதிரவார்கழல் வீசிநின்றழ காநடம்பயில் கூத்தன்மேல்
திகழுதர பந்தனமென் னுள்ளத்துள்ளிடங் கொண்டனவே. (௬)

படங்கொள்பாம்பணை யானொடுபிர மன்பரம்பர மாவருளென்று
தடங்கையாற் றொழவுந் தழலாடுசிற் றம்பலவன்
தடங்கைநான்குமத் தோள்களுந்தட மார்பினிற்பூண் கண்மேற்றிசை
விடங்கொள் கண்டமன்றே வினையேனை மெலிவித்ததே. (௭)

செய்யகோடுடன்கமலமலர்சூழ்தரு தில்லைமாமறையோர்கடாந்தொழ
வையய முய்யநின்று மகிழ்ந்தாடு சிற்றம்பலவன்
செய்யவாயின் முறுவலுந்திகழுந் திருக்காதுங்காதினின் மாத்திரை
களோ, டைய தோடுமன்றே யடியேனையாட் கொண்டனவே. (௮)

செற்றுவன்புரந் தீயெழச்சிலை கோலியாரழ லூட்டினானவன்
எற்றி மாமணிக ளெறிநீர்த்தில்லை யம்பலவன்
மற்றைநாட்டமி ரண்டொடுமல ருந்திருமுகமு முகத்தினுள்
நெற்றி நாட்டமன்றே நெஞ்சுளேதிளைக் கின்றனவே. (௯)

தொறுக்கள் வான்கமல மலருழக்கக் கரும்புநற் சாறுபாய்தர
மறுக்கமாய்க் கயல்கண் மடைபாய்தில்லை யம்பலவன்
முறுக்குவாசிகை தன்னொடுமுகிழ்த்தவவ்வகத்தி மொட்டொடுமத்த
மும், பிறைக்கொள் சென்னியன்றே பிரியாதென்னு ணின்றனவே.

---

(௫) பந்தபாசம் – பிறவிக்கட்டு. (௬) மா – யானை; குவிந்து ஈண்டு– கூடிநெருங்கின; மதுரவாய்மொழியார் – அடியார்; உதரபந்தனம் – அரைப்பட்டிகை. (௮) கோடு – சங்கு; மாத்திரை – காதணிகளில் ஒன்று. (௯) கோலி – வளைத்து; எற்றிஎறி – எடுத்தெறிகிற; நாட்டம் – கண்; திளைக்கின்றன – பதிந்தன. (௰) தொறுக்கள் – பசுக் கூட்டங்கள்; உழக்க – அலைக்க; மறுக்கமாய் – மயக்கமடைந்து; முறுக்கு – முறுக்கப்பட்ட; வாசிகை – பூமாலை.

தூவிநீரொடு பூவவைதொழு தேத்துகையின ராகிமிக்கதோர்
ஆவியுண் ணிறுத்தி யமர்ந்தூறிய வன்பினராய்த்
தேவர்தாந்தொழ வாடியதில்லைக் கூத்தனைத்திரு வாலிசொல்லிவை
மேவ வல்லவர்கள் விடையானடி மேவுவரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨ - கோயில் - பவளமால்வரை.

---

பண் - நட்டராகம்.

திருச்சிற்றம்பலம்.

பவளமால் வரையைப் பனிபடர்ந் தனையதோர் படரொளி தருதிரு
நீறுங், குவளைமாமலர்க் கண்ணியுங்கொன்றையுந் துன்றுபொற்குழற்
றிருச்சடையும்,திவள்மாளிகைசூழ்தருதில்லையுட்டிருநடம்புரிகின்ற
தவளவண்ணனைநினைதொறுமென்மனந்தழன்மெழுகொக்கின்றதே.

ஒக்க வோட்டந்த வந்தியு மதியமு மலைகட லொலியோடு
நெக்கு வீழ்தரு நெஞ்சினைப் பாய்தலு நிறையழிந் திருப்பேனைச்
செக்கர் மாளிகை சூழ்தரு தில்லையுட் டிருநடம் வகையாலே
பக்க மோட்டந்த மன்மதன் மலர்க்கணை படுந்தொறு மலந்தேனே.

அலந்து போயினே னம்பலக் கூத்தனே யணிதில்லை நகராளீ
சிலந்தி யையர சாள்கவென் றருள்செய்த தேவ தேவீசனே
உலந்த மார்க்கண்டிக் காகியக் காலனை யுயிர்செக வுதைகொண்ட
மலர்ந்த பாதங்கள் வனமுலை மேலொற்ற வந்தருள் செய்யாயே.

அருள்செய் தாடுநல் லம்பலக் கூத்தனே யணிதில்லை நகராளீ
மருள்செய் தென்றனை வனமுலை பொன்பயப் பிப்பது வழக்காமோ

---

(௧௧) பூஅவை - மலர்களாகிய அவைகளை; மேவ - துதிக்க.

(௧) மால் - பெரிய; குழல் - சுருட்டி முடிக்கின்ற; திவள - நுட்பமாகிய வேலைகளமைந்த; தவளவண்ணனை - வெண்ணிற முடையவனை. (௨) ஒக்க ஓட்டந்த - ஒக்க ஓடின; அந்தியும் - அந்திக்காலமும்; நிறை - கற்பின் வரம்பு. (௩) உலந்த - வருந்தின; உயிர் செக - உயிர் நீங்க; வனம் - அழகிய. (௪) பொன் - தேமல்;

திரளு நீண்மணிக் கங்கையைத் திருச்சடைச்சேர்த்தியச்செய்யாளுக்
குருவம் பாகமு மீந்துநல் லந்தியை யொண்ணுதல் வைத்தோனே.

வைத்த பாதங்கண் மாலவன் காண்கிலன் மலரவன் முடிதேடி
எய்த்து வந்திழிந்தின்னமுந் துதிக்கின்றனெழின்மறையவற்றாலே
செய்த்த லைக்கம லம்மலர்ந் தோங்கிய தில்லையம் பலத்தானைப்
பத்தி யாற்சென்று கண்டிட வென்மனம் பதைபதைப் பொழியாதே.

தேய்ந்துமெய்வெளுத் தகம்வளைந் தரவினையஞ்சித் தானிருந்தேயும்
காய்ந்து வந்துவந் தென்றனை வலிசெய்து கதிர்நிலா வெரிதூவும்
ஆய்ந்த நான்மறை யந்தணர் தில்லையு ளம்பலத் தானுடல்
வாய்ந்தமாமலர்ப்பாதங்கள்காண்பதோர்மனத்தினையுடையேற்கே.

உடையும் பாய்புலித் தோலுநல் லரவமு முண்பதும் பலிதேர்ந்து
விடைய தூர்வது மேவிடங் கொடுவரை யாகினு மென்னெஞ்சம்
மடைகொள்வாளைகள் குதிகொளும் வயற்றில்லை யம்பலத்தனலாடும்
உடைய கோவினை யன்றிமற் றாரையு முள்ளுவ தறியேனே. (எ)

அறிவு மிக்கநன் ஞணமு நிறைமையு மாசையு மிங்குள்ள
உறவும் பெற்றநற் றாயொடு தந்தையு முடன்பிறந் தவரோடும்
பிறியவிட்டுனை யடைந்தனனேன்றுகொள் பெரும்பற்றப்புலியூரின்
மறைக ளுன்குங்கொண் டந்தண ரேத்தநன் மாநட மகிழ்வானே.

வான நாடுடை மைந்தனே யோவென்பன் வந்தரு ளாயென்பன்
பானெ யைந்துட ஞடிய படர்சடைப் பால்வண்ண னேயென்பன்
தேன மர்பொழில் சூழ்தரு தில்லையுட் டிருநடம் புரிகின்ற
ஏன மாமணிப் பூணணி மார்பனே யெனக்கருள் புரியாயே. (௯)

புரியும் பொன்மதில் சூழ்தரு தில்லையுட் பூசுரர் பலர்போற்ற
வெரிய தாடுமெம் மீசனைக் காதலித் தினையவண் மொழியாக

---

செய்யாள் – உமாதேவி; அந்தியை – அக்கினியை; ஒள்நுதல் – அழகிய நெற்றி. (௫) செய்தலை - வயல்களில். (௬) வளைந்து - வாடி; காய்ந்து - கோபித்து; கதிர் – ஒளி; எரி - நெருப்பு. (எ) மேவு இடம் – பொருந்தும் இடம். (௯) வான நாடு – சிவபுரம்; மைந்தனே – வலிமையுடையவனே; ஏனம் – பன்றிக்கொம்பு. (ய) புரியும் – விரும்புகிற; இனையவள் – வருந்தினவள்.

வரைசெய் மாமதின் மயிலையர் மன்னவன் மறைவல திருவாலி
பரவல் பத்திவை வல்லவர் பரமன தடியிணை பணிவாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## ௩ - கோயில்.

---

### பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

அல்லாய்ப் பகலா யருவா யுருவா யாரா வமுதமாய்க்
கல்லா னிழலாய் கயிலை மலையாய் காண வருளென்று
பல்லா யிரம்பேர் பதஞ்ச லிகள் பரவ வெளிப்பட்டுச்
செல்வாய் மதிற் றில்லைக் கருளித் தேவ ஞடுமே. (௧)

அன்ன நடையா ரமுத மொழியா ரவர்கள் பயிற்றில்லைத்
தென்னன் றமிழு மிசையுங் கலந்த சிற்றம் பலந்தன்னுள்
பொன்னு மணியு நிரந்த தலத்துப் புலித்தோல் பியற்கிட்டு
மின்னி னிடையா ளுமையாள் காண விகிர்த ஞடுமே. (௨)

இளமென் முலையா ரெழின்மைந் தரொடு மேரா ரமளிமேல்
திளையு மாடத் திருவார் தில்லைச் சிற்றம் பலந்தன்னுள்
வளர்பொன் மலையுள் வயிர மலைபோல் வலக்கை கவித்துநின்
றளவில் பெருமை யமரர் போற்ற வழக ஞடுமே. (௩)

சந்து மகிலுந் தழைப்பீ லிகளுஞ் சாதி பலவுங்கொண்
டுந்தி யிழியு நிவவின் கரைமே லுயர்ந்த மதிற்றில்லைச்
சிந்திப் பரிய தெய்வப் பதியுட் சிற்றம் பலந்தன்னுள்
நந்தி முழவங் கொட்ட நட்ட நாத ஞடுமே. (௪)

---

(௧) அல் - இரவு; செல்வாய் - மேகங்கள் தவழ்கின்ற. (௨) பயில் - நெருங்கிய; பியல் - பிடர்; விகிர்தன் - மெய்யன். (௩) அமளி-சயனம்; திளையும் - (இன்பத்தை) அநுபவிக்கும்; கவித்து - குவித்து. (௪) சந்து - சந்தனமரம்; பீலி - மயிற்றோகை; நிவவின் - நிவவு நதிக்கரையின் மீது; முழவம் - மத்தளம்; நட்டம் -

ஓமப் புகையு மகிலின் புகையு முயர்ந்து முகிலோயத்
தீமெய்த் தொழிலார் மறையோர் மல்கு சிற்றம் பலந்தன்னுள்
வாமத் தொழிலா ரெடுத்த பாத மழலைச் சிலம்பார்க்கத்
தீமெய்ச் சடைமேற் றிங்கள் சூடித் தேவ னாடுமே. (௫)

குரவங் கோங்கங் குளிர்புன்னை கைதை குவிந்த கரைகண்மேல்
திரைவந் துலவுந் தில்லை மல்கு சிற்றம் பலந்தன்னுள்
வரைபோன் மலிந்த மணிமண் டபத்து மறையோர் மகிழ்ந்தேத்த
அரவ மாட வனல்கை யேந்தி யழக னாடுமே. (௬)

சித்தர் தேவ ரியக்கர் முனிவர் தேனார் பொழிற்றில்லை
அத்தா வருளா யணியம் பலவா வென்றென் றவரேத்த
முத்து மணியு நிரந்த தலத்துண் முளைவெண் மதிசூடிக்
கொத்தார் சடைக ளாழ நட்டங் குழக னாடுமே. (௭)

அதித்த வரக்க னெரிய விரலா லடர்த்தா யருளென்று
துதித்து மறையோர் வணங்குந் தில்லைச் சிற்றம் பலந்தன்னுள்
உதித்த போழ்தி லிரவிக் கதிர்போ லொளிர்மா மணியெங்கும்
பதித்த தலத்துப் பவள மேனிப் பரம னாடுமே. (௮)

மாலோ டயனு மமரர் பதியும் வந்து வணங்கிநின்
றால கண்டா வரனே யருளா யென்றென் றவரேத்தச்
சேலா டும்வயற் றில்லை மல்கு சிற்றம் பலந்தன்னுள்
பாலா டுமுடிச் சடைக ளாழப் பரம னாடுமே. (௯)

நெடிய சமணு மறைசாக் கியரு நிரம்பாப் பல்கோடிச்
செடியுந் தவத்தோ ரடையாத் தில்லைச் சிற்றம் பலந்தன்னுள்
அடிக ளவரை யாரூர் நம்பி யவர்க ளிசைபாடக்
கொடியும் விடையு முடைய கோலக் குழக னாடுமே. (௰)

கூத்து. (௫) வாமத்து - இடது பாகத்தில்; மழலை - மென்மை. (௬) குரவம் - குராமலர்; கோங்கம் - கோங்கமலர்; கைதை - தாழை மலர். (௭) தேன் ஆர் - தேன்பொருந்திய; நிரந்த - நிரம்பிய; முளைமதி - இளந்திங்கள் (ஒற்றைக்கலைச்சந்திரன்) (௮) அதித்த - ஆரவாரித்த; பரமன் - மேலானவன். (௯) சேல் ஆடும் - சேல்கள் குதிக்கும்; பால் ஆடும் - பாலினால் அபிஷேகஞ் செய்யப்படும். (௰) நிரம்பா-அடையாமல்;செடியும்-குற்றம் பொருந்திய;கொடி-துவஜம்.

வானோர் பணிய மண்ணோ ரேத்த மன்னி நடமாடும்
தேனார் பொழில்சூழ் தில்லை மல்கு சிற்றம் பலத்தானைத்
தூநான் மறையா னமுத வாலி சொன்ன தமிழ்மாலைப்
பானேர் பாடல் பத்தும் பாடப் பாவ நாசமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## ௪-கோயில்.

---

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

கோல மலர்நெடுங்கட் கொவ்வைவாய்க்கொடி யேரிடையீர்
பாலினை யின்னமுதைப் பரமாய பரஞ்சுடரைச்
சேலுக ளும்வயல்சூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்
தேல்வுடை யெம்மிறையை யென்றுகொல் காண்பதுவே. (௧)

காண்பதி யானென்றுகொல் கதிர்மாமணி யைக்கனலை
ஆண்பெண் ணருவுருவென் றறிதற்கரி தாயவனைச்
சேண்பணை மாளிகைசூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பலம்
மாண்புடை மாநடஞ்செய் மறையோன்மலர்ப் பாதங்களே. (௨)

கள்ளவிழ் தாமரைமேற் கண்டயனொடு மால்பணிய
ஒள்ளெரி யின்னடுவே யுருவாய்ப்பரந் தோங்கியசீர்த்
தெள்ளிய தண்பொழில்சூழ் தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்
துள்ளெரி யாடுகின்ற வொருவனை யுணர்வரிதே. (௩)

அரிவையோர் கூறுகந்தா னழகன்னெழின் மால்கரியின்
உரிவைநல் லுத்தரிய முகந்தானும்ப ரார்தம்பிரான்
புரிபவர்க் கின்னருள்செய் புலியூர்த்திருச் சிற்றம்பலத்
தெரிமகிழ்ந் தாடுகின்ற வெம்பிரானென் னிறையவனே. (௪)

---

(௧) எல்வுஉடை - எழுந்தருளியிருத்தலையுடைய. (௨) பணை - பருத்த. (௩) கள் - தேன். (௪) மால்கரி - பெரியயானை. (௫) உயிர்ப்

இறைவனை யென்கதியை யென்னுளே யுயிர்ப் பாகிநின்ற
மறைவனை மண்ணும் விண்ணு மலிவான்சுட ராய்மலிந்த
சிறையணி வண்டறையுந் தில்லைமாநகர்ச் சிற்றம்பலம்
நிறையணி யாமிறையை நினைத்தேனினிப் போக்குவனே. (௫)

நினைத்தேனினிப் போக்குவனோ நிமலத்திர ளைநினைப்பார்
மனத்தினு ளேயிருந்த மணியைமணி மாணிக்கத்தைக்
கனைத்திழி யுங்கழனிக் கனகங்கதி ரொண்பவளம்
சினத்தொடு வந்தெறியுந் தில்லைமாநகர்க் கூத்தனையே. (௬)

கூத்தனை வானவர்தங் கொழுந்தைக்கொழுந் தாயெழுந்த
மூத்தனை மூவுருவின் முதலைமுத லாகிநின்ற
ஆத்தனைத் தான்படைக்கு மந்தணர்தில்லை யம்பலத்துள்
ஏத்தநின் றாடுகின்ற வெம்பிரானடி சேர்வன்கொலோ. (௭)

சேர்வன்கொ லோவன்னைமீர் திகழும்மலர்ப் பாதங்களை
ஆர்வங்கொ ளத்தழுவி யணிநீறென் முலைக்கணியச்
சீர்வங்கம் வந்தணவுந் தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்
தேர்வங்கை மான்மறிய னெம்பிரானென்பொ னேசனையே. (௮)

நேசமு டையவர்க ணெஞ்சுளேயிடங் கொண்டிருந்த
காய்சின மால்விடையூர் கண்ணுதலைக் காமருசீர்த்
தேசமி குபுகழோர் தில்லைமாநகர்ச் சிற்றம்பலத்
தீசனை யெவ்வுயிர்க்கு மெம்மிறைவனென் றேத்துவனே. (௯)

இறைவனை யேத்துகின்ற விளையாண்மொழி யின்றமிழால்
மறைவல நாவலர்கண் மகிழ்ந்தேத்துசிற் றம்பலத்தை
அறைசெந்நெல் வான்கரும்பி னணியாலைகள் சூழ்மயிலை
மறைவல வாலிசொல்லை மகிழ்ந்தேத்துக வானெளிதே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

பாகி - உசுவாசநிசுவாசமாகி. (௭) மூத்தனை - மூப்பனை. (௮) வங்கம் - மரக்கலம்; ஏர்வுஅம்கை - எழுச்சியையுடைய அழகியகரம்; பொநேசன் - புவநேசன். (௯) காமர்சீர் - அழகிய சிறப்புவாய்ந்த. (௰) அறை - ஒலி.

# புருடோத்தமநம்பி திருவிசைப்பா.

## க. கோயில்.

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வாரணிநறுமலர்வண்டுகிண்டு பஞ்சமஞ்செண்பகமாலைமாலை, வாரணி வனமுலை மெலியும்வண்ணம் வந்துவந்திவை நம்மைமயக்குமாலோ சீரணிமணிதிகழ் மாடமோங்கு தில்லையம்பலத்தெங்கள் செல்வன்வாரான், ஆரெனையருள்புரிந் தஞ்சலென்பா ராவியின் பரமென்றனு தரவே. (க)

ஆவியின் பரமென்ற னுதரவு மருவினை யேனைவிட் டம்மவம்ம பாவிவன்மனமிதுபையவேபோய்ப்பனிமதிச்சடையான்பாலதாலோ நீவியு நெகிழ்ச்சியு நிறையழிவு நெஞ்சமுந் தஞ்சமி லாமையாலே ஆவியின் வருத்தமி தாரறிவா ரம்பலத் தருநட மாடுவானே. (உ)

அம்பலத் தருநட மாடவேயு மியாது கொல் விளைவதென் றஞ்சிநெஞ்சம், உம்பர்கள்வன்பழி யாளர்முன்னேயூட்டினர்நஞ்சையென் றேயுமுய்யேன், வன்பலபடையுடைப்பூதஞ்சூழவானவர்கணங்களை மாற்றியாங்கே,என்பெரும் பயலைமை தீரும்வண்ண மெழுந்தரு ளாயெங்கள் வீதியூடே. (௩)

எழுந்தருளாயெங்கள் வீதியூடேயேதமின்முனிவ ரொடெழுந்த ஞானக், கொழுந்தது வாகிய கூத்தனேநின் குழையணி காதினின்மாத்திரையும், செழுந்தட மலர்புரை கண்கண்மூன்றுஞ் செங்கனி வாயுமென் சிந்தைவௌவ, வழுந்துமென் னுருயிர்க் கென்செய்கேனோ வரும்புன லலமருஞ் சடையினனே. (ச)

---

(க) வார் - நீர்; கிண்டு - பாடு; பஞ்சமம் - பஞ்சமப்பெண்; மாலை (பின்னையது) - மாலைக்காலம்; பரம் - தாரகம். (உ) ஆதரவும் - ஆசையும்; நீவியும் - ஒட்டியாணமும்; அழிவும் - கேடும். (௩) மாற்றி - ஒழித்து; பயலைமை - பசலைத்தன்மை. (ச) மாத்திரை - ஓர்வித

அரும்புன லலமருஞ் சடையினனை யமரர்க ளடிபணிந் தரற்றவந் நாள், பெரும்புர மெரிசெய்த சிலையின்வார்த்தை பேசவு நைடிமென் பேதைநெஞ்சம், கருந்தட மலர்புரை கண்டவண்டார் காரிகை யார் முன்பென்பெண்மைதோற்றேன், திருந்திய மலரடி நசையினலே தில்லையம்பலத்தெங்க டேவதேவே. (ரு)

தில்லையம் பலத்தெங்க டேவதேவைத் தேறிய வந்தணர் சிந்தைசெய் யும், எல்லைய தாகிய வெழில்கொள்சோதியென்னுயிர் காவல்கொண் டிருந்தவெந்தாய், பல்லையார் பசுந்தலை யோடிடறிப் பாதமென்மல ரடி நோவநீபோய், அல்லினி லருநட மாடிலெங்க ளாருயிர்காவலிங் கரிதுதானே. (சு)

ஆருயிர் காவலிங் கருமையாலே யந்தணர் மதலைநின் னடிபணியக் கூர்நுனைவேற்படைக்கூற்றஞ்சாயக் குரைகழல் பணிகொள மலைந்த தென்றல், ஆரினி யமரர்கள்குறைவிலாதா ரவரவர் படுதுயர்களைய நின்ற, சீருயி ரேயெங்க டில்லைவாண சேயிழை யார்க்கினி வாழ் வரிதே. (எ)

சேயிழையார்க்கினிவாழ்வரிதுதிருச்சிற்றம்பலத்தெங்கள்செல்வனே நீ,தாயினுமிகநல்லையென்றடைந்தேன்றனிமையைநினைகிலைசங்கரா வுன், பாயிரும்புலியதளின்னுடையும்பையமேலெடுத்தபொற்பாதமு ங்கண், டேயிவளிழந்ததுசங்கமாவாளெங்களையாளுடையீசனேயோ.

எங்களை யாளுடையீசனேயோவிளமுலைமுகநெகமுயங்கி நின்பொற் பங்கயம் புரைமுக நோக்கிநோக்கிப் பணிமதிநிலவதென் மேற்படரச் செங்கயல்புரை கண்ணிமார் கண்முன்னே திருச்சிற்றம்பல முடனே புகுந்து, அங்குனபணிபலசெய்து நாளு மருள்பெறினகலிடத்திருக்க லாமே. (க)

அருள்பெறின கலிடத்திருக்கலாமென்றமரர்கடலைவ னுமயனுமாலும் இருவரு மறிவுடையாரின்மிக்கா ரேத்துகின்று ரின்னமெங்கள்கூத்

காதணா. (ரு) வார்த்தை - புகழ். (சு) தேறிய - உள்ளந்தெளிந்த. (எ) மதலை - மார்க்கண்டன்; கூற்றம் - யமன்; மலைந்தது - உதைத் தது; சீர்உயிரே - பரமாத்மாவே. (அ) அதள் - தோல்; சங்கம்-வளை யல். (க) நெக - அமுங்க; முயங்கி - அணைந்து; மதிநிலவு - சந்திர கிரணம்; அகல்இடம் - நிலவுலகம். (ω) இருவரும் - பதஞ்சலிவியாக்

மைத, மருள்படு மழலைமென்மொழி யுமையாள் கணவனை வல்வினை யாட்டியேனுன், அருள்பெற வலமரு நெஞ்சமாவா வாசையை யள வறுத்தாரிங்காரே. (௰)

ஆசையை யளவறுத்தாரிங்காரேயம்பலத்தருநடமாடுவானை, வாசநன் மலரணிகுழன் மடவார் வைகலுங் கலந்தெழு மாலைப்பூசல், மாசிலா மறைபலவோதுநாவன்வண்புருடோத்தமன்கண்டுரைத்த,வாசகமலர் கள்கொண் டேத்தவல்லார் மலைமகள் கணவனை யணைவர்தாமே.(௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## உ - கோயில்.

---

### பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

வானவர்கள் வேண்ட வளர்நஞ்சை யுண்டார்தாம்
ஊனமிலா வென்கை யொளிவளைகள் கொள்வாரோ
தேனல்வரி வண்டறையுந் தில்லைச்சிற் றம்பலவர்
நானமரோ வென்றுதே நாடகமே யாடுவரே. (௧)

ஆடிவருங் காரரவு மைம்மதியும் பைங்கொன்றை
சூடிவரு மாகண்டேன் றோள்வளைக டோற்றாலும்
தேடியிமை யோர்பரவுந் தில்லைச்சிற் றம்பலவர்
ஆடிவரும் போதருகே நிற்கவுமோ வொட்டாரே. (௨)

ஒட்டா வகையவுணர் முப்புரங்க ளோரம்பால்
பட்டாங் கழல்விழுங்க வெய்துகந்த பண்பினார்
சிட்டார் மறையோவாத் தில்லைச்சிற் றம்பலவர்
கொட்டா நடமாடக் கோல்வளைகள் கொள்வாரே. (௩)

---

கிரபாதரும். (௧௧) மாலைப்பூசல் - மாலைக்காலத்துப்போர், அதாவது அந்திவானம் முதலியவற்றை நோக்கி மாதர் இரங்குதல்.

(௧) கொள்வாரோ-கவர்வாரோ;வரிவண்டு-இசைப்பாட்டுடைய வண்டுகள். (௨) தோள்வளைகள் - கேயூர முதலிய அணிகள். (௩) ஒட்டா-பொருந்தாத; கொட்டா-கைகொட்டி. (௪) இவை படுவார் -

ஆரேயிவை படுவா ரையங் கொளவந்து
போரேடி யென்று புருவ மிடுகின்றார்
தேரார் விழவோவாத் தில்லைச்சிற் றம்பலவர்
தீராநோய் செய்வாரை யொக்கின்றார் காணீரே. (௪)

காணீரே யென்னுடைய கைவளைகள் கொண்டார்தாம்
சேணார் மணிமாடத் தில்லைச்சிற் றம்பலவர்
பூணார் வனமுலைமேற் பூவம்பாற் காமவேள்
ஆணாடு கின்றவா கண்டு மருளாரே. (௫)

ஏயிவரே வானவர்க்கும் வானவரே யென்பாரால்
தாயிவரே யெல்லார்க்குந் தந்தையுமா மென்பாரால்
தேய்மதியஞ் சூடிய தில்லைச்சிற் றம்பலவர்
வாயின கேட்டறிவார் வையகத்தா ராவாரே. (௬)

ஆவா விவர்தந் திருவடிகொண் டந்தகன்றன்
மூவா வுடலவியக் கொன்றுகந்த முக்கண்ணர்
தேவா மறைபயிலுந் தில்லைச்சிற் றம்பலவர்
கோவா வினவளைகள் கொள்வாரோ வென்னையே. (௭)

என்னை வலிவாரா ரென்ற விலங்கையர்கோன்
மன்னு முடிக ணெரித்த மணவாளர்
செந்நெல் விளைகழனித் தில்லைச்சிற் றம்பலவர்
முன்னந்தான் கண்டறிவா ரொவ்வாரிம் முத்தரே. (௮)

முத்தர் முதுபகலே வந்தென்ற னில்புகுந்து
பத்தர் பலியிடுக வென்றெங்கும் பார்க்கின்றார்
சித்தர் கணம்பயிலுந் தில்லைச்சிற் றம்பலவர்
கைத்தலங்கள் வீசிநின் றாடுங்கா ணேக்காரே. (௯)

---

இத்துன்பங்களை அநுபவிப்பார்; புருவ மிடுகின்றார் - கண் வைக்கின்றார். (௫) ஆண் நாடுகின்றவாறு - ஆண்மை செலுத்துவதைப் பார்த்தும். (௬) ஏய் - பொருந்திய; தேய்மதி - ஒருகலைச் சந்திரன்; வாயின் - வாய்மொழியாகிய வேத சிவாகமங்கள். (௭) மூவா - முதிராத; தேவு ஆம் - தெய்வத்தன்மை பொருந்திய; கோவா - கோத்த; இனம் - கூட்டம். (௮) முத்தர் - பாசத்தினின்றும் நீங்கினவர். (௯) முதுபகல் - உச்சிக்காலம்; பலி - பிச்சை; கைத்-

நோக்காத தன்மையா னோக்கிலோ மியாமென்று
மாற்காழி யீந்து மலரோனை நிந்தித்துச்
சேக்காத லித்தேறுந் தில்லைச்சிற் றம்பலவர்
ஊர்க்கேவந் தென்வளைகள் கொள்வாரோ வொண்ணுதலீர். (௰)

ஒண்ணுதலி காரணமா வும்பர் தொழுதேத்தும்
கண்ணுதலான் றன்னைப் புருடோத்த மன்சொன்ன
பண்ணுதலைப் பத்தும் பயின்றாடிப் பாடினார்
எண்ணுதலைப் பட்டங் கினிதா விருப்பாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

## சேதிராயர் திருவிசைப்பா.

### கோயில்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

சேலு லாம்வயற் றில்லையு ளீருமைச்
சால நாளயன் சார்வதி னாலிவள்
வேலை யார்விட முண்டுகந் தீரென்று
மாலை தாகுமென் வாணு தலே. (௧)

வாணு தற்கொடி மாலது வாய்மிக
நாண மற்றன ளானறி யேனினிச்
சேணு தற்பொலி தில்லையு ளீருமைக்
காணி லெய்ப்பிலள் காரி கையே. (௨)

---

தலங்கள் - கைகள். (௰) சே - இடபம்; ஒண்நுதல் - அழகிய நெற்றி. (௧௧) பண்நுதல் - பண்களோடு கூடிய; எண்ணுதலைப் பட்டு - மதிக்கப்பட்டு; அங்கு - சிவலோகம்.

(௧) வாள்நுதல் - ஒளிபொருந்திய நெற்றியையுடையவள். (௨) எய்ப்பு - மெலிவு. (௩) வேரி - வாசனை. (௪) செம்மலோர் - பெரு

காரி கைக்கரு ளீர்கரு மால்கரி
ஈரு ரித்தெழு போர்வையி னீர்மிகு
சீரி யற்றில்லை யாய்சிவ னேயென்று
வேரி நற்குழ லாளிவள் விம்முமே. (௩)

விம்மி விம்மியே வெய்துயிர்த் தாளுறு
உம்மை யேநினைந் தேத்துமொன் றுகிலள்
செம்ம லோர்பயி றில்லையு ளீரெங்கள்
அம்ம லோதி யயர்வு றுமே. (௪)

அயர்வுற் றஞ்சலி கூப்பியந் தோவெனை
உயவுன் கொன்றையந் தாரரு ளாயெனும்
செயலுற் றார்மதிற் றில்லையு ளீரிவண்
மயலுற் றுளென்றன் மாதி வளே. (௫)

மாதொர் கூறன்வண் டார்கொன்றை மார்பனென்
றோதி லுய்வனென் பைங்கிளி யேயெனும்
சேதித் தீர்சிர நான்முக னைத்தில்லை
வாதித் தீரென் மடக்கொடி யையே. (௬)

கொடியைக் கோமளச் சாதியைக் கொம்பிளம்
பிடியை யென்செய்திட் டீர்பகைத் தார்புரம்
இடியச் செஞ்சிலை கால்வளைத் தீரென்று
முடியு நீர்செய்த மூச்ச றவே. (௭)

அறவ னேயன்று பன்றிப்பி னேகிய
மறவ னேயெனை வாதைசெய் யேலெனும்
சிறைவண் டார்பொழிற் றில்லையு ளீரெனும்
பிறைகு லாநுதற் பெய்வ ளையே. (௮)

---

மையுடையோர்; அம்மல்ஓதி – அழகிய வளம்பொருந்திய கூந்தலை யுடையவள். (௫) செயல்உற்று-நுட்பமாகிய தொழில்கள் அமைந்து. (௬) வாதித்தீர் – வருததினீர். (௭) கோமளச்சாதியை - மெல்லியலை; முடியும் – இறந்துபடுவள்; நீர் – நல்லகுணம். (௮) சிறைவண்டு – சிறகுகளுடையவண்டு; குலாம் – பிரகாசிக்கிற; பெய்வளை – இடப் பட்ட வளையல்களையுடையவள். (௯) கோள்இழைத்தீர் – உதைத்

அன்ற ருக்கனைப் பல்லிறுத் தானையைக்
கொன்று காலனைக் கோளிழைத் தீரெனும்
தென்ற லார்பொழிற் றில்லையு ளீரிவள்
ஒன்று மாகில ளும்பொ ருட்டே. (௯)

ஏயு மாறெழிற் சேதியர் கோன்றில்லை
நாய னாரை நயந்துரை செய்தன
தூய வாறுரைப் பார்துறக் கத்திடை
ஏய வின்ப மெய்தியி ருப்பரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

ஆகத் திருப்பதிகம் - ௨௮.

திருவிசைப்பா முற்றுப்பெற்றது.



---

தீர்; ஒன்றும்ஆகிலள். ஒருபொருளுமாகிலள். (௰) துறக்கம் - சிவலோகம்; இன்பம் - பேரின்பம்.

உ

சிவமயம்.

சேந்தனாருளிச்செய்த

# திருப்பல்லாண்டு.

## கோயில்.

பண் - பஞ்சமம்.

திருச்சிற்றம்பலம்.

மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள் வஞ்சகர் போயகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்துபுவனியெல்லாம்விளங்க
அன்ன நடைமட வாளுமை கோனடி யோமுக் கருள்புரிந்து
பின்னைப் பிறவி யறுக்க நெறிதந்தபித்தற்குப்பல்லாண்டுகூறுதுமே.

மிண்டு மனத்தவர் போமின்கண் மெய்யடியார்கள் விரைந்துவம்மின்
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி யீசற்காட்செய்மின் குழாம்புகுந்
தண்டங் கடந்த பொருளள வில்லதோ ரானந்த வெள்ளப்பொருள்
பண்டுமின்றுமென்று முள்ளபொருளென்றேபல்லாண்டுகூறுதுமே.

நிட்டையி லாவுட லீத்தென்னை யாண்ட நிகரிலா வண்ணங்களும்
சிட்டன் சிவனடி யாரைச்சீ ராட்டுந் திறங்களு மேசிந்தித்
தட்ட மூர்த்திக்கென் னகநெக வூறு மமிர்தினுக் காலநிழல்
பட்டனுக்கென்னைத் தன்பாற் படுத்தானுக்கேபல்லாண்டுகூறுதுமே.

---

(க) போய் - நீங்கி; பின்னைப்பிறவி - இனிமேல் வரக்கடவதாகிய பிறவி; நெறி - முத்திநெறி, சித்தாந்த ஞானமார்க்கம். (உ) மிண்டுமனத்தவர் - மாறுபடுகின்ற மனத்தையுடையவர்; குடிகுடி - வழிவழி; பண்டும் இன்றும் என்றும் - முற்காலத்தும் இக்காலத்தும் எக்காலத்தும்; உள்ள - நித்தியமாயுள்ள; பொருள் - வஸ்து, சத்தாகிய பொருள். (ங) வண்ணங்கள் - விதங்கள்; பட்டன் - வேதியன்,

சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்ததூய் மனத்தொண்டருள்
சில்லாண் டிற்சிதை யுஞ்சில தேவர் சிறுநெறி சேராமே [ளீர்
வில்லாண் டகன கத்திரண் மேருவில் விடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

புரந்தரன் மாலயன் பூசலிட் டோலமிட் டின்னம் புகலரிதாய்
இரந்திரந்தழைப்பவென் னுயிராண்ட கோவினுக்கென்செயவல்லமெ
கரந்துங் கரவாத கற்பக னாகிக் கரையில் கருணைக்கடல் [ன்றும்
பரந்து நிரந்தும் வரம்பிலாப் பாங்கற்கே பல்லாண்டு கூறுதுமே. (௫)

சேவிக்க வந்தய னிந்திரன் செங்கண்மா லெங்குந் திசைதிசையன
கூவிக் கவர்ந்து நெருங்கிக் குழாங்குழா மாய்நின்று கூத்தாடும்
ஆவிக் கமுதையென் னார்வத் தனத்தினை யப்பனை யொப்பமரர்
பாவிக்கும் பாவகத் தப்புறத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. (௬)

சீருந்திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத வறிவுபெற் றேன்பெற்ற தார்பெறு வாருலகில்
ஊரு முலகுங் கழற வுழறி யுமைமண வாளனுக்காள்
பாரும் விசும்பு மறியும் பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே. (௭)

சேலுங் கயலுந் திளைக்குங்கண் ணாரிளங் கொங்கையிற்செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்குமென்று புண்ணியர்போற்றிசைப்ப
மாலு மயனு மறியா நெறிதந்து வந்தென் மனத்தகத்தே
பாலு மமுதமு மொத்துநின் றானுக்கே பல்லாண்டு கூறுதுமே. (௮)

---

பிரதமாசாரியன், தக்ஷிணாமூர்த்தி. (௪) சொல்லாண்ட-புகழ்பெற்ற; சிதையும்-அழியும்; வில்ஆண்ட-ஒளியையுடைய; விடங்கன்-அழகன்; பதம்-சொல். (௫) கற்பகன் ஆகி-கற்பகம்போல்பவனாகி; வரம்பு-எல்லை; பாங்கன் - தோழன், நன்மை செய்பவன். (௬) திசைதிசையன - திசைகள்தோறும்; கவர்ந்து - தழுவி; ஆர்வம் தனத்தினை - விருப்பம் பொருந்திய செல்வத்தினை; பாவிக்கும் பாவகத்து - சிந்திக்கும் சிந்தனைக்கு. (௭) ஊரும் - ஊரிலுள்ளாரும்; உலகும் - உலகத்திலுள்ளாரும்; கழற - புகழ்ந்துபேச; உழறி - குழறி; ஆள் - அடிமை; அறியும்பரிசு - அறியும்வண்ணம். (௮) திளைக்கும் - நெருங்கியிருப்பது போல; பொடி - திருவெண்ணீறு; போற்றிசைப்ப - புகழ, துதிக்க. (௯) பாலன் - உபமன்யு பகவான்; ஆலிக்

பாலுக்குப் பாலகன் வேண்டி யழுதிடப் பாற்கட லீந்தபிரான்
மாலுக்குச் சக்கர மன்றருள் செய்தவன் மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கு மந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே யிடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே பல்லாண்டு கூறுதுமே. (௯)

தாதையைத் தாளற வீசிய சண்டிக்கு மண்டத் தொடுமுடனே
பூதலத் தோரும் வணங்கப்பொற் கோயிலும்போனக முமருளிச்
சோதி மணிமுடித் தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே. (௰)

குழலொலியாழொலிகூத்தொலியேத்தொலியெங்குங்குழாம்பெருகி
விழவொலி விண்ணள வுஞ்சென்று விம்மி மிகுதிரு வாரூரின்
மழவிடை யாற்கு வழிவழி யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழவடி யாரொடுங் கூடியெம் மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

ஆரார் வந்தா ரமரர் குழாத்தி லணியுடை யாதிரைநாள்
நாரா யணனொடு நான்முக னங்கி யிரவியு மிந்திரனும்
தேரார் வீதியிற் றேவர் குழாங்க டிசையனைத் துநிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியு மாடியும் பல்லாண்டு கூறுதுமே. (௧௨)

எந்தையெந் தாய்சுற்றமுற்றுமெமக்கமுதாமெம்பி ரானென்றென்று
சிந்தைசெய் யுஞ்சிவன் சீரடி யாரடி நாய்செப்புரை [மேல்
அந்தமி லானந்தச் சேந்தனெ னைப்புகுந் தாண்டுகொண் டாருயிர்
பந்தம் பிரியப் பரிந்தவ னேயென்று பல்லாண்டு கூறுதுமே. (௧௩)

திருச்சிற்றம்பலம்.

---

திருப்பல்லாண்டு முற்றுப்பெற்றது.

---

குும் - களிப்படைந்திருக்கும்; பாலித்து - கொண்டு. (௰) அண்டத் தொடும் - தேவர்களோடும்; போனகம் - சோறு; தாமம் - மாலை; வைத்தான் - கொடுத்தான். (௧௧) விம்மிமிகு - மேன்மேலும் அதிகரிக்கிற. (௧௨) பாரார் - பூமி முழுதும் நிறைந்த. (௧௩) அடிநாய் - அடிமைசெய்யும் நாயேன்; உயிர்மேல் - உயிரைப் பொருந்திய; பந்தம் - பிறவித்தளை; பரிந்தவனே - கருணை செய்தவனே.

# திருவிசைப்பா

# திருப்பாசுர முதற்குறிப் பகராதி.



# திருப்பல்லாண்டு





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# பத்தாந் திருமுறை.

## என்னும்

# * திருமந்திரம் மூவாயிரம்.

இந்த ஞான நூலாகிய திருமுறையை யருளிச்செய்தவர் திருமூலநாயனர். இவர் சிறப்பரச் செல்வர்களாகிய உண்மை நாயன்மார் அறுபத்து மூவருளொருவர். இவர் ஸ்ரீ கைலாசத்திலே திருநந்திதேவரது திருவருள் பெற்றுச் சிவயோகியராய் வீற்றிருந்தபோது பொதிகைமலையில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ அகஸ்திய மஹாமுனிவரைக் காணும்பொருட்டு ஸ்ரீ கயிலையங்கிரியினின்றும் நீங்கித் தென் தேசத்தை நோக்கிச் சென்றனர். மார்க்கத்தில் காவிரி

* தமிழில் **திருமந்திரம்** எனற்பாலதே வடமொழியில் **ஸ்ரீ மந்த்ர மாலிகா** எனப்படும். திரு என்னும் பல பொருளொரு சொல் மேன்மையுடைய எப்பொருட்கும் விசேஷண மொழியாகி அவற்றிற்கு முன்னே மகிமைப்பொருளை யுணர்த்திவரும். "ஸ்ரீ என்பது ருக், யஜுர், ஸாமம் என்னும் மூன்றுவேதங்களின் மேற்று. அந்த ஸ்ரீயானது சத்துக்களுக்கு அமிர்தமாயிருப்பதன்றோ." என்று தைத்திரீயப் ப்ராஹ்மணம் புகன்றபடி, இத்திருமந்திரத்தில் இம்மூன்று வேதங்களின் முடிந்தபொருள்களும், ஆகமங்களின் நுண்ணிய உண்மைப் பொருள்களும் செறிந்து கிடக்கின்றமையால் வடமொழியில் இப்பெயர் போந்தது. எல்லா வேதங்களையும் ஆகமங்களையும் நன்குணர்ந்து தம் ஞானனந்த நிஷ்டையிலும் அவற்றை அஞ்ஞானம், சந்தேகம், விபரீதமறக்கண்டவர் நம் திருமூலத் தேவராதலால் அவர் அருளிச்செய்த இத்திருமுறைக்கு இப்பெயர் மிகவும் பொருத்தமுடையதே. **மந்திரம்** என்பதின் பொருள் தன்னை மநநம் பண்ணுபவனைக் காப்பதென்பது. மந்-மநநம், திரம் - காப்பது.

நதி சூழ்ந்த சாத்தனூரில் **மூலன்** என்னும் இடையன் வினைவயத்தால் இறந்து கிடப்பதையும், அவனைச் சுற்றி ஆவினங்கள் கதறிக் கதறிப் புலம்பித் துயரப்பட்டுக் கொண்டிருப்பதையுங் கண்டு, மனம் பொறுது அன்பினாலே உள்ளமுருகி, அவற்றின் துயரத்தையகற்றுவான் தமது திருமேனியைச் சேமித்துவைத்து, அவனுடலிற் பிரவேசித்துத் **திருமூலராய்** எழுந்து நின்றனர். உடனே அப்பசுக்களெல்லாம் அவரைப்பார்த்துச் சந்தோஷ மிகுதியாற் கனைத்துத் துள்ளியோடின. பின்னர் திருமூலர் அவ்வுடம்போடிருந்து திருவாவடுதுறை என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தையடைந்து ஓரரச மரத்தடியில் மூவாயிர வருஷம் சிவராஜயோக ஞான நிஷ்டையிலிருந்து, வருஷத்திற்கொரு மந்திரமாக மூவாயிரம் மந்திரங்களாலாய **இத்திருமந்திர மாலையைத்** திருவாய்மலர்ந்தருளினார். ஆதலால், இத்திருமந்திரம் இவரது தவத்தின் பயனாக விளங்கிக்கொண்டிருக்கின்ற தெனலாம். இவர் தமது பரமசிவ தியான நிஷ்டையிலே அசவுணர்ச்சியில் அநுபவித்துச் சுகித்த மெய்த்தோற்றங்களையே அரியபெரிய மந்திரங்களாக உலகுக்குதவினர். ஆதலின், இது சர்வ வேதங்களுக்கும் ஆகமங்களுக்கும் உட்கிடையாயுள்ள வேதாந்த பரம ரஹஸியமாகவும், வேதோக்தாகம பரமபவித்திரமாகவும் பாவிக்கப்பட்டு வருகின்றதென்பது ஒருதலை.

இந்தத் **திருமந்திர மாலையானது** சிறப்புப்பாயிரம் நீங்கலாக ஒன்பது தந்திரங்களாய் வகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு தந்திரத்திலும் அனேக அத்தியாயங்கள் உள. அவ்வத்தியாயங்களும் தலைக்குறிப்போடு தெளிவாக விளக்கப்பட்டுள்ளன. அவ்வத்தியாயங்களுக்கு இன்றியமையாது வேண்டப்படும் வேறு சில விஷயங்களையுஞ் சேர்த்துச் சுருங்கச்சொல்லி விளங்க வைத்துள்ளன. தலைப்பில் காட்டியுள்ள குறிப்பினாலேயே அத்தியாயங்கள், விஷயங்கள் ஆகிய இவற்றின் நோக்கங்கள் கரதலாமலகம் போல் நன்குணரக் கிடக்கின்றன. மோக்ஷாபேக்ஷையுடைய புண்ணியசீலர்களொவ்வொருவரும் இதிற் கூறப்பட்டுள்ள சாதன முறைகளை இடையறா ஊக்கத்தோடு பயிற்சிசெய்து அநுஷ்டித்து வருவாராயின் அவர்கள் மும்மலச் சுழலினின்றும் நீங்கி, மெய்யுணர்வு பெற்றுச் சிவஞானம் மேலிட்டுப் பேரின்பப் பெருவெள்ளத்தில்

வாழ்குவார்களென்பதற்கு யாதொரு ஐயமுமின்று. இது சத்தியம்! முக்காலுஞ் சத்தியம்!!

இத்திருமூலர் மரபில் வந்தவரே நந்**தாயுமான சுவாமிகள்.** இவர் கொள்கை ஆசிரியர் கொள்கைக்குச் சிறிதும் மாறுபாட்டிலது. அங்ஙனமிருந்தும், சைவத்திறத்தின் நுட்பத்தை நுனித்த மதி கொண்டு அறியாத சிலர் கேவலாத்வைத சித்தாந்த முடிபுகளையே சுவாமிகள் தம்பாடலில் ஆங்காங்கு மொழிந்துள்ளாரென்றும், அம் முடிபுகள் சிவஞானபோத முதலிய சித்தாந்த நூல்களுக்கு வெகு தூரமென்றும், வேறு சிலர் முத்தித்திறத்தில் மாத்திரம் இரண்டும் அபேதமென்றும் பிதற்றித் திரிகின்றார்கள். சித்தாந்த சாஸ்திர மெய்யுணர்வு இல்லாக் குறைவே இவர்களை இவ்வண்ணம் புகலும் படிச் செய்கின்றது. கேவலாத்வைத முத்தி ஆன்ம பரிபூரண மெய்தல். சித்தாந்தமுத்தி சிவபரிபூரண மெய்தல். இவ்விரண்டுக்கும் பேதம் பெரிது. இவ்வுண்மையை உண்மை வேதாந்திகளாகிய சித்தாந்த சைவர்பாற் கேட்டுத் தெளிக:

"மூவர் தமிழும் முனிமொழியும்—கோவைத், திருவாசகமும் திருமூலர் சொல்லும், ஒரு வாசகமென் றுணர்" என்னும் ஔவை வாக்கையும், "கற்றதுங் கேட்டதுந் தானே யேதுக்காகக், கடபட மென்றுருட்டுதற்கோ கல்லாலெம்மான், குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக்கண்டு, குணங்குறியற் றின்பநிட்டை கூடவன்றோ," என்னும் தாயுமானவர் வாக்கையும் இனியாவது கவனித்துய்வார்க ளாக. திருமூலர் மரபு **வேதாந்த சித்தாந்தம்** என்னும் **வைதிக சைவமே.** அதுவே **சமரசம்;** அன்பு மார்க்கம். அதுதான் இரண்டு ஒன்று என்னுமோர் மானத விகற்பமறவென்று நிற்பது. கேவலாத் வைத கொள்கை ஜீவாத்மா பரமாத்மா என்பவை சொல் மாத்திரமே யன்றி தனிமுதற் பொருள்களல்ல வென்பதாம்.

திருமூலர் இம்மூவாயிரஞ் செய்யுளன்றி **வைத்தியத்திலும்** கஉ௰, ௩௯ என்னுங் கோவைகளையுஞ் செய்திருக்கின்றனர்.

**இவர் திருநட்சத்திரம் ஐப்பசிமாதம் அசுவனி.**

சோ. சிவ அ.

## திருத்தொண்டர் திருவந்தாதி.

குடிமன்னு சாத்தனூர்க் கோக்குல மேய்ப்போன் குரம்பைபுக்கு
முடிமன்னு கூனற் பிறையாளன் றன்னை முழுத்தமிழின்
படிமன்னு வேதத்தின் சொற்படி யேபர விட்டெனுச்சி
அடிமன்ன வைத்தபிரான் மூலனு கின்ற வங்கணனே.

## திருத்தொண்டர் புராணசாரம்.

கயிலாயத் தொருசித்தர் பொதியிற் சேர்வார்
காவிரிசூழ் சாத்தனூர்க் கருதுமூலன்
பயிலாநோ யுடன்வீயத் துயர நீடும்
பசுக்களைக்கண் டவனுடலிற் பாய்ந்துபோத
அயலாகப் பண்டையுட லருளான் மேவி
ஆவடுதண் டுறையாண்டுக் கொருபாவாகக்
குயிலாரு மரசடியி லிருந்து கூறிக்
கோதிலா வடகயிலை குறுகினாரே.

## திருமுறைகண்ட புராணம்.

ஆகவளர் திருமுறையே ழருட்டிருவா சகமொன்று
மோகமெறி திருவிசைப்பா மாலைமுறை யொன்றுசிவ
போகமிகு மந்திரமா முறையொன்று புகழ்பெறவே
பாகமிகுந் திருமுறைகள் பத்தாக வைத்தார்கள்.

திருச்சிற்றம்பலம்.



சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# திருமந்திரத் திரட்டு



## விநாயகர் காப்பு.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தி னிளம்பிறை போலு மெயிற்றனை
நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

## சிறப்புப்பாயிரம்.

போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குட்டென் றிசைக்கொரு வேந்தனும்
கூற்றுதைத் தானையான் கூறுகின் றேனே. (௧)

ஒன்றவன் றானே யிரண்டவ னின்னருள்
நின்றனன் மூன்றினு ணான்குணர்ந் தானைந்து
வென்றனை னாறு விரிந்தன னேழும்பர்ச்
சென்றவன் றானிருந் தானுணர்ந் தெட்டே. (௨)

ஒக்கநின் றானை யுலப்பிலி தேவர்கள்
நக்குநின் றேத்திடு நாதனை நாடொறும்
பக்கநின் றாறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே. (௩)

சிவனொ டொக்குந் தெய்வந் தேடினு மில்லை
அவனொடொப் பாரிங் கியாவரு மில்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னும்
தவளச் சடைமுடித் தாமரை யானே. (௪)

அவனை யொழிய வமரரு மில்லை
அவனன்றிச் செய்யு மருந்தவ மில்லை
அவனன்றி மூவரா லாவதொன் றில்லை
அவனன்றி யூர்புகு மாறறி யேனே. (௫)

முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்று மில்லாத் தலைமகன்
தன்னையப் பாவென்னி லப்பனு மாயுளன்
பொன்னையொப் பாகின்ற போதகத் தானே. (௬)

தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினு மீச னருளறி வாரில்லை
சேயினு நல்ல னணியனல் லன்பர்க்குத்
தாயினு நல்லனற் றாழ்சடை யோனே. (௭)

பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கு மின்ப மருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் றொழுதால்
மறப்பிலி மாயா விருத்தமு மாமே. (௮)

அப்பனை நந்தியை யாரா வமுதினை
ஒப்பிலி வள்ளலை யூழி முதல்வனை
எப்பரி சாயினு மேத்துமி னேத்தினல்
அப்பரி சீச னருள்பெற லாமே. (௯)

வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீத்தனை யங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியு மெம்பெரு மானென் றிறைஞ்சியும்
ஆத்தஞ்செய் தீச னருட்பெற லாமே. (௰)

மனையி லிருந்தவர் மாதவ ரொப்பர்
நினைவு ளிருந்தவர் நேசத்து ணிற்பர்
பனையு ளிருந்த பருந்தது போல
நினையா தவர்க்கில்லை நின்னின்பந் தானே. (௧௧)

சூடுவ னெஞ்சிடை வைப்பன் பிரானென்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்

ரூடுவ னாடி யமரர் பிரானென்று
நாடுவ னுனின் றறிவது தானே. (கஉ)

**வேதச்சிறப்பு.**

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமற மெல்லா முளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே. (கங)

**ஆகமச்சிறப்பு.**

மாரியுங் கோடையும் வார்பனி தூங்கநின்
றேரியு நின்றங் கிளைக்கின்ற காலத்து
ஆரிய முந்தமி ழும்முடனே சொல்லிக்
காரிகை யார்க்குங் கருணை செய்தானே. (கச)

அவிழ்க்கின்ற வாறு மதுகட்டு மாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டும்
உணர்த்து மவனை யுணரலு மாமே. (கரு)

**குருபாரம்பரியம்.**

நந்தி யருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திக ணல்வர் சிவ யோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரயர்
என்றிவ ரென்னோ டெண்மரு மாமே. (கசு)

**திருமூலர் வரலாறு.**

நந்தி யிணையடி நான்றலை மேற்கொண்டு
புத்தியி னுள்ளே புகப்பெய்து போற்றிசெய்
தந்தி மதிபுனை யரனடி நாடொறும்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே. (கஎ)

செப்புஞ் சிவாகம மென்னுமப் பேர்பெற்று
அப்படி நல்கு மருணந்தி தாள்பெற்று
தப்பிலா மன்றிற் றனிக்கூத் துக் கண்டபின்
ஒப்பி லெழுகோடி யுகமிருந் தேனே. (கஅ)

நான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்குவன்
ஊன்பற்றி நின்ற வுணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே. (௧௯)

நந்தி யருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி யருளாலே சதாசிவ னாயினேன்
நந்தி யருளாலே மெய்ஞ்ஞானத்து ணண்ணினேன்
நந்தி யருளாலே நானிருந் தேனே. (௨௰)

### திருமந்திரத் தொகைச்சிறப்பு.

மூல னுரைசெய்த மூவாயிரந் தமிழ்
ஞால மறியவே நந்தி யருளது
காலை யெழுந்து கருத்தறிந் தோதிடின்
ஞாலத் தலைவனை நண்ணுவ ரன்றே. (௨௧)

---

# முதற்றந்திரம்.

---

### உபதேசம்.

பதிபசு பாச மெனப்பகர் மூன்றில்
பதியினைப் போற்பசு பாச மனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாச நிலாவே. (௨௨)

சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுடமாட்டா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் றோற்றமு னற்ற மலங்களே. (௨௩)

வெளியின் வெளிபோய் விரவிய வாறும்
அளியி னளிபோ யடங்கிய வாறும்
ஒளியி னொளிபோ யொடுங்கிய வாறும்
தெளியு மவரே சிவசித்தர் தாமே. (௨௪)

முப்பது மாறும் படிமுத்தி யேணியாய்
ஒப்பிலா வானந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப வரிய சிவங்கண்டு தான்றெளிந்
தப்பரி சாக வமர்ந்திருந் தாரே. (௨௫)

தூங்கிக்கண் டார்சிவ லோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம்முள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே. (௨௬)

**யாக்கைநிலையாமை.**

பண்டம்பொய்க் கூரை பழகி விழுதலால்
உண்டவப் பெண்டிரு மக்களும் பின்செலார்
கொண்ட விரதமு ஞானமு மல்லது
மண்டி யவருடன் வழிநட வாதே. (௨௭)

ஊரெலாங் கூடி யொலிக்க வழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடை கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே. (௨௮)

ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரு மக்களும்
ஊர்த்துறை காலே யொழிவா ரொழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட்டெரி மூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே. (௨௯)

வளத்திடை முற்றத்தோர் மாநில முற்றும்
குளத்தின்மண் கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தாலவை யோடென் றுவைப்பர்
உடலிறந் தாலிறைப் போதும்வை யாரே. (௩௰)

**செல்வ நிலையாமை.**

அருளு மரசரு மானையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னம்
தெருளு முயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினையவன் மாதவ மன்றே. (௩௧)

வாழ்வு மனைவியு மக்க ளுடன்பிறந்
தாரு மளவே தமக்கென்ப ரொண்பொருள்
மேவு மதனை விரிவுசெய் வார்கட்குக்
கூறுந் துணையொன்று கூறலு மாமே. (௩௨)

**இளமை நிலையாமை.**

பால னிளையன் விருத்த னெனநின்ற
காலங் கழிவன கண்டு மறிகிலார்
ஞாலங் கடந்தண்ட மூடறுத் தானடி
மேலுங் கிடந்து விரும்புவ னன்னே. (௩௩)

**உயிர் நிலையாமை.**

மத்தளி யொன்றுள தாள மிரண்டுள
அத்துள்ளே வாழு மரசரு மஞ்சுள
அத்துள்ளே வாழு மரசன் புறப்பட்டான்
மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே. (௩௪)

**கொல்லாமை.**

கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லிடிக் காரர் வலிக்கயிற் றாற்கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடு மென்று நிறுத்துவர் தாமே. (௩௫)

**புலால் மறுத்தல்.**

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண வியமன்றன் றூதுவர்
செல்லாகப் பற்றிய தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே. (௩௬)

கொலையே களவுகட் காமம்பொய் கூறல்
மலைவான பாதக மாமவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்
கிலையா மிவைஞான னந்தத் திருத்தலே. (௩௭)

**பிறர்மனை நயவாமை.**

ஆத்த மனையா ளகத்தி லிருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்

காச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே. (ரு௮)

**அந்தணரொழுக்கம்.**

அந்தண ராவோ ரறுதொழிற் பூண்டுளோர்
செந்தழ லோம்பிமுப் போது நியமஞ்செய்
தந்தவ நற்கரு மத்துநின் றாங்கிட்டுச்
சந்தியு மோதிச் சடங்கறுப் போர்களே. (ரு௯)

பெருநெறி யான பிரணவ மோர்ந்து
குருநெறி யாலுரை கூடினல் வேதத்
திருநெறி யான திருகை யிருத்திச்
சொருபம தானோர் துகளில் பார்ப்பாரே. (௬௰)

வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுத்தம் வேட்கை யொழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை யொழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே. (௬௧)

சத்திய மின்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடையம் விட்டோரு முணர்வின்றிப்
பத்தியு மின்றிப் பரனுண்மை யின்றியூண்
பித்தேறு மூடர் பிராமணர் தாமன்றே. (௬௨)

**இராசதோஷம்.**

கல்லா வரசனுங் காலனு நேரொக்கும்
கல்லா வரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா வரச னறமோரான் கொல்லென்பான்
நல்லாரைக் கால னணுகி நில்லானே. (௬௩)

வேட நெறிநில்லார் வேடம்பூண் டென்பயன்
வேட நெறிநிற்போர் வேடமே மெய்வேடம்
வேட நெறிநில்லார் தம்மை விறல்வேந்தன்
வேடநெறி செய்தால் வீடது வாகுமே. (௬௪)

ஆவையும் பாரையு மற்றற வோரையும்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையும்

காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவு மறுமைக்கு மீளா நரகமே. (௪௫)

தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன வாகம நூனெறி
எத்தண் டமுஞ்செயு மம்மையி லிம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே. (௪௬)

## ஈந்தார்க் கீதல்.

யாவர்க்கு மாமிறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்குமா முண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்குமாம் பிறர்க் கின்னுரை தானே. (௪எ)

## அறஞ்செயான் றிறம்.

எட்டி பழுத்த விருங்கனி வீழ்ந்தன
ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டப் பதகர் பயனறி யாரே. (௪அ)

இருமலுஞ் சோகையு மீளையும் வெப்பும்
தருமஞ் செய்யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாக முரோணி கழலைத்
தருமஞ் செய்வார் பக்கற் றூழகி லாவே. (௪௯)

## அன்புடைமை.

அன்புஞ் சிவமு மிரண்டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே. (௫௰)

என்பே விறகா யிறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி யகங்குழை வார்க்கன்றி
என்போன் மணியினை யெய்த வொண்ணாதே. (௫௧)

என்னன் புருக்கி யிறைவனை யேத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே. (ருஉ).

**அன்புசெய்வாரை யறிவன் சிவன்.**

இகழ்ந்ததும் பெற்றது மீச னறியும்
உகந்தருள் செய்திடு முத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே. (ருந).

புணர்ச்சியு ளாயிழை மேலன்பு போல
உணர்ச்சியு ளாங்கே யொடுங்கவல் லார்க்குக்
குணர்ச்சியில் லாது குலாவி யுலாவி
அணைத்த தணைத்தின்ப மதுவிது வாமே. (ருச).

**கல்வி.**

கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி யுரைசெய்யுங்
கற்றறி காட்டக் கனலுள வாக்குமே. (ருரு).

கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
பல்வி யுடையார் பாம்பரிந் துண்கின்றார்
எல்லியுங் காலையு மேத்து மிறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே. (ருசு).

ஆய்ந்துகொள் வார்க்கா னங்கே வெளிப்படும்
தோய்ந்த நெருப்பது தாய்மணி சிந்திடும்
ஏய்ந்த விளமதி யெட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே. (ருஎ).

**கேள்வி கேட்டமைதல்.**

அறங்கேட்டு மந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும்

புறங்கேட்டும் பொன்புரை மேனியம் மீசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே. (௫அ)

தேவர் பிரான்றனைத் திவ்விய மூர்த்தியை
யாவ ரொருவ ரறிவா ரறிந்தபின்
ஓதுமின் கேண்மி னுணர்மி னுணர்ந்தபின்
ஓதி யுணர்ந்தவ ரோங்கிநின் றாரே. (௫கூ)

**கல்லாமை.**

கணக்கறிந் தார்க்கன்றிக் காண வொண்ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடாக் காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்கும்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே. (சூய)

கல்லாத மூடரைக் காணவு மாகாது
கல்லாத மூடர்சொற் கேட்கக் கடனன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லாராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே. (சூக)

கற்றுஞ் சிவஞான மில்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கள்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பி னிற்போர் கணக்கறிந் தார்களே. (சூஉ)

**நடுவு நிலைமை.**

நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை
நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானுநின் றேனே. (சூங)

நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானுநின் றேனே. (சூச)

**கள்ளுண்ணாமை**

சித்த முருக்கிச் சிவமாஞ் சமாதியில்
ஒத்துச் சிவானந்த மோவாத தேறலைச்

சுத்த மதுவுண்ணச் சிவானந்தம் விட்டிடா
நித்த லிருத்தல் கிடத்தல்கீழ்க் காலே. (சுரு)

காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனித னிணையடி
ஓமய வானந்தத் தேற லுணர்வுண்டே. (சுசு)

மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்
மயக்குறு மாயையின் மாமாயை வீடு
மயக்கிற் றெளியின் மயக்குறு மன்றே. (சுஎ)

சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி யழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானந் தன்னிற் றலைப்பட்டுச்
சத்திய ஞானவா னந்தத்திற் சார்தலே. (சுஅ)

யோகிகள் கால்கட்டி யொண்மதி யானந்த
போத வமுதைப் புசித்தவ ரெண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்
ரூறு மதத்தா லறிவழிந் தாரே. (சுகூ)

---

# இரண்டாந் தந்திரம்.

---

## பதிவலியில் வீரட்டமெட்டு.

அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கண் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாரே. (எய)

## இலிங்கபுராணம்.

திரிகின்ற முப்புரஞ் சென்ற பிரானை
அரியனென் றெண்ணி யயர்வுற வேண்டாம்

புரிவுடை யாளர்க்குப் பொய்யல னீசன்
பரிவொடு நின்று பரிசறி வானே. (எக)

### பிரளயம்.

கருவரை மூடிக் கலங்கெழும் வெள்ளத்
திருவருங் கோவென் றிகல விறைவன்
ஒருவனு நீருற வோங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே. (எ௨)

### அடிமுடி தேடல்.

பிரமனு மாலும் பிரானேநா னென்னப்
பிரமன்மா றங்கடம் பேதமை யாலே
பரம னனலாய்ப் பரந்துமுன் னிற்க
அரனடி தேடி யாற்றுகின் றாரே. (எ௩)

### சர்வசிருஷ்டி.

ஆதியொ டந்த மிலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாம்
தீதில் பரையதன் பாற்றிகழ் நாதமே. (எ௪)

புவனம் படைப்பா னொருவ னொருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திர ரைவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்
புவனம் படைப்பானப் புண்ணியன் றானே. (எ௫)

ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய வீச னரன்மால் பிரமனும்
ஆகாயம் பூமியுங் காண வளித்தலே. (எ௬)

ஒருவனு மேயுல கேழும் படைத்தான்
ஒருவனு மேயுல கேழ மளந்தான்
ஒருவனு மேயுல கேழுங் கடந்தான்
ஒருவனு மேயுட லோடுயிர் தானே. (எஎ)

### திதி.

தானே திசையொடு தேவருமாய் நிற்கும்
தானே யுடலுயிர் தத்துவ மாய்நிற்கும்
தானே கடன்மலை யாதியு மாய்நிற்கும்
தானே யுலகிற் றலைவனு மாமே. (எ௮)

உடலா யுயிரா யுலகம தாகிக்
கடலாய்க் கார்முகி னீர்பொழி வானாய்
இடையா யுலப்பிலி யெங்குந்தா னாகி
அடையார் பெருவிழி யண்ணனின் றானே. (எ௯)

தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்கும்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்கும்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்கும்
தானொரு காலந்தண் மாயனு மாமே. (௮0)

### சங்காரம்.

அங்கிசெய் தீச னகலிடஞ் சுட்டது
அங்கிசெய் தீச னலைகடற் சுட்டது
அங்கிசெய் தீச னசுரரைச் சுட்டது
அங்கியவ் வீசற்குக் கையம்பு தானே. (௮க)

### திரோபவம்.

உள்ளத் தொருவனை யுள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா வொருவனை
உள்ளமுந் தானு முடனே யிருக்கினும்
உள்ள மவனை யுருவறி யாதே. (௮உ)

மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிக ளெல்லா மொருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ண லு மவ்வண்ண மாகிநின் றானே. (௮௩)

### அநுக்கிரகம்.

உச்சியி லோங்கி யொளிதிகழ் நாதத்தை
நச்சியே யின்பங்கொள் வார்க்கு நமனில்லை

விச்சும் விரிசுடர் மூன்று முலகுக்கும்
வைச்சு மவனே சமைக்கவல் லானே. (அச)

குசவன் றிரிகையி லேற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போலெங்கள் கோனந்தி வேண்டில்
அசையி லுலக மதுவிது வாமே. (அரு)

ஆதி படைத்தன னைம்பெரும் பூதங்கள்
ஆதி படைத்தன னையபல் லூழிகள்
ஆதி படைத்தன னெண்ணிலி தேவரை
ஆதி படைத்தவை தாங்கிநின் றானே. (அசு)

**கர்ப்பக்கிரியை.**

இன்புறு காலத் திருவர் முன்பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்
அன்புறு காலத் தமைத்தொழிந் தானே. (அஎ)

பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவும்
தாவி யுலகிற் றரிப்பித்த வாறுபோல்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவும்
கூவி யவிழுங் குறிக்கொண்ட போதே. (அஅ)

மாண்பது வாக வளர்கின்ற வன்னியைக்
காண்பது வாண்பெண் ணலியெனுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தானச் சோதிதன் றண்மையே. (அகூ)

மாதா வுதர மலமிகின் மந்தனும்
மாதா வுதரஞ் சலமிகின் மூகையாம்
மாதா வுதர மிரண்டொக்கில் கண்ணில்லை
மாதா வுதரத்தில் வந்த குழவிக்கே. (கூ0)

குழவியு மாணும் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணா மிடத்தது வாகில்
குழவியு மிரண்டா மபான னெதிர்க்கில்
குழவி யலியாகுங் கொண்டகா லொக்கிலே. (கூக)

### பாத்திரம்.

திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே. (௬௨)

### அபாத்திரம்.

மண்மலை யத்தனை மாதன மீயினும்
அண்ண லிவனென் றஞ்சலி யத்தனாய்
எண்ணி யிறைஞ்சாதார்க் கீந்த விருவரும்
நண்ணுவ ரேழா நரகக் குழியிலே. (௬௩)

### தீர்த்தம்.

உள்ளத்தி னுள்ளே யுளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமு மேடும் பரந்து திரிவரேல்
கள்ள மனமுடைக் கல்வியி லோரே. (௬௪)

### திருக்கோயிலிழிவு.

தாவர லிங்கம் பரித்தொன் றிற் றாபித்தால்
ஆவதன் முன்னே யரசு நிலைகெடும்
சாவதன் முன்னே பெருநோ யடுத்திடும்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே. (௬௫)

ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்றிருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் றானே. (௬௬)

முன்னவ னார்கோயில் பூசைகண் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி யெடுத்துரைத் தானே. (௬௭)

பேர்கொண்ட பார்ப்பான் பிரான்றனை யர்ச்சித்தால்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்

பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாமென்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே. (௬௮)

### சிவநிந்தை.

முளிந்தவர் வானவர் தானவ ரெல்லாம்
விளிந்தவர் மெய்நின்ற ஞான முணரார்
அளிந்தமு தூறிய வாதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கவொண் ணாதே. (௬௯)

### குருநிந்தை.

ஓரெழுத் தொருபொரு ளுணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
பாரிடைக் கிருமியாய்ப் படிவர் மண்ணிலே. (௭0)

மந்திர மோரெழுத் துரைத்த மாதவர்
சிந்தை நொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே. (௭௧)

ஈச னடியா ரிதயங் கலங்கிடத்
தேசமு நாடுஞ் சிறப்பு மழிந்திடும்
வாசவன் பீடமு மாமன்னர் பீடமும்
நாசம தாகுமே நம்நந்தி யாணையே. (௭௨)

---

## மூன்றாந் தந்திரம்.

---

### அட்டாங்கயோகம்.

இயம நியமமே யெண்ணிலா வாதனம்
நயமுறு பிராணாயாம நண்பிரத்தி யாகாரம்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறு மட்டாங்க மாவது மாமே. (௭௩)

## இயமம் - நியமம்.

கொல்லான் பொய்கூறான் களவிலா னெண்குணன்
நல்லா னடக்க முடையா னடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லா னியமத் திடையினின் றானே. (௱௪)

தூய்மை யருளூண் சுருக்கம் பொறைசெம்மை
வாய்மைநிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே. (௱௫)

தபஞ் சபஞ் சந்தோட மாத்திகந் தானம்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொண் மதிசொல்லீ ரைந்தும்
நிவம்பல செய்யி னியமத்த னாமே. (௱௬)

## பிராணாயாமம்.

ஐவர்க்கு நாயக னவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே. (௱௭)

ஆரிய நல்லன் குதிரை யிரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
கூரிய நாதன் குருவி னருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே. (௱௮)

புள்ளினு மிக்க புரவியை மேற்கண்டால்
கள்ளுண்ண வேண்டாந் தானே களிதரும்
துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்னோ முணர்வுடை யோருக்கே. (௱௯)

வளியினை வாங்கி வயத்தி லடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் றிருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே. (௱௰)

ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே. (௧௧௧)

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கு முரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே. (௧௧௨)

**பிரத்தியாகாரம்.**

கண்டுகண் டுள்ளே கருத்துற வோங்கிடில்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுசந் தெங்கும் பழமறை தேடியை
இன்றுகண் டிங்கே யிருக்கலு மாமே. (௧௧௩)

நாபிக்குங் கீழே பன்னிரண் டங்குலம்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை யறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடிபுகுந் தானே. (௧௧௪)

மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேன்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்தது தானே. (௧௧௫)

புறப்பட்ட வாயுப் புகவிடா வண்ணம்
திறப்பட்ட நிச்சயஞ் சேர்ந்துட னின்றால்
உறப்பட்டு நின்றது வுள்ளமு மங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே. (௧௧௬)

**தாரணை.**

கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணைத் தண்டூடே வெளியுறத் தானோக்கிக்
காணக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணு ளடைக்கும் வழியது வாமே. (௧௧௭)

மேலை நிலத்தினுள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தி லெழுகின்ற மூர்த்தியை
ஏல வெழுப்பி யிவளுடன் சந்திக்கப்
பாலனு மாவான் பார்நந்தி யாணையே. (௧௧௮)

**தியானம்.**

கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துள்
பண்ணாக்கி நின்ற பழம்பொரு ளொன்றுண்டு
வண்ணாக்கி னுள்ளே வகண்ட வொளிகாட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே. (௧௧௯)

ஒண்ணா நயனத்தி லுற்ற வொளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணாம னின்றது பார்க்கலு மாமே. (௧௨௰)

மனத்து விளக்கினை மான்பட வேற்றிச்
சினத்து விளக்கினைச் செல்ல நெருக்கி
அனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே. (௧௨௧)

எண்ணாயிரத் தாண்டு யோக மிருக்கினும்
கண்ணா ரமுதனைக் கண்டறி வாரில்லை
உண்ணாடி யுள்ளே யொளிபெற நோக்கில்
கண்ணாடி போலே கலந்திருந் தானே. (௧௨௨)

நாட்ட மிரண்டு நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமு மில்லை மனைக்கு மழிவில்லை
ஓட்டமு மில்லை யுணர்வில்லை தானில்லை
தேட்டமு மில்லை சிவனவ னாமே. (௧௨௩)

நயன மிரண்டு நாசிமேல் வைத்திட்
டுயர்விழா வாயுவை யுள்ளே யடக்கித்
துயராற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை தானே. (௧௨௪)

நாத முடியிலே நல்லா ளிருப்பது
நாத முடிவிலே நல்யோக மிருப்பது
நாத முடிவிலே நாட்ட மிருப்பது
நாதமுடிவிலே நஞ்சுண்ட கண்டனே. (க௨௫)

முக்குண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிட நாழிகை சாதிக்க
வைக்கு முயிர்நிலை வானவர் கோனே. (க௨௬)

சமாதி.

மன்மன மெங்குண்டு வாயுவு மங்குண்டு
மன்மன மெங்கில்லை வாயுவு மங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந்திருப் பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே. (க௨௭)

மூல நாடி முக்கட் டலகுச்சியுள்
நாலு வாச னடுவு ளிருப்பீர்காள்
மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனவிலு மில்லையே. (க௨௮)

நம்பனை யாதியை நான்மறை யோதியைச்
செம்பொனி னுள்ளே திகழ்கின்ற சோதியை
அன்பினை யாக்கி யருத்தி யொடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே. (க௨௯)

மூலத்து மேலது முச்சது ரத்தது
காலத் திசையிற் கலக்கின்ற சந்தினில்
மேலைப் பிறையினுள் நெற்றிநேர் நின்ற
கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே. (க௩௰)

கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை யெல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்று
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே. (க௩க)

சமாதிசெய் வார்க்குத் தரும்பல யோகம்
சமாதிகள் வேண்டா மிறையுட னேகில்
சமாதிதா னில்லைத் தானவ னாகில்
சமாதியி லெட்டெட்டுச் சித்தியு மெய்துமே. (கஙஉ)

## அட்டாங்கயோகப்பேறு.

### நியமம்.

பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்
கற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு
முற்றெழுந் தாங்கே முனிவ ரெதிர்வரத்
தெற்றுஞ் சிவபதஞ் சேர்தலு மாமே. (கஙங)

### பிராணாயாமம்.

செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்துக்
கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள
எம்பொற் றலைவ னிவனா மெனச்சொல்ல
இன்பக் கலவி யிருக்கலு மாமே. (கஙச)

### பிரத்தியாகாரம்.

சேருறு காலந் திசைநின்ற தேவர்கள்
ஆரிவ னென்ன வரனா மவனென்ன
வேருறு தேவர்க ளெல்லா மெதிர்கொள்ளக்
காருறு கண்டனை மெய்கண்ட வாறே. (கஙரு)

### தியானம்.

தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும்
வாங்கவல் லார்க்கும் வலிசெய்து நின்றிட்டுத்
தேங்கவல் லார்க்குந் திளைக்கு மமுதமும்
தாங்கவல் லார்கட்குந் தன்னிட மாமே. (கஙசு)

### அட்டமாசித்தி - பரகாயப் பிரவேசம்.

குரவ னருளிற் குறிவழி மூலப்
பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்
தெரிதரு சாம்பவி கேசரி சேரப்
பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே. (கஙஎ)

சித்தந் திரிந்து சிவமய மாகியே
முத்தந் தெரிந்துற்ற மோனர் சிவமுத்தர்
சுத்தம் பெறலாக வைந்திற் றுடக்கற்ருேர்
சித்தம் பரத்திற் றிருநடத் தோரே. (௧௩அ)

## சரீரசித்தியுபாயம்.

உடம்பா ரழியி லுயிரா ரழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
உடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே. (௧௩௯)

உடம்பினை முன்ன மிழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே யுத்தமன் கோயிற்கொண் டானென்
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. (௧௪௰)

சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தால்
மத்தியா னத்திலே வாக்கியங் கேட்கலாம்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படும்
சத்தியஞ் சொன்னேஞ் சதாநந்தி யாணையே. (௧௪௧)

நீல நிறனுடை நேரிழை யாளொடும்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞால மறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி யாணையே. (௧௪௨)

அண்டஞ் சுருங்கி லதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராண னிலைபெறும்
உண்டி சுருங்கி லுபாயம் பலவுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே. (௧௪௩)

## ஆயுள்பரிட்சை.

ஓசையு மீசனு மொக்கு முணர்வின்கண்
ஓசை யிறந்தவ ரீசனை யுள்குவர்
ஓசை யிறந்தவர் நெஞ்சினு ளீசனும்
ஓசை புணர்ந்த வுணர்விது வாமே. (௧௪௪)

ஆமே யழிகின்ற வாயுவை நோக்கிடின்
ஆமே லுறைக்கின்ற நன்மை யளித்திடும்
பூமே லுறைகின்ற போதகம் வந்திடும்
தாமே யுலகிற் றலைவனு மாமே. (௧௪௫)

## வாரசூலை.

வாரத்திற் சூலம் வரும்வழி கூறுங்கால்
நேரொத்த திங்கள் சனிகிழக் கேயாகும்
பாரொத்த செய்புத னுத்தரம் பானுநாள்
நேரொத்த வெள்ளி குடக்காக நிற்குமே. (௧௪௬)

தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை
அக்கணி சூலமு மாமிடம் பின்னாகில்
துக்கமு மில்லை வலமுன்னே தோன்றிடின்
மிக்கது மேல்வினை மேன்மேல் விளையுமே. (௧௪௭)

## கேசரியோகம்.

கட்டக் கழன்று கீழ்நான்று விழாமல்
அட்டத்திற் கட்டி யடுப்பை யணைகோலி
விட்டத்தைப் பூட்டி மேற்பையைத் தாட்கோத்து
நட்ட மிருக்க நமனில்லை தானே. (௧௪௮)

வண்ணா னொலிக்குஞ் சதுரப் பலகைமேல்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாறு பாச்சிக் குளத்தை நிரப்பினால்
அண்ணாந்து பார்க்க வழுக்கற்ற வாறே. (௧௪௯)

இடக்கை வலக்கை யிரண்டையு மாற்றித்
துதிக்கையா லுண்பார்க்குச் சோரவும் வேண்டாம்
உறக்கத்தை நீக்கி யுணரவல் லார்கட்
கிறக்கவும் வேண்டா மிருக்கலு மாமே. (௧௫௰)

நாவி னுனியி னடுவே சிவிறிடில்
சீவனு மங்கே சிவனு முறைவிடம்
மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர்
சாவது மில்லை சதகோடி யூனே. (௧௫௧)

ஊனூறல் பாயு முயர்வரை யுச்சிமேல்
வானூறல் பாயும் வகையறி வாரில்லை
வானூறல் பாயும் வகையறி வாளர்க்குத்
தேனூற லுண்டு தெளிதலு மாமே. (௪௫௨)

மேலை யணுவில் விரைந்திரு காலிடில்
காலனு மில்லை கதவுந் திறந்திடும்
ஞால மறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவான் பராநந்தி யாணையே. (௧௫௩)

ஊனீர் வழியாக வுண்ணவை யேறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாய நமவென்று
கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே. (௧௫௪)

## பரியங்கியோகம்.

பரியங்கி யோகத்துப் பஞ்ச கடிகை
அரியவிவ் வியோக மடைந்தவர்க் கல்லது
சரிவளை முன்கைச்சிச் சந்தனக் கொங்கை
உருகத் தழுவ வொருவர்க் கொணாதே. (௧௫௫)

ஒண்ணாத யோகத்தை யுற்றவ ராரென்னில்
விண்ணார்ந்த கங்கை விரிசடை வைத்தவன்
பண்ணா ரமுதினைப் பஞ்ச கடிகையில்
எண்ணா மெனவெண்ணி யிருந்தா னிருந்ததே. (௧௫௬)

எழுகின்ற தீயின்முன் னேகொண்டு சென்றிட்டால்
மெழுகுரு கும்பரி செய்திடு மெய்யை
உழுகின்ற தில்லை யொளியை யறிந்தபின்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே. (௧௫௭)

வெளியை யறிந்து வெளியி னடுவே
ஒளியை யறியி னுளிமுறி யாமே
தெளிவை யறிந்து செழுநந்தி யாலே
வெளியை யறிந்தனன் மேலறியேனே. (௧௫௮)

மின்னிடை யாளுமின் னாளனுங் கூட்டத்துப்
பொன்னிடை வட்டத்தி னுள்ளே புகப்பெய்து
தன்னொடு தன்னைத் தலைப்பெய்த வல்லிரேல்
மண்ணிடைப் பல்லூழி வாழலு மாங்கே. (கருக)

## அமரிதாரணை.

உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க்
கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கும்
உடலி லொருவழி யொன்றுக் கிறைக்கில்
நடலைப் படாதுயிர் நாடலு மாமே. (கசுய)

தெளிதரு மிந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரு மோராண்டி லூனமொன் றில்லை
வளியுறு மெட்டின் மனமு மொடுங்கும்
களிதருங் காயங் கனகம தாமே. (கசுக)

நூறு மிளகு நுகருஞ் சிவத்திநீர்
மாறு மிதற்கு மருந்தில்லை மாந்தர்கள்
தேறி லிதனைத் தெளியுச்சி கப்பிடின்
மாறு மிதற்கு மறுமயி ராமே. (கசுஉ)

கரையரு கேநின்ற கான லுவரி
வரைவரை யென்பர் மதியிலா மாந்தர்
நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு
நரைதிரை மாறு நமனுமங் கில்லையே. (கசுங)

அளக நன்னுத லாயோ ரதிசயம்
களவு காயங் கலந்தவிந் நீரிலே
மிளகு நெல்லியு மஞ்சளும் வேம்பிடில்
இளகு மேனி யிருளுங் கபாலமே. (கசுச)

வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்னும்
நாரி மருந்தென்றும் நந்தி யருள்செய்தான்
ஆதி மருந்தென் றறிவா ரகலிடம்
சோதி மருந்திது சொல்லவொண் ணாதே. (கசுரு)

### சந்திரயோகம்.

பத்து மிரண்டும் பகலோ னுயர்கலை
பத்தினொ டாறு முயர்கலை யான்மதி
ஒத்தநல் லங்கிய தெட்டெட் டுயர்கலை
அத்திற னின்றமை யாய்ந்துகொள் வீரே. (கசுசு)

எட்டெட்டு மீராறு மீரெட்டுந் தீக்கதிர்
சுட்டிட்ட சோமனிற் றோன்றுங் கலையெனக்
கட்டப் படுந்தா ரகைகதிர் நாலுள
கட்டிட்ட தொண்ணூற்றொ டாறுங் கலாதியே. (கசுஎ)

எல்லாக் கலையு மிடைபிங் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலம்
செல்லா வெழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே. (கசுஅ)

காணும் பருதியின் காலை யிடத்திட்டு
மாணு மதியதன் காலை வலத்திட்டுப்
பேணி யிவ்வாறு பிழையாமற் செய்விரேல்
ஆணி கலங்காதவ் வாயிரத் தாண்டே. (கசுகூ)

பாலிக்கு நெஞ்சம் பறையோசை யொன்பதில்
ஆலிக்கு மங்கே யமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்கும்
காலைக்குச் சங்கு கதிரவன் றானே. (கஎ0)

மாறு மதியுமா தித்தனு மாறின்றித்
தாறு படாமல்தண் டோடே தலைப்படில்
ஊறு படாதுடல் வேண்டு முபாயமும்
பாறு படாவின்பம் பார்மிசைப் பொங்குமே. (கஎக)

---

# நான் காந்தந்திரம்.

---

அசபை.

தேவ ருறைகின்ற சிற்றம் பலமென்றும்
தேவ ருறைகின்ற சிதம்பர மென்றும்
தேவ ருறைகின்ற திருவம் பலமென்றும்
தேவ ருறைகின்ற தென்பொது வாமே. (கஎ௨)

ஆமேபொன் னம்பல மற்புத மானந்தம்
ஆமே திருக்கூத் தனவரத தாண்டவம்
ஆமே பிரளய மாகுமத் தாண்டவம்
ஆமே சங்காரத் தருந்தாண்ட வங்களே. (கஎ௩)

அமலம் பதிபசு பாசங்க ளாகமம்
அமலந் திரோதாயி யாகுமா னந்தமாம்
அமலஞ்சொல் லாணவ மாயை காமியம்
அமலந் திருக்கூத்தங் காடு மிடந்தானே. (கஎ௪)

வாறே சிவாய நமச்சி வாயநம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே யருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே. (கஎ௫)

பொன்னான மந்திரம் புகலவு மொண்ணாது
பொன்னான மந்திரம் பொறிகிஞ் சுகத்தாகும்
பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கில்
பொன்னாகும் வல்லார்க் குடம்புபொற் பாதமே. (கஎ௬)

பொற்பாதங் காணலாம் புத்திர ருண்டாகும்
பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும்
பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும்
பொற்பாத நன்னடஞ் சிந்தனை சொல்லுமே. (கஎஎ)

சூக்கும மெண்ணா யிரஞ்செபித் தாலுமேல்
சூக்கும மான வழியிடைக் காணலாம்
சூக்கும மான வினையைக் கெடுக்கலாம்
சூக்கும மான சிவனதா னந்தமே. (கஎஅ)

### திருவம்பலச்சக்கரம்.

அரகர வென்ன வரியதொன் றில்லை
அரகர வென்ன வறிகிலர் மாந்தர்
அரகர வென்ன வமரரு மாவர்
அரகர வென்ன வறும்பிறப் பன்றே. (கஎகூ)

நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடு மவர்வா யமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநமசி வாய
ஆடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே. (கஅ0)

அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே யமர்ந்து நின்றானே. (கஅக)

உண்ணு மருந்து முலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்
விண்ணின் றமரர் விரும்பி யடிதொழ
எண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே. (கஅஉ)

ஐந்தின் பெருமை யகலிட மாவது
ஐந்தின் பெருமையே யாலய மாவது
ஐந்தின் பெருமை யறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெயப் பாலனு மாமே. (கஅ௩)

நகார மகாரஞ் சிகார நடுவாய்
வகார மிரண்டும் வளியுடன் கூடி
ஒகார முதற்கொண் டொருக்கா லுரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே. (கஅச)

சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஓகார முடனே யொருக்கா லுரைக்கு
மகார முதல்வன் மதித்து நின்றானே. (௧௮௫)

எட்டு மிரண்டு மினிதறி கின்றிலர்
எட்டு மிரண்டு மறியாத வேழையர்
எட்டு மிரண்டு மிருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே. (௧௮௬)

அர்ச்சனை.

அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூக முமாதவி மந்தாரம்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே. (௧௮௭)

சாங்கம தாகவே சந்தொடு சந்தனம்
தேங்கமழ் குங்குமங் கற்பூரங் காரகில்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்
தாங்கே யணிந்துநீ ரர்ச்சியு மன்பொடே. (௧௮௮)

அன்புட னேநின் றமுதமு மேற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதோறும்
துன்ப மகற்றித் தொழுவோர் நினையுங்கால்
இன்ப முடனேவந் தெய்திடு முத்தியே. (௧௮௯)

எய்தி வழிப்படி லெய்தா தனவில்லை
எய்தி வழிப்படி னிந்திரன் செல்வமுன்
எய்தி வழிப்படி லெண்சித்தி யுண்டாகும்
எய்தி வழிப்படி லெய்திடு முத்தியே. (௧௯௰)

வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர்
வேண்டார்கள் கன்ம மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்ம மிகுதியோ ராய்ந்தன்பே. (௧௯௧)

தெளிவரு நாளிற் சிவவமு தூறும்
ஒளிவரு நாளி லோரெட்டி லுகளும்
ஒளிவரு மப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரு நாதன் வெளியா யிருந்தே. (௧௧௨)

**நவதண்டம்.**

எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலால்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலால்
மைந்த னிவனென்ன மாட்டிக்கொ ளீரே. (௧௧௩)

கலந்திரு பாத மிருகர மாகும்
மலர்ந்திரு குண்ட மகாரத்தோர் மூக்கும்
மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் ணெற்றி
உணர்ந்திரு குஞ்சியங் குத்தம ஞர்க்கே. (௧௧௪)

பார்த்திட மெங்கும் பரந்தெழு சோதியை
ஆத்தம தாகவே யாய்ந்தறி வாரில்லை
காத்துட லுள்ளே கருதி யிருந்தவர்
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே. (௧௧௫)

**சத்திபேதம் - திரிபுரைச்சக்கரம்.**

திரிபுரை சுந்தரி யந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி யாம்பால வன்னத்தி
இருள்புரை யீசி மனோன்மணி யென்ன
வருபல வாய்நிற்கு மாமாது தானே (௧௧௬)

அவளை யறியா வமரரு மில்லை
அவளன்றிச் செய்யு மருந்தவ மில்லை
அவளன்றி யைவரா லாவதொன் றில்லை
அவளன்றி யூர்புகு மாறறி யேனே. (௧௧௭)

அறிவார் பராசத்தி யானந்த மென்பார்
அறிவா ரறிவுரு வாமவ ளென்பார்
அறிவார் கரும மவளிச்சை யென்பார்
அறிவார் பரனு மவளிடந் தானே. (௧௧௮)

தானெங் குளதங் குளதையன் மாதேவி
ஊனெங் குளவங் குள்ளுயிர்க் காவலன்
வானெங் குளவங் குளேவந்துமப் பாலதாம்
கோனெங்கு நின்ற குறிபல பாரே. (௧௯௯)

போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்
பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கும்
ஆகஞ்செய் தாங்கே யடியவர் நாடொறும்
பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே. (௨௱)

கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பியென் னுள்ளே நயந்துவைத் தேனே. (௨௱௧)

உண்டில்லை யென்ற அருச்செய நின்றது
வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது
கண்டிலர் காரண காரணி தம்மொடு
மண்டல மூன்றுற மன்னிநின் றாளே. (௨௱௨)

ஓங்காரி யென்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே யைவரைப் பெற்றிட்டு
ரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே. (௨௱௩)

தானே தலைவி யெனநின்ற தற்பரை
தானே யுயிர்வித்தாய்த் தந்த பதினாலும்
வானோர் தலமு மனமுநற் புத்தியும்
தானே சிவகதி தன்மையு மாமே. (௨௱௪)

## வயிரவி மந்திரம்.

சூலங் கபாலங்கை யேந்திய சூலிக்கு
நாலாங் கரமுள நாகபா சாங்குசம்
மாலங் கயனறி யாத வடிவுக்கு
மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே. (௨௱௫)

காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனு மாயனும்
காணுந் தலைவிநற் காரணி காணே. (௨௱௬)

ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி யுணரி லுடலுயி ரீசனும்
பேதை யுலகிற் பிறவிக ளீசமாம்
ஓத வுலவாத கோலமொன் றாகுமே. (௨௱எ)

தையனல் லாளைத் தலத்திற் றலைவியை
மையலை நோக்கு மனோன்மணி மங்கையைப்
பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்
வெய்ய பவமினி மேவகி லாவே. (௨௱அ)

நாடிய கண்மூன்று நடுவெழு ஞானத்துக்
கூடி யிருந்த குமரி குலக்கன்னி
ஆடகச் சீறடி யம்பொற் சிலம்பொலி
ஊடக மேவி யுறங்குகின் றாளே. (௨௱௯)

அஞ்சொன் மொழியா ளருந்தவப் பெண்பிள்ளை
செஞ்சொன் மடமொழி சீருடைச் சேயிழை
தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்
கிஞ்சொ லளிக்கு மிறைவியென் றாரே. (௨௱௰)

பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்
முயற்றியின் முத்தி யருளு முதல்வி
கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்
முகத்தரு ளேக்கமு முன்னுள்ள தாமே. (௨௱௧௧)

**பூரணசத்தி.**

உணர்ந்தில ரீசனை யூழிசெய் சத்தி
புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்
கணங்களைத் தன்னருட் செய்கின்ற கன்னி
குணர்ந்த வழிகொண்டு கும்பக மாகுமே. (௨௱௧௨)

## ஆதாராவாதேயம்.

மாதுநல் லாளு மணாள னிருந்திடப்
பாதிநல் லாளும் பகவரு மானது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே. (உகங)

தானே யிருநிலந் தாங்கிவிண் ணாய்நிற்குந்
தானே சுடுமங்கி ஞாயிறுந் திங்களும்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே வடவரைத் தண்கடற் கண்ணே. (உகச)

கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்
மண்ணுடை யாரை மனிதரிற் கூட்டொணாப்
பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்
விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே. (உகரு)

கண்டெண் டிசையுங் கலந்து வருங்கன்னி
பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்
விண்டெண் டிசையும் விரைமலர்க் கைக்கொண்டு
தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே. (உகசு)

வாயு மனமுங் கடந்த மனோன்மணி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயு மறிவுங் கடந்த வரனுக்குத்
தாயு மகளுநற் றாரமு மாமே. (உகள)

அதுவிது வென்னு மவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகும்
மதிமல ராள்சொன்ன மண்டல மூன்றே. (உகஅ)

மார்க்கங்க ளீன்ற மனோன்மணி மங்கலி
யார்க்கு மறிய வரியா ளவளாகும்
வாக்கு மனமு மருவியொன் றாய்விட்ட
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே. (உகக)

அதுவிது வென்றவ மேகழி யாதே
மதுவிரி பூங்குழன் மங்கைநல் லாளைப்
பதிமது மேவிப் பணியவல் லார்க்கு
விதிவழி தன்னையும் வென்றிட லாமே. (உ0)

வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் றன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே. (உஉக)

சத்தியி னோடு சயம்புவு நேர்படில்
வித்தது வின்றியே யெல்லாம் விளைந்தன
அத்தகை யாகிய வைம்பத் தொருவரும்
சித்தது மேவித் திருந்திடு வாரே. (உஉஉ)

பெற்றாள் பெருமை பெரிய மனோன்மணி
நற்றா ளிறைவனே நன்பய னேயென்பர்
கற்றா னறியுங் கருத்தறி வார்கட்குப்
பொற்றா ளுலகம் புகல்தனி யாமே. (உஉங)

அம்மையு மத்தனு மன்புற்ற தல்லது
அம்மையு மத்தனு மாரறி வாரென்னை
அம்மையொ டத்தனு மியானு முடனிருந்
தம்மையொ டத்தனை யான்புரிந் தேனே. (உஉச)

## புவனாபதிசக்கரம்.

பூசிக்கும் போது புவனா பதிதன்னை
ஆசற் றகத்தினி லாவா கனம்பண்ணிப்
பேசிப் பிராணப் பிரதிட்டை யதுசெய்து
தேசுற் றிடவே தியான மதுசெய்யே. (உஉரு)

## நவாக்கரி சக்கரம்.

நலந்தரு ஞானமுங் கல்வியு மெல்லாம்
உரந்தரு வல்வினை யும்மைவிட் டோடும்
சிரந்தரு தீவினை செய்வ தகற்றி
வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே. (உஉசா)

வழுத்திடு நாவுக் கரசிவ டன்னைப்
பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாம்
தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லாளை
முகத்துளு முன்னெழக் கண்டுகொ ளீரே. (உஉஎ)

ஒளிக்கும் பசாசத்தி யுள்ளே யமரின்
களிக்குமிச் சிந்தையிற் காரணங் காட்டித்
தெளிக்கு மழையுடன் செல்வ முண்டாக்கும்
அளிக்கு மிவளை யறிந்துகொள் வார்க்கே. (உஉஅ)

கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின்
நாடில்லை காணு நாண்முத லற்றபின்
மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்
காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே. (உஉகூ)

அண்டத்தி னுள்ளே யளப்பரி தானவள்
பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தி னுள்ளே குணம்பல காணிலும்
கண்டத்தி னின்ற கலப்பறி யார்களே. (உ௩௰)

உணர்ந்திருந் துள்ளே யொருத்தியை நோக்கின்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்
மணந்தெழு மோசை யொலியது காணும்
தணந்தெழு சக்கரந் தான்றரு வாளே. (உ௩க)

அமுதம தாக வழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழு முள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்து
கெமுதம தாகிய கேடிலி தானே. (உ௩உ)

இல்லடைந் தானுக்கு மில்லாத தொன்றில்லை
இல்லடைந் தானுக் கிரப்பது தானில்லை
இல்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வார்
இல்லடைந் தானுக்கு வில்லாதில் லானையே. (உ௩௩)

## ஐந்தாந் தந்திரம்.

### சுத்தசைவம்.

கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
சொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே. (உ௱௫௪)

வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்தம்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்
பூதாந்த போதாந்த மாகப் புனஞ்செய்ய
நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே. (உ௱௫௫)

### மார்க்கசைவம்.

வேதாந்தங் கண்டோர் பிரமமித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மில்லாத சித்தாந்தம் கண்டுளோர்
சாதாரண மன்ன சைவ ருபாயமே. (உ௱௫௬)

ஒன்று மிரண்டு மிலதுமா யொன்றாக
நின்று சமய நிராகார நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தால்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே. (உ௱௫௭)

### கடுஞ்சுத்தசைவம்.

வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி
ஆடம் பரமின்றி யாசாபா சஞ்செற்று
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே. (உ௱௫௮)

சுத்தச் சிவனுரை தானத்திற் றோயாமல்
முத்தர் பதப்பொருண் முத்திவித் தாமூலம்
அத்தகை யான்மா வரனை யடைந் தற்றால்
சுத்தச் சிவமாவ ரேசுத்த சைவரே. (உ௱௫௯)

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதம்
தானென்று நானென்ற தத்துவ நல்சலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகிலேனே. (௨௪௰)

## சரியை.

நாடு நகாமு நற்றிரு கோயிலும்
தேடித் திரிந்து சிவபெரு மானென்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாய்க் கொள்வனே. (௨௪௧)

## கிரியை.

அன்பின் னுருகுவ ளுளும் பணிசெய்வன்
செம்பொன் செய்மேனி கமலத் திருவடி
முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கருள்
என்பினுட் சோதி யிலங்குகின் றானே. (௨௪௨)

## யோகம்.

பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல வுணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே. (௨௪௩)

விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ ராகும்
விரும்பிநின் றேசெயின் மெய்யுரை யாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்
விரும்பிநின் றேசெயில் விண்ணவ னாகுமே. (௨௪௪)

## ஞானம்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நாரின்மிக் காரே. (௨௪௫)

சத்தமுஞ் சத்த மனனுந் தருமனம்
உய்த்த வுணர்வு முணர்த்து மகந்தையும்

சித்தமென் றிம்மூன் றுஞ் சிந்திக்குஞ் செய்கையும்
சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே. (உசகு)

அறிவு மடக்கமு மன்பு முடனே
பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்
குறியுங் குணமுங் குரைகழ னீங்கா
நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே. (உசஎ)

நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயங் கலைஞானங் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே. (உசஅ)

## சன்மார்க்கம்.

சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதி சுடர்க்கண்டு
சீற்ற மொழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே. (உசகூ)

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்தி சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே. (உருய)

தெளிவறி யாதார் சிவனை யறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே. (உருக)

பசுபாச நீங்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்
தொசியாத வுண்மைச் சொருபோ தயத்துற்
றசைவான தில்லாமை யானசன் மார்க்கமே. (உருஉ)

## சகமார்க்கம்.

யோகச் சமாதியி னுள்ளே யகலிடம்
யோகச் சமாதியி னுள்ளே யுளரொளி

யோகச சமாதியி னுள்ளே யுளசத்தி
யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே. (உருரு)

யோகமும் போகமும் யோக்கியர்க் காகுமால்
யோகஞ் சிவரூப முற்றிடு முள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்திய
தாகு மிரண்டு மழியாத யோகிக்கே. (உருச)

## சற்புத்திரமார்க்கம்.

பூசித்தல் வாசித்தல் போற்றல் சபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை யழுக்கின்மை
நேசித்திட் டன்னமு நீசுத்தி செய்தன்மற்
றாசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே. (உருரு)

உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி
வியர்ந்து மரனடிக் சேமுறை செய்மின்
பயந்தும் பிறவிப் பயனது வாகும்
பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே. (உருசு)

நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்றன்னை
என்றுந் தொழுவ னெழிற்பரஞ் சோதியைத்
துன்று மலர்தூவித் தொழுமின் றொழுந்தோறுஞ்
சென்று வெளிப்படுந் தேவர் பிரானே. (உருஎ)

## தாசமார்க்கம்.

எளியன தீப மிடமலர் கொய்தல்
அளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளிதொழில் செய்வது தான்றாச மார்க்கமே. (உருஅ)

## சாலோகம்.

சாலோக மாதி சரியாதி யிற்பெறும்
சாலோக சாமீபந் தங்குஞ் சரியையாம்
மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சாரூபம்
பாலோக மில்லாப் பரனுரு வாமே. (உருகூ)

### சாமீபம்.

பாசம் பசுவான தாகுமிச் சாலோகம்
பாச மருளான தாகுமிச் சாமீபம்
பாசஞ் சிவமான தாகுமிச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச் சியமே. (உ௬௰)

### சாரூபம்.

தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாம்
தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா
அங்கத் துடல்சித்தி சாதன ராகுவர்
இங்கிவ ராக விழிவற்ற யோகமே. (உ௬௧)

### சாயுச்சியம்.

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தன்னைச் சாராம னீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே. (உ௬௨)

சாயுச் சியஞ்சாக்கி ராதீதஞ் சாருதல்
சாயுச் சியமுப சாந்தத்துத் தங்குதல்
சாயுச் சியஞ்சிய மாதல் முடிவிலாச்
சாயுச் சியமனத் தானந்த சத்தியே. (உ௬௩)

### சத்திநிபாதம் - மந்தம்.

இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடற் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தானே. (உ௬௪)

இருணீக்கி யெண்ணில் பிறவி கடத்தி
அருணீங்கா வண்ணமே யாதி யருளும்
மருணீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருணீங்கா வின்பம் புலம்பயில் தானே. (உ௬௫)

### மந்ததாரம்.

மருட்டிப் புணர்ந்து மயக்கமு நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே. (௨௬௬)

கன்னித் துறைபடிந் தாடிய வாடவர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்திலர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்துண்டேல்
பின்னைப் பிறவிப் பிறிதில்லை தானே. (௨௬௭)

### தீவிரம்.

அண்ணிக்கும் பெண்பிள்ளை யப்பனார் தோட்டத்தில்
எண்ணிக்கு மேழேழ் பிறவி யுணர்விக்கும்
உண்ணிற்ப தெல்லாம் மொழிய முதல்வனைக்
கண்ணுற்று நின்ற கனியது வாகுமே. (௨௬அ)

பிறப்பை யறுக்கும் பெருந்தவ நல்கும்
மறப்பை யறுக்கும் வழிபட வைக்கும்
குறப்பெண் குவிமுலை கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே. (௨௬௯)

### தீவிரதாரம்.

இருவினை நேரொப்பி லின்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமரன் ஞானத்தாற் றன்செய லற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (௨எ0)

இரவும் பகலு மிலாத விடத்தே
குரவஞ் செய்கின்ற குழலியை யுன்னி
அரவஞ் செய்யாம லவளுடன் சேரப்
பரிவொன் றிலாளும் பராபரை தானே. (௨எ௧)

### புறச்சமய தூஷணம்.

ஆயத்து ணின்ற வறுசம யங்களும்
காயத் துணின்ற கடவுளைக் காண்கிலா

மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
பாசத்தி லுற்றுப் பதைக்கின்ற வாறே. (உ௭உ)

ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் பயனில்லை
தேறுமின் றேறித் தெளிமின் றெளிந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாமே. (உ௭௩)

சிவமல்ல தில்லை யறையோ சிவமாம்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்
கவமல்ல தில்லை யறுசம யங்கள்
தவம்வல்ல நந்திதாட் சார்ந்துய்ய நீரே. (உ௭௪)

சிவகதி யேகதி மற்றுள்ள வெல்லாம்
பவகதி பாசப் பிறவியொன் றுண்டு
தவகதி தன்னொடு நேரொன்று தோன்றில்
அவகதி மூவரு மவ்வகை யாமே. (உ௭௫)

கற்றுங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் தெரியாதார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே. (உ௭௬)

ஆன சமய மதுவிது நன்றெனும்
மாய மனிதர் மயகக மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த வருவது வாமே. (உ௭௭)

நிராகாரம்.

பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி
தாங்கு மனிதர் தரணியி னேரொப்பர்
நீங்கிய வண்ண நினைவுசெய் யாதவர்
ஏங்கி யுலகி லிருந்தழு வாரே. (உ௭௮)

உட்சமயம்.

ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல விருமுச் சமயமும்

நன்றிது தீதிது வென்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே. (உஎகூ)

சைவப் பெருமைத் தனிநா யகன்றன்னை
உய்ய வுயிர்க்கின்ற வொண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை யின்பஞ்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே. (உஅ௰)

சைவச் சமயத் தனிநா யகனந்தி
உய்ய வகுத்த குருநெறி யொன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத் துளார்க்கு வகுத்துவைத் தானே. (உஅக)

---

# ஆறாந் தந்திரம்.

---

## சிவகுருதரிசனம்.

எல்லா வுலகிற்கு மப்பாலோ னிப்பாலாய்
நல்லா ருள்ளத்து மிக்கரு ணல்கலால்
எல்லாரு முய்யக்கொண் டிங்கே யளித்தலால்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே. (உஅஉ)

சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனவடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே. (உஅரு)

குருவே சிவமெனக் கூறின னந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே. (உஅச)

திருவாய சித்தியு முத்தியுஞ் சீர்மை
மருளா தருளு மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்தப் போதமு நாதன்
உருவா யருளா விடிலோர வொண்ணதே. (உஅ௫)

பத்தியு ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலால்
முத்தியின் ஞான முளைத்தலா லம்முளை
சத்தி யருடரிற் றுனெளி தாமே. (உஅசு)

சிவமான ஞானந் தெளியவொண் சித்தி
சிவமான ஞானந் தெளியவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத் தேயேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே. (உஅஎ)

## திருவடிப்பேறு.

இசைந்தெழு மன்பி லெழுந்த படியே
பசைந்தெழு மீசரைப் பாசத்து ளேகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபத முள்ளத் துவந்ததே. (உஅஅ)

உரையற் றுணர்வற் றுயிர்பர மற்றுத்
திரையற்ற நீர்போற் சிவமாத தீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே. (உஅகூ)

இதயத்து நாட்டத்து மென்றன் சிரத்துப்
பதிவித்த பாதம் பராபர நந்தி
கதிவைத்த வாறுமெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்பவொண் ணதே. (உகூ0)

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்கும்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே. (உகூக)

மந்திர மாவது மாமருந் தாவதும்
தந்திர மாவதுந் தானங்க ளாவதும்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்ற னிணையடி தானே. (உகூஉ)

## ஞாதுருஞானஞேயம்.

காணாத கண்ணுடன் கேளாத கேள்வியும்
கோணாத போகமுங் கூடாத கூட்டமும்
நாணாத நாணமு நாதாந்த போதமும்
காணா யெனவந்து காட்டின னந்தியே. (உகங)

மோனங்கை வந்தோர்க்கு முத்தியும் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியு முன்னிற்கும்
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமு முன்னுமே. (உகச)

## துறவு.

அறவன் பிறப்பிலி யாரு மிலாதான்
உறைவது காட்டக முண்பது பிச்சை
துறவெனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே. (உகரு)

நெறியைப் படைத்தா னெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவி னெருஞ்சில்முட் பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியி னெருஞ்சின்முட் பாயகி லாவே. (உகசு)

## தவம்.

ஒடுங்கு நிலைபெற்ற வுத்தம ருள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையு மில்லை யிராப்பக லில்லை
படும்பய னில்லை பற்றுவிட் டோர்க்கே. (உகஎ)

எம்மா ருயிரு மிருநிலத் தோற்றமும்
செம்மா தவத்தின் செயலின் பெருமையும்
அம்மான் திருவருட் பெற்றவர்க் கல்லாது
இம்மா தவத்தி னியல்பறி யாரே. (உகஅ)

பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்

மறப்பில ராகிய மாதவஞ் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே. (௨௬௬)

இருந்து வருந்தி யெழிற்றவஞ் செய்யும்
பெருந்தன்மை யாளரைப் பேதிக்க வென்றே
இருந்திந் திரனே யெவரே வரினும்
திருந்துந்தன் சிந்தை சிவனவன் பாலே. (௩௰)

சாத்திர மோதுஞ் சதிர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தவிப் பார்வை பசுமரத் தாணிபோல்
ஆர்த்த பிறவி யகலவிட் டோடுமே. (௩௰௧)

தவம்வேண்டு ஞானந் தலைப்பட வேண்டில்
தவம்வேண்டா ஞான சமாதிகை கூடில்
தவம்வேண்டா மச்சக சமார்க்கத் தோர்க்குத்
தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே. (௩௰௨)

## தவதூடணம்.

ஓதலும் வேண்டா முயிர்க்குயி ருள்ளுற்றால்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டால்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினால்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே. (௩௰௩)

கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினால்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினால்
சுத்தமும் வேண்டாந் துடக்கற்று நிற்றலால்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே. (௩௰௪)

## அருளுடைமையின் ஞானம்வருதல்.

பிரானரு ளுண்டெனி லுண்டு நற்செல்வம்
பிரானரு ளுண்டெனி லுண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையு முண்டு
பிரானரு ளாற்பெருந் தெய்வமு மாமே. (௩௰௫)

புண்ணிய பாவ மிரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதறிவார்சில ஞானிகள்

எண்ணி யிரண்டையும் வேரறுத் தப்புறத்
தண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வீரே. (௩௱௬)

சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாமை
சிவனருட் கூறிலச் சிவலோக மாமே. (௩௱எ)

புண்ணிய னெந்தை புனித னிணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவ ராவதும் வானவ ராவதும்
அண்ண லிறைவ னருட்பெற்ற போதே. (௩௱அ)

## அவவேடம்.

ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்
ஆடியும் பாடியு மழுது மரற்றியும்
தேடியுங் காணீர் சிவனவன் றாள்களே. (௩௱௯)

ஞான மிலார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
ஈன மதேசெய் திரந்துண் டிருப்பினும்
ஆன நலங்கெடு மப்புவி யாதலால்
ஈனவர் வேடங் கழிப்பித்த லின்பமே. (௩௱௰)

பொய்த்தவம் செய்வார் புகுவார் நரகத்துப்
பொய்த்தவம் செய்தவர் புண்ணிய ராகாரேல்
பொய்த்தவ மெய்த்தவம் போகத்துட் போக்கியம்
சத்திய ஞானத்தாற் றங்குந் தவங்களே. (௩௱௧௧)

## தவவேடம்.

பூதி யணிவது சாதன மாதியில்
காதணி தாம்பிர குண்டலங் கண்டிகை
ஓதி யவர்க்கு முருத்திர சாதனம்
தீதில் சிவயோகி சாதனந் தேரிலே. (௩௱௧௨)

காதணி குண்டலங் கண்டிகை நாதமும்
ஊதுநற் சங்கு முயர்சட்டிக் கப்பரை

ஏதமில் பாதுக மியோகாந்த மாதனம்
ஏதமி லியோகப் படந்தண்ட மீரைந்தே. (௫௧௩)

## திருநீறு.

நூலும் சிகையு முணரார்நின் மூடர்கள்
நூலது வேதாந்த நுண்சிகை ஞானமாம்
பாலொன்று மந்தணர் பார்ப்பார் பரமுயிர்
ஓரொன் றிரண்டினி லோங்கார மோதிலே. (௫௧௪)

கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்விரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே. (௫௧௫)

## ஞானவேடம்.

சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கும்
அவமான சாதன மாகாது தேரில்
அவமா மவர்க்கது சாதன நான்கும்
உவமான மில்பொரு ளுள்ளுற லாமே. (௫௧௬)

## சிவவேடம்.

அருளா லரனுக் கடிமைய தாகிப்
பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி
இருளான தின்றி யிருஞ்செய லற்றோர்
தெருளா மடிமைச் சிவவேடத் தாரே. (௫௧௭)

மயலற் றிருளற்று மாமன மற்றுக்
சயலுற்ற கண்ணியர் கையிணக் கற்றுத்
தயலற் றவரோடுந் தாமேதா மாகிச்
செயலற் றிருந்தார் சிவவேடத் தாரே. (௫௧௮)

## அபக்குவன்.

குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வர்
குருடுங் குருடுங் குருட்டாட்ட மாடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே. (௫௧௯)

வாயொன்று சொல்ல மனமொன்று சிந்திக்க
நீயொன்று செய்ய லுறுதி நெடுந்தகாய்
தீயென்றிங் குன்னைத் தெளிவன் றெளிந்தபின்
பேயென்றிங் கென்னைப் பிறர்தெளி யாரே. (ருஉ0)

கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலும்
தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலும்
பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்
என்றிவை யிறைபா லியற்கை யல்லவே. (ருஉக)

பக்குவன்.

கொள்ளினு நல்ல குருவினைக் கொள்ளுக
உள்ள பொருளுட லாவி யுடனீக
எள்ளத் தனையு மிடைவிடா தேநின்று
தெள்ளி யறியச் சிவபதந் தானே. (ருஉஉ)

வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புலன்வழி மாற்றிச்சித் தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினேன் சற்சீட னமே. (ருஉரு)

சற்குணம் வாய்மை தயாவிவே கந்தன்மை
சற்குரு பாதமே சாயைபோ னீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்தல்
அற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே. (ருஉச)

---

# ஏழாந் தந்திரம்.

---

## அண்டலிங்கம்.

இலிங்கம தாவ தியாரு மறியார்
இலிங்கம தாவது வெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவது வெண்ணெண் கலையும்
இலிங்கம தாக வெடுத்த துலகே. (ருஉரு)

மறையவ ரர்ச்சனை வண்படி கந்தான்
இறையவ ரர்ச்சனை யேயபொன் னாகும்
குறைவிலா வயிசியர்க் குக்கோ மளமாம்
துறையுடை சூத்திரர் தொல்வாண லிங்கமே. (௩௨௬)

**பிண்டலிங்கம்.**

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே. (௩௨௭)

கோயில்கொண் டன்றே குடிகொண்ட டைவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவீர்
தாயில்கொண் டாற்போற் றலைவனென் னுட்புக
வாயில்கொண் டீசனு மாளவந் தானே. (௩௨௮)

**சதாசிவலிங்கம்.**

நடுவு கிழக்கு தெற்குத் தரமேற்கு
நடுவு படிகநற் குங்கும வன்னம்
அடையுள வஞ்சனஞ் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை யஞ்சே. (௩௨௯)

நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவசங் கண்ணும்
வஞ்சமில் வந்து வளர்நிறம் பச்சையாம்
செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னாகும்
செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே. (௩௩0)

சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடும்
சத்தி யறுகோணஞ் சயனத்தை யுற்றிடும்
சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடும்
சத்தி யுருவாஞ் சதாசிவன் றானே. (௩௩௧)

**ஆன்மலிங்கம்.**

விந்துவு நாதமு மேவு மிலிங்கமாம்
விந்துவ தேபீட நாத மிலிங்கமாம்
அந்த விரண்டையு மாதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே. (௩௩௨)

### ஞானலிங்கம்.

தேவர் பிரானைத் திசைமுக நாதனை
நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை
ஏவர் பிரானென் றிறைஞ்சுவ ரவ்வழி
யாவர் பிரானடி யண்ணலு மாமே. (௩௩௩)

சத்தி சிவன்விளை யாட்டா முயிராகி
ஒத்த விருமாயா கூட்டத் திடையூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிறிவித்துச்
சித்தம் புகுந்து சிவமக மாக்குமே. (௩௩௪)

### சிவலிங்கம்.

மலர்ந்த வயன்மா லுருத்திரன் மகேசன்
பலந்தரு மைம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. (௩௩௫)

### சம்பிரதாயம்.

உடல்பொரு ளாவி யுலகத்தார் கொண்டு
படர்வினைப் பற்றறப் பார்த்துகை வைத்து
நொடியி னடிவைத்து நுண்ணுணர் வாக்கிக்
கடியப் பிறப்பறக் காட்டின னந்தியே. (௩௩௬)

உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்சட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்க ளுணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்க ளுணர்ந்துகண் டாரே. (௩௩௭)

காயப் பரப்பி லலைந்து துரியத்துச்
சால விரிந்து குவிந்து சகலத்தில்
ஆயவவ் வாறு றடைந்து திரிந்தோர்க்குத்
தூய வருடந்த நந்திக்கென் சொல்வதே. (௩௩௮)

நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென வூனுயி ரென்ன வுடனின்று

வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென வின்பந் திளைக்கின்ற வாறே. (ருரு௯)

பெருந்தன்மை தானென யானென வேறாய்
இருந்தது மில்லைய தீச னறியும்
பொருந்து முடலுயிர் போலுமை மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே. (ருசய)

## திருவருள்வைப்பு.

இருபத மாவ திரவும் பகலும்
உருவது வாவ துயிரு முடலும்
அருளது வாவ தறமுந் தவமும்
பொருளது வுண்ணின்ற போகம தாமே. (ருசக)

தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி வானெங்கள் பிஞ்ஞக னெம்மிறை
ஆர்ந்தறி வாரறி வேதுணை யாமெனச்
சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே. (ருசஉ)

அருட்கண் ணிலாதார்க் கரும்பொரு டோன்றா
அருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்று மரனே
இருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்றாத்
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே. (ருசங)

## அருளொளி.

ஆடியும் பாடியு மழுது மரற்றியும்
தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்
கூடிய வாறே குறியாக் குறிதந்தென்
ஊடுநின் றானவன் றன்னரு ளூற்றே. (ருசச)

விளக்கினை யேற்றி வெளியை யறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே. (ருசரு)

புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி
நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி

அறமே புகுந்தெனக் காரமு தீந்த
திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே. (௫௪௬)

## சிவபூசை.

உள்ளம் பெருங்கோயி லூனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே. (௫௪௭)

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ண லதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிக ளெம்மிறை யீசனை
நண்ணறி யாம னழுவுகின் றாரே. (௫௪௮)

சாணகத் துள்ளே யழுந்திய மாணிக்கம்
காணு மளவுங் கருத்தறி வாரில்லை
பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந் தானே. (௫௪௯)

ஊழிதோ றூழி யுணர்ந்தவர்க் கல்லது
ஊழி லுயிரை யுணரவுந் தானொட்டா
ஆழி யமரு மரியய னென்றுளோர்
ஊழி கடந்துமோ ருச்சியு ளானே. (௫௫0)

## குருபூசை.

உச்சியுங் காலையு மாலையு மீசனை
நச்சுமின் னச்சி நமவென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே. (௫௫௧)

இராப்பக லற்ற விடத்தே யிருந்து
பராக்கற வானந்தத் தேறல் பருகி
இராப்பக லற்ற விறையடி யின்பத்
திராப்பகன் மாயை யிரண்டடித் தேனே. (௫௫௨)

## மயேசுரபூசை.

படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின்
நடமாடக் கோயி னம்பர்க்கங் காகா

நடமாடக் கோயி னம்பர்க்கொன் றீயின்
படமாடக் கோயிற் பகவற்க தாமே. (௫௫௩)

தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமு முண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்
றெண்டிசை நந்தி யெடுத்துரைத் தானே. (௫௫௪)

மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை
ஆத்தனுக் கீந்த வரும்பொரு ளானது
மூர்த்திகண் மூவர்க்கு மூவேழ் குரவர்க்கும்
தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரே. (௫௫௫)

அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரில்லை யென்பது நிச்சயந் தானே. (௫௫௬)

ஆறிடும் வேள்வி யருமறை நூலவர்
கூறிடு மந்தணர் கோடிபே ருண்பதில்
நீறிடுந் தொண்டர் நினைவின் பயனில்லை
பேறெனி லோர்பிடி பேறது வாகுமே. (௫௫௭)

வித்தக மாகிய வேடத்த ருண்டவூண்
அத்த னயன்மா லருந்திய வண்ணமாம்
சித்தந் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முத்தியா மென்றுநம் மூலன் மொழிந்ததே. (௫௫௮)

## அடியார் பெருமை.

அவன்பா லணுகியே யன்புசெய் வார்கள்
சிவன்பா லணுகுதற் செய்யவும் வல்லன்
அவன்பா லணுகியே நாடு மடியார்
இவன்பாற் பெருமை யிலயம தாமே. (௫௫௯)

சிவயோக ஞானி செறிந்தவத் தேசம்
அவயோக மின்றி யறிவோருண் டாகும்
நவயோகங் கைகூடும் நல்லியல் காணும்
பவயோக மின்றிப் பரலோக மாமே. (௫௬௰)

மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
மேலுணர் வான்மிகு ஞாலங் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே. (௩௬௧)

## பிக்ஷாவிதி.

பரந்துல கேழும் படைத்த பிரானை
இரந்துணி யென்பர்க ளெற்றுக் கிரக்கும்
நிரந்தர மாக நினையு மடியார்
இரந்துண்டு தன்கழ லெட்டச்செய் தானே. (௩௬௨)

## முத்திரைபேதம்.

மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை
ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை
தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை
கானிக்கு முத்திரை கண்ட சமயமே. (௩௬௩)

## பூரணக்குகைநெறிச்சமாதி.

சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்
தவலோகஞ் சேர்ந்துபின் றான்வந்து கூடிச்
சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்
புவலோகம் போற்றுநர் புண்ணியத் தோரே. (௩௬௪)

ஊனமின் ஞானிநல் யோகி யுடல்விட்டால்
தானற மோனச் சமாதியுட் டங்கியே
தானவ னாகும் பரகாயஞ் சாராதே
ஊனமின் முத்தராய் மீளா ருணர்வுற்றே. (௩௬௫)

## சமாதிக்கிரியை.

அந்தமின் ஞானி யருளை யடைந்தக்கால்
அந்த வுடறான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமி லின்ப வருள்பெறு வாரே. (௩௬௬)

நவமிகு சாணலே நல்லாழஞ் செய்து
குவைமிகு சூழவைஞ் சாணகக் கோட்டித்

தவமிகு குகைமுக் கோணமுச் சாணைக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே. (௫௬௭)

**ஆதித்தநிலை-அண்டாதித்தன்.**

தானே யுலகுக்குத் தவத்துவ னாய்நிற்கும்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்கும்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்கும்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே. (௫௬அ)

பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணாத வரும்பொருள்
நீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவன்
ஆருக்கு மெட்டாத வாதித்தன் றானே. (௫௬௯)

மண்ணை யிடந்ததின் கீழொடு மாதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடும்
கண்ணையிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே. (௫௭0)

பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரு மறியா ரருங்கடை நூலவர்
தீர னிருந்த திருமலை சூழென்பார்
ஊரை யுணர்ந்தா ருணர்ந்திருந் தாரே. (௫௭௧)

**பிண்டாதித்தன்.**

நின்று மிருந்துங் கிடந்து நடந்தும்
கன்றாய நந்திக் கருத்து ளிருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே. (௫௭௨)

ஆதித்த னோடி யடங்கு மிடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெலாம்
ஆதித்த னோடே யடங்குகின் றாரே. (௫௭௩)

உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை

சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்
குருகிக் கிடக்குமென் னுள்ளன் புதானே. (ருஎச)

**மனவாதித்தன்**

சந்திரன் சூரியன் றன்வரிற் பூசனை
முந்திய பானுவி லிந்துவந் தேய்முறை
அந்த விரண்டு முபய நிலத்தில்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னாரே. (ருஎரு)

ஈரண்டத் தப்பா லியங்கிய வவ்வொளி
ஓரண்டத் தார்க்கு முணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளியாய் நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே. (ருஎசு)

**ஞானுதித்தன்.**

உள்ள வருணோ தயத்தெழு மோசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்
குள்ளன வைங்கலைக் கொன்று முதயமே. (ருஎஎ)

பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மெய்யிரு ணீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிரு ணீக்குந் திருவுடை நந்தியென்
கையிரு ணீங்கக் கலந்தெழுந் தானே. (ருஎஅ)

மண்டலத் துள்ளே மலர்ந்தெழு மாதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடும்
சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரும்
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கே. (ருஎகூ)

நாபிக்கண் ணாசி நயன நடுவினும்
தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்க ளீசன் றிருமால் பிரமனும்
மூவரு மாக வுணர்ந்திருந் தாரே. (ருஅ0)

**சிவாதித்தன்.**

அன்றிய பாச விருளுமஞ் ஞானமும்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்

ஒன்று மிருசுட ராமரு ணோதயம்
துன்றிரு ணீங்குதல் போலத் தொலைந்ததே. (௩அக)

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்கும்
தானே யயன்மா லெனநின்று தாபிக்கும்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. (௩அஉ)

**அணு.**

அணுவு ளவனு மவனு ளணுவும்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே. (௩அ௩)

**சீவன்.**

மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது வாயிர மாயினால்
ஆவியின் கூறுநூ றாயிரத் தொன்றே. (௩அச)

ஏனோர் பெருமைய னாயினு மெம்மிறை
ஊனே சிறுமையி னுட்கலந் தங்குளன்
வானோ ரறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தி னளவே. (௩அரு)

**பசு.**

கற்ற பசுக்கள் கதறித் திரியினும்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினும்
உற்ற பசுக்க ளொருகுடம் பால்போதும்
மற்றைப் பசுக்கள் வறள்பசு தானே. (௩அசு)

**போதன்.**

சீவ னெனச்சிவ னென்னவே றில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே. (௩அஎ)

## ஐந்திந்திரிய மடக்குமருமை.

கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்
திருத்தலும் பாய்மாத் திகைத்தன் றிப் பாயா
எருத்துற வேறி யிருக்கிலு மாங்கே
வருத்தினு மம்மா வழிநட வாதே. (ருஅஅ)

## அசற்குருநெறி.

குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முரணும் பழங்குழி வீழ்வர்கண் முன்பின்
குருடரும் வீழ்வர்கண் முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாகியே. (ருஅக)

## சற்குருநெறி.

கறுத்த இரும்பே கனகம தானல்
மறித்திரும் பாகா வகையது போலக்
குறித்தவப் போதே குருவருள் பெற்றால்
மறித்துப் பிறவியில் வந்தணு காரே. (ருகூ0)

பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோல்
குருபரி சித்த குவலய மெல்லாம்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே. (ருகூக)

வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழி கண்டவர் காணு வழியை
பெரும்வழி யாநந்தி பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே. (ருகூ௨)

## கேடுகண்டிரங்கல்.

விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லானிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை யோராப் பழிமொழி யாளர்
உரந்தன்மை யாக வொருங்கிநின் றார்களே. (ருகூரு)

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணூர்

பெறுதற் கரியபிராணிக ளெல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. (நகச)

## இதோபதேசம்.

ஒன்றே குலமு மொருவனே தேவனும்
நன்றே நினைமி னமனில்லை நாணுமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே. (நகரு)

இக்காய நீக்கி யினியொரு காயத்தில்
புக்குப் பிறவாமற் போம்வழி தேடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தமெக் கானதென்
றக்கால முன்ன வருள்பெற லாமே. (நகசு)

ஏறுடை யாயிறை வாவெம் பிரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை யண்ண றிருவடி
வேறணி வார்க்கு வினையில்லை தானே. (நகஎ)

சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடும்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடும்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரே. (நகஅ)

---

# எட்டாந் தந்திரம்.

---

### அவத்தைபேதம் - கீழாலவத்தை.

ஊமை யெழுத்தொடு பேசு மெழுத்துறில்
ஆமை யகத்தினி லஞ்சு மடங்கிடும்
ஓமய முற்றது வுள்ளொளி பெற்றது
நாமய மற்றது நாமறி யோமே. (நகக)

ஆசான்முன் னேதுயில் மாண வகரைத்
தேசாய தண்டா லெழுப்புஞ் செயல்போல்
நேசாய வீசனு நீடா ணவத்தரை
ஏசாத மாயாடன் றலே யெழுப்புமே. (சா)

## மத்தியசாக்கிராவத்தை.

ஆகின்ற தொண்ணூற்று டாறும் பொதுவென்பர்
ஆகின்ற வாறு றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே. (சாக)

ஆணவ மாதி மலமைந் தலரோனுக்
காணவ மாதிநான் காமாற் கரனுக்கு
ஆணவ மாதிமூன் றீசர்க் கிரண்டென்ப
ஆணவ மொன்றே சதாசிவற் காவதே. (சாஉ)

## சுத்தநனவாதிபருவம்.

பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற வாய னொருவண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற வாயன்கோல் போடில்
பசுக்க டலைவனைப் பற்றி விடாவே. (சாங)

ஈதென் றறிந்தில னித்தனை காலமும்
ஈதென் றறிந்தபி னேது மறிந்திலேன்
ஈதென் றறியு மறிவை யறிந்தபின்
ஈதென் றறியு மியல்புடை யோனே. (சாச)

உயிர்க்குயி ராகி யுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியு நாத னுலகாதி
இயற்பின்றி யெல்லா மிருண்மூட மாமே. (சாரு)

அறியா தவற்றை யறிவா னறிவான்
அறிவா னறியாதான் றன்னறி வாகான்
அறியா தவத்தை யறிவானைக் கூட்டி
அறியா தறிவானை யாரறி வாரே. (சாசு)

## கேவலசகல சுத்தம்.

பெத்தமு முத்தியும் பேணுந் துரியமும்
சுத்த வதீதமுந் தோன்றாமற் றானுணும்

அத்த னருளென் றருளா லறிந்தபின்
சித்தமு மில்லை செயலில்லை தானே. (சாஎ)

இருவினை யொத்திட வின்னருட் சத்தி
மருவிட ஞானத்தி லாதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே. (சாஅ)

## பராவத்தை.

ஆறாறுக் கப்பா லறிவா ரறிபவர்
ஆறாறுக் கப்பா லருளார் பெறுபவர்
ஆறாறுக் கப்பா லறிவா மவர்கட்கே
ஆறாறுக் கப்பா லரனினி தாமே. (சாகூ)

பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கா ரணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கா ரணங்களே. (சாய)

மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே. (சுகக)

## கலவுசெலவு.

வெல்லு மளவில் விடுமின் வெகுளியைச்
செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
அல்லும் பகலு மருளுடன் றூங்கினல்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே. (சுகஉ)

## நின்மலாவத்தை.

காலங்கி நீர்பூக் கலந்தவா காயம்
மாலங்கி யீசன் பிரமன் சதாசிவன்
மேலஞ்சு மோடி விரவவல் லார்கட்குக்
காலனு மில்லை கருத்தில்லை தானே. (சுகங)

ஆனைக ளைந்து மடக்கி யறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி யதனுள்புக்
கூனை யிருளற நோக்கு மொருவற்கு
வானக மேற வழியெளி தாமே. (சகச)

முன்னை யறிவினிற் செய்த முதுதவம்
பின்னை யறிவினைப் பெற்றா லறியலாம்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே. (சகரு)

செயலற் றிருக்கச் சிவானந்த மாகும்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாகுமே. (சகசு)

அறிவிக்க வேண்டா மறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டா மறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே. (சகஎ)

அவமுஞ் சிவமு மறியா ரறியார்
அவமுஞ் சிவமு மறிவா ரறிவார்
அவமுஞ் சிவமு மருளா லறிந்தால்
அவமுஞ் சிவமு மவனரு ளாமே. (சகஅ)

தீண்டற் கரிய திருவடி நேயத்தை
மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று
தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறித்
தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே. (சகக)

சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்
சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியர்
சார்ந்தவர் நேயந் தலைப்பட்ட வானந்தர்
சார்ந்தவர் சத்த வருட்டன்மை யாரே. (சஉ0)

தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவம்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்

தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே. (௪௨௧)

தன்னினிற் றன்னை யறியுந் தலைமகன்
தன்னினிற் றன்னை யறியத் தலைப்படும்
தன்னினிற் றன்னைச் சார்கில னாகில்
தன்னினிற் றன்னையுஞ் சார்தற் கரியவே. (௪௨௨)

**அறிவுதயம்.**

தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
தன்னை யறியு மறிவை யறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே. (௪௨௩)

அறிவு வடிவென் றறியாத வென்னை
அறிவு வடிவென் றருள்செய்தா னந்தி
அறிவு வடிவென் றருளா லறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே. (௪௨௪)

அறிவுக் கழிவில்லை யாக்கமு மில்லை
அறிவுக் கறிவல்ல தாதார மில்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்
டறைகின் றனமறை யீறுக டாமே. (௪௨௫)

என்னை யறிந்திலே னித்தனை காலமும்
உன்னை யறிந்தபி னேது மறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா
தென்னையிட் டென்னை யுசாவுகின் றானே. (௪௨௬)

**ஆறந்தம்.**

தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்தம்
ஆனா துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேர்சிவ யோகமாய்
ஆனா மலமற் றருஞ்சித்தி யாதலே. (௪௨௭)

நித்தம் பரனோ டுயிருற்று நீண்மனம்
சத்த முதலைந்துந் தத்துவத் தானீங்கிச்

சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்
தத்தன் பரன்பா லடைதல்சித் தாந்தமே. (ருஉஅ)

வேதாந்தஞ் சித்தாந்தம் வேறிலா முத்திரை
போதாந்த ஞானம் யோகாந்தம் பொதுநேய
நாதாந்த மானந்தஞ் சீரோ தயமாகும்
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கவே. (ருஉகூ)

சித்தாந்தத் தேசிவன் முத்திசித் தித்தலால்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலால்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே. (ருங0)

வேதமோ டாகம மெய்யா மிறைவனூல்
ஓதும பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாத னுரையவை நாடி லிரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே. (ருஙக)

## பதிபசுபாச வேறின்மை.

அறிவறி வென்ற வறிவு மநாதி
அறிவுக் கறிவாம் பதியு மநாதி
அறிவினைக் கட்டிய பாச மநாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே. (ருஙஉ)

பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாச மறுத்தால்
பசுக்க டலைவனைப் பற்றி விடாவே. (ருஙங)

ஆய பதிதா னருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவு மடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய வரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே. (ருஙச)

## அடிதலையறியுந்திறங்கூறல்.

காலுந் தலையு மறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்

பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே. (சஙரு)

தலையடி யாவ தறியார் காயத்தில்
தலையடி யுச்சியி லுள்ளது மூலம்
தலையடி யான வறிவை யறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே. (சஙசு)

கால் கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினன்
மேல்கொண்டென் செம்மை விளம்ப வொண்ணதே. (ஙசஎ)

## மூக்குற்றம்.

காமம் வெகுளி மயக்க மிவைகடிந்
தேமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமென்னு மோசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைபட்ட வாறே. (சஙஅ)

## மூப்பதம்.

போதந் தனையுன்னிப் பூதாதி பேதமும்
ஓதுங் கருவிதொண் ணூறுட னோராறும்
பேதமு நாதாந்தப் பெற்றியிற் கைவிட்டு
வேதஞ்சொல் தொம்பத மாகுதன் மெய்ம்மையே. (சஙகூ)

## மூப்பரம்.

ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரம்
கூறா வுபதேசங் கூறிச் சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக வானந்தம் பேணும் பெருகவே. (சசய)

## பாலக்ஷணம்.

ஆதியு மந்தமு மில்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றாமையின்
நீதிய தாய்நிற்கு நீடிய வப்பர
போத முணர்ந்தவர் புண்ணியத் தோரே. (சசக)

துரியங் கடந்து துரியாதீ தத்தே
அரிய வியோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே
துரியவல் லார்க்குத் துரிசில்லை தானே. (௬௬௨)

## முத்துரியம்.

தொட்டே யிருமின் றுரிய நிலத்தினை
எட்டா தெனினின் றெட்டு மிறைவனைப்
பட்டாங் கறிந்திடிற் பன்னு வுதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானே. (௬௬௩)

## மும்முத்தி.

சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவமா கியநெறி சோகமென் போர்க்குச்
சிவமா மமலன் சிறந்தனன் றானே. (௬௬௬)

## முச்சொரூபம்.

மூன்றுள மாளிகை மூவ ரிருப்பிடம்
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறே. (௬௬௫)

## முக்காணம்.

ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே. (௬௬௬)

## முப்பாழ்.

உள்ள முருவென்று முருவ முளமென்றும்
உள்ளப் பரிசறிந் தோரு மவர்கட்குப்
பள்ளமு மில்லை திடரில்லை பாழில்லை
உள்ளமு மில்லை யுருவில்லை தானே. (௬௬௭)

### காரிய காரணவுபாதி.

அகார முயிரே யுகாரம் பரமே
மகாரஞ் சிவமாய் வருமுப் பதத்துச்
சிகாரஞ் சிவமே வகாரம் பரமே
யகார முயிரென் றறையலு மாமே. (௪௪௮)

### உபசாந்தம்.

முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானுதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே. (௪௪௯)

### புறங்கூறாமை.

நின்று மிருந்துங் கிடந்து நிமலனை
ஒன்றும் பொருள்க ளுரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்
தொன்று யுணரு மொருவனு மாமே. (௪௫௰)

சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் றோய்ந்துந்தோ யாதவர்
முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமே. (௪௫௧)

### சுத்தாசுத்தம்.

நாசி நுனியினி னன்குமூ விரலிடை
ஈச னிருப்பிட மியாரு மறிகிலர்
பேசி யிருக்கும் பெருமறை யம்மறை
கூசி யிருக்குங் குணமது வாமே. (௪௫௨)

மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படு மப்பொருள்
மாயை மறைய மறைய வல் லார்கட்குக்
காயமுமில்லை கருத்தில்லை தானே. (௪௫௩)

## இலக்ஷணாத்திரயம்.

வில்லின் விசைநாணிற் கோத்திலக் கெய்தபின்
கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தன
வில்லு ளிருந்தெறி கூரு மொருவற்குக்
கல்கல னென்னக் கதிரெதி ராமே. (௨௫௪)

## விசுவக்கிராசம்.

அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற விவ்வுடற் போமப் பரத்தே. (௨௫௫)

## வாய்மை.

எல்லா மறியு மறிவு தனைவிட்டு
எல்லா மறிந்து மிலாபமங் கில்லை
எல்லா மறிந்த வறிவினை நானென்னில்
எல்லா மறிந்த விறையென லாமே. (௨௫௬)

மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்றன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா வொருவனை
உய்கலந் தூழித் தலைவனு மாய்நிற்கும்
மெய்கலந் தின்பம் விளைந்திடு மெய்யர்க்கே. (௨௫௭)

## ஞானிசெயல்.

முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்ந்தறப் பார்ப்பர்கள்
தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
நன்மையி லைம்புல னடைவி னாலே. (௨௫௮)

தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலே. (௨௫௯)

### அவாவறுத்தல்.

வாசியு மூசியும் பேசி வகையினால்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையு மன்பு மறுமி னறுத்தபின்
ஈச னிருந்த விடமெளி தாமே. (சசுல)

ஆசை யறுமின்க ளாசை யறுமின்கள்
ஈசனோ டாயினு மாசை யறுமின்கள்
ஆசை படப்பட வாய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட வானந்த மாமே. (சசுக)

### பத்தியுடைமை.

அடியா ரடியா ரடியார்க் கடிமைக்
கடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியா ரருளா லவனடி கூட
அடியா னிவனென் றடிமைகொண் டானே. (சசுஉ)

ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென் னாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றா னாடிவந் துள்புகுந் தானே. (சசுங)

---

## ஒன்பதாந்தந்திரம்.

---

### ஞானகுரு தரிசனம்.

கருடனுருவங் கருது மளவில்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவி னுருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே. (சசுச)

அண்ண லிருப்பிட மாரு மறிகிலர்
அண்ண லிருப்பிட மாய்ந்துகொள் வார்களுக்
கண்ண லழிவின்றி யுள்ளே யமர்ந்திடும்
அண்ணலைக் காணி லவனிவ னாமே. (சசுரு)

## பிரணவசமாதி.

ஓமெனு மோங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனு மோங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனு மோங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனு மோங்கார மொண்முத்தி சித்தியே. (சகூகூ)

ஓங்காரத் துள்ளே யுதித்தவைம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்காரா தீதத் துயிர்மூன்று முற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே. (சகூஎ)

## தூலபஞ்சாக்கரம்.

குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்
கருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே. (சகூஅ)

## சூக்குமபஞ்சாக்கரம்.

எளிய வாதுசெய் வாரெங்க ளீசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்
தெளிய வோதிச் சிவாய நமவெனுங்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே. (சகூகூ)

சிவசிவ வென்றே தெளிகில ரூமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் ளடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகுந் திருவரு ளாமே. (சஎய)

சிவசிவ வென்கிலர் தீவினை யாளர்
சிவசிவ வென்றிடத் தீவினை மாளும்
சிவசிவ வென்றிடத் தேவரு மாவர்
சிவசிவ வென்னச் சிவகதி தானே. (சஎக)

## அதிசூக்குமபஞ்சாக்கரம்.

சிவாய நமவெனச் சித்த மொருக்கி
அவாய மறவே யடிமைய தாக்கிச்

சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க வானந்த மாமே. (௪௭௨)

பழுத்தன வைந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் வினையறி வாரில்லை
எழுத்தறி வோமென் றுரைப்பர்க ளேதர்
எழுத்தை யழுத்து மெழுத்தறி யாரே. (௫௭௩)

## திருக்கூத்துத்தரிசநம்.

எங்குந் திருமேனி யெங்குஞ் சிவசத்தி
எங்குஞ் சிதம்பர மெங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமா யிருத்தலா லெங்கெங்கும்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே. (௪௭௪)

## சிவானந்தக்கூத்து.

வேதங்க ளாட மிகுவா கமமாடக்
கீதங்க ளாட கிளரண்ட மேழாடப்
பூதங்க ளாடப் புவன முழுதாட
நாதங்கொண் டாடினன் ஞானனந்தக் கூத்தே. (௪௭௫)

தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்
மூவர்க ளாதியின் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையு மாடிடு மெம்மிறை யாடவே. (௪௭௬)

## பொற்பதிக்கூத்து.

உம்பரிற் கூத்தனை யுத்தமக் கூத்தனைச்
செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடியென் னன்பில்வைத் தேனே. (௪௭௭)

## பொற்றில்லைக்கூத்து.

ஆறு முகத்தி லதிபதி நானென்றும்
கூறு சமயக் குருபர னென்றும்
தேறினர் தெற்குத் திருவம் பலத்துளே
வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானே. (௪௭அ)

ஆடிய காலு மதிர்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமும்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. (சஎகூ)

## அற்புதக்கூத்து.

நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடம்
சிற்றம் பலமென்று சேர்ந்துகொண் டேனே. (சஅ௦)

அம்பல மாவ தகில சராசரம்
அம்பல மாவது வாதிப் பிரானடி
அம்பல மாவது வப்புத்தீ மண்டலம்
அம்பல மாவது வஞ்செழுத் தாமே. (சஅக)

புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோல்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
அளிக்கு மருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்கு ளானந்தத் தமுதூறு முள்ளத்தே. (சஅஉ)

நாதத்தி னந்தமு நற்போத வந்தமும்
வேதத்தி னந்தமு மெய்ச்சிவா னந்தமும்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட மாமே. (சஅங)

ஆனந்த மானந்த மென்ப ரறிவிலர்
ஆனந்த மாநட மாரு மறிகிலர்
ஆனந்த மாநட மாரு மறிந்தபின்
தானந்த மற்றிட மானந்த மாமே. (சஅச)

அரன்றுடி தோற்ற மமைத்த றிதியாம்
அரனங்கி தன்னி லறையிற் சங்காரம்
அரனுற் றணைப்பி லமருந் திரோதாயி
அரனடி யென்று மனுக்கிரக மென்னே. (சஅரு)

## ஞானோதயம்.

விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே. (சுஅசு)

நானென்றுந் தானென்று நாடினே னாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பதும்
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்
நானென்று நானு நினைப்பொழிந் தேனே. (சுஅஎ)

உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவந் தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே. (சுஅஅ)

## சொருபோதயம்.

உருவன்றி யேநின் றுருவம் புணர்க்கும்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
மருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே. (சுஅகூ)

## ஊழ்.

செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தக னந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிக டன்மைகுன் றாரே. (சுகூ0)

வானின் றிடிக்கிலென் மாகடற் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்ட மடிக்கிலென்
நானொன்றி நாதனை நாடுவ னானே. (சுகூக)

## சிவதரிசனம்.

சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படும்

சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. (ருகஉ)

### சிவரூபதரிசனம்.

உணர்வு மவனே யுயிரு மவனே
புணரு மவனே புலவி யவனே
இணரு மவன்றன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. (ருகங)

### கர்மநிர்வாணம்.

பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றற் றவர்சுற்றி நின்றவென் சோதியைப்
பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரே. (ருகச)

### மோனசமாதி.

உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்க ளுணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்க ளுணர்ந்துகண் டாரே. (ருகரு)

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே யானந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே. (ருகசா)

தானு மழிந்து தனமு மழிந்துநீ
டூனு மழிந்து வுயிரு மழிந்துடன்
வானு மழிந்து மனமு மழிந்துபின்
நானு மழிந்தமை நானறி யேனே. (ருகள)

### வரையுரைமாட்சி.

உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூடர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே. (ருகஅ)

**அனைந்தோர் தன்மை.**

மலமில்லை மாசில்லை மானுபி மானக்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே. (௪௯௯)

ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசம்
கழிந்தேன் கடவுளு நானுமொன் றானேன்
இழிந்தாங் கினிவரு மார்க்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே. (௫௦௦)

ஆராலு மென்னை யமட்டவொண் ணாதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லாதினி
யார்பாடுஞ் சாரா வறிவறிந் தேனே. (௫௦௧)

நமன்வரின் ஞானவாள் கொண்டே யெறிவன்
சிவன்வரி னானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினைப் பண்டே யறுத்தேன்
தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராமே. (௫௦௨)

சித்தஞ் சிவமாய் மலமூன் றுஞ் செற்றவர்
சுத்தஞ் சிவமாவர் தோயார் மலபந்தம்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தாமாமென் றெண்ணியே. (௫௦௩)

சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்றான்
அவபெரு மானென்னை யாளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே. (௫௦௪)

அன்பு ளுருகி யழுவ னரற்றுவன்
என்பு முருவ விராப்பக லேத்துவன்
என்பொன் மணியை யிறைவனை யீசனைத்
தின்பன் கடிப்பன் றிருத்துவன் றானே. (௫௦௫)

## தோத்திரம்.

போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை
ஊற்றமு மோசையு மோசை யொடுக்கமும்
வேற்றுட ருனென் றதுபெருந் தெய்வமாம்
காற்றது வீசன் கலந்துநின் றானே. (௫௱௬)

ஏனோர் பெருமைய னாகிலு மெம்மிறை
ஊனே சிறுமையு ளுட்கலந் தங்குளன்
வானோ ரறியு மளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தி னளவே. (௫௱எ)

## சர்வவியாபி.

நானறிந் தப்பொரு ளுடலிட மில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடும்
ஊனறிந் துள்ளே யுயிர்க்கின்ற வொண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாமே. (௫௱அ)

உணர்வு மவனே யுயிரு மவனே
புணர்வு மவனே புலனு மவனே
இணரு மவன்றன்னை யெண்ணலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே. (௫௱௯)

மூல னுரைசெய்த மூவா யிரந்தமிழ்
மூல னுரைசெய்த முந்நூறு மந்திரம்
மூல னுரைசெய்த முப்ப துபதேசம்
மூல னுரைசெய்த மூன்றுமொன் றாமே. (௫௱௰)

வாழ்கவே வாழ்கவென் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்க மெய்ஞ்ஞானத் தவன்றாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் பாதமே. (௫௱௰க)

திருச்சிற்றம்பலம்.

ஆகச் செய்யுள் - ௫௱௰க.

திருமந்திரத்திரட்டு முற்றுப்பெற்றது.

---

சிலபிரதிகளில் அதிகமாகக் காணப்படும்

## திருமந்திரப் பாடற்றிரட்டு.

---

### அவிரோதவுந்தியார் உரை.

இணங்க வேண்டா வினியுல கோருடன்
நுணங்கு கல்வியு நூல்களு மென்செயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே. (க)

முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியிற் பெற்று லறியலாம்
தன்னை யறிவ தறிவா மஃதன்றிப்
பின்னை யறிவது பேயறி வாமே. (உ)

### வைராக்கிய தீபவுரை.

உடலாங் குகையி லுணர்வாகும் பீடத்
தடலார் சமாதி யிதயத்த தாக
நடமா டியகுகை நாடிய யோகி
மிடையாகா வண்ணமே சாதிக்கு மெல்லவே. (ங)

நிற்ற லிருத்தல் கிடத்த னடையோடல்
பெற்ற வக்காலுந் திருவருள் பேராமல்
சற்றியன் ஞானந்தந் தானந்தந் தங்கவே
உற்ற பிறப்பற் றுளிர்ஞான நிட்டையே. (ச)

---

**நாயோட்டு மந்திரம்** என்னுஞ்செய்யுள் திருமூலத்தேவர் திருவாக்கென்று கருதுதற்கிடமில்லை.

---

## திருமந்திரத்திரட்டின்

# செய்யுள் முதற்குறிப் பகராதி.



செய்யுள். பக்கம்.

---

## அதிகமாகக் காணப்படும் பாடல்கள்.





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# பதினோராந் திருமுறை

என்னும்

# நாற்பது பிரபந்தங்கள்.

இந்தப்பிரபந்தங்களை யருளிச் செய்தவர்கள் (௧) திருவாலவாயுடையார் என்னும் சோமசுந்தரக் கடவுள். (௨) காரைக்காலம்மையார். (௩) ஐயடிகள் காடவர்கோனாயனார். (௪) சேரமான் பெருமாணாயனார். (௫) நக்கீரதேவ நாயனார். (௬) கல்லாடதேவ நாயனார். (௭) கபிலதேவ நாயனார். (௮) பரணதேவ நாயனார். (௯) இளம்பெருமானடிகள். (௰) அதிராவடிகள். (௧௧) திருவெண்காட்டடிகள். (௧௨) நம்பியாண்டார் நம்பி என்னும் பன்னிருவர்களே.

திருச்சிற்றம்பலம்.



# இப்பன்னிருவர் அருளிச்செய்த பிரபந்தங்களின் றேகை.



**பதினோராந் திருமுறையெனல் - திருமுறைகண்ட புராணம்.**

வைத்ததற்பி னம்பிகழன் மன்னர்பிரான் மகிழ்ந்திறைஞ்சிச்
சித்திதரு மிறைமொழிந்த திருமுகப்பா சுரமுதலா
உய்த்தபதி கங்களையு மொருமுறையாச் செய்கவெனப்
பத்திதருந் திருமுறைகள் பதினொன்றாப் பண்ணினர். (௧)

மந்திரங்க ளெழுகோடி யாதலினன் மன்னுமவர்
இந்தவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினல்
அந்தமுறை நான்கினெரு முறைபதினென் றக்கினர். (௨)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பிரபந்தமாலைத் திரட்டு.



## திருவாலவாயுடையார் சேரமான் பெருமாணயனருக்கு அருளிச்செய்த திருமுகப்பாசுரம்.



திருச்சிற்றம்பலம்.

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பா லியாழ்பயில் பாணபத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே. (க)

திருச்சிற்றம்பலம்.



காரைக்காலம்மையார் அருளிச்செய்த

## திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகம்.



பண் - நட்டபாடை.

திருச்சிற்றம்பலம்.

கொங்கை திரங்கி நரம்பெழுந்து குண்டுகண்வெண்பற் குழிவயிற்றுப்
பங்கி சிவந்திரு பற்கணீண்டு பரடுயர்நீள்கணைக்காலோர் பெண்பேய்
தங்கி யலறி யுலறுகாட்டிற் றாழ்சடை யெட்டுத் திசையும்வீசி
அங்கங் குளிர்ந்தன லாடுமெங்க ளப்ப னிடந்திரு வாலங்காடே. (௨)

எட்டி யிலவ மீகை சூரை காரை படர்ந்தெங்கும்
சுட்ட சுடலை சூழ்ந்த கள்ளி சோர்ந்த குடர்கவ்வப்
பட்ட பிணங்கள் பரந்த காட்டிற் பறைபோல் விழிகட்பேய்
கொட்ட முழவங் கூளி பாடக் குழக னாடுமே. (௩)

நிணந்தா னுருகி நிலந்தா னனைப்ப நெடும்பற் குழிகட்பேய்
சுணங்கை யெறிந்து சூழ நோக்கிச் சுடர நவித்தெங்கும்
கணங்கள் கூடிப் பிணங்கண் மாந்திக் களித்த மனத்தவாய்
அணங்கு காட்டி லனல்கை யேந்தி யழக னாடுமே. (௪)

---

## திருவிரட்டைமணிமாலை.

சங்கரனைத் தாழ்ந்த சடையானை யச்சடைமேல்
பொங்கரவம் வைத்துகந்த புண்ணியனை - அங்கொருநாள்
ஆவாவென் றாழாமைக் காப்பானை யெப்பொழுதும்
ஓவாது நெஞ்சே யுரை. (௫)

வேதியனை வேதப் பொருளானை வேதத்துக்
காதியனை யாதிரைநன் னாளானைச் - சோதிப்பான்
வல்லேன மாய்ப்புக்கு மாலவனு மாட்டாது
கில்லேன மாவென்றான் கீழ். (௬)

---

## அற்புதத்திருவந்தாதி.

பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந்திகழும்
மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே
எஞ்ஞான்று தீர்ப்ப திடர். (எ)

இடர்களையா ரேனு மெமக்கிரங்கா ரேனும்
படரு நெறியணியா ரேனுஞ் - சுடருருவில்
என்பறாக் கோலத் தெரியாடு மெம்மானார்க்
கன்பறா தென்னெஞ் சவர்க்கு. (அ)

யானே தவமுடையே னென்னெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பறுப்பா னெண்ணினேன் - யானேயக்
கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற
அம்மானுக் காளாயி னேன். (கூ)

அறிவானுந் தானே யறிவிப்பான் றானே
அறிவா யறிகின்றான் றானே - அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாயம்
அப்பொருளுந் தானே யவன். (ய)

ஒருபா லுலகளந்த மாலவனா மற்றை
ஒருபா லுமையவளா மென்றால் - இருபாலும்
நின்னுருவ மாக நிறந்தெரிய மாட்டோமல்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து. (கக)

அன்றுந் திருவுருவங் காணாதே யாட்பட்டேன்
இன்றுந் திருவுருவங் காண்கிலேன் - என்றுந்தான்
எவ்வுருவோ னும்பிரா னென்பார்கட் கென்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவ மேது. (கஉ)

காலனையும் வென்றோங் கடுநரகங் கைகழன்றோம்
மேலை யிருவினையும் வேரறுத்தோம் - கோல
அரணார விந்தழிய வெந்தீயம் பெய்தான்
சரணார விந்தங்கள் சார்ந்து. (கங)

---

## ஐயடிகள்காடவர்கோனுயனுர் அருளிச்செய்த க்ஷேத்திரத்திருவெண்பா.



ஓடுகின்ற நீர்மை யொழிதலுமே யுற்றாரும்
கோடுகின்றார் மூப்புங் குறுகிற்று - நாடுகின்ற
நல்லச்சிற் றம்பலமே நண்ணாமு னன்னெஞ்சே
தில்லைச்சிற் றம்பலமே சேர். (கச)

குத்தி நடந்து குனிந்தொருகை கோலூன்றி
நொந்திருமி யேங்கி நுரைத்தேறி-வந்துந்தி
ஐயாறு வாயாறு பாயாமு னெஞ்சமே
ஐயாறு வாயா லழை. (கரு)

படிமுழுதும் வெண்குடைக்கீழ்ப் பாரெலா மாண்ட
முடியரசர் செல்வத்து மும்மை-கடியிலங்கு
தோடேந்து கொன்றையந்தார்ச் சோதிக்குத் தொண்டுபட்
டோடேந்தி யுண்ப துறும். (கசு)

இழவாடிச் சுற்றத்தா ரெல்லாருங் கூடி
விழவாடி யாவிவிடா முன்னம்-மழபாடி
ஆண்டானை யாரமுதை யன்றயன்மால் காணாமை
நீண்டானை நெஞ்சே நினை. (கள)

உய்யு மருந்திதனை யுண்மினென வுற்றார்
கையைப் பிடித்தெதிரே காட்டியக்கால்-பைய
எழுந்திருமி யான்வேண்டே னென்னாமு னெஞ்சே
செழுந்திரு மயானமே சேர். (கஅ)

---

## சேரமான்பெருமாணுயனுர் அருளிச்செய்த பொன்வண்ணத்தந்தாதி.



பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கும்
மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடைவெள்ளிக்குன்றம்

தன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மால்விடை தன்னைக்கண்ட
என்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மாகிய வீசனுக்கே. (கக)

இடாமல் வலந்தானிடப்பா றுழாய்வலப் பாலொண்கொன்றை
வடமா லிடந்துகி ரூல்வல மாழியிடம்வலமான்
இடமால் கரிதால் வலஞ்சே திவனுக் கெழினலஞ்சேர்
குடமா லிடம்வலங் கொக்கரையா மெங்கள் கூத்தனுக்கே. (உம)

கொடிமே லிடபமுங் கோவணக் கீளுமோர் கொக்கிறகும்
அடிமேற் கழலு மகலத்தி னீறுமை வாயரவும்
முடிமேன் மதியு முருகலர் கொன்றையு மூவிலைய
வடிவேல் வடிவு மென்கண்ணு ளெப்போதும் வருகின்றவே. (உக)

முனியேன் முருகலர் கொன்றையி னுயென்னை மூப்பொழித்த
கனியே கழலடி யல்லாற் களைகண்மற் ஞென்றுமிலேன்
இனியே லிருந்தவஞ் செய்யேன் றிருந்தவஞ் சேநினைந்து
தனியேன் படுகின்ற சங்கட மார்க்கனிச் சாற்றுவனே. (உஉ)

பொய்யா நரகம் புகினுந் துறக்கினும் போங்துபுக்கிங்
குய்யா வுடம்பி னூேர்வ நடப்ப பறப்பவென்று
நையா விளியினு நானில மாளினு நான்மறைசேர்
மையார் மிடற்ரு னடிமற வாவரம் வேண்டுவனே. (உங)

மாயனன் மாமணி கண்டன் வளர்சடை யாற்கடிமை
ஆயின தொண்டர் துறக்கம் பெறுவது சொல்லுடைத்தே
காய்சின வானை வளருங் கனக மலையருகே
போயின காக்கையு மன்றே படைத்தது பொன்வண்ணமே. (உச)

---

நக்கீரதேவநாயனுர் அருளிச்செய்த

## பெருந்தேவபாணி



சூல பாணியை சுடர்தரு வடிவனை
நீல கண்டனை நெற்றியோர் கண்ணனை
பாலவெண் ணீற்றனை பரமயோகியை
காலனைக் காய்ந்த கறைமிடற் றண்ணலை

நூலணி மார்பனை நுண்ணிய கேள்வியை
கோல மேனியை கொக்கரைப் பாடலை
வேலுடைக் கையனை விண்டோய் முடியனை
ஞாலத் தீயினை நாதனை காய்ந்தனை
தேவ தேவனை திருமறு மார்பனை
கால மாகிய கடிகமழ் தாரனை
வேத கீதனை வெண்டலை யேந்தியை
பாவ நாசனை பரமேச்சு வரனை
கீதம் பாடியை கிளர்பொறி யரவனை
போதணி கொன்றையெம் புண்ணிய வொருவனை
ஆதி மூர்த்தியை யமரர்க டலைவனை
சாதி வானவர் தம்பெரு மான்றனை
வேத விச்சையை விடையுடை யண்ணலை
ஓத வண்ணனை யுலகத் தொருவனை
நாத னாகிய நன்னெறிப் பொருளினை
மாலை தானெரி மயானத் தாடியை
வேலை நஞ்சினை மிகவமு தாக்கியை
வேத வேள்வியை விண்ணவர் தலைவனை
ஆதி மூர்த்தியை யருந்தவ முதல்வனை
ஆயிர நூறுக் கரிவரி யானை
பேயுரு வுகந்த பிறையணி சடையனை
மாசறு சோதியை மலைமகள் கொழுநனை
கூரிய மழுவனை கொலற்கருங் காலனை
சீரிய வடியாற் செற்றருள் சிவனை
பூதிப் பையனை புண்ணிய மூர்த்தியை
பீடுடை யாற்றைப் பிராணி தலைவனை
நீடிய நிமலனை நிறைமறைப் பொருளினை
ஈசனை யிறையனை யீறில் பெருமையை
நேசனை நினைப்பவர் நெஞ்சத் துள்ளனை
தாதணி மலரனை தருமனை பிரமனை
காதணி குழையனை களிற்றி னுரியனை
சூழ்சடைப் புனலனை சுந்தர விடங்கனை

தார்மலர்க் கொன்றை தயங்கு மார்பனை
வித்தக விதியனை
தீதமர் செய்கைத் திரிபுர மெரித்தனை
பிரமன் பெருந்தலை நிறைய தாகக்
கருமன் செந்நீர் கபால நிறைத்தனை
நிறைத்த கபாலச் செந்நீர் நின்றும்
உறைத்த வுருவா ரையனைத் தோற்றினை
தேவரு மசுரருந் திரம்படக் கடைந்த
அராவமு ணஞ்ச மமுத மாக்கினை
ஈரமி னெஞ்சத் திராவணன் றன்னை
வீர மழித்து விறல்வாள் கொடுத்தனை
திக்கமர் தேவருந் திருந்தாச் செய்கைத்
தக்கன் வேள்வியைத் தளரச் சாடினை
வேதமு நீயே வேள்வியு நீயே
நீதியு நீயே நிமல னீயே
புண்ணிய னீயே புனித னீயே
பண்ணிய னீயே பழம்பொரு ணீயே
ஊழியு நீயே யுலகமு நீயே
வாழியு நீயே வரதனு நீயே
தேவரு நீயே தீர்த்தமு நீயே
மூவரு நீயே முன்னெறி நீயே
மால்வரை நீயே மறிகட னீயே
இன்பமு நீயே துன்பமு நீயே
தாயு நீயே தந்தையு நீயே
விண்முதற் பூத மைந்தவை நீயே
பத்தியு நீயே முத்தியு நீயே
சொலற்கருந் தன்மைத் தொல்லோய் நீயே, அதனால்
கூட லாலவாய்க் குழக னவை
தறியா தருந்தமிழ் பழித்தன னடியேன்
ஈண்டிய சிறப்பி னிணையடிக் கீழ்நின்று
வேண்டு மதுவினி வேண்டுவன் விரைந்தே. (உரு)

---

## திருமுருகாற்றுப் படை.

ஒருமுரு காவென்றென் னுள்ளங் குளிர வுவந்துடனே
வருமுரு காவென்று வாய்வெருவா நிற்பக் கையிங்ஙனே
தருமுரு காவென்று தான்புலம்பா நிற்பத் தையன்முன்னே
திருமுரு காற்றுப் படையுட னேவருஞ் சேவகனே. (௨௬)

குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்-என்றும்
இளையா யழகியா யேறூர்ந்தா னேறே
உளையாயென் னுள்ளத் துறை. (௨௭)

குன்ற மெறிந்தமையுங் குன்றப்போர் செய்தமையும்
அன்றங் கமரர்பதி காத்தமையும்-இன்றெம்மைக்
கைவிடா நின்றமையுங் கற்பொதும்பின் மீட்டமையும்
மெய்விடா வீரன்கை வேல். (௨௮)

---

## கபிலதேவ நாயனாரருளிச் செய்த
## மூத்தநாயனார் இரட்டைமணிமாலை.



திருவாக்குஞ் செய்கருமங் கைகூட்டுஞ் செஞ்சொல்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்-உருவாக்கும்
ஆதலால் வானோரு மானை முகத்தானைக்
காதலாற் கூப்புவர்தங் கை. (௧௧)

விநாயகனே வெவ்வினையை வேரறுக்க வல்லான்
விநாயகனே வேட்கை தணிவிப்பான்-விநாயகனே
விண்ணிற்கு மண்ணிற்கு நாதனுமாந் தன்மையினால்
கண்ணிற் பணிமின் கனிந்து. (௩௰)

நல்லார் பழிப்பி லெழிற்செம் பவளத்தை நாணநின்ற
பொல்லா முகத்தெங்கள் போதக மேபுர மூன்றெரித்த
வில்லா ளளித்த விநாயகனே யென்று மெய்மகிழ
வல்லா ரகத்தன்றி மாட்டா ளிருக்க மலர்த்திருவே. (௩௧)

---

## அதிராவடிகள் அருளிச்செய்த மூத்தபிள்ளையார் திருமும்மணிக் கோவை.



மணிசிந்து கங்கைதன் மானக் குருளையை வாளரக்கர்
அணிசிந்த வென்றவெம் மையர்க் கிளங்கன்றை யங்கரும்பின்
துணிசிந்த வாய்ப்பெய்த போதகத் தைத்தொடர்ந் தோர்பிறவிப்
பிணிசிந்து கான்முளை யைப்பிடித் தோர்க்கில்லை பேதுறலே. (௩உ)

மொழியின் மறைமுதலே முன்னயனத் தேறே
கழிய வருபொருளே கண்ணே - தெழியதலால்
ஐயனே எங்கள் கணபதியே நின்னையலா
தையனே சூழாதென் னன்பு. (௩௩)

---

## திருவெண்காட்டடிகள் அருளிச்செய்த கோயினான் மணிமாலை.



நெறிதரு குழலை யற லென்பர்கள்
நிழலெழு மதிய நுத லென்பர்கள்
நிலவினும் வெளிது நகை யென்பர்கள்
நிறம்வரு கலச முலை யென்பர்கள்
அறிகுவ தரிதிவ் விடை யென்பர்கள்
அடியிணை கமல மல ரென்பர்கள்
அவயவ மினைய மட மங்கையர்
அழகிய ரமையு மவ ரென்செய
மறிமழு வுடைய கர னென்கிலர்
மறலியை முனியு மர னென்கிலர்
மதிபொதி சடில தர னென்கிலர்
மலைமகள் மருவு புய னென்கிலர்
செறிபொழி னிலவு தில்லை யென்கிலர்
திருநட நவிலு மிறை யென்கிலர்
சிவகதி யருளு மர னென்கிலர்
சிலர்நர குறுவ ரறி வின்றியே. (௩௪)

## திருவிடைமருதூர் மும்மணிக்கோவை.

கதியா வதுபிறி தியாதொன் றுமில்லை களேபரத்தின்
பொதியா வதுசுமந் தால்விழப் போமிது போனபின்னர்
விதியா மெனச்சிலர் நோவதல் லாலிதை வேண்டுநர்யார்
மதியா வதுமரு தன்கழலே சென்று வாழ்த்துவதே. (௩௫)

காணீர் கதியொன்றுங் கல்லீ ரெழுத்தஞ்சம் வல்லவண்ணம்
பேணீர் திருப்பணி பேசீ ரவன்புக ழாசைப்பட்டுப்
பூணீ ருருத்திர சாதன நீறெங்கும் பூசுகிலீர்
வீணீ ரெளிதோ மருதப் பிரான்கழன் மேவுதற்கே. (௩௬)

ஓராதே யஞ்செழுத்து முன்னாதே பச்சிலையும்
நேராதே நீரு நிரப்பாதே—ஆராயோ
எண்ணுவா ருள்ளத் திடைமருதர் பொற்பாதம்
நண்ணுவா மென்னுமது நாம். (௩௭)

அன்றென்று மாமென்று மாறு சமயங்கள்
ஒன்றொன்றோ டொவ்வா துரைத்தாலும்—என்றும்
ஒருதனையே நோக்குவா ருள்ளத் திருக்கும்
மருதனையே நோக்கி வரும். (௩௮)

வளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனனம்புக்
கிளையார் தனங்கண் டிரங்கிநில் லாரிப் பிறப்பினில்வந்
தளையார் நரகினுக் கென்கட வார்பொன் னலர்ந்தகொன்றைத்
தளையா னிடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே. (௩௯)

---

## திருவேகம்பமுடையார் திருவந்தாதி.

மெய்த்தொண்டர் செல்லு நெறியறி யேன்மிக நற்பணிசெய்
கைத்தொண்டர் தம்மிலு நற்றொண்டு வந்தில னுண்பதற்கே
பொய்த்தொண்டு பேசிப் புறம்புறமே யுன்னைப் போற்றுகின்ற
இத்தொண்ட னென்பணி கொள்ளுதியோ கச்சி யேகம்பனே. (௪0)

வணக்கந் தலைநின் றிருவடிக்கே செய்யு மையல்கொண்டோர்
இணக்கன் றிமற்றோ ரிணக்கறிவோ மல்லம் வல்லரவின்

குணக்குன் றவில்லி குளிர்கச்சி யேகம்பம் பாடினல்லால்
கணக்கன் றமற்றொரு தேவரைப் பாடுங் கவிநலமே. (௪௧)

படையா லுயிர்கொன்று தின்று பசுக்களைப் போலச்செல்லும்
நடையா லறிவின்றி நாண்சிறி தின்றி நகுங்குலத்தில்
கடையாப் பிறக்கினுங் கச்சியுளே கம்பத் தெங்களையாள்
உடையான் கழற்கன்ப ரேலவர் யாவர்க்கு முத்தமரே. (௪௨)

பாதம் பரவியோர் பித்துப் பிதற்றிலும் பல்பணியும்
மேதம் புகுதா வகையரு ளேகம்ப ரேத்தெனவே
போதம் பொருளாற் பொலியாத புன்சொற் பனுவல்களும்
வேதம் பொலியும் பொருளா மெனக்கொள்வர் மெய்த்தொண்டரே.

---

நம்பியாண்டார்நம்பி அருளிச்செய்த

## கோயிற்றிருப்பண்ணியர் திருவிருத்தம்.



அவநெறிக் கேவிழப் புக்கவிந் நானமுந் தாமைவாங்கித்
தவநெறிக் கேயிட்ட தத்துவ னேயத் தவப்பயனும்
சிவநெறிக் கேயென்னை யுய்ப்பவ னேசென னந்தொறுஞ்செய்
பவமறித் தாள்வதற் கோதில்லை நட்டம் பயில்கின்றதே. (௪௪)

பிறவியிற் பெற்ற பயனொன்று கண்டிலம் பேரொலிநீர்
நறவியல் பூம்பொழிற் றில்லையு ளாடக மாடுகின்ற
துறவியல் சோதியைச் சுந்தரக் கூத்தனைத் தொண்டர்தொண்டர்க்
குறவியல் வாற்கண்கள் கண்டுகண் டின்பத்தை யுண்டிடவே. (௪௫)

பிழையா யினவே பெருக்கிநின் பெய்கழற் கன்புதன்னின்
நுழையா தசிந்தையி னேனையு மந்தா கினித்துவலை
முழையார் தருதலை மாலைமு டித்த முழுமுதலே
புழையார் கரியுரித் தோய்தில்லை நாத பொறுத்தருளே. (௪௬)

வருவா சகத்தினின் முற்றுணர்ந் தோனைவண் டில்லைமன்னைத்
திருவா தவூர்ச்சிவ பாத்தியன் செய்திருச் சிற்றம்பலப்
பொருளார் தருதிருக் கோவைகண் டேயுமற் றப்பொருளைத்
தெருளா தவுள்ளத் தவர்கவி பாடிச் சிரிப்பிப்பரே. (௪௭

## ஆளுடையபிள்ளையார் திருவந்தாதி.

கவிக்குத் தருவன கண்ணுக் கினியன கேட்கிலின்பம்
செவிக்குத் தருவன சிந்திக் குரியன பைந்தரள
நவிக்கட் சிறுமியர் முற்றின் முகந்துதஞ் சிற்றிற்றொறும்
குவிக்கத் திரைபரக் குங்கொச்சை நாதன் குழைகழலே. (௪௮)

உறவும் பொருளுமொண் போகமுங் கல்வியுங் கல்வியுற்ற
துறவுந் துறவிப் பயனு மெனக்குச் சுழிந்தபுனல்
புறவும் பொழிலும் பொழில்சூழ் பொதும்புந் ததும்பு வண்டின்
நறவம் பொழிலெழிற் சாழியர் கோன்றிரு நாமங்களே. (௪௯)

மயிலேந்திய வள்ளறன்னை யளிப்ப மதிபுணர்ந்த
எயிலேந்திய சண்பை நாதனுலகத் தெதிர்ப்பவரியார்
குயிலேந்திய பொழிற் கொங்கேந்திய கொம்பினம் புகழீஇ
அயிலேந்திய மலர்கண் டுளனய் வந்த வண்ணலுக்கே. (௫௰)

கண்ணார் திருநுத லோன்கோலக் காவிற் கரநொடியால்
பண்ணார் தரப்பாடு சண்பையர் கோன்பாணி நொந்திடுமென்
றெண்ணு ரெழுத்தஞ்சு மிட்டபொற் றாளங்க ளீயக்கண்டும்
மண்ணார் சிலர்சண்பை நாதனை யேத்தார் வருந்துவதே. (௫௧)

முத்தன வெண்ணகை யார்மயன் மாற்றி முறைவழுவா
தெத்தனை காலநின் றேத்து மவரிலு மென்பணிந்த
பித்தனை யெங்கள் பிரானை யணைவ தெளிதுகண்டீர்
அத்தனை ஞானசம் பந்தனைப் பாத மடைந்தவர்க்கே. (௫௨)

## ஆளுடையபிள்ளையார் திருமும்மணிக்கோவை.

என்று மடியவ ருள்ளத் திருப்பன விவ்வுலகோர்
நன்று மலர்கொடு தூவித் துதிப்பன நல்லசங்கத்
தொன்றும் புலவர்க ளியாப்புக் குரியன வொண்கலியைப்
பொன்றுங் கவுணியன் சைவ சிகாமணி பொன்னடியே. (௫௩)

பிறவியெனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனுந் தோணி கண்டீர்-நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ். (௫௪)

## ஆளுடையவரசுகள் திருவேகாதசமாலை.

பதிகமே ழெழுநூறு பகருமா கவியோகி
பரசுநா வரசான பரமகா ரணவீசன்
அதிகைமா நகர்மேவி யருளினு லமண்மூடர்
அவர்செய்வா தைகடரு மனகன்வார் கழல்சூடின்
நிதியரா குவர்சீர்மை யுடையரா குவர்வாய்மை
நெறியரா குவர்பாவம் வெறியரா குவர்சால
மதியரா குவரீச னடியரா குவர்மான
முடையரா குவர்பாரின் மனிதரா னவர்தாமே. (ருரு)

நன்று மாதர நாவினுக் கரசடி நளினம்வைத் துயினல்லால்
ஒன்று மாவது கண்டில முபாயமற் றுள்ளன வேண்டோமல்
என்று மாதியு மந்தமு மில்லதோ ரிகபரத் திடைப்பட்டு
பொன்று வார்புகுஞ் சூழலிற் புகேம்புகிற் பொறியிலேம் புலனேடே.

திருச்சிற்றம்பலம்.

பிரபந்தமாலைத் திரட்டு முற்றுப்பெற்றது.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

# பன்னிரண்டாந் திருமுறை

## என்னும்

# திருத்தொண்டர் புராணம்.



இப்புராணம் **பேரியபுராணம்** என்றும் வழங்கப்படும். இதை யருளிச் செய்தவர் அருண்மொழித் தேவராகிய ஸ்ரீசேக்கிழார் சுவாமிகள். இவர் ஸ்ரீ சிதம்பரத்திலே ஸ்ரீ நடராஜப்பெருமான் சந்நிதியடைந்து கசிந்துருகுமன்பினுலே அப்பெருமானை வணங்கி, எம்பெருமானே! அளவில்லாத பெருமை வாய்ந்த சிற்பரச் செல்வர்களாகிய அடியார்களின் சிறந்த மான்மியத்தை அடியேனெவ்வாறு பாடுவேன், தேவரீரே அடியேனது ஆகுல மகலும்படி அடியெடுத்துத்தந்து முடித்தருளல் வேண்டும் என்று குறையிரந்து நிற்ப, உடனே பரங்கருணைத் தடங்கடலாகிய ஸ்ரீ நடராஜப் பெருமானது திவ்ய திருவருளால் சிதாகாச வெளியிலே அளவிறந்த ரஹஸியார்த் தங்களை யெல்லாந் தன்னுள்ளடக்கிக் கொண்டு விளங்கும் ஐந்தெழுத்தாலாய **உலகேலாம்** என்னும் அருள்நாத துரீயவொலி பலருங் கேட்க வெழுந்தது. அவ்வொலி வடிவாகிய துரீயவாக்கையே சுவாமிகள் முதலிலமைத்துக்கொண்டு அடியார் சரித்திர முழுமையும் பக்திச் சுவைநனி சொட்ட, உள்ள முதலிய கருவி கரணங்கள் யாவும் கனிந்து கசிந்துருகும்படிப் பாடி, இடையிலும் ஈற்றிலும் அத்துரீய வொலியையே அமைத்தருளி, அதற்குத் திருத்தொண்டர் புராணம் என்னுந் திருநாமத்தையுஞ் சூட்டியருளினுர். அத்தகைய அரிய பெரிய **மாக்கதையே** இவ்வடியவர் புராணமாகும். இதன் பெருமை அளவிட்டரிதற்கரிது. (மாக்கதை - மகத்தாகிய சரிதம்).

